திருச்சிற்றம்பலம்

சிவசிவ

# திருக்கோயில் பாமாலை

சோழ நாட்டுத் திருத்தலங்கள்


இயற்றியவர்

பாடல்


திருக்கோயில் பாமாலை

## கோயில் எனும் சிதம்பரம்

காலஞானம் கணித்துநின்ற கானவீணை நாதனே
ஏலம்பூ கிராம்பூநாறும் ஏகபாதத் தீசனே
ஆலகால நீலகண்டன் ஆலங்காட் டரங்கிலே
ஞாலநாதப் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே




பல்லவா
தி கிரியேட்டர்
Contact : 98402 35629 / 88383 55189

சிவமயம்

திருச்சிற்றம்பலம்




## ஐஞ்சபைத் தலங்கள், ஐம்பூதத் தலங்கள்
## சோழ நாட்டுச் சிவத்தலங்கள்

இயற்றியவர் : **பாடல்**

பதிப்பகம் : **சிவயசிவ பதிப்பகம்**
முத்தமிழ் நகர், சென்னை – 600 118.
94444 61134

திருச்சிற்றம்பலம்

## நூல் விவரம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : திருக்கோயில் பாமாலை |
| நூல் ஆசிரியர் | : பாடல் |
| பொருள் | : பக்தி இலக்கியம் |
| மொழி | : தமிழ் |
| பக்கங்கள் | : 10+400 |
| எழுத்து | : 12 புள்ளி |
| நூலின் அளவு | : 1/8 டெம்மி |
| தாள் | : மேப்லித்தோ வெள்ளைத் தாள் |
| பதிப்பாண்டு | : 2021 |
| அச்சிட்டோர் | : பல்லவா தி கிரியேட்டர் – குளத்தூர், சென்னை |
| கணிப்பொறி அச்சு | : M.சுமதி |
| முகப்பு அட்டை ஓவியம் | : சிவ. த.ர. சிங்காரவேலன், 98402 35629, |
| பதிப்பகம், பதிப்புரிமை | : சிவயசிவ பதிப்பகம், |
| | முத்தமிழ் நகர், சென்னை – 600 118. |
| | அலைபேசி எண் : 94444 61134 |
| விலை | : ரூ. 200 |




## திருவாவடுதுறை ஆதீன குருமுதல்வர்
# ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள்



## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழில்திருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

–காஞ்சிப் புராணம்
மாதவச் சிவஞான யோகிகள்

## 23-ம் பட்டம்
## சீர்வளர்சீர் சிவப்பிரகாச தேசிக பரமாச்சாரிய மூர்த்திகள்



திருச்சிற்றம்பலம்

சமய தீக்கை ஈந்தருளி தாரணியில் உய்யவைத்த
திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனத்தின்
23வது குருமகா சந்நிதானம் சீரவளர்சீர் **சிவப்பிரகாசத்**
**தேசிக மூரத்திகள்** பொன்னார்திருவடி போற்றி போற்றி

## 24-ம் பட்டம்
## சீர்வளர்சீர் அம்பலவாண தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்




திருச்சிற்றம்பலம்

விசேட தீக்கை ஈந்து வினைகுறைத்து எனையாண்ட திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனத்தின் 24வது குருமகா சந்நதானம் **ல ஸ்ரீ ல அம்பலவானத் தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்** செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி

## நூல் தொகுப்பாளர்கள்

1. சிவ. சரவணன் M.Sc. B.L.,
உயர் நீதிமன்ற வழக்கறிஞர்
அண்ணாநகர். சென்னை- 40.
9445846025 , 9551666251

2. சிவ. ச.பிரபாகரன். M.Sc
விசரந்த் முதன்மை மாலுமி.
சென்னை துறைமுகம்
அனகாபுத்தூர். சென்னை- 70.
6380275185 / 9444045185

3. சிவ.சந்திரசேகரன் MA. MBA.,
சாய்ராகவி எண்டர்பிரைஸ்
அயப்பாக்கம். சென்னை- 77.
98406 85400

4.சிவ.நல்லதம்பி
கடம்பத்தூர்.
திருவள்ளூர் மாவட்டம்.
88707 65876

5. சிவ.சந்திரசேகர்
கடம்பத்தூர்.
திருவள்ளூர் மாவட்டம்.
90920 98997

6. பொன் . எழில்
சோதிட வித்தகர்
ஓட்டேரி. சென்னை - 600012
90435 28979

கோ. நடராசன் MA.MPL.Phd.,
பேராசிரியர் - ஓய்வு
ஊரப்பாக்கம், சென்னை.

7. சிவ.பா.மரகதமணி சித்தாந்த ரத்தினம்
இறைப்பணித்தொண்டர்
தண்டையார்பேட்டை
சென்னை - 600081
99520 19789

8. சிவ.ஜெயந்திகணேசன்
சித்தாந்த ரத்தினம்
இறைப்பணித்தொண்டர்
ஆழ்வார்பேட்டை. சென்னை - 600018
94442 85692

9.சிவ.தயாநிதி MA, BEd
தமிழாசிரியை - ஓய்வு
தேனாம்பேட்டை. சென்னை-600018
94452 86056

10. சிவ.வசந்தாபாய் MA, BEd
தமிழாசிரியை - ஓய்வு
வடபழனி. சென்னை - 600026.

11. S. வெங்கடேசன்
உரிமையாளர்- திவ்வியா டிராவல்ஸ்
2. வல்லபாய் படேல் தெரு,
பெருமாள் கோயில் சாலை,
பெரிய சேக்காடு, சென்னை - 600051
98408 87816

12. K.சந்திரசேகர்
இறைப் பணித்தொண்டர்
பள்ளிக்கரணை,
சென்னை - 600100

தனசேகர் BE.,
மேலாளர். எண்ணெய் நிறுவனம்.
துபாய்.

திருச்சிற்றம்பலம்

சிவமயம்

# பாடலின்
# திருக்கோயில் பாமாலை

## ஐஞ்சபை ஐம்பூதத் தலங்களும், சோழநாட்டுத் தலங்களும்

### ஐஞ்சபை மற்றும் ஐம்பூதத் தலங்கள்



### சோழ நாட்டுத் தலங்கள்

# பாடலின் திருக்கோயில் பாமாலை



## ஐஞ்சபைத் தலங்களும் ஐம்பூதத் தலங்களும்

### 1. திருத்தில்லை-பொற்சபை

**சபாநாயகர்** **கலிவிருத்தம்** **சிவகாமியம்மை**

1. ஞஸலத்த மிழிசை ஞானக்கொ டைக்குரு நலிவகற்றும்
ஆலத்தி ருமிட றவனியச் செஞ்சுடர் ஆகாயன்
தூலப்பஞ் சாக்கரம் சூக்கும மறையுறைச் சிவலோகன்
சீலச்சித் தாந்தன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

2. கோடணி மாகரி கோதுடல் கிழித்த குங்கிலியன்
தோடணி செவியன் சுடர்மழுக் கரத்தன் தொடர்யுகத்தன்
கூடணி உயிர்க்கினி குவலய வான்வாழ் வருளினியன்
சேடணிச் சிலம்பிசைத் திருடநடப் பொற்சபைத் தில்லையமே!

3. பற்பல கோடிநல் அரியயன் உருத்திர ரைப்படைக்கும்
அற்புதன் விற்பனன் அரும்பொருள் மருந்தளி அருவெளியன்
சொற்பொருள் மதிநிதி தொடர்துணை வாழ்வருள் சுடருருவன்
சிற்சபைச் சங்கரன் திருடநடப் பொற்சபைத் தில்லையமே!

4. முத்தன்மு முப்பொருள் மூத்தோன்நாத்திக முரண் விளக்கும்
அத்தனெம் ஆண்டவன் ஆறங்கன் இணையிலி அல்லைநல்லன்
பத்தியை நல்கிநல் பக்குவ மதிதரும் பரமேசன்
சித்தர்சூழ் தற்பரன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

5. மும்மையும் இருவினை முடிவுறு முத்திசெய் மூலிகையன்
அம்மையப் பன்நண்பன் ஆசான் அடியார் மனத்துறையும்
தும்பைகொன் றையணி தூயவன் மாயவற் கருளினியன்
செம்மரைக் கழலோன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

6. குவலயப் பன்மொழி குணம் நெறி கொள்கையும் கலைவளர்த்தே
புவனியத் புதிருணர் பொன்மதி அளித்துயிர் புரைதீர்க்கும்
அவரவர் விரும்புரு வாய்வந் தன்பளி ஆனந்தன்
சிவ சிவ மறையோன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

7. பொன்முகத் தெழிலன் போதநல் வேதமும் புகன்றபிரான்
பன்முகப் பத்தரும் பரனறு சமயப் பற்றுநர்சூழ்
நன்முகத் துருத்திரன் நாள்மலர் பூசைசெய் நவலோகன்
சின்முத் திரையோன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

8. பொங்கமு தக்கடல் புகைமூன் றருவிடம் பொதிய வைத்து
தங்கமு கத்தொரு தனிநிழல் மிடறெழில் தத்துவத்தோன்
சங்கிசைப் பல்லியர் சந்திர சூரியர் கிண்ணரர்சூழ்
செங்கதிர் மழுக்கரன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

9. போர்த்தவன் அரிகரி புலித்தோல் புசங்க மணிபொன்னன்
ஊர்த்துவன் கீர்த்தியன் உயிர்க்குடல் உளம்மதி உவந்தளிக்கும்
கார்த்திகைத் தீபன் கயிலையங் கடவுள் காலகாலன்
சீர்த்திசெய் நாயகன் திருநடப் பொற்சபைத் தில்லையமே!

10. இஞ்சியை எரித்தவர்க் கினியநல் பதவியை ஈந்தபிரான்
அஞ்சிறை நாரைக்கும் காரிக்கும் அருளளி ஆனந்தன்
நெஞ்சினி கோயிலில் நித்தமும் ஆடல்செய் நிலையனலன்
செஞ்சிவ லோகனின் திருநடப் பொற்சபைத் தில்லையமே.

–திருச்சிற்றம்பலம்–

## 2. மதுரை-வெள்ளிசபை

**சொக்கநாதர் கலிவிருத்தம் மீனாட்சியம்மை**

1. மூலப்பொ ருளுரு முழுமுதல் கடவுள் மூத்தபிரான்
ஆலப்பெ ருநிழல் அமர்ந்தரும் மறைதரும் அனலமுதன்
காலக்க ணக்கினை கணிக்குமா கங்கணக் கனகமலை
மாலயன் துதித்தெழும் மாவெள்ளி யம்பல மதுரையனே

2. புரந்தர னொடுகரி புரைதீர்த்த தருளிய புனிதமலை
நிரந்தரக் கடவுள் நிமலப்பெ ருஞ்சுடர் நேசமளி
சரணக் திருக்கழல் சற்குணத் திருவருள் அபயகரன்
மரணமில் வாழ்வளி மாவெள்ளி யம்பல மதுரையனே

3. கணங்களின் ஆயமும் கடுந்தவர் முனிநான் முகனரியின்
இணங்கிசைத் தாளமும் இன்னிசைப் பணிசெயக் கூத்தாடும்
குணங்கலை வளிவெளி குறைமதிக் கற்பனை கடந்தபிரான்
வணங்கிம கிழுயிர் மாவெள்ளி யம்பல மதுரையனே

4. உருத்திரம் ஞாழலும் வெட்சிநந் தியமும் எருக்கணியும்
கருத்தநல் கண்டத்தன் கமலச்செங் கழலோன் கனகமலை
பருப்பொருள் ஐம்பூதப் பரிவருள் விருத்தகு மாரபாலன்
மருத்துவன் மூலிகை மாவெள்ளி யம்பல மதுரையனே

5. வாணிகக் குழந்தைக்கும் மாறற்கும் நவமணி நிதியமளி
ஆணிப்பொன் மேனியன் அவனியப் பேரொளி அதிமதுரன்
காணிக்கை யாகக் கழல்பணி வோர்மனம் கனிந்தேற்கும்
மாணிக்க மாமலை மாவெள்ளி யம்பல மதுரையனே

6. சித்திபத் திசெம்பொன் சீருல வாக்கிழி சிறப்பளித்தே
தித்திநல் சுகந்தரும் சிவலோ கங்காட்டும் செம்பொருளன்
பத்திசெய் வாரிடை பரிவருள் அடியவர் போலொளிரும்
மத்தகக் கரிபரி மாவெள்ளி யம்பல மதுரையனே

7. பொங்கிசை ஞானசம் பந்தர் புத்திசைக் கேடெதிர்செய்
தங்கத் திருவடி சற்குணத் தாதியச் சங்கரனே
மங்கையர்க் கரசிக்கும் மாறற்கும் குலச்சிறை யார்க்கமுதன்
வங்கவி டமுண்ட மாவெள்ளி யம்பல மதுரையனே

8. அகந்தைநல் இசையனை அல்லெழுந் தோடச்செய் அமுதிசையன்
முகக் கவின் காரிக்கும் முன்னுப தேசஞ்செய் மூவிழியன்
இகபர வாழ்விளம் பன்றிக்கு மிசைந்தளி ஏகம்பன்
மகிழ்மங்கைக் கரசியின் மாவெள்ளி யம்பல மதுரையனே

9. பிணங்கிய இடைக்காடர் பிணக்கறுத் தருளிய பெம்மானே
துணங்கையர் சூழுற சுடலையில் துணங்கைநல் கூத்தாடும்
கணங்களும் வானவர் கழல்பணிந் துருகுறக் காட்சிதரும்
வணங்குநல் உயிர்க்கருள் மாவெள்ளி யம்பல மதுரையனே

10. ஊழையும் சஞ்சிதத் துறுதுயர் குறைக்கும் மாயைதந்த
தோழமைத் திருவருள் தோன்றாத் துணைவன் சுடர்மதியே
ஏழைஎன் பிழைபொறுத் திடர்களைந் தெழிற்கழல் நிழலருளே
வாழைநல் சண்பக மாவெள்ளி யம்பல மதுரையனே

–திருச்சிற்றம்பலம்–

## 3. திருநெல்வேலி-தாமிரசபை

**நெல்லையப்பர் அறுசீர் ஆசிரிய விருத்தம் காந்திமதியம்மை**

1. இருவாட் சிநொச்சி இணர்கொன்றை எருக்கம் ஆவிரை மரைசூடும்
பெருமான் ஒருமான் ஏந்துகவின் பிங்கலத் திருவுருப் பெம்மானே
அருமறை மூங்கில் வடிவாகி அல்லும் பகலும் பூசைசெய்யும்
திருமணித் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

2. தேம்முனிப் பாலகன் பசியாறத் திருப்பாற் கடலளி செந்திருவன்
பாம்புறழ் மேனிப் பரம்பரனே பாண்டியற் கெழில்மணி மகுடமளி
ஆம்பலும் கொன்றையும் சூடுமனல் ஆனந்தத் தாண்டவத் திருவருளன்
தீம்புனல் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

3. கான்மலர் வெட்சியும் கமலமணி கனகத் திருமலை கங்காளன்
வான்மிளிர் பால்வெளி மண்டலத்தன் மண்ணகத்தோரிறை மழுக்கரத்தன்
நான்முகன் அகத்தியர் துதித்துவந்த நால்யுகம் காட்டிய நாதாந்தன்
தேன்மலர்த் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

4. இணர்தளிர்கூவிளம் வன்னியொடு இருமண மல்லியும் முல்லையணி
துணையிருந்துயிர் வினைத் துயர்மாற்றும் தோன்றாத்துணை வன்சுடர் மலையன்
பிணக்கற கருவூர்த் தேவருக்கும் பெரும்பே றளித்த பேராளன்
திணைநெறி தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

5. அம்மலர் செருந்தியும் அகிற்சாந்தும் அணியபி டேகநல் அலங்காரன்
நம்பிய சுவேதகன் இராமனுக்கும் நற்பே றேளித்த நாதமலை
கும்பிடும் வரமளித் துயிர்க்குறைதீர் குவலய மெல்லிசை யாழ்கரத்தன்
செம்பொருள் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

6. கண்ணோர் மூன்றுடைக் கவினிறைவன் கனவிலும் நனவிலும் கலந்தொளிரும்
விண்ணோர் மண்ணோர் போற்றிநிற்க வெளிர்செம் பொன்னொளி காட்டுமண்ணல்
எண்நான் கறங்கள் இயம்பியுயிர் என்றும் மகிழும் நெறிவகுத்தோன்
தெண்ணீர்த் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

7. மறிசிலை மழுதீ மணிமிடறன் வளரிசைத் துடிகர வடிவறிவன்
கறிமிள கேலக் கனிமலையன் கண்டராமனுக்கும் காட்சிதந்தோன்
நெறிமுறை வழுவாத்திருஞான சம்பந்தக் கவிக்குரு கவிமகிழ்ந்த
செறிமணித் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

8. நன்னொளிச் சூரிய காந்தவிழி நால்யுகம் மயங்கும் புன்னகையன்
அன்பினி லுயிரை அரவணைத்தே அறிவினைப் புகட்டும்அன்னை அண்ணல்
பன்பிடை மலைகடல் பாராசான் பைந்தமிழ் அப்பர்க்கும் பரிவளித்த
தென்பனித் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

9. மத்தகக் கரியுரி போர்த்தபிரான் வானவர் மண்ணவர் வணங்கிமகிழ்
அத்துவி தமாக அமைந்திருத்தே அகன்றும் கலந்தும் அருளளிப்போன்
வித்தகம் தத்துவம் விளங்கவைத்தே வெண்ணீ றணிநனி பேறளிக்கும்
சித்தகத் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே

10. ஆதா ரத்தழல் அன்பீசன் ஆதிய நாதிஅருள் மழையன்
வாதவூ ராக்கும் வன்தொண்டர்க்கும் மறையாக் கவிமலை வழங்குபிரான்

ஏதொரு தகுதியும் இல்லாநாய் எனக்கும் திருவடி காட்டியகோன்
சீதநல் தாமிரச் சபையோனே திருநெல் வேலியின் சுயம்பொளியே
–திருச்சிற்றம்பலம்–

## 4. திருக்குற்றாலம் -சித்திரச்சபை

**குற்றாலநாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் குழல்வாய்மொழியம்மை**

1. தருமலர்ப்பூசைகள் செய்தே தரணியோர் பொன்னார் கழலை
உருகியே துதிசெய் காலை உருத்திர னாக வருவார்
அருவியும் தேன்துளி சிதறி அடிபணிந் தேகும் கோயில்
குருமுனி தினமும் துதித்த குற்றால நாதக் குருவே

2. செடிமலர்ப் பூசைகள் செய்தே திருத்தொண்டர் தினமும் மகிழும்
அடிமுடி காணா அயன்மால் அவரவர் உருவில் வருவார்
நொடிஒரு கோடிப் புவிசெய் நுதல்விழி மாமதிச் சோதி
கொடிமின் ஒளியும் துதிக்கும் குற்றால நாதக் குருவே

3. செழுந்தளிர் மூலிகைச் சாந்தும் செந்தூரம் கற்பமும் பூசி
தொழும்மதிச் சித்தர் கூட்டம் துதிமறை சிவசிவ என்றதும்
எழுந்தொளிர் ஈசுர மூர்த்தி இருளழித் தருளே நல்கும்
கொழுந்தளிர் கொன்றை சூடும் குற்றால நாதக் குருவே

4. முன்பனி பின்பனி நாளில் முகிலொடு மஞ்சும் பணியும்
பொன்மணிச் சதங்கை சிலம்பும் பூரண நகைஅலங் காரன்
சின்மயப் பேருரு வாகி சித்திரச் சபையில் தோன்றும்
கொன்றையன் சடையன் தீபன் குற்றால நாதக் குருவே

5. இன்னிசை பாடித்தேனீ இயற்றும் மகரந்தப் பூசை
தென்னவர் மண்ணவர் துதிக்கும் செஞ்சுடர் மேனிநல் அழகன்
அன்பளி ஆனந்தக் கூத்தன் ஆதிய நாதியன் அருளன்
கொன்றைச் சடைமுடிக் கடவுள் குற்றால நாதக் குருவே

6. முந்து முத்தீயும் ஆகி முதிரா பேரொளி யான
அந்தரக் கூத்தனு மாகி அண்டச்ச ராசரம் கடந்தோர்
விந்தைசெய் விமலப் பொருளே வேதியத் திருமுறை அருளே
குந்தக மில்லா வாழ்வருள் குற்றால நாதக் குருவே

7. அஞ்செழுத் தோதுவர்க் கறிவாய் ஆற்றலர்க் கன்புரு வாகி
நெஞ்சினில் ஒளிரும் கூத்தன் நிறைமணிச் சுயம்பொளி மின்னல்
தஞ்சமென் றடிபணி உயிரை தன்னரு கேற்கும் அண்ணல்
குஞ்சித பாதத் தழலன் குற்றால நாதக் குருவே

8. முத்தனும் முழுதும் அறிந்த மோகன முனிதவக் கூத்தன்
அத்தனும் அண்ணன் கடவுள் அன்னைநல் அக்கையும் அம்மான்

சித்திரச் சபையில் ஆடும் செந்தழல் திருவருள் மூர்த்தி
கொத்தலர்க் கொன்றைச் சடையன் குற்றால நாதக் குருவே

9. எட்டமர்க் குணத்தில் தோன்றும் ஏகம்பத் தீசுர மூர்த்தி
அட்டமா சித்தியு மருளும் ஆதாரத் திருவரு ளேந்தல்
பட்டொளிப் பகிரண்டத்தன் பால்வெளி படைத்த கடவுள்
கொட்டிசைக் காடும் தந்தை குற்றால நாதக் குருவே

10. பின்னைப்பல் ஊழி செய்யும் பிங்கலப் பேரொளிப் பிழம்பே
தென்னைவ னஞ்சூழ் அருவி சித்திரச் சபைந யகனே
நின்னைநான் நினைக்கிலன் எனினும் நீயன்றோ எந்தன் கடவுள்
குன்றாச்சீர் கழலரு கேற்பீர் குற்றால நாதக் குருவே

–திருச்சிற்றம்பலம்–

## 5. திருவாலங்காடு - இரத்தினசபை

**ஊர்த்துவத் தாண்டவர் தரவுகொச்சகக் கலிப்பா வண்டார்குழலியம்மை**

1. வாய்பழுத்த வார்த்தை வீசும்மதியறியா ஏழையேன்
நோய்பழுத்த பிறவியாகி நொடித்துநின்று துதிக்கிறேன்
வேய்பழுத்த ஆலங்காட்டில் விண்பணியும் பரமனே
நீயெடுத்த பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

2. பாம்புதிர்த்த நஞ்சயின்ற பாசுபத வேந்தனே
தீம்புதிர்த்த புரமெரித்த தேவகானக் கூத்தனே
வேம்புதிர்த்த கனிஇனிக்கும் ஆலங்காட் டரங்கிலே
ஓம்உதிர்த்த பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

3. ஊன்குளித்த எண்குபோல் ஏழுகோடிப் பாவங்கள்
நான்குளித்து ஈமத்திலே நரம்பொடிந்து தீயுமுன்
தேன்குளித்த கோபுரஞ்சூழ் ஆலங்காட் டரங்கிலே
வான்குளித்த பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

4. ஊற்றெடுத்த உதட்டுநீர் உதிரத்தீ உதிரத்தீ
நேற்றெடுத்த பொன்மணியும் நிலத்தில் மின்னும் மண்ணதே
காற்றெடுத்த மழைபொழியும் ஆலங்காட் டரங்கிலே
நாற்றமலர்ப் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

5. அஞ்சுமனன் அண்டங்கோடி அரசனாகும் ஆசையேன்
நெஞ்சிறைக்க மங்கைமது கொஞ்சுமாசை எரியவே
மஞ்சுறைந்த கோபுரஞ்சூழ் ஆலங்காட் டரங்கிலே
செஞ்சிலம்புப் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

6. காயவத்தைப் பிறப்பெடுத்த கல்வியில்லாப் பேதையேன்
தாயவத்தை கண்டுநின்றன் தாள்துதியாப் பாவியேன்
மாயவித்தை பேயடங்கும் ஆலங்காட் டரங்கிலே
தூய வித்தைப் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

7. பயில்கலைகள் பசுபதியின் பாசஞானக் கொடையனே
துயில்கலந்த கேவலத்தை தொடர்ந்துசெல்லும் மூடனேன்
வெயிலுதிக்கத் தேனுதிரும் ஆலங்காட் டரங்கிலே
எயிலழித்த பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

8. காலஞானம் கணித்துநின்ற கானவீணை நாதனே
ஏலம்பூ கிராம்புநாறும் ஏகபாதத் தீசனே
ஆலகால நீலகண்டன் ஆலங்காட் டரங்கிலே
ஞாலநாதப் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

9. முழத்துணியில் புவிசுருட்டும் மோடிவித்தைப் பூமியில்
இழப்பதற்கும் வளர்ப்பதற்கும் ஏதுமில்லா ஏழையேன்
அழுக்கொழிக்கும் வாவிசூழ்ந்த ஆலங்காட் டரங்கிலே
நழுக்கழிக்கும் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

10. பொய்நெறியை மணமுடித்துப் போகியான பேதைநான்
மெய்நெறியை அறிந்துணர்ந்து திருந்திவாழும் துணிவிலேன்
நெய்விளக்கில் நீரெரியும் ஆலங்காட் டரங்கிலே
உய்வளிக்கும் பாதமாட நானிறைஞ்ச வேண்டுமே

–திருச்சிற்றம்பலம்–

## 6. திருத்தில்லை - வெளி தலம்

**ஆகாய நாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் சிவகாமியம்மை**

1. அகரம கரநல் அமுதொலியன் அன்பறி வருளும் ஆகாயன்
பகரும்மா நுகர்வொடு பரிவளிக்கும் பரம்பொருள் ஈசுரன் பாசுபதன்
இகபரத் துயிர்களுக்கில்லறமும் இருவினைகல்வியும் தவமருளும்
திகம்பரப் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளி நாதச் செம்பொருளே

2. அமரத்திருவருள் ஆனந்தன் அதிசயந் தான்செயும் ஆகாயன்
இமயப் பெருங்கணம் ஏழ்புவியோர் இன்னிசை யோர்துதி எரிகரத்தன்
சமயச்சந் தானக் குருவோரை தமிழ் மறை திருமறை செய்ய வைத்த
சிமயப்பெ ருஞ்சுடர்ச் சிவலோகன் தில்லை வெளிநாதச் செம்பொருளே

3. அந்திரன் மந்திரன் ஆறங்கன் அமுதப்பெருங்கடல் ஆகாயன்
இந்திரன் வானவர் இருடியரும் இருமுப் பூதமும் இறைஞ்சி மகிழ்

தந்திர வீணையன் சாந்தமுகன் சகலவிஞ் ஞானரின் தவக்கடவுள்
செந்திருப் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளிநாதச் செம்பொருளே

4. அங்கைமென் செந்தழல் அழகொளியன் அபயக்க ரம் ஒளிர் ஆகாயன்
கங்கையன் காவிரிய முனையொடு நருமதை கோதவரிநதியன்
சங்கைநல் ஞானியர் சான்றோரும் தவச்சித் தனைத்துயிர் தாள் பணியும்
செங்கைநல் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளிநாதச் செம்பொருளே

5. ஆட்டமும் பாட்டொடு பண்ணிசைசெய் அதிசய செயல்புரி ஆகாயன்
கோட்டப்பத் தெண்கணம் அரம்பையரும் குவலயர் விரதியர்கும்பிடுவோர்
வாட்டம்பிறவியும் இருவினையும் மலமற வானுறை வாழ்வருளும்
சேட்டன்பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளிநாதச் செம்பொருளே

6. ஆனந்த நாயகன் அருவுருவன் ஐந்தெழுத் தற்புதன் ஆகாயன்
ஞானச் செங்கோலன் நால்யுகத்தன் நான்மறைத் திருவருள் நாதாந்தன்
போனகம் போகமும் புது உடலும் புவனி உயிர்க்களி பூங்கழலன்
தேனகப் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளி நாதச் செம்பொருளே

7. ஆடிய திருவடி அழகுருவன் அம்பலப் பரம்பொருள் ஆகாயன்
கூடிய அடியவர் கோடியிடை கொன்றை யணிந்தாடும் கோமேதம்
கோடியு டல்மாறி குமையுயிரின் குறையறுத் தருளும் குருவாகி
தேடிச்செல் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளிநாதச் செம்பொருளே

8. ஆசை ஐமாபாவம் ஆணவத்தை அமைவினை யோடுக்கும் ஆகாயன்
மாசிம காசிவ ராத்திரியில் வையகப் பூசையை வந்தேற்றே
ஓசைஒ ளிசுவை ஊறுமணம் உலகுறை போகமும் உயிர்க்களிக்கும்
தேசிகப் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லை வெளி நாதச் செம்பொருளே.

9. அருமிரு நடனஞ்செய் அம்பலத்தோன் ஆசான் ஆறங்கன் ஆகாயன்
குருவருள் தீக்கை சகலருக்கும் குணமுணர் பிரளயர்க் குள்ளுணர்வில்
தருமிறைசற்குணன் சாம்பசிவன் தாண்டவன் உலகுசெய் சங்காரன்
திருமுறைப் பெருஞ்சுடர்ச் சிவலோகன் தில்லை வெளி நாதச் செம்பொருளே

10. அல்லலெல் லாமழி ஆனந்தன் அன்பளி நாயகன் ஆகாயன்
நல்லதும் அல்லதும் நாடுயிரை நயமுற நடத்தும் நவமணியன்
எல்லோர்க்கும் சிறியேன் என்றனையும் இணைகழல் காட்டி ஆட்கொண்ட
சில்லிசைப் பெருஞ்சுடர்ச்சிவலோகன் தில்லைவெ ளிநாதச் செம்பொருளே.

–திருச்சிற்றம்பலம்–

## 7. திருக்காளத்தி - வாயு தலம்

**காளத்திநாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் ஞானப்பூங்கோதை**

1. நெடுங்குரு புதனொடு செவ்வாய் சனியும் நேர்கோட் டுறநிறுத்தி
   வடுவற பூமியில் சூரிய கிரகணம் வரவுசெய் மாச்சுடரே
   அடியேன் நினைத்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகிறேன்
   மடுவெழில் முகலி வளக்கரைக் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

2. இன்றொரு கங்கணச் சூரிய கிரணம் இகபரக் குறையறவே
   நன்றொடு உயிர்மகிழ் நலமருள் குருவே நானில மாமருந்தே
   அன்பணிக் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகிறேன்
   மன்றெழில் கொன்றை மாநகர்க் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

3. நீர்மின் வளிமின் நெருப்புறை அனல்மின் நெடுங்கதிர் அணுமின்னும்
   பார்மிசை செய்கோள் பயன்பொறி கருவிசெய் பன்மதி தருந்திருவே
   ஆர்மின் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
   மார்கழிப் பூவெழில் வளநகர்க் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

4. நூறா யிரம்நதி நுண்மணல் எண்ணுயிர் யுகயுகம் நினைத்துதிக்க
   சீறா விதிவினை சிதையா உயிர்க்களி செம்பவ ளத்திருவே
   ஆறார் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
   மாறாத் திருநகர் முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

5. தடித்ததீ வினையொடு தாமசக் குணமற தரணிவாழ் நசைமாற்றி
   முடித்தபி றவியொடுமுத்தியும் பெறும்தவம் முன்மதி தருமிறைவன்
   அடித்தா மரைதுதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகிறேன்
   மடித்தமர் சீரலை முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

6. பேதமும் கலைஇயல் பெருங்கணி தமும்பின் பிணியறு திருமூலம்
   வேதமும் பயில்வுற மேலருள் செய்தெனை வீழா தெடுத்தநின்றன்
   ஆதநல் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
   மாதவத் தோர்நிறை முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

7. பெருத்த பதவிநிதி பேதமை வாழ்வுசெய் பிழையுயிர்க் கலியுகத்தில்
   வருத்தஞ்செய் மும்மலம் வருந்தொடர் பிறப்பற வளர்மதி தருமிறையே
   அருத்தநின் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
   மருத்துவக் குணநீர் முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

8. வனத்தைந் தறிவுயிர் மற்றறி வுயிர்களும் மனிதனில் வேற்றறியேன்
   தினமொரு நெறியுறும் செறிமல மொடுக்கிச் சீர்தரும் செம்மருந்தே
   அனல்மலர்க் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
   மனமதி நிறைவளி முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

9. உண்டவை பிணிவினை உற்றவை நாடகம் உறக்கமும் சிறுமரணம்
கண்டவை கனவுகள் களிப்பவை நரம்பதிர் கனகம்மண் என்றுணர்த்தும்
அண்டநல் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
மண்டநல் வனக்கரை முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

10. வெந்தயம் எட்டிவேம் பூமத்தங் காயச்சுவை வீழ்துயர் நாளைஇன்பம்
பந்தயக் குதிரைநெஞ் சடக்கிய சித்தரின் பதித்தவ வாழ்வளிக்கும்
அந்தரக் கழல்துதித் தானந்த வாரியில் ஆழ்ந்தாழ்ந் துருகுகின்றேன்
மந்தரச் சோலைநல் முகலியங் காளத்தி மழுமணிக் களஞ்சியனே

–திருச்சிற்றம்பலம்–

## 8. திருஅண்ணாமலை – தேயு தலம்

**அண்ணாமலையார் அறுசீர் ஆசிரிய விருத்தம் உண்ணாமுலையம்மை**

1. ஒப்பிலி ஓமுறை நாதன் உஞ்சைசெய் உத்தமன் அருவன்
சிப்பியில் ஓவியம் வரைந்து செறிவொளி முத்தும ளித்த
தப்பிதம் தீண்டாச் சுடரன் சந்தனச் சாந்தணி நுதலன்
அப்பர்சம் பந்தர் துதித்த அண்ணா மலையின் அரனே

2. வரிப்புலி அதளணி வானன் மங்கல மாமறை மழுவன்
திரிசூலச் செம்பொற் கரத்தன் திங்களும் சூரியன் துதித்த
பரிநரி செய்த பரமன் பாற்கடல் விடமுறை கண்டன்
அரியயன் அறியா உருவன் அண்ணா மலையின் அரனே

3. வட்டமா சதுரம் பிறைமூ வறுமுனைக் கோணப் பூதம்
திட்டமாய் செய்மா யையை சீருயிர் நலமுறத் தந்தோன்
பட்டினத் தடிகள் சுந்தரர் பைந்தமிழ் மறைமணி வாசகர்
அட்டவ சுக்கள் துதிக்கும் அண்ணா மலையின் அரனே

4. மினுக்குயர் பொன்னார் மேனி விரவிய பகிரண்டத்தன்
மனுநீதிச் சோழர்க்கன்பளி மங்கல வார்சடை வானன்
புனுகுப்பூ னையிம் பரியும் பொருப்புவ லச்செயல் ஏற்ற
அனுதினம் ஆன்றோர் துதிசெய் அண்ணா மலையின் அரனே

5. பக்கமோர் பதினெண் கணங்கள் பக்குவ ஆன்மா வானோர்
திக்கெலாம் அடியார் சூழ திருநடம் புரியும் சுடரே
நக்கீரர் கபிலர் ஞானி நானில நல்லோர் வணங்கும்
அக்கினித் திருவரு ளாசான் அண்ணா மலையின் அரனே

6. உத்திகள் எல்லாம் உணர்த்தி உலகுறை வாழ்வு தந்தே
பத்தியை விதைக்கும் பரமன் பார்த்திபற் கன்பளி பண்பன்
சித்தரும் சிவனடி யார்கள் செருந்திநல் பூசை செய்யும்
அத்தனெம் ஆதி அண்ணல் அண்ணா மலையின் அரனே

7. இறைஇது அதுவென் றோடும் இன்னுணர் வில்லா உயிரை
   கறைகண்டக் காட்சி காட்டி கழல்நிழல் அருளும் இறைவன்
   குறைகளைக் குணமென் றேற்கும் கொன்றையஞ் சடைமுடி நாதர்
   அறைமறை யாவும்தந்த அண்ணா மலையின் அரனே

8. குஞ்சித பாதக் கொழுந்தன் குறும்பிறை சூடிய கோலன்
   சஞ்சிதம் தீர்க்கும் தலைவன் சங்கரத் திருவருள் ஞானி
   பஞ்சமா பாதகம் தீண்டா பத்தியும் பரிவும் தருவோன்
   அஞ்சேலென் றருள் ஈசன் அண்ணா மலையின் அரனே

9. இலங்கொளி ஏகம்பத்தன் இன்னிசை யாழ்கர நாதன்
   விலங்கொடு புல்லினம் யாவும் விளங்குயிர் ஒன்றுடல் வேறே
   புலன்பொறி போகமும் தந்தே பூதலத் துயிர்க் கன்பளிக்கும்
   அலகிலா விளையாட் டயரும் அண்ணா மலையின் அரனே

10. திருவருள் செம்பொன்மேனி திசையெலாம் விரவிய சுடரன்
    கருணையே உருவாய் நிற்கும் காவலம் பேரொளிக் கடவுள்
    ஒருசிறு நெறியும் தெரியா ஊமைநாய் எனையட் கொண்ட
    அருமறை ஆடல் வல்லான் அண்ணா மலையின் அரனே

–திருச்சிற்றம்பலம்–

## 9.திருவானைக்கா - நீர்த்தலம்

**சம்புகேசுவரர்** **கலிவிருத்தம்** **அகிலாண்டேசுவரி**

1. நாலொடு நால்குணன் நான்மறை வேதியன் ஞானநதி
   நூலொடு வலையமை நூதனச் சிலந்திக்கும் அரசளித்த
   மாலொடு நான்முகன் இராமன் பிராசரன் வணங்கிமகிழ்
   ஆலரன் அன்பருள் ஆனைக் காவுறை அம்மானே

2. மானமர் பொன்கரன் மழுவெழில் மாணிக்கம் மாதேவன்
   ஞனத்தி ருவொளி நாட்டியன் ஏழ்புவி நன்பளித்தோன்
   தானவர் வானவர் தவமதி யோர்துதி சங்காரன்
   ஆனைக்கும் வானளி ஆனைக் காவுறை அம்மானே

3. பொன்னார் கொன்றை புனைகூவிளநல் புனலுருவன்
   பன்னா கம்புனை பங்கயத் திருவடிப் பரமேசன்
   இன்னார் புரமெரி ஏகம்பப் பெருந்தீ ஏழிசையன்
   அன்போ டறிவளி ஆனைக் காவுறை அம்மானே

4. பண்டோர் இந்திரன் பவக்கண் மாற்றிய பாசுபதன்
   செண்டலர் மேருவை சிலையாய் நிறுத்திய சிங்காரன்
   கண்டங்க ருத்தோன் காலக்க ணக்கமை கதிர்விழியன்
   அண்டங்க டந்தோன் ஆனைக் காவுறை அம்மானே

5. செங்கண் மால்விடை சீரெழில் வாகனச் செந்தழலன்
பொங்கமு தக்கடல் புரைவிட மயின்ற பூதகணன்
திங்கள் பிறையணி குங்குமத் திலகன் திருவருளன்
அங்கமும் அறிவளி ஆனைக் காவுறை அம்மானே

6. காரமு தவெளி காண்பரி தாகிய காற்றலையன்
பாரமு தப்புனல் பசியூண் பால்நதி படைத்தளித்த
ஊரமு தமுகில் உயர்வான் மழையளி ஓங்காரன்
ஆரமு தக்கடல் ஆனைக் காவுறை அம்மானே

7. விஞ்சைநல் வேதியன் மின்னலந் திருவிழி மேலுலகன்
குஞ்சித பாதத்தன் கோமே தகமணி குளிர்சடையன்
தஞ்சமென் றடிபணி தகையுயிர் யாவிலும் தவழ்ந்தொளிரும்
அஞ்செழுத் தம்பலன் ஆனைக் காவுறை அம்மானே

8. காவே ரிக்கரை கற்பகப் பெருஞ்சுடர் கயிலாயன்
பூவா ளிஎச்சன் புரைதக்கன் உடலழி பூதலத்தன்
தேவா ரமூவர் திருஇசை கேட்டரு கிடமளித்த
ஆவா ரத்தழல் ஆனைக் காவுறை அம்மானே

9. மோகம றுத்துயிர் மும்மையின் வினைதீர் முழுமுதல்வன்
நாதம ணிமுடி யாழிசை வானவன் நலிதக்கன்
யாகம ழித்துமண் ஞானத்தை வளர்த்த நாதமுனி
ஆகரர்க் கருளிய ஆனைக் காவுறை அம்மானே

10. பாதிரி கிளுவைநல் பவளமல் லியணி பரம்பொருளன்
ஈதலங் கடவுள் ஏகம்பப் பெருவெளி ஈசானன்
காதலங் கயிலயன் கழல்பணிந் துருகுயிர் கடைதேற
ஆதரித் தருள்தரும் ஆனைக் காவுறை அம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 10. திருவாரூர்- நிலத்தலம்

**வான்மீகநாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் அல்லியங்கோதை**

1. கண்ணொடு பொன்னளி கதிரொளியன் காலக லத்திரு கங்காளன்
தண்மலர்த் திருமகள் தண்டிநந்தி சற்குணக் கழற்சிங்கர் செருத்துனைக்கும்
விண்ணகப் பேறளி வான்மீகர் வித்தைவீ திவிடங் கநாதர்
அண்டப் பேரண்டன் அமுதளித்த ஆனந்தன் ஆரூர் ஆதியனே

2. பெருமாள் இதயத்தில் கூத்தாடி பிழைபொறுத் தருளிய பெரும்பேறன்
ஒருமகன் உயிரழிச் சோழனுக்கும் ஒளிவிடை மீதொளிர்காட்சி தந்தோன்
திருத்தொண்டத் தொகைச் சீர்வரிசை செய்தடி யார்க்கும் சிறப்பளித்தோன்
அருமறைப் பேரண்டன் அமுதளித்த ஆனந்தன் ஆரூர் ஆதியனே

3. சிறகொடு கேழலின் கொம்பணிந்த சித்திமுத்தி தரும் திருவருளன்
துறவறம் இல்லறத் தொடர்பளித்தே சூழ்வினை தீர்க்கும் சுயம்பொளியன்
விறன்மிண்டர்க் கருளிய வேதாந்தன் விரிசடைப் பிறையணி வெஞ்சுடரன்
அறம்பொருள் இன்பம் வீடளிதளித்த ஆனந்தன் ஆரூர் ஆதியனே

4. எங்கும் விரவிய ஏகாந்தன் இளஞ்சுடர் ஏகம்பன் ஈசானன்
வங்கவி டமணி மாதேவன் மாமறை வழங்கிய வார்சடையன்
சங்கொலி யாழிசை சங்காரன் சற்குரு நாதன் தாயன்பன்
அங்கச னுடலழித் தருள்செய்த ஆனந்தன் ஆரூர் ஆதியனே

5. பனைக்கதிர் மாற்றிக் காய்குலைசெய் பாற்கடல் பாலகற் களித்தபிரான்
சுனைநீர்த் திருவருள் தூயவெளி சுந்தரத் தொண்டர்க்கும் தூதுசென்றே
மனையறம் காத்த மாகேசன் மண்ணவன் விண்ணவன் மாதலைவன்
அனைத்துயிர் இன்புற அன்புசெய்யும் ஆனந்தன் ஆரூர் ஆதியனே

6. உவமையொன் றில்லா உத்தமனே உயிர்களி லுறைந்தெழும் உணர்வனலே
கவனங்கள் சிதையாப் பூசைசெய்தே கழல்பணி வார்துயர்க் கதவடைக்கும்
நவரச நாயகன் நாதாந்தன் நம்புவர் மனத்துறை நாட்டியனே
அவனிக்க லைக்கல்வி அளித்தருளும் ஆனந்தன் ஆரூர் ஆதியனே

7. கொடுமுடி கயிலையன் குன்றவில்லிகுளிர்க்குகை வெள்ளியங்கிரிமலையன்
வடிவே றின்மிசை வானகத்தே வந்தொளி காட்டும் மறைமகுடன்
தொடுகட லிடைப்பல் கோடியுயிர் தொடர்ந்துறை வாழ்வளிச்சுடர்வேணி
அடியவர்க் கருந்தவம் அளிக்குமிறை ஆனந்தன் ஆரூர் ஆதியனே

8. முகத்தா மரைக்கவின் மூவிழியன் முசுகுந்தர் கரத்தேழ் முழுவடிவன்
திகழ்மணிக்குன்றன் செம்பவளன் திருவா திரைநாள் திருவிழவன்
பகரிசைப்பேரொளிப் பாசுபதன் பண்டொரு இந்திரன் பவந்தீர்த்தோன்
அகத்தவத் தீக்கையும் அன்பருளும் ஆனந்தன் ஆரூர் ஆதியனே

9. பொறிப்புலன் ஐந்தளி போதாந்தன் புரைமலம் தீர்வுற போகமளி
மறிக்கர மாமணி வானிறைவன் மங்கலச் சங்கிசை மாமருந்தன்
பறிமிளிர் மேனியன் பரம்பொருளன் பங்கயச்செங்கழல் பரமேசன்
அறிவளி குருவாய் ஆண்டருளும் ஆனந்தன் ஆரூர் ஆதியனே

10. குமுதம ரைமுல்லை கொன்றையணி குவலயத் துயிர்களின் கொடுமலந்தீர்
சுமுகக் கொழுஞ்சுடர் தொடர்மலையன் சுந்தரன் தோன்றாத் துணைஈசன்
முழுசுநல் மனத்தோர் முழுத்தவத்தை முன்னுறத் தொகுத்தே முறைப்படுத்தும்
அமுதத் திருக்கழல் நிழலளிக்கும் ஆனந்தன் ஆரூர் ஆதியனே

–திருச்சிற்றம்பலம்–

## 11.காஞ்சிபுரம் - நிலத்தலம்

**ஏகாம்பரீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **காமாட்சியம்மை**

1. அறம்வளர் நாயகன் அமுதப்பெ ருங்கடல் அம்பலன் ஆதியந்தன்
   நறவமர்க் கொன்றையன் நல்லெருக் கணிந்த நாதநல் மாமதியன்
   புறங்காட் டுறைபொடி பூசிய மேனி பொன்னொளிச் சங்காரன்
   கறவை நல்வீடளி கங்கணன் பொங்கழல் கச்சிஏ கம்பனே

2. சினம்புவிப் போகம் தீண்டாப் பேரருள் செம்பவ ளச்சுடரன்
   சனகா தியர்சாபம் சயவிச யர்தீர்க்க சமரிடம் தந்தபிரான்
   மனத்தகக் கோயில்செய் மறையுணர் பூசலர் மகிழ்வான் வழங்கியகோன்
   கனமனச் சுந்தரர் கண்ணொளி பெறவருள் கச்சிஏ கம்பனே

3. முப்பத்தீர் அறத்தொடு முறைநெறிப் பத்தியை முன்னோர்க் கருளினியன்
   ஒப்புமை இல்லா ஓமொலிமுர்த்தி உத்தமச் சங்காரன்
   அப்புநல் மலர்ப்பூசை ஐயடி கழற்சிங்கர் அருளுறக் காட்சிதந்த
   கப்பிய மலமற கருணைசெய் துயிர்க்கருள் கச்சிஏ கம்பனே

4. திருமால்பிரமன் உருத்திரர் வானவர் தினம்மலர் பூசைசெய்யும்
   செருவார் திரிபுரம் சிதைத்தபின் பதவிகள் செய்தருள் புரிந்தபிரான்
   ஒருகரிகாலன் உவந்துதி னந்துதி ஒளிப்பிழம் போமொலியன்
   கருவினில் உடனாய் கலந்துயிர்க் கருளிய கச்சிஏ கம்பனே

5. தூக்கிய திருவடி சொக்கன் சுடர்மழு சுந்தரப் பரம்பொருளன்
   நோக்கிய நுண்ணொளி நோக்கில் புரமெரி நுதல்விழிப் பேரருளன்
   சாக்கியர்குறிப்புத் திருத் தொண்டர் அவர்க்கும் தழல்கழல் நிழலளித்த
   காக்குமெம் கடவுள் காலகண் டத்திரு கச்சிஏ கம்பனே

6. பஞ்சகஞ் சுகத்தொடு பரிவளித் துயிர்கருள் பாலிக்கும் ஆதியண்ணல்
   நஞ்சயின் றமுதளி நனிநா கரிகன் நால்யுகம் நடத்துமிறை
   குஞ்சரத் தோலணி குறையாத் திருவருள் கும்பமு னிவணங்கும்
   கஞ்சம லர்க்கழல் கதிரொளி அருவுரு கச்சிஏ கம்பனே

7. ஓங்கலொ ளிக்கழல் உலகுறை வானவர் உள்ளநல் லோர்க்கினியன்
   தேங்குமு தக்கழல் திரிசடைப் பேரிறை செய விசயர்குறைதீர்
   தூங்காச் சுந்தரன் சுயம்பொளிச் செம்பொருள் சூக்குமத் தேகமருள்
   காங்கெயப் பொன்னன் கதிவிதி நாயகன் கச்சிஏ கம்பனே

8. தொடக்கமும் ஒடுக்கநல் தொழில்புரி வேதியன் சூட்சம சுடரீசன்
   வடக்கொடு தெற்கிலும் வலம்வரும் வான்மீன் மதியுதி பால்வெளிசெய்
   நடக்குநன் மைதீமை நலிவுயிர் திருத்தி நடத்தும் நாதாந்தன்
   கடக்கும்பல் ஊழிசெய் கனியன் முனிவன் கச்சிஏ கம்பனே

௯. நேரிருள் கேவல நிலையுயிர்க் குணர்த்தி நேசநல் சகலமுற
பாரிருள் பவத்திருள் பசுமதி மனத்திருள் பக்குவம் செய்தருளி
பேரிருள் ஒடுங்குறப் பிரளயர் விஞ்ஞானர் பின்புநல் வானருளும்
காரிருள் இருவினை கனிவுற மாற்றும் கச்சிஏ கம்பனே

10. பேரனல் பிங்கலன் பிதிரொளி நாட்டியன் பிச்சா டமூர்த்தி
வாரணத்துரிபுனை மங்கலன் குங்குமன் வானவன் மாகேசன்
ஈரணன் எளியேன் எனைப்பொரு ளாக்கி இணைகழல் காட்சிதந்த
காரண மில்லாக் கருணைசெய் தாண்ட கச்சிஏ கம்பனே

–திருச்சிற்றம்பலம்–



# திருக்கோயில் பாமாலை
# (சோழ நாட்டுத் தலங்கள்)

## 1. துறையூர் - வட்டம்

**நந்திகேஷ்வரர்** **கலவிருத்தம்** **மகாசம்பத்கௌரி**

1. பிட்டுண் டுலகுக்குப் பிரம்படி நல்கிய பெம்மானே
பட்டுப்பீ தாம்பரம் பாலாபி டேகஞ்செய் பத்தர்மகிழ்
சிட்டர்கு முச்சிவ சிவமெனும் துறையூர்ச் செஞ்சுடரே
மட்டிநான் மறக்கினும் வலியவந் தேற்கும் மாமணியே

2. ஐயிரு சிரத்தனை அழித்தது போல்நடித் தன்பளித்தீர்
நெய்யபி சேகமும் நிறைமலர் மாலைகள் சூட்டிமகிழ்
செய்நெறி யோர்சிவ சிவமெனும் துறையூர்ச் செஞ்சுடரே
மய்யனேன் மறக்கினும் வலியவந் தேற்கும் மாமணியே

3. நரிபரி செய்தே நல்மணி வாசகர் நலிவழித்த
அரியயன் தொழுமிறை அவனிய நான்மறை அருளேந்தி
தெரிமனக் குழுசிவ சிவமெனும் துறையூர்ச் செஞ்சுடரே
கரியேன் மறக்கினும் வலியவந் தேற்கும் கருணையனே

4. மாறனுக் கருளுற மாணிக்கம் பகர்ந்த மறைவேந்தே
ஆறகத் தடியார்க் கதிநீர் விலக்கிய அற்புதனே
சேறிடை வயலினர் தினந்தொழும் துறையூர்ச் செஞ்சுடரே
நீறிலேன் மறக்கினும் வலியவந் தேற்கும் நின்மலனே

5. கூனலி ளம்பிறை குறையொளி மாற்றிய கோவேந்தே
தேனபி டேகமும் திரள்மணி மாலையும் சூட்டிமகிழ்
தீனபந் தினர்சிவ சிவமெனும் துறையூர்ச் செஞ்சுடரே
ஊனனேன் மறக்கினும் வலியவந் தேற்கும் உத்தமனே

6. இந்திரன் சந்திரன் ஏமனின் குறைதீர்த் தருளியகோன்
சந்தனச் சாந்தொடு சண்பக மல்லிகைத் தாரணியும்
சிந்தனைச் சிற்பிகள் தினந்தொழும் துறையூர்ச் செஞ்சுடரே
மந்தனேன் மறக்கினும் வலியவந் தேற்கும் வாமனனே

7. புவிமா னிடம்நின் பூங்கழல் தொழுதொழும் பெனல் மறந்தே
தவிமா மதியுயிர் தசையுடல் தாவிப்பின் பிறந்திறக்கும்

செவிகேள் அடியார் தினந்தொழும் துறையூர்ச்  செஞ்சூடரே
கவியேன் மறக்கினும் வலியவந் தேற்கும் கயிலையனே

8. மாணிக் கருளிய மாதவக்கொழுந்தே வானிறையே
காணிக்கைச் சிரந்தர கழுத்தறு இராவணன் கதிகாத்த
தோணிபுரக் கவி துதித்தநல் துறையூர்ச் செஞ்சுடரே
கோணலன் மறக்கினும் வலியவந்தேற்கும் கோயிலனே

9. கமலக் கவின்தாய் காரைக்கா லார்க்கருள் நிழலளித்த
அமளிக் கடல்சுழல் ஆலகா லமயின்ற அம்பலனே
சிமிழ்மனத் தடியார் தினந்தொழும் துறையூர்ச் செஞ்சுடரே
எமியேன் மறக்கினும் வலியவந் தேற்கும் ஈசுரனே

10. ஒளிர்மணிக் கறைகண்டம் உருபாம் பணிக்கவின் உலகோனே
களியுண்டடியவர் களிப்புறக் கருணைசெய் கங்காளன்
தெளிமதி யோர்தினம் தொழுதெழும் துறையூர்ச் செஞ்சுடரே
எளியேன் மறக்கினும் வலியவந் தேற்கும் இறையோனே
–திருச்சிற்றம்பலம்–

## 2. திருத்தலையூர்

**சப்தரிசீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஐந்தலை நாகக்குடையனலன் அம்பல கூத்தொளிர் ஆலமுண்ட
மெய்யொர கடவுள் மேதினியில் மேலோர் மேலோன் விரிசடையன்
பொய்நெறி மாற்றிநல் புத்தியுடன் போகமும் யோகமும் தரும்வள்ளல்
செய்மணிச் சங்கரன் சிவலோகன் திருத்தலை யூருறை திகம்பரனே

2. பண்ணிசை யாழ்கர பரஞ்சோதி பார்த்திபற் கருளிய பாசுபதன்
எண்ணிசை குணத்தன் ஏகாந்தன் ஏழேழ் பகிரண்டத் தெம்பெருமான்
ஒண்ணாக் கயமுகன் உடலழித்த ஊர்த்துவத் தாண்டவன் உலகீசன்
திண்ணியன் சங்கரன் சிவலோகன் திருத்தலை யூருறை திகம்பரனே

3, கூடலன் மாதவன் குன்றவில்லி கொடுகொட்டித் தாண்டவன் கோபமிலி
ஆடலங் கலைவளர் அறிவாசன் ஆயிரம் கோடிநல் திருநாமன்
ஏடது எதிர்செல இசைவளித்து இசைக்கடல் சம்பந்தர்க்கினிதளித்த
தேடளித் திருவருள் சிவலோகன் திருத்தலை யூருறைத் திகம்பரனே

4. நேசமெல்லாந்தரும் நிமலீசன் நெற்றிக் கண் பட்டொ;ளி நீலகண்டன்
பாசமலவலி பதிந்தொடுங்க பரிவருள் தருமிறை பாவநாசன்
காசளித் தப்பர்சம் பந்தர்க்கும் கழல்துதி அடியவர்க் கன்பளித்த
தேசமெல் லாந்தரும் சிலோகன் திருத்தலை யூருறை திகம்பரனே

5. வந்தவன் தொண்டர் மகிழ்வுறவே மண்செங் கங்கல்லைப் பொன்செய்தோன்
அந்தமுத்தாற்றில் இட்டபொன்னன் அரூர்க் குளத்தில் அளித்தபிரான்
கந்தமலர்த் தென்றல் காமனையும் கவினுடல் பொடித்த காலகாலன்
செந்தமிழ்ப் பாட்டளிச் சிவலோகன் திருத்தலை யூரூறைத் திகம்பரனே

6. குஞ்சித பாதன் கோங்கலரன் குகைவெள் ளியங்கிரிக் கோவேந்தன்
அஞ்செழுத் ததிபதி ஆலனிடம் அயின்றதை மிடறிடை அடக்கியகோன்
வெஞ்சிறை தடுத்திட நரிபரிசெய் விந்தைகன் காட்டிய விண்ணீசன்
செஞ்சடைச் சங்கரன் சிவலோகன் திருத்தலை யூருறைத் திகம்பரனே

7. மாலிந திகுளம் ஏரியென வாழ்வளி பூம்புனல் வளம்படைத்தோன்
கோரிக்கை விண்ணப்பம் செய்பத்தர் குறைகளைந் தினிதருள் குற்றாலன்
காரிக்கும் நாரைக்கும் கருணைசெய்த காவிரி கங்கையன் நருமதையன்
சீரிசைப் பகிரண்டச் சிவலோகன் திருத்தலை யூருறைத் திகம்பரனே

8. எட்டுத் திசையொடு கீழ்மேலும் இரண்டற நிறைந்தொளிர் ஏகம்பன்
பிட்டுக்கு மண்சுமப் பேற்றபிரன் பிரம்படி எல்லோருக்கும் பெற்றளித்த
அட்டநல் மூர்த்தி ஆதியண்ணல் அறிவுரு ஆசான் ஆகாயன்
சிட்டுக்கும் வானளிச் சிவலோகன் திருத்தலை யூருறைத் திகம்பரனே

9. இறப்பொடு பிறப்பிலி எரிகரத்தன் இன்னிசை சரிகம பதநியண்ணல்
அறம்பொருள் இன்பம் வீடளிக்கும் அற்புதத் திருவருள் ஆனந்தன்
உறக்கமும் மறப்பளித் துயிர்காக்கும் உத்தமன் முத்திசெய் ஓங்காரன்
சிறக்கணி நோக்கருள் சிவலோன் திருத்தலை யூருறைத்திகம்பரனே

10. காலமணிச் சுடர் கணிணிமகான் கற்பகன் சிற்பரன் கங்காள்ன
ஆலமர்ந் தருமறை அளித்தபிரான் அந்தக னுடலழித்த தன்புசெய்தோன்
நீலநக் கர்க்குயர் வானளித்த நிரந்தரக் கடவுள் நெருப்புருவன்
சீலமெல் லாந்தரும் சிவலோகன் திருத்தலை யூருறை திகம்பரனே

–திருச்சிற்றம்பலம்–

**சப்தரிஷிஈசுவரர்** **கலிவிருத்தம்** **குங்குமவல்லி**

1. ஏடேடுத் தெழுதிய ஏகம்ப மூர்த்தி
காடகத் தாடுபொன் கங்காள மேனி
கூடகத் தியங்குயிர் குளிர்செங் கழல்தொழ
தேடகச் சுகந்தரும் திருத்தலை யூரனே

2. வெண்பிறை சூடிய விதிகணி மேதை
மண்புதை காட்டிடை மாதவக் கூத்தன்

எண்சாண் உடலுறு பசிமறந் தடிதொழ
திண்மனம் வளந்தரும் திருத்தலை யூரனே

3. கதிரொளி நீரணி கனக மணிமலை
மதிகதி நல்கும் வானவர் வேந்தனை
பதிசிரம் நிலமுறப் பணிந்தழு வோர்நிலை
சிதர்பனி மலைதரும் திருத்தலை யூரனே

4. நிமிரிண ராவிரை நித்யக்கல் யாணி
குமிழிதழ் தாமரை கொன்றையன் தாரன்
அமிர்தத் திருக்கழலை அடியவர் தொழுதெழ
சிமயத் திருதரும் திருத்தலை யூரனே

5. பொறிவரி நாகம் புரள்கவின் மேனி
அறிவுறை மானிடர் முகுளச் சங்குயிரன்
நெறியடி யார்க்குதவும் நிறைமனத் தார்தொழும்
செறிமதி வாழ்வருள் திருத்தலை யூரனே

6. விரல்நுனி அங்குலப் பொறியெழில் மான்கரன்
சிரமறுத் தயன்புகழ் திருத்திய மருத்துவன்
மரம் வளர்த் தவனியில் மழைவளம் புரப்போர்
திரள்மணம் பெறவருள் திருத்தலை யூரனே

7. பகிரண்ட மேவிய படர்நிழல் ஒளிமலை
முகில்நதிக் கருணையில் முதல்கடை உயிர்வளர்த்
தகிலச்சு ழல்கணி அற்புதச் சுயம்பொலி
திகிரியன் தினந்தொழும் திருத்தலை யூரனே

8. நாதத் திருவுரு ஞாலமேழ் தொழும்மறை
பாதத்தி ருமலர் பாதர சத்தொளி
காதலங் கருணையன் கடவுளன் சுயம்பொளி
சீதனத் திருநிதி திருத்தலை யூரனே

9. அருவனல் அதிகனல் அணுவகத் தியக்கியல்
புருவனல் எரிபுரம் புதுப்புது உலகுசெய்
கருவறை உயிருடல் கதிரலை உணர்வருள்
திருவமர் இறைவன் திருத்தலை யூரனே

10. ஓரொளி இருநிறம் உலகுறை ஐநிறம்
தேரொளி யைமனிதர் செப்புதல் எளிதோ

பேரொளிப் பிழம்பே பிழைகளைந் தமுதருள்
சீரொளி இறைவன் திருத்தலை யூரனே
-திருச்சிற்றம்பலம்-

## 3. ஆலத்துடையாம்பட்டி

**சோமநாதர் அறுசீர் ஆசிரியவிருத்தம் சுந்தரவல்லி**

1. குழல்மலர் மத்தமும் கொன்றைமரை குவளைநல் அருச்சனை கொண்டபிரான்
விழவெழில் மதுரை வீதியிடை விறகுவி லைபகர்ந்த வேதமுனி
தழல்மலை யாகியே அயனரிக்கும் தத்துவச் சித்திசெய் தமரமுதன்
அழலின் குளிர்தரும் ஆறங்கன் ஆலத்துடை யாம்பட்டி அம்மானே

2. கருமணி நெச்சியும் பவளமல்லி காவிநல் லருச்சனை கொண்டபிரான்
திருவா ரூர்நகர் தெருவெல்லாம் சிவகணம் காட்டிய செஞ்சுடரன்
தருமிக்கும் பொற்கிழி தந்துவந்த தழல்மலை பேரொளித் தற்புருடன்
அருவொடு உருவன் அருவுருவன் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

3. கிளுவை மல்லிநல் இருவாட்சி கிரிபத் திரிஅருச் சனைஏற்றோன்
வளுவன் தொண்டரை அருட்ருறைக்கே வாவென நடந்த மாமறையன்
சளுக்குறை வருணனின் ஏழகடலை தடுத்தழி வாளளிச் சங்காரன்
அளகே சன்மலர்ப் பூசைசெய்யும் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

4. முல்லைமு ருக்கலர் செம்பருத்தி முதிரா எருக்கருச் சனைமகிழும்
தில்லையில் வாசகத் தேடெழுதி திருப்பெயர் பதித்த தேவதேவன்
எல்லாம் வல்ல சித்தருமாய் எழிலார் வழுதிக்கும் மகவளித்த
அல்லுமெல் ஊனந டனஞ்செய்யும் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

5. பொன்னடை சங்கலர் பூவரும்பும் புதுநந் தியத் தருச்சனை மகிழ்ந்தோன்
நன்மனை இயற்பகை நகர்நடந்த நால்யுகம் வளர்வர லாறமைத்தோன்
மன்னவன் பாண்டியன் மகிழ்திடவே மணிக்கழல் மாறி நடனஞ்செய்த
அன்னக்கு ழிநிறை ஆலவாயன் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

6. நெருஞ்சிநல் ஆவிரை நீர்மலரும் நித்தியம் பாதிரி அருச்சனைகொள்
இரும்பசி இளையான் குடிமாறர் இல்லதிற் கிரவுண்ண எழுந்தபிரான்
கருஞ்சிறை நாரைக்கும் முத்திதந்த கங்கணத் திருக்கரக் கயிலாலன்
அருசிறை புள்ளிற கணிந்தமலை ஆலத்து டையாம்பட்டி அம்மானே

7. கூவிளம் வெட்சிநல் மாதவியும் கோடல ருச்சனை கொண்டபிரான்
நாவர சண்ணலை திருவாய்மூர் நலக்கவி தரவா எனநடந்த

பாவினை இயற்றி பத்திரர்க்கும் பண்பெழில் சேரற்கும் பரிவளித்தோன்
ஆவினுக் கருளிய ஆலாலன் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

8. காஞ்சிக்கோங் கரளி காட்டுநுணா கருவன் னியருச் சனைமகிழ்ந்தோன
பூஞ்சிறைக் காரிக்கு முபதேசம் புகட்டிவா னளித்த் பொதிகையரன்
நாஞ்சில் படைக்கரன் நலிபழிதீர் ஞானத்தி ருவளர் நாதாந்தன்
ஆஞ்சில் வெண்பூநல் பூசைமகிழ் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

9. தோன்றிநல் மாலதி நாயுருவி தொண்டைசெருந்திஅ ருச்சனைகொள்
ஈன்றவர்கழல் தடிந்திறைப்பூசை இயற்றிய சிறுவரை சண்டிசெய்தோன்
மூன்றோ டறுபதின் மூத்தோரின் முளரியம் பதமலர் காட்டியருள்
ஆன்றோர் அவர்பதம் துதித்தழுவேன் ஆலத்து டையாம்பட்டி அம்மானே

10. குளவிநல் முல்லையும் மதமத்தம் கோளியம் சுரபுன்னை அருச்சனைகொள்
களிமன இராவணர் கையிசைக்கே கைவா ளளித்த் கங்காளன்
எளியேன் எனக்குநின் பரிவிருப்பின் இப்பிறப் பேதிருக் கழல் காட்டி
அளித்தருள் நின்கழல் நிழலமர்வே ஆலத்து டையாம்பட்டி அம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 4. சிங்கலாண்டபுரம்

**அமர சுந்தரேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் அகிலாண்டேசுவரி**

1. முப்புரம் எரித்த முழுமுதல்வன் முக்கண் முதிரொளி மோகுமிலான்
வெப்புநோய் அப்பரின் வினைதீர்த்த வேதிய நாயகன் வில்லாளன்
செப்பரும் திருவருள் சுடரொளியன் சிங்கலான் டபுரச் சிவமணியன்
அப்பொடு ஐம்பூதம் படைத்தளித்தோன் அழலடி பணிதல் அறமாமே

2. பொட்டலங் காரன் புவனமன்னன் பூக்களின் மென்மைநல் பொதிமனத்தன்
கட்டமு தப்பர்க் களித்துவந்த கங்கன ககனத் திருவருளன்
சிட்டன்சி வலோகன் செஞ்சுடரன் சிங்கலாண் டபுரச் சிவமணியன்
அட்டமா சித்திக்க மூல்பணிவார் அவனியின் தருமநல் அறிவொளியே

3. ஆலமர்ச் செல்வன் ஆதிரையன் ஆறங்கம் தமிழ்மறை அளித்தமதி
பாலையை நெய்தல்செய் பரம்பொருளன் பாவகச் சம்பந்தர்க் கருளினியன்
சீலத்தி ருவடி செம்மறையோன் சிங்கலான் டபுரச் சிவமணியன்
ஞாலத்தி ருக்கோயில் நனிபணிவார் ஞானமும் கல்வியும் நிறைவாரே

4. சித்துறை சிறுமென் புன்னகையன் செந்தீ மலையாய் நின்றபிரான்
முத்துச்சி விகைஞான சம்பந்தர்கும் முன்னளித் தன்புசெய் மின்சடையன்
தித்தித்தை நாடடியச் சிங்காரன் சிங்கலாண் டபுரச் சிவமணியன்
நித்திய பூசையில் நேர்ந்திருப்பார் நிமலனுக் குற்றவ ராவாரே

5. அட்டசங் காரம் செய்துவந்தே அவனிநல் லுயிர்களுக் கமுதளித்தோன்
சுட்டசெங் கல்லினைப் பொன்னாக்கி சுந்தரர்க் கருளிய சுயம்பொளியன்
சிட்டித்த பஞ்சபூ தந்துதிக்கும் சிக்கலாண்டபுரச் சிவமணியின்
கட்டுற்ற பிரதோ சம்பணிவார் காலனச் சமின்றிக் களிப்பாரே

6. கொள்ளிவி றகொளிச் சுடலையதில் கூத்திசைந் தாடும் கோடிமின்னல்
வெள்ளானை வன்தொண்டர்க் களித்தருளி விண்ணதில் சேரற்கும் விழைவளித்தோன்
தெள்ளிசை மேனியின் செம்பொருளன் சிங்கலான் டபுரச் சிவமணியன்
உள்ளொளி நாமம் உவந்து ரைப்போர் உலகொடு வான்வாழ் வுய்வாரே

7. இன்னிசை வீணையன் ஈரொளியன் ஏந்திய தீக்கரன் இயங்கொளியன்
மன்னுரை மாணிக்க வாசகப்பேர் வழங்கிவா தவூரர் மனங்கலந்தோன்
தென்றலம் பொதிகையில் சித்தளந்த சிங்கலான் டபுரச் சிவமணியன்
பொன்னலர் திருவடி பூசைசெய்வார் புரைப்பிறப் பறுத்துவிண் புகுவாரே

8. நாடகன் நாயகன் நாள்மறையோன் நாலேழ் புவிக்கோர் நாதாந்தன்
ஏடெழு தும்பணி யாளாகி இனிமணி வாசகர்க் கினிதளித்தோன்
தேடாத் திருவருள் செஞ்சுடரன் சிங்கலான் டபுரச் சிவமணியின்
ஈடில் திருமுறை இசைத்துவப்பார் இன்னிசை நடனங்கண் டிருப்பாரே

9. தய்யலில் லாப்புலித் தோலுடையன் தமனிய நவமணி தளிர்நிறத்தன்
மெய்கண்ட தேவர்க்குச் சித்தாந்தம் மிகுமறை ஆகம ஞானந்தந்தோன்
தெய்வங்கள் பூசைசெய் தேனீசன் சிங்கலாண்டபுரச் சிவமணியின்
நெய்யபி டேகம் நேர்ந்திருப்பார் நிமலனின் திருவருள் நிறைவாரே

10. முத்தித ருமிறை முக்கண்ணன் முதலிடை கடைகடந் தொளிரனலன்
சித்திநூல் அருள்நந்தித் தேவருக்கும் திருவருள் குருவருள் சேர்த்தளித்தோன்
தித்திய மழித்த செஞ்சுடரன் சிங்கலாண் டபுரச் சிவமணியன்
பத்தியில் மூழ்கி பதம்பணிவார் பசுபதி பதநிழல் பதிவாரே

–திருச்சிற்றம்பலம்–

## 5. கண்ணனூர்

**ஏகம்பரர்** **தரவுகொச்சககலிப்பா** **கருணாகரம்மை**

1. மாணிக்கத் திருக்கோலம் மாறாத பெருங்கருணை
கோணலம் பிறைமுடித்த கோமேதப் பேரொளியன்
கணிக்கை யாகவுள்ளம் கனிந்துருகும் பத்தருக்கே
சேணியர் கண்ணனூரின் தேவதேவன் மதிதருமே

2. மரகதப் பெருமலையன் மலர்க்கழலன் வானுருவன்
கரமொரு மானுறையும் காமனெரி திருவிழியன்
துரகப தாதிப்படை துறந்துவரும் பத்தருக்கே
சிரந்தையன் கண்ணனூரின் தேவதேவன் தரும்வானே

3. நீலம ணிமிடறன் நெருப்பெல்லாம் தானான
கோலமா மணிவிழியன் குடமூக்கின் நதிக்கரையன்
காலைமா லைப்பூசை கனிந்துசெய்யும் பத்தருக்கே
சீலநல் கண்ணனூரின் தேவன்தரும் கழல்நிழலே

4. வைரவெண் விடையமரும் வையத்தார் பேரிறைவன்
நெய்யாத யானையதள் புலித்தோலும் போர்த்தியகோன்
பொய்யாக பெருமைஎனப் பூசைசெய்யும் மானிடர்க்கும்
செய்யமலர் கண்ணனூரின் தேவன் தரும் வினைக்குறைப்பே

5. வானவை டூரியமாய் வலஞ்செல்லும் கதிரவனின்
ஈனக்கு றைதீர்த்த ஏகம்பப் பெருவெளியன்
ஞானத்தால் தாள்பணியும் நல்லடியார் மனமுறைந்தே
தேனலர் கண்ணனூரின் தேவதேவன் மதிதருமே

6. பவளப் பெருமலையன் பாதமலர்த் தாமரையன்
புவனத்தை புதுப்பிக்கும் புகமூழி செய்யிறைவன்
கவனச் சிதைவின்றி கருத்தூன்றிப் பூசைசெய்வார்
சிவமணிக் கண்ணனூரின் தேவன்நெஞ்சில் ஒளிர்வாரே

7. புட்பரா கநகத்தன் புரிசடையன் பிறைமுடியன்
நட்புறை வன்தொண்டர் நலிவகற்றி விழிதந்தோன்
பட்டொளித் திருக்கழலை பனி மலரால் அருச்சிப்பார்
சிட்டரென கண்ணனூரின் தேவனியல் நிதிதருமே

8. கோமே தகச்சுடரன் கொன்றைஎருக் கணிந்தொளிரும்
நாமமோ நமச்சிவாயம் நான்மறையோன் பேரழகன்
பூமணத் திருநாமம் போற்றியுரைத் தேதுதிப்பார்
நேமநிதிக் கண்ணனூரில் தேவன்கோயில் ஆவாரே

9. முத்துவெண் ணீறணிந்த முழுமுதல்வன் கலைமதியன்
சித்தஞ்சி தைந்தறியா சீலரறி பேரொளியன்
நித்தம்நொ டிமறவா நிமலனிசைப் பேருரைப்பார்
தெத்திலாக் கண்ணனூரில் தேவபூசைத் திருமலரே

10. நவமணிப் பேரொளியன் நால்கோடிப் பகிரண்டன்
தவமணித் திருத்தழலன் தாரணியோர் பேரறிவன்
பவமனச் சிதடைன்னை பாட்டிசைக்கும் வரமளித்தே
சிவமணிக் கண்ணனூரில் தேவதேவன் அருள்தருமே
–திருச்சிற்றம்பலம்–

## 6. திருத்தியமலை

**ஏகபுஷ்பநாதர்** **வஞ்சிவிருத்தம்** **தாயினும்நல்லாள்**

1. இருவகைக் கருவுயிர் இயற்றியகோன்
பெருமலை பொடிமணல் புவிபடைத்தோன்
செருகரம் திரிபுரம் தீய்த்தமலை
மருமலர் திருத்திய மலையரனே

2. இரும்பொடு கரும்புறைப் பெரும்பூமி
அரும்பொடு அனலெழும் அடர்காடு
வருநதி மூலிகை வளநிலஞ்செய்
மருளழி திருத்திய மலையரனே

3. இயலிசை நாடகத் தமிழோதி
கயல்மலி கபாட புரச்சங்கம்
வயல்விதை உணவுசெய் மாறனவர்
மயல்தீர் திருத்திய மலையரனே

4. இந்திர னகலிகை இழிவறவே
மந்திர இராவணன் வதையமைத்தோன்
தந்திர மூலரின் தமிழேற்றே
வந்தனன் திருத்திய மலையரனே

5. இச்சிறி ழுமலர் இறையொளியன்
அச்சுதற் காழிநல் கியதீரன்
கச்சிஏ கம்பன் கருணைமுகில்
மச்செழில் திருத்திய மலையரனே

6. இடங்கலை பிங்கலை பிரணவத்தில்
தடம்புரள் நினைவினை திருத்தியகோன்
தொடர்தவக் குண்டலி போற்றியருள்
மடமலர் திருத்திய மலையரனே

7. இஞ்சிமூன் றெரித்தருள் ஏகம்பன்
அஞ்சிய மாணியைக் காத்தபிரான்

நெஞ்சுறை பிரணவம் ஆக்கினைசெய்
மஞ்சலன் திருத்திய மலையரனே

8. இதயக் குருதியில் ஈரணுபொதி
உதயக் கதிரொளி ஓங்காரன்
அதர்ம மழித்தடி யார்க்கருள்வோன்
மதமழி திருத்திய மலையரனே

9. இறகொடு கொன்றை எருக்கணியன்
விறகெடுத் தருந்தமிழ் பாட்டிசைத்தோன்
பிறப்பழித் தடியார்க் கருள்செய்வோன்
மறிமலி திருத்திய மலையரனே

10. இளம்பிறை எழிலணி இருஞ்சுடரன்
களமுறை கயமுகன் பிறப்பழித்தோன்
தளமுறை இராவணன் தலைமிதித்த
வளநிலன் திருத்திய மலையரனே

–திருச்சிற்றம்பலம்–

## 7. மூவனூர்

**திருக்கொன்றைநாதர்** **கலிவிருத்தம்**

1. கொடுமுடி திருவருள் கொன்றையம் கூத்தோன்
நெடுமுடி பேரண்டம் தாண்டிய ஏகம்பன்
விடுபடு முயிருடல் விடுதலை அளிப்பனல்
தொடுமலர் மூவனூர் சுந்தரச் சோதியே

2. மதிப்பிறை மழுக்கரன் வானவர் பேரனல்
உதிகதி ரவன்துதி உருவருத் திருவருள்
சதிபதி பரம்பரை சற்குணம் துறவளி
சுதி இசை மூவனூர் சுந்தரச் சோதியே

3. கறைமிட றெழில்விழி கார்த்திகை தீபன்
மறைமொழி உரைஅலை திருவர் திரையன்
உறையுயிர் உடல்வினை உறுமல மொடுக்கும்
துறைமதி மூவனூர் சுந்தரச் சோதியே

4. உருத்திர னயனரி ஒளிமலர் பூசைசெய்
பருத்திநி றவிடை பரமன்நல் ஆதியன்
செருக்கய முகனுடல் சீரெரித் துயிர்க்கருள்
துருகநல் மூவனூர் சுந்தரச் சோதியே

5. கொல்புலி சினக்கரி கொடுந்தோல் உரித்த
பல்கலை குரிசில் பாருயிர்க் கமுதன்
எல்பகல் ஊனந டனஞ்செய் ஊர்த்துவன்
தொல்கவின் மூவனூர் சுந்தரச் சோதியே

6. அங்கச னெச்சனரி அயனுறுப் பறிந்த
செங்கனல் திருவுரு சித்திரைப் பவுர்ணமி
சங்கிசை சுருதியன் தத்துவச் சித்தாந்தன்
சுங்கநல் மூவனூர் சுந்தரச் சோதியே

7. நாரிபரி செய்தநல் நாட்டிய மூர்த்தி
வரிப்புலி அதளணி வானவர் மகிழொளி
தருப்பை அணிந்தே தனிப்பூசை யோர்க்கருள்
துருகநல் மூவனூர் சுந்தரச் சோதியே

8. வசைமொழி அயன்தலை வகிர்ந்தநல் வானவன்
இசையாழ் மலர்க்கரன் இயம்புபல் மொழிஅளி
நசைமலத்துடலுயிர் நலிவுக ளகற்றும்
துசுகநல் மூவனூர் சுந்தரச் சோதியே

9. புனுகுசவ் வாதகில் புதுமலர் புனையனல்
தனுகர ணபுவன போகமனி மாயைசெய்
அனுட்டான மான்மார்த்த அருவுருப் பூசைக்கருள்
சுனைமலர் மூவனூர் சுந்தரச் சோதியே

10. பளிங்கொளி விடையமர் பாற்கட லதிபதி
வளிவெளி தீநீர் மண்ணளி வானவன்
எளியேன் எனக்குத்தன் இணைகழல் காட்டிய
துளிர்வன மூவனூர் சுந்தரச் சோதியே

-திருச்சிற்றம்பலம்-

## 8. பெரம்பலூர் - வட்டம்

**பிரம்மதீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. பஞ்சொளிர் புஞ்சை வயலோரம் பண்ணிசைப் பூங்குயில் பாட்டிசைக்க
மஞ்சளங் கொன்றை மறைவேளை வானவர் பேரிறை மலர்சூடி
தஞ்சமென் றமுவோர்க் கன்புசெயும் தாரணி யோர்தொழும் தழலினியன்
பிஞ்சகப் பெருமான் பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

2. தெங்கிளம் பாலையின் மீதேறி சீரிளம் அணிலும் பாட்டிசைக்க
மங்கள மாலைகள் எருக்கோடும் மணிக்கறை கண்டன் கொலுவிருக்கும்
எங்கோ எந்தாய் எனவணங்கும் ஏழையர்க்கிரங்கி வாழ்வளிக்கும்
பிங்கலப் பெருமான் பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

3. வாழைப்பெ ரும்பூ உள்ளூரி வளரும் நறுந்தேன் மிஞ்றிறார்க்க
கீழைத் திசைஎழும் விண்மீன்கள் கீழ்படியச்சிவம் கொலுவிருக்கும்
தாழையைத் தடிந்த தற்பரனார் தாள்பணி வார்க்கொளி வாழ்வருளும்
பேழைக் களஞ்சியப் பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

4. கொத்தர ளிதொடுந் தேன்குருவி குங்குங் கென்றிளம் பாட்டிசைக்க
மத்தம லரொடு வில்வமணி மாணிக்கச் சங்கரன் கொலுவிருக்கும்
நித்தமென் புருக வழிபடுவார் நிம்மதிப் பூரண வாழ்வளிக்கும்
பித்திகை சூடிய பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

5. தூக்கணங் கூடுறைக் குஞ்சுகளும் சுஞ்சுஞ் சென்றே பாட்டிசைக்க
பூக்கலொ டக்கப் புதுமாலை புனைவுறு சங்கரன் கொலுவிருக்கும்
பாக்களி சைத்தே பதம்பணிவார் பாவவி மோசனப் பரிவளிப்பார்
பேக்கரும் பினிப்பளி பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

6. வண்ணச் சிறகெழில் மரங்கொத்தியும் வருமிசைக் கேற்புறத் தாளந்தட்ட
செண்பகம் கூவிளம் தாரணிந்தே சிற்பரன் சங்கரன் கொலுவிருக்கும்
வெண்பொடி பூசியே தாள்பணிய விண்ணவர்விருந்தளி வாழ்வருளும்
பெண்ணையில் குலையளி பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

7. பறப்பெழில் மீன்கொத்தி தளியோரம் பறையொலிக் குரலில் பாட்டிசைக்க
நிறக்கவின் கொன்றைவன் னியஞ்சூடி நிலப்பிறைச் சங்கரன் கொலுவிருக்கும்
துறப்புளக் குண்டலி பிரணவத்தோர் தொழுதெழ விண்ணகர் வரமருளும்
பிறப்பிறப் புயிர்செய் பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

8. பாதந்தொ முங்கவின் பாவையரும் பன்னிரு திருமுறைப் பாட்டிசைக்க
நாதவ டிவெழ நாயகனும் நன்கணம் சூழ்வுறக் கொலுவிருக்கும்
கோதறு மலரொடு கும்பிடுவார் குறையாச் சந்ததி கொடுத்தருள்வார்
பேதங் கலைமதிப் பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

9. பஞ்சமு தப்பால் அபிடேகம் பாரேழ் படைத்த பரமேசன்
நஞ்சுண் டமுதளி நான்மறையன் நாளொரு கவினொடு கொலுவிருக்கும்
வஞ்சகம் சூதுகள் மாற்றியருள் மாதவ வாழ்வளித் தன்புசெய்யும்
பிஞ்சகன் பேரொளி பேரறிஞன் பெரம்ப லூருறைப் பெம்மானே

10. சங்கொலி சிறுதுடிச் சங்கீதன் சந்திர சூரியர் துயர் துடைத்தோன்
பொங்கொலி யாழிசைப் பெருங்கவிஞன் புவியேழ் கோவிலில் கொலுவிருக்கும்
செங்கழல் துதிப்பார் பிறப்பறுக்காத் திருவடி சூட்டி அருளளிக்கும்
பிங்கலன் பிஞ்சகன் பேரொளியன் பெரம்ப லூருறைப் பெம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 9. கைக்களத்தூர்

**சொக்கநாதர்** **கலிவிருத்தம்**

1. தாரணி தங்கத் திருமேனி தற்பரஞ் சோதியனல்
பாரணி மாமலை பங்காளன் பக்குவத் துயிரமுதன்
காரணி காரணம் கணிமேதை கலைமதி உயிர்க்களிக்கும்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

2. பூரணத் திருவருள் பூமேனி புவனத் துயிர்க்காவல்
நாரணன் நான்முகன் காணாத நான்மறைபேருருவன்
தாரணை தந்தருள சங்காரன் தழல்கரன் மானேந்தி
ஊரணிக் கைக்களத்தூருறையும் ஓங்காரச் சுடரே

3. ஆரணன் அருந்தமிழ் திருமுறையன் அம்பலக் கூத்தாடி
ஈரநஞ் சயின்ற ஏகம்பன் இன்பத் திருவொளியன்
ஏரண மதிவளர் எண்குணத்தன் இருநிறத் திருமேனி
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

4. ஓரணி வானவர் தக்கனவன் உறுவேள் வியழித்த
கூரணி மதியன் கொன்றைவன்னி குங்கும மாதிலகன
சாரணர்க் கும்அருள் தந்தபிரான் தழல்மணித் திருவிழியன்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

5. தேரணித் திருவா ரூரமுதன் சிற்றம் பலமுடையன்
கோரணித் தொண்டரை அருட்டுறைக்கு கூட்டிச்சென் றுணரவைத்தோன்
சூரணம் மூலிகை செந்தூரம் சுகமருந் தளிப்பண்ணல்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

6. தூரணி நந்தியம் சூடெழிலன் சுந்தரச் செந்தழலன்
வாரணத் தீருரி போர்த்திய மங்கல பேரொளியன்
சோரணித் தாருகை வனமெரித்த துயிலாத் திருவிழியன்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

7. சேரிணிப் பெருமதி செம்பவளன் செந்தமிழ் மாமறையன்
தோரணக் கோயில்கச்சூரன் துறைசை சுயம்பொளியன்
ஏரணித் தஞ்சையின் ஏகம்பன் ஏந்திய தழலனவன்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

8. பேரணி நமச்சிவாயப் பெம்மன் பிறைமணித் திருமுடியன்
போரணி இராவணன் புதுப்பிறவி புகலுற ஆட்கொண்ட

நேரணிக் கருணை நிமலமலை நிரந்தரப் பேரிறைவன்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

9. நீரணிச் சேரற்கும் நிழலளித்த நித்தியப் பேரொளியன்
மோரணி ஓலைப் பாணருக்கும் முகில்நிதி பெறத்தந்தோன்
மேரணி அகந்தை விலக்கிய கோன்மேதினி உயிர்கருளும்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

10. வாரணிச் சடையன் வானமதி மங்கலப் பேரிசையன்
சீரணி மெய்கண்ட தேவருக்கும் திருமறைக் கொடைஞானி
வேரணி மூலிகை யோக மளி விண்ணோர் திருநெறியன்
ஊரணிக் கைக்களத் தூருறையும் ஓங்கா ரச்சுடரே

–திருச்சிற்றம்பலம்–

## 10. திருவாலந்துறை

**தோலீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. வானோர் அடியவர் மண்ணுறை பத்தரும் வழிபடும் மணிக்கழலன்
ஏனோர் நெறிமுறை மாறிய பெயரில் இறைஞ்சிநின் றின்பறவே
கூனார் பிறைமுடி கூத்துரை நாட்டியன் குவலயத் துயிர்க்குவந்தே
தேனார் பூங்கழல் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

2. காணார் கண்ணால் கண்டார் சொல்லார் கற்பனை கடந்ததழல்
பேணார் வேடம் பேதமறியார் பிங்கலன் கழல் பணிவார்
உணார் உடலார் உலகோடுழல்வார் உணர்ந்தோர் அணைந்தோர்க்கும்
சேனா டுறையுள் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

3. காயச்சங் காரன் ககனப் பெருந்தழல் கானல் வாழ்வகற்றும்
ஞாலநல் வாழ்வொடு ஞானமும் கல்வியும் நல்கியும் வந்தொளிரும்
கோலம ணித்திரள் கோகழி ஆணடவன் குங்குமப் பெருந்திலகன்
சீலநல் மதியொடு சீரருள் தருமூர் திருவா லந்துறையே

4. வணங்கார் வணங்கும் வாடிவினி லிருந்தே மன்வினை வாழ்வருளும்
இணங்கார்திரிபுரம் எரித்தோன் ஏகம்பன் ஈகைசெய் மாதேவன்
கணம்பூ தப்பதவி கழலடி நிழலும் கருணையில் பிறவாமை
திணர்மலர்க் கொன்றையன் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

5. கீழோர் கோவணம் மேல்குடை நாகமும் கிரிபுலித்தோலுடையன்
தாழார் வேள்வியை தகர்த்து மகிழ்ந்த தற்பரஞ் சோதியண்ணல்
ஏழூர் பூசையில் இணையும் பெருமான் இயலிசை நாடகத்தன்
சேமூர் செஞ்சுடர் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

6. கடகரி உரிபுனை மிடறொளி வேதியன் நடையலங் காரமின்னல்
இடபநல்வாகனன் குடர்கிழி அரிமால் இடர்சினம் அறுத்தபிரான்
தொடர்பிறப் பிருவினைதுகளூற சுகம்நுகர் மாயைதந்த
திடமழுச் சுடர்கரன் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

7. தொகுகுணம் மிகுமதி தொகைபகி ரண்டத்தன் தொடர்யுகம் கடந்ததழல்
தகுதிநல் அடியவர் தகதிமிச் சதுரறி சித்துக ளுடனணைவார்
மிகுமயம் பகுவுறுமெலியுயிர் உடலுறவிதிவினை புனைந்தளித்தே
செருநகை மகிழரன சீரருள் தருமூர் திருவா லந்துறையே

8. கடுவிட மிடறுற கறைக்களின் ஒளிமிளிர் ககனநெ டுந்தழலன்
அடுபகை அதிமலம் அவனியச் சகலங்கள் அடர்வினை அறுபடவே
மடுமனம் படர்சுகம் மாயைசெய் இருவினை வகுவுற மலமடக்கும்
செடுகழல் சுடரரன் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

9. மழுமுனை ஒழுகொளி மணிக்கரன் முதல்நடு கடைவான் முழுமுதல்வன்
சுழுமுனை சுடரொளி தொடர்வுறத் தினம்தினம் சுத்தமா யையருளும்
எழுமறு ஆதாரம் இன்னிசை முழங்குற எழிலொளி நடங்காணும்
செழுமணிக் கண்டத்தன் சீரருள் தருமூர் திருவா லந்துறையே

10. அடிமுடி அறியா தயனரி நடுங்குற அருளளி ஏகம்பன்
படிமனத் தொடருயிர் பழமடி யாரென பரிவுற அருகேற்கும்
வெடிஒளி இடிமின் வெள்ளியங் கிரியில் மிடிமதி எனைஏற்ற
செடிமலர் புனையரன் சீரருள் தருமூர் திருவா லந்துறையே
–திருச்சிற்றம்பலம்–

## 11. பேறையூர்

**திருமக்காட்டீஸ்வரர்** **கலிவிருத்தம்**

1. இயலிசை மொழிவளர் ஏழேழ் புவிஇறை
கயமுகன் அழிவுற கலியுகம் வளர்ததோன்
அயனரி பணிந்தெழ அவனியர் வாழ்வுற
சுயம்பொளி பேறையூர் சுடராய் எழுந்ததே

2. இறகினம் பாலுணி ஈரிரு பிறப்புயிர்
துறக்கநல் மண்ணில் தொடர்பரம் பரைக்கும்
பிறந்தம ழலைகளும் பெரும்புகழ் வாழ்வுற
அறிவரன் பேறையூர் அருவுரு ஆனதே

3. பிறையணி திருவருள் பேரண்டம் நடத்தனல்
மறையறம் மதிநூல் வையக நுண்கலை

இறையறம் பொதுநெறி இணைந்தினை யோர்பெற
கறைகண்டன் பேறையூர் கதிரென உயர்ந்ததே

4. மன்பதை உடலுயிர் மண்ணில்நல் வாழ்வொடு
அன்புசெய் துணைமனை அறிவருள் இறைநிதி
நன்புற நடத்தவே நாயகன் திருவருள்
இன்புற பேறையூர் எழில்தளி ஒளிர்ந்ததே

5. பற்றிய பந்தோடும் பரன்கழல் பற்றுற
மற்றவர் மனங்கொளும் வடிவாடு துதிசெய்
கற்றவர் அற்றவர் கனிமனப் பூசையும்
பெற்றிடப் பேறையூர்ப் பெருமான் தரும்வரமே

6. அஞ்செழத் தோதிய அழலடி துதிப்போர்
நெஞ்சினில் உறைவார் நம்மதி வாழ்வுக்கும்
பஞ்சமொன் றில்லை பதிமதி நிதிசுகம்
தஞ்சமளி பேறையூர் தற்பரஞ் சோதியே

7. கூடலூ டலின்பம் குவலயத் தில்லறம்
தேடலின் றிவரும் திருவருள் துணையில்
நீடிய ஆயுளும் நீதிசெய் பரம்பரை
நாடுற பேறையூர் நம்பன் நயந்ததே

8. பட்பம்ப தவிகள் பார்நிதி பொருள்நிலம்
எட்டிய சுகமமெலாம் இருமலம் தீரவே
நட்டஞ்செய் ஏகம்பன் நல்லருள் தரும்வகை
சிட்டகன் பேறையூர் செஞ்சுட ரானதே

9. குழவிதாய் தந்தை குடும்பம்மு துமையில்
கழிந்தழ றவின்பம் கற்பூரத் தெரிஎன
உழன்றவர் திருந்தும் உயர்மதி தரும்வகை
தழலெழில்; பேறையூர் தண்தளி அமர்ந்ததே

10. இருண்ட சிறைமலத் தின்னுயிர் உறக்கமும்
செருமனச் சகலமும் தீர்வொடு பதிபெற
மருண்ட மதிஎனை வானுறை அருள்தர
குருவெனப் பேறையூர் கோவிலில் எழுந்ததே

–திருச்சிற்றம்பலம்–

## 12. திருமாந்துறை

**சோதீசுவரர்** **கலிவிருத்தம்**

1. நடம்பயில் நாயகன் நான்மறை யோகியன்
இடமொரு கோடிநல் எழில்பெரும் கோயிலன்
வடநதி நீர்மகிழ் வடிவொடு தோன்றும்
சுடர்மணித் திருமாந் துறையுறைச் சுந்தரமே

2. கவின்மிகு திருமுகம் கணங்குழைத் தோடுடை
புவிபல படைத்தருள் பூகம்ப நாயகன்
கவிகரம் உருகுளம் தொழுததும் தோன்றும்
துவியொளித் திருமாந் துறையுறைச் சுந்தரமே

3. கொதிகலன் நுதல்விழி குணைந்திரிந் தூழியில்
சதிகழல் நடனுறும் சரிவுறும் ஏழ்புவி
எதிர்படு கடல்நதி எரியுறத் தோன்றும்
துதியருள் திருமாந் துறையுறைச் சுந்தரமே

4. குளிர்மலர் திருவிழி கோடிநல் அருள்தரும்
நெளிவுறும் குறுநகை நெடுங்கரம் நமைத்தொடும்
தெளிமனம் சிவசிவ சிரந்தொழுத் தோன்றும்
துளிரொளி திருமாந் துறையுறைச் சுந்தரமே

5. நகைவரும் போதெதிர் நலியரக் ககந்தை
புகையுறும் உடலுயிர் புனிதநல் லருள்வரும்
சிகைமழித் தருளெனத் தினந்தொழத் தோன்றும்
தொகைமலர் திருமாந் துறையுறைச் சுந்தரமே

6. நெடுஞ்சடை அதிசுழல் நிலமதிர் சினக்குறி
அடுந்தொடுஞ் சிறுசுழல் ஆனந்தத் தாண்டவம்
நெடுநாள் நிலமுற நெகிழ்ந்தழத் தோன்றும்
தொடுமலர் திருமாந் துறையுறைச் சுந்தரமே

7. வரைகலைப் புருவம் வளைந்தெழ மலர்வனம்
நிரைகனித் தோப்பெழில் நித்தியத் திருவருள்
உரைநமச் சிவாயம் உளந்தொழத் தோன்றும்
சுரைமணித் திருமாந் துறையுறைச் சுந்தரமே

8. வெண்ணீ றணிநுதல் விழிமலர் மாமரை
தண்ணீர் செங்கழல் தயவெலாம் அருள்விழி

கண்ணீர் நிலந்தொட கழல்தொழத் தோன்றும்
தெண்ணீர்த் திருமாந் துறையுறைச் சுந்தரமே

9. விழுதுறை ஆலமர் வேதியல் நாயகன்
கழுதுறு காட்டிடை காபலக் கூத்தன்
தொழுதெழும் தொண்டரின் துயரறத் தோன்றும்
சுழுந்துறை திருமாந் துறையுறைச் சுந்தரமே

10. இளம்பிறைச் சடைமுடி ஏந்திய பொன்மலை
களம்புகும் அரக்கரின் கனங்குறைத் தருள்தரும்
உளமுறத் திருமுறை உரைசெயத் தோன்றும்
துளபநல் திருமாந் துறையுறைச் சுந்தரமே
–திருச்சிற்றம்பலம்–

## 13. பென்னகோணம்

**மருதாநந்தீசுவரர்** **கலிவிருத்தம்**

1. உடையார் ஏழேழ் உலகுயிர் தாவரம்
சடையார் தற்பரஞ் சோதியந் தழலார்
அடையார் நற்கதி அவரருள் அசைவின்றி
நடையார் பென்னகோ ணத்துறை நாதனே

2. உருவொன் றில்லார் உரைப்புரு கோடிகள்
அருவென் றறியார் அறிவறி யும்தணல்
குருவெனத் திருவென வருமதி தருநிதி
நரபதி பென்னகோ ணத்துறை நாதனே

3. உதிமதி கதிரச்சுடர் ஒலிப்புனல் ஒளியலை
பதிபசுப் பாசஞ்செய் பாவமறு திருவருள்
அதிபதி விதிவினை அவர்கழல் கதிதரும்
நதிபொதி பென்னகோ ணத்துறை நாதனே

4. உகைஅனல் சுயம்பொளி உதிர்ளரிப் பெருவெளி
திகைதிரி சடைமுடி திருக்கழல் அதிர்நடம்
தகைஉயிர் துதியுற தருமிகு தயவளி
நகைஇதழ் பென்னகோ ணத்துறை நாதனே

5. உரைமறை அதிபதி உருகுயிர்ஞ் குறவினன்
தரைவிசும் போர்துதி தழல்தவப் பசுபதி
புரைமலம் மறையுறப் புகலடி நிழலருள்
நரைவிடைப் பென்னகோ ணத்துறை நாதனே

6. உதையுறு மறலிக்கும் உடலளி நல்லூரன்
சிதைளரி சுடலைநல் துணைதரும் சுடரோன்
வதைமலி கயமுகன் வலிவுடல் சிதைத்தோன்
நதிச்சரப் பென்னகோ ணத்துறை நாதனே

7. உமரித் தரளம்புனை ஓமொலித் திருவருள்
குமரிக் கபாடத்தில் குவிகவித் தமிழ்செய்
தமரிலுந் தமரென தயவளி அருவன்
நமன்துதிப் பென்னகோ ணத்துறை நாதனே

8. உலைஎரி நிறக்கவின் ஊழிசெய் ஓரிறை
அலைகடல் விடமயில் ஆனந்தச் சாகரன்
கலைமகள் அயனரி கணநிதி யோன்துதி
நலமளி பென்னகோ ணத்துறை நாதனே

9. உருவென உலகுரை ஒளிஅனல் அருவன்
கருவுறைச் சஞ்சிதம் கரிமல மடக்கனல்
குருவென வருந்திரு குவிஉயிர்க் கருளொளி
நரம்பிசை பென்னகோ ணத்துறை நாதனே

10. உறுவிடத் தரவணி உடுக்கையோர் கரத்தினன்
அறுகொடு கூவிளம் அரிஎருக் கணிமுதல்
சிறுசித டெனக்கும் திருக்கழல் அருள்தரும்
நறுமலர் பென்னகோ ணத்துறை நாதனே

–திருச்சிற்றம்பலம்–

## 14. ஓகையூர்

**அமிர்தகடேசுவரர் அறுசீர் ஆசிரிவிருத்தம்**

1. மருகாய் மலராய் வளர்கனியாய் மாணிக்க மாமலை வார்சடையாய்
தருவாய் தளிராய் தாரணியின் தவமுயிர் யாவிலும் தண்ணுனர்வாய்
திருவாய் செஞ்சுடர் தீபமதாய் திகழும் செம்பொருள் தேவதேவன்
உருவாய் அருவாய் ஒளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

2. ஒன்றாய் இரண்டாய் பலகோடி உடுக்களும் கோளோடு புகைக்கொடியாய்
நன்றாய் ஏழேழ் நலப்புவியில் நகரும் ஓடும் பறப்பனவாய்
நின்றாய் நிலையாய் என்றுணர்ந்த நிலைமொழி மாந்தர் பேருரையாய்
உன்னத மாய்நின் றொளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

3. கடலாய் அலையாய் கடுமுவர்ப்பாய் கடலாழ் குழியுறை கணக்கில்லா
உடல்வகை மீனினம் சிப்பிவளை உடுப்பா லூட்டி ஓட்டினமாய்

மடலார் உவர்நீர்த் தாவரமாய் மாறும் ஆண்பெண் உருமீனாய்
ஒடுக்கமெ லாங்கடந் தொளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

4. எழுத்தொலி வரிவடி வியங்குமிசை ஏழ்சுரம் பண்ணிசை பாட்டாகி
விழுப்பொருள் அப்பரின் விருத்தமதாய் விரவிய உரைநடை காவியமாய்
செழுந்தமிழ் தெய்வச் சேக்கிழாரரின் சீர்களில் திருநடம் செய்கடவுள்
உழுவையின் உரியணிந் தொளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

5. எண்ணொடு வகுதொகு பெருக்கலுமாய் இயல்பியல் வேதியல் பொறிக்கணக்காய்
மண்ணுறை கருவிகள் யாவையுமாய் வானகப் பொறிவி மானமதாய்
கண்ணுறை காட்சிகள் கனவுருவும் காந்தம்மின் காந்தமும் ஆகி நிற்கும்
ஒண்ணுதல் மூவிழி ஒளிர்தனலே ஓகையூர் மேவிய உத்தமனே

6. தறுகணன் தமனியன் சங்காரன் சாரூபம்சாமீபம் தருமிறைவன்
மறுபிறப் பறுக்கும் மணிமகுடன் வங்கநஞ் சயின்ற வார்சடையன்
அறுபதின் மூவரின்திருவடியை அனுதினம் துதிக்கும் அறிவருளும்
உறுகுரு வானவன் ஒளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

7. கோபுரம் கலசமும் கொடிமரமாய் குளிர்பலி பீடமும் குளிர்நிழலாய்
தீபங்கள் திகழ்தளிச் சுற்றுகளாய் சீபலம் வன்னி தலமரமாய்
சோபனப் பத்தர்தம் தொடரிசையாய் சுகந்தநல் தூபமும் தீபமதாய்
ஓபணிக் கருவறை ஒளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

8. சோதிநல் சுடராய் சுடர்தணலாய் சுடர்நடு இருளாய் சுழல்வளியாய்
ஆதியும் அந்தமும் அதன்நடுவாய் அகரன கரத்திடை எழுத்துகளாய்
நாதிஅ நாதியும் ஞாலமுடு நனிதோன் றளின்முன் பின்காலம்
ஓதிய முறைமறை ஒளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

9. ஞானமஞ் ஞானமும் அதன்நடுவாய் நாத்திகம் ஆத்திகம் நலிமதமாய்
ஆனதன் பிணையளி பாலமுதாய் அணுத்திரள் அகம்மலை ஆயிரமாய்
தானளி பொருளொடு உடனாகி தானமை ஊழிப்பின் தனித்து நின்றே
ஊனமில் படைப்பளி ஒளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

10. முறைநெறி யாவையும் முகிழறிவன் மூவர்க்கும் முதல்வன் முக்காலன்
நிறைவொடுகுறைவிலும் ஒன்றாகி நெடும்புவி நடத்தும் நிமலனுமாய்
துறைதுறை தோறும் தோன்றுபொருள் தொடர்ந்தளி சுந்தரத் தோழனுமாய்
உறைமனத்துள்ளுணர் ஒளிர்தணலே ஓகையூர் மேவிய உத்தமனே

–திருச்சிற்றம்பலம்–

## 15. ஆடுதுறை

**அபரதராச்சகர்** **அறுசீர் ஆசிரியவிருத்தம்**

1. கருவறைக் கேவலக் குகைஏறி ககனப் பெருநிலத் துயிருடலாய்
செருவினை வாழ்வொரு சிலகாலம் சீர்தொன் னூற்றறு தத்துவத்தில்
விருப்பொடு பொறிப்புலன் வீழ்ந்துழலும் விதிமதி பதிக்கொடை விரைந்துவக்கும்
அருமறை நிறைமதி உயிர்க்களிக்கும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

2. நட்பொடு நாணமில் கற்பனைகள் நாலிரு அகவையில் நடம்மகிழச்சி
கொட்டுந்தேள் பிடித்தே கொடுக்கறுக்கும் குடம்புகு யானைகேட்ட டம்பிடிக்கும்
பட்டொளிச் சித்திரப் பறவைகளும் பற்பல சிலபகல் விளையாடல்
அட்டடி சில்துயில் அளித்துவக்கும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

3. உள்ளுமி ளங்கல்வி ஊரோரம் உவக்குமி ருபாலர் உறவினக்கம்
கள்ளமில் லாமதி கருத்தூறும் கனவுகள் கற்பனைக் கதை உரைக்கும்
துள்ளலும் நடையுடை சுறுசுப்பே தொடர்பதி னிருவய திறுதிவரை
அள்ளலில் தூநகை அளித்துவக்கும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

4. கல்விநல் செல்வமும் கனவுறக்கம் கருத்துறை தோழமை கணிப்புமனம்
பல்வித துறைமதி பட்டறிவும் பாருறை மானிடப் பசுவுருவம்
எல்லையில் லாப்பல நினைவலைகள் இறைவணக் கஞ்சிறி திருந்தியங்கும்
அல்லலில் ஐநான் காண்டளிக்கும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

5. கண்ணுறை விண்ணொளி எண்ணங்கள் கைநிதி பதவியும் கங்கைநதி
பெண்ணவன் ஆண்கரம் பற்றுமறம் பிரியா இல்லறம் புதுக்குடும்பம்
மண்ணுறை வாழ்சுகம் மணம்பிணையும் வானுறை கதிக்கோர் மறுப்பில்லை
அண்ணல ருளுமாண் டைந்தைந்தில் அணிவெள் ளாற்றாடு துறையோனே

6. தந்தைதா யானச கலத்துயிரும் தான்வந்த நெறியை தானுகரும்
விந்தைசெய் சிந்தையை விதியமைக்க விதிவழிச் சஞ்சிதம் தான்சுமக்கும்
பந்தங்கள் பெருகுற பசுமலமும் பதிவுறப் பதிவுற படர்ந்தியங்கும்
அந்தக் குணமா அருளளிகும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

7. சொந்தங்கள் சுகங்கள் தொடர்நிதியம் தூயம திமக்கள் தோன்றுபுகழ்
முந்தைசெய் நல்வினை முதிர்விளைச்சல் முனிவில் சாந்தமும் முகையாகும்
வந்தவு டல்சுமை மனமேந்தும் வாழ்ந்த நிலைவரும் கனவாகும்
அந்திம லர்மனத் தமைதிதரும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

8. புதுப்பழம் அடியவர் போற்றிநிற்கும் புரிஇசை திருமுறை பாட்டேற்கும்
பதிபசுப் பாசம் பவமுணரும் பாருறை பதிமதி பரிவளிக்கும்

துதிமனம் முதுமையும் துயரறவே தொடரிறை வாழிபாடு சுகமாக்கும்
அதிபதி பேரண்டத் தாரமுதன் அணிவெள் ளாற்றாடு துறையோனே

9. மும்மலம் உணரும் முதிரறிவும் மூத்தபோ தஞ்சித்தி நூலறிவும்
இம்மையே உணரும் ஏதளிக்கும் இறைத்துதி நிலைத்தநல் சுகமளிக்கும்
செம்மைசித் தாந்தமும் திருமுறையும் செல்வழி காட்டித் தீக்கைதரும்
அம்மையும் மைமதி அளித்துவக்கும் அணிவெள் ளாற்றாடு துறையோனே

10. தென்கரை வெள்ளாற் றாடுதுறை திருமாந் துறையொடு ஏழூரன்
நன்னாள் விழவணி நாடகத்தன் நவமுனி வோர்துதி நாதமலை
இன்னார் திரிபுரம் எரிவிழியன் என்னையும் ஆட்கொண்டருளளித்த
அன்னைஎன் தந்தை ஆரமுதன் அணிவெள் ளாற்றாடு துறையோனே

–திருச்சிற்றம்பலம்–

## 16. அத்தியூர்

**வடமாலீசுவரர்** **கலிவிருத்தம்**

1. பறிநிறத் தருவுரு பாற்கடல் வேதியன் பாம்பணியன்
அறிவொளி திருவிழி அம்பலக் கூத்தன் ஆதியன்னல்
மறிமா னேந்திய வானவமூர்த்தி வார்சடையன்
செறிதேன் வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

2. அரவனல் கரியுரி அணிமணி மிடறெழில் ஆறங்கன்
புருவநடுவிழி புரைஎரி தீவண்ணன் பூதகணன்
கருவினி லறிவளிக் காஞ்சன மூர்த்தி கங்காளன்
செருமறி வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

3. முகந்தொகு மின்னலை முதல்முடி விடைஎனும் மூன்றளந்த
நகைமுகை திரிபுரம் நனிஎரி கொழுவிய நான்மறையோன்
குகைச்ச துரகிரி கொன்றையம் மேனி கோகழியன்
திகைமலர் வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

4. பலிப்புலி அதளணி பழிமலி வேடற்கும் பரிவளித்த
ஒலிவலி ஏழ்கடல் உலர்வுற வாளளி ஒளிமழுவன்
நலிவளி முழுமலம் நகைஉயிர் விடுபடும் நலநெறிசெய்
சிலிர்புனல் வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

5. வெறிகரி அதளுரி வெந்தழல் மூர்த்தி விமலீசன்
மறிமழு எரிகரன் வளைவிலை பகர்ந்த மதுரை அரன்
சிறுசிறை நாரைக்கும் தெளிவொளி முத்திசெய் திருவருளன்
செறிமணல் வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

6. கடறுறை வேடனை கலைநள வேந்தெனும் கதியளித்தோன்
பிடறெழில் விடையமர் பிங்கலத் திருவொளிப் பேரிசையன்
குடமுறை சூலநல் குவலயத் தூழியின் காசியண்ணல்
திடர்கரை வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

7. கடிகமழ் தாழையின் கடும்பொய் தடிந்த கங்காளன்
பொடிநீ றணிந்த புண்ணிய மூர்த்தி போதாந்தன்
அடிமுடி அறியா அயனரிக் கருளிய அழல்மலையன்
செடிமலி வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

8. நாகக் குடைமுடி நாதத்தி ருவுரு ஞானமலை
போகப் புவிஉயிர் புரைமலம் தீர்வுற போதமளி
ஏகப்பெ ருந்தழல் இளம்பிறை மூர்த்தி ஏகம்பன்
சீகரி வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

9, பிறழ்நெறி வேள்வியை பிடிபொடி செய்த பேரருளன்
பறமுக்கும் அமைச்சுசெய் பரிவருள் புரிசடை பரம்பொருளன்
மறலியைத் தடிந்தொரு மாணியை க்காத்தநல் வான்வெளியன்
திறல்கரை வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

10. தமிழ்த்திரு மந்திர திருமுறைச் செறிபொருள் சற்குணத்தன்
அமிழ்திரை ஆனாயர்க் கருவா னருளிய அறிவண்ணல்
இமிழ்கடல் புவியிடை இழிமதி எனையும் அடியைகொண்ட
சிமிழ்மலர் வெள்ளாற்றின் தென்கரை அத்தியூர் செஞ்சுடரே

–திருச்சிற்றம்பலம்–

## 17. வயலப்பாடி

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. அழகொளிர் மான்மழு அமரிசைத்துடிகரன்
வழுதிக்கு நவமணி மகுட ளிவள்ளல்
பொழுதுநாள் சூரியச் சுழல்இயக் குமரன்
பழம்பதி வயலப் பாடியின் பரமனே

2. சிரவிட மொடுக்கியே செறிபொற அரவணி
நரவுடல் உயிர்க்களி நாட்டிய முனியன்
இரவுப கலளி எழில்நிலச் சுழல்தரும்
பரவுரை வயலப் பாடியின் பரமனே

3. உளமகிழ் புன்னகை உயிர்க்களி ஆடலன்
கிளர்கன கமருள் கேதா ரத்தனல்

வளர்தேய் பிறைதொகு மாதமென் திங்களளி
பளிங்குறை வயலப் பாடியின் பரமனே

4. குடுவைநல் அகத்தியர் கொங்கண வர்துதி
வடுமுடி வாட்போக்கி வானவப் பேரிறை
நெடும்பரு வமழை நிலமுறச் சாய்வளி
படுகநல் வயலப் பாடியின் பரமனே

5. இடபால் வாகனத் தீசுர மூர்த்தி
படர்வன விசயற்கு பாசுப தமளி
வடதுரு வத்துயிர் வாழ்வுறக் கோடைசெய்
மடமயில் வயலப் பாடியின் பரமனே

6. சாரநல் குற்றாலத் தமணியச் சுடரொளி
ஆரலை ஏந்திய அருவுரு அருவன்
நீரலைச் சமுத்திரம் நெடுமலை வனமளி
பாரக வயலப் பாடியின் பரமனே

7. ஊழிய லைக்கூத்தன் ஓரிறைப் பேரனல்
காழிச்சம் பந்தர்க்கும் கனகக்கி ழியளி
மேழிநி லமுற விளைவாழ் வன்பளி
பாழிநீர் வயலப் பாடியின் பரமனே

8. ஆயிரம் நாமஞ்சொல் அவனியர் துதிமகிழ்
தாயினும் தமரினும் தயவளி அமரன்
ஞாயிறின் யாண்டுசெய் நனிநடை வழியளி
பாயிர வயலப் பாடியின் பரமனே

9. பூவணிக் கொன்றையும் பொன்னா விரையணி
நாவலம் பூமியின் நாதன்நா தாந்தன்
கேவலம் சகலம் சூக்குமத் துடலளி
பாவலன் வயலப் பாடியின் பரமனே

10. திருவருள் மேனியன் தில்லைய லங்காரன்
குருமுறை மெய்கண்ட தேவர்க்க ருளிறை
பெருமதிப் பத்தரில் பேதைஎ னைஇணைத்த
பருவதன் வயலப் பாடியின் பரமனே

–திருச்சிற்றம்பலம்–

## 18. பெருமாத்தூர்

**திருசங்கநாதர்** **வஞ்சிவிருத்தம்**

1. தத்துவத் திருநடத் தற்பரனே
நித்தம் நின்நாமமே நினைந்திருப்பேன்
சித்திரை வைகாசி சிறுமழைசெய்
உத்திரி பெருமாத்தூர் உருத்திரனே

2. கைக்கதி ரெரியுரை கருணையனே
கொய்மலர் பூசையொடு கும்பிடுவேன்
செய்ஆனி ஆடியில் சீர்மழைசெய்
உய்கதி பெருமாத்தூர் உருத்திரனே

3. கோவணக் குளிர்சுடர் குருவருளே
காவலஞ் சிலம்பொலி கழல்துதிப்பேன்
ஆவணி அடைமழை அளித்துவக்கும்
உவளி பெருமாத்தூர் உருத்திரனே

4. ஆரவணித் திருவருள் அஞ்செழுத்தோன்
சிரந்தாழ்ந் துனகழல் சேவிப்பேன்
புரட்டாசி நன்மழை புஞ்சைவிளை
உரற்களப் பெருமாத்தூர் உருத்திரனே

5. சிறுநொச்சி மலரணிச் செஞ்சுடரே
அறுகெருக் கஞ்சூட்டி ஆனந்திப்பேன்
குறுவைநெல் ஐப்பசிக் கொடைவள்ளல்
உறுபொருள் பெருமாத்தூர் உருத்திரனே

6. கயமுகன்; உடலழி கானயாழோன்
நயக்கழல் கைமிடறும் நனிதுதிப்பேன்
பயறொடு கார்த்திகை தவசமளித்
துயிர்க்கருள் பெருமாத்தூர் உருத்திரனே

7. குளம்சுனை நதிமலர் கொன்றையனே
களங்கமில் மலர்தூவி கழல்பணிவேன்
இளங்குளிர் மார்கழி இன்னசையன்
உளங்கவர் பெருமாத்தூர் உருத்திரனே

8. நல்லிசை ஊனஞா னநடனன்
எல்லல்லும் இறைஞ்சி இறுமாப்பேன்

இல்லெலாம் தானியக் குன்றீந்த
ஒல்லிசைப் பெருமாத்தூர் உருத்திரனே

9. பலமலர் பாம்பணி பசுபதியே
தலைமண் ணுறத்தினம் தாள்பணிவேன்
நிலம்வயல் துயில் மாசி நிறைகவின் செய்
உலகொளி பெருமாத்தூர் உருத்திரனே

10. இறகணித் திருவருள் இறைநின்னை
மறந்தரை நொடிமண்ணில் வாழேனே
பறவைகள் புலம்பெயர் பங்குனிசெய்
உறவளிப் பெருமாத்தூர் உருத்திரனே
–திருச்சிற்றம்பலம்–

## 19. வெம்பாவூர்

**சொர்ணபுரீசுவரர் கலிவிருத்தம் சொர்ணாம்பிகை**

1. இடபநல் கொடியோன் இருசுடர் சடைக்கவின்
கடகரி உரிபுனை கற்பங்கள் கடந்தோன்
நடம்பயில் நாதன் ஞானப்பெ ருங்கடல்
தொடர்வயல் வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

2.. கருடக் கொடியோன் கண்மலர் பூசைசெயக்
அருந்தழல் சக்கரம் அளித்தசெம் பொருளன்
திருவருள் மேனியன் தில்லையங் கூத்தன்
சுரும்பிசை வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

3. மறைமணிக் கொடியோன் மறுசிரம் துணித்தோ
கறகைண்டப் பேரொளிக் கங்கா தரக்குன்றம்
சிறையுறைத் தொண்டர்கும் நரிபரி செய்த
துறைக்குறை வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

4. இடிஎழிற் கொடியோன் இருங்குறைக் கண்ணழி
பொடியணி மேனியன் புன்னகைச் சரித்திரன்
அடிமுடி கானா அரியயற் கருளிய
துடிநூல் வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

5. கோழிக்கொ டியோனின் குறைதீர் வரமளி
யாழிநல் பேரிசை ஞானத்தி ருவருள்
சோழியச் சிலந்தியை சோழச் செங் கணன்செய்த
சூழிநீர் வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

6. அலகைச் கொடியாட்கும் ஆடல்க லையளி
இலைமலர் எருக்கனி ஏகாந்தத் தவத்திறை
நலமன வேடனை குகனர சாக்கிய
துலவநல் வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

7. மகரக் கொடியோனின் மனைவிக் கருள்செய்த
அகரமு கரமக ரமுதல் மந்திரன்
தகரவித் தைதரும் சங்கரத் திருவருள்
சுகநிதி வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

8. காகக்கொ டியோனை கயிலையன் பத்தரிடம்
ஏகாதி ருக்குமாணை இயம்பிய ஈசுரன்
போகமா யைதனை புவிஉயிர்க் கெனப் படைத்த
தோகைநல் வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

9. நெற்றித்தி லகவிழி நெடுஞ்சுடர் மேனியன்
சொற்பொருள் எழுத்திசை தொடர்மொழி ஆனவன்
பற்றிய மலமற பருவுடல் மதியளி
சுற்றெழில் வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

10. சித்திரப் புன்னகை சிலம்பிசை மேலோன்
முத்திதந் துயிர்களின் மும்மலம் தீர்ப்போன்
பத்தியில் லாஎன்னை பத்தரோ டிணைத்த
சுத்தமதி வெம்பாவூர் சொர்ணச் சுடர்மணியே

–திருச்சிற்றம்பலம்–

## 20. வேங்கனூர்

**பழமலைநாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் விருத்தாம்பாள்**

1. நல்லிசை நாயகன் நான்மறை வேதியன் நற்றவப் பேறண்ணல்
வில்லிசை விசயற்கு வெஞ்சுடர்ப் படையளி விந்தைநல் நுதல்விழியன்
சொல்லிசை மொழிபல தூநெறி அறிவளி சுடர்க்கழல் துதித்துவந்தேன்
பல்லிசை திருமுறை பயில் மகிழ் வேங்கனூர் பரிவுருப் பசுபதியே

2. துஞ்சாத் திருவிழி தொகுநடம் பயில் தழல் சுயம்பொளி ஏகாந்தன்
அஞ்சன் வண்ணனும் அன்னவா கனனும் அனுதினம் துதிசெய்யும்
உஞ்சைசெய் ஒடுறை உலகிறை நின்றன் ஒளிக்கரந் துதித்து வந்தேன்
பஞ்சாட் சரமறை பயில்மகிழ் வேங்கனூர் பரிவுருப் பசுபதியே

3. வெள்ளித் திருநீறு மேனியன் ஞானியன் விண்ணவர் துதிப்பிறைவன்
துள்ளிய மான்கரன் சுந்தரக் கூத்தன் தோன்றாப் பெருந்துறைவன்
உள்ளத் திருக்கோயில் உற்சவ மூர்த்தி உனகழல் துதித்துவந்தேன்
பள்ளிஎழுச்சியைப் பயில் மகிழ் வேங்கனூர் பரிவுருப் பசுபதியே

4. தங்கம ணிக்கழல் தாமரைத் திருக்கரன் சஞ்சித் தீர்க்குமண்ணல்
மங்கல வீணையன் மாசறுத் தினிதளி மாதவன் மழுவேந்தி
அங்கசன் உடலழித் தன்புரு வளித்த அருட்கழல் துதித்துவந்தேன்
பங்கிசைப் பல்லாண்டு பயில்மகிழ் வேங்கணூர் பரிவுரு பசுபதியே

5. கட்டிளம் காளைநல் கவின்வா கனத்திறை காரிருள் மலமொடுக்கும்
எட்டெழில் மூர்த்தி இருசுடர் சூடிய ஏகம்பத் திருவடிவன்
வெட்சிநல் மாலையன் வேடனுக் கன்பருள் மென்கழல் துதித்துவந்தேன்
பட்டொலித் திருவிசைப் பா பயில் வேங்கனூர் பரிவுரு பசுபதியே

6. கோடிகே டிமின்னல் குவிதழல் நுதல் விழி குங்குமச் செய்திலன்
தேடித் தேடிப் பூசை செய்கரிக் கருளிய திருவா னைக்காவன்
ஆடிய மாவாசை ஐயாற்றில் அப்பருக் கருளிய கழல் துதித்தேன்
பாடியாடிப் பத்தர் பரவும் வேங்கணூர் பரிவுருப் பசுதியே

7. கதிரார் பரிதியும் கலைத்திங் களும்தினம் கதிர்மலர் பூசைசெய்யும்
அதிராத் திருவடி அம்பலக் கூத்தன் ஆனந்தத் திருவருள்
முதிரா மழலைக்கு முன்பாற் கடலளி முகமலர் வெளிதுதித்தேன்
பதிகங்கள் பாடி பரவும் வேங்கணூர் பரிவுருப் பசுபதியே

8. நறுமலர்க் கொன்றையன் ஞானத்தி ருவொளி ஞாலமெல் லாம் வளர்த்தே
மறுபிறப்பில்லா வானுறை வாழ்வளி மழுக்கர வானவனே
அறுபதின் மூவர்க்கும் அன்பருள் திருவடி அகமுறக் துதித்துவந்தேன்
பறிமலர் தூவி பணிந்தெழும் வேங்கணூர் பரிவுருப் பசுபதியே

9. திருவருள்புரிதழல் செம்முகை அல்லியஞ் செங்கரத் தெரிஏந்தி
பெருவுடல் நுண்ணுடல் பிரானடி சேருடல் பிரிவணு உடலளிக்கும்
குருவருள் நீதியன் கோணலம் பிறையன் குளிர்கழல் துதித்துவந்தேன்
பருமணித் திரிசடை பதிந்தொளிர் வேங்கணூர் பரிவுருப் பசுதியே

10. ஏழ்பழக் கதிபதி எட்டாங் குணத்தன் ஒன்பான் சுவைநடனன்
ஊழ்வினை ஒருங்குறஉடல் பிறப் புலகொடு உறுவினை தருமிறைவ
தாழ்பணி வார்மனச் சன்னிதி எழுந்தருள் சங்கரக் கழல் துதித்தேன்
பாழ்மலம் ஒடுக்கும் பதிமதி வேங்கணூர் பரிவுருப் பசுதியே

–திருச்சிற்றம்பலம்–

**பழுமலைநாதர் கலிவிருத்தம் விருத்தாம்பாள்**

1. தரைமணி மறைவுரு தளர்செம் பூநிலம்
திரைமழைக் கவின்மலி செழிவயல் வாழ்க்கை
மரைக்கரத் தொளிமலை மகிழ்கூத் தாடும்
விரைமலர்ப் பொழில்சூழ் வேங்கனூ ரீசனே

2. முத்தா நதிக்கரை முதுகுன்றத் தளிநகல்
   கொத்தார் கொன்றையும் குவைமல ரெருக்கணிந்
   தத்தா எனத்தொழு மடியார்க் கருள்தரும்
   வித்தார் கழனிநெல் வேங்கனூ ரீசனே

3. வட்டாய் சுழலும் வானுடுக் கோள்களும்
   எட்டாப் பேரண்டத் தேகம்பப் பரம்பொருள்
   மொட்டார் மலரொடு முதிர்கூத் தாடும்
   வெட்டா மரம்நிறை வேங்கனூ ரீசனே

4. அச்சே அறியா தவனியைச் சுழற்றும்
   நச்சார் நாகமும் நல்லக்கம் சூடி
   பச்சைமால் அயன்தொழ பாண்டரங் கமாடும்
   மெச்சார் மனத்தோர் வேங்கனூ ரீசனே

5. சந்திர சூரியச் சக்கரக் கிரகணம்
   வந்துதிர் எரிகல் மழைபொழி கவினுற
   குந்தன்சித் தர்தொழ கொடுகொட்டி யாடும்
   வெந்தனல் விமலன் வேங்கனூ ரீசனே

6. இந்திர கோபநல் எழில்நிற மரன்கொடை
   மந்திர மூலரின் மறைத்தமிழ் மகிழ்வுறும்
   அந்தரத் தாண்டவன் ஆலமர் நாதன்
   வெந்திறல் நாயகன் வேங்கனூ ரீசனே

7. பன்னிரு திருமுறைப் பாட்டலங் காரன்
   பொன்னிரும் மேனியன் புவனப் பெருஞ்சுடர்
   புன்னகை புரிந்திதழ் புதுக்கூத் தாடும்
   மின்னகை சடையன் வேங்கனூ ரீசனே

8. மறிமான் பொறியுரு எரிகல் மழைமகிழ்
   செறிமீன் வான்வெளி தாண்டிய தீபன்
   நெறியறம் மீறமண் நெடுங்கூத் தாடும்
   விறல்விழி நுதலன் வேங்கனூ ரீசனே

9. கோடெழில் விடையமர் கொன்றையம் மாலையன்
   நாடலில் மதிநிதி நனிதொழ நல்குறும்
   ஆடகம் சூடியே அந்தரத் தாடும்
   வீடக நாயகன் வேங்கனூ ரீசனே

10. நாதவ டிவினன் நான்மறை ஒலியினன்
காதலங் கனமழை கருப்பொருள் மாமணி
ஆதவத் திருவிழி அற்புதக் கூத்தன்
வேதியன் விமலன் வேங்கனூ ரீசனே.

–திருச்சிற்றம்பலம்–

## 21. அரும்பாவூர்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்** **காமாட்சியம்மன்**

1. கறைகண்ட மூர்த்தி காஞ்சனப் பெருமலை
குறைநில வணிந்த குருவருள் களஞ்சியன்
மறைத்திரு ஞான சம்பந்தர்க் கருளிறை
அறைவாய் அரும்பாவூ ரருள் அனந்தனே

2. பெருவரைப் பிங்கலன் பேரொளி இடிமின்
தருமறி வருவுரு சற்குருக் காட்சியன்
திருவுந்தித் தேவருக்கும் திருவருள் புரிந்த
அருங்கலை அரும்பாவூ ரருள் அனந்தனே

3. இடபநல் வாகனத் தெண்குணத் தேந்தல்
வடதென் வலமிட மீன்கோள் படைத்தோன்
கடவூர் களிற்றுப் பாடியர்க் கருளிறை
அடம்புநல் அரும்பாவூ ரருள் அனந்தனே

4. தானத்தி ருவடி சங்கரப் பூரணன்
ஊனந டனத்தன் உலகுயிர் நாயகன்
ஞானாமிர் தம்வா கீசர்க் கருளிய
ஆனமர் அரும்பாவூ ரருள் அனந்தனே

5. நாதத்தி ருவுரு ஞானமா சமுத்திரன்
ஏதங்க ளழித்துயிர் இன்னுயிர் கொடையிறை
போதமெய் கண்டார்க்கும் புதிர்மதி அருள்வோன்
ஆதவத் தரும்பாவூ ரருள் அனந்தனே

6. வித்தகன் விமலன் விடையமர் திலகன்
நித்தியன் நிமலன் நிரந்தரக் கருணையன்
சித்திநூல் அருள்நந்தித் தேவர்க் கருளிய
அத்தன் அரும்பாவூ ரருள் அனந்தனே

7. கண்ணிமைப் பொழுதில் கடையூழி நடத்தும்
வெண்ணீ றணியனல் விண்ணவர் வணங்கிய

எண்மைவி ளக்கமன வாசகர்க் கருளிய
அண்ணல் அரும்பாவூ ரருள் அனந்தனே

8. கத்துங்க டழேழைக் காய்ந்த கங்காளன்
பத்தர்க் கெலாம்மதி பாலிக்கும் இறைவன்
சித்தாந்த அட்டகம் தில்லைத்தே வர்க்கருள்
அத்தனெம் அரும்பாவூ ரருள் அனந்தனே

9 நறவுறை எண்மலர் நனிதளிர் புனைஇறை
பிறப்பிடைசூக்குமப் பெருந்துயில் தருவோன்
துறைசைச் சிவஞான முனிவர்க் கருளளி
அயநெறி அரும்பாவூ ரருள் அனந்தனே

10. கோடலெ ருக்குவன்னி கொன்றையும் சூடனல்
பாடலா டல்கலை பகுத்தறி வளிப்போன்
மூடனெ னக்கும்தன் முறைகழல் காட்டிய
ஆடலன் அரும்பாவூர் ரருள் அனந்தனே

–திருச்சிற்றம்பலம்–

## 22. தொண்ட மாந்துறை

**காசிசுவநாதர் கலிவிருத்தம் விசாலாட்சியம்மை**

1. நதியிடை வீழ்வுறு நாணலின் வாழ்கை
விதிபுனை நாடகம் விளங்கா மானிடம்
பதமலர் பணிமனம் பாரினைக் காத்தருள்
துதிகவின் சுடரொளித் தொண்டமாந் துறையரே

2. சகதியுள் வளர்வுறு குறவைமீன் வாழ்க்கை
அகநிறை பொன்பொருள் பதவிப்பே ராசை
முகிழ்நொடி உயிர்பிரி முதிர்புவி காத்தருள்
துகளறு சுடரொளி தொண்டமாந் துறையரே

3. கோணியில் நிரப்பிய குவிப்புகை வாழ்க்கை
காணியில் கிளம்பும் காளான் சுகங்கள்
வாணிக ராய்நினை வணங்கினும் காத்தருள்
தோணியைக் கரைசேர் தொண்டமாந் துறையரே

4. வானவில் இளமையும் வடிவெழில் வாழ்க்கை
ஞானம்பா தாள மலையுறை மரகதம்
தானநின் கழல்நிழல் தணிந்தழக் காத்தருள்
சூனமர் கரத்தெழில் தொண்டமாந் துறையரே

5. காடுறை மழைநீர் கருத்துழல் வாலிபம்
ஓடுறும் வாழ்க்கை உதிர்சுகம் கனவுகள்
தேடுறு நின்கழல் தினந்தொழக்காத்தருள்
சூடுறு பாம்புகள் தொண்டமாந் துறையரே

6. எழுத்தெண் கணிதம் இயல்பியல் வேதியல்
பழுத்தநல் வெள்ளரிப் பழத்துள் வடிவம்
வழுத்துல கேழையர் வாழ்வெலாம் காத்தருள்
சுழுமுனைச் சுடரொளி தொண்டமாந் துறையரே

7. மருந்தோ டுணவளி மலைமணிக் கடலே
பெருந்தா மரையயன் பிடர்சிடம் சிதைகரன்
திருந்தா மனிதரைத் திருத்தியும் காத்தருள்
சுரும்பலர் சூடெழில் தொண்டமாந் துறையரே

8. கனியோர் கோடியும் கருப்பொருள் தருமொளி
தனியோர் மாணிக்கு காலனைச் சாடழல்
இனியோர்க் கருளளித் தில்லறம் காத்தருள்
துனியர வணிசுடர் தொண்டமாந் துறையரே துனி–அச்சம்

9. வெள்ளைவி டையுடை மின்னலன் சடையன்
கள்ளமில் மனத்துரை கலங்கிய துயர்மொழி
பொள்ளலம் மனிதரின் புரையறக் காத்தருள்
துள்ளல் மான்கரத் தொண்டமாந் துறையரே பொள்ளல்–குற்றம்

10. பெருங்கதிர் மழுவுடை பிங்கலச் சோதி
வருந்திய நாரைக்கும் வானக மருளினை
இருங்கனல் மொழியரை இனிதுறக் காத்தருள்
சுரும்பலர் சூடிய தொண்டமாந் துறையரே
–திருச்சிற்றம்பலம்–

## 23. வாலிகண்டபுரம்

**வாலிகண்டேசுவரர் அறுசீர்ஆசிரியவிருத்தம் வாலம்பிகை**

1. செந்தீ மெலிவளி ஆகாயம் சீர்மண் துகள்நீர் படைப்பாக்கி
தந்தீர் மானிடம் வையகத்தில் தாழ்பணிந் தின்புற வாழ்வதற்கே
வந்தேன் யானும் புலிநரியாய் வாலிகண் டபுரத் தேன்மழையே
எந்தாய் நீரே ஏற்காமல் யாரே ஏற்பார் என்றனையே

2. நந்தா விளக்கொடு சூரியனும் நள்ளிர வுக்கோர் திங்களுமாய்
தந்தே மானிடம் வாழவைத்தீர் தாள்பணிந் தேநிதம் இன்புறவே

வந்தேன் இரணிய மனமாகி வாலிகண்  டபுரத்  தேன்மழையே
எந்தை நீரே இரங்காமல் யாரே இரங்குவர் என்றனுக்கே

3. பேரார் கடல்நீர் முகிலாக்கி பிழையா மழைநீர் நிலந்தூவி
ஊரோ டுலகுயிர் காத்தருளும் உனகழல் மானிடம் வந்துய்யும்
வாரணப் பேயாய் நானானேன் வாலிகண்  டபுரத்  தேன்மழையே
ஏரோன் நீரே இரங்காமல் யாரே இரங்குவர் என்றனுக்கே

4. ஆசினி அரம்பை மாங்கனியும் ஆற்ற லருஞ்சுவை ஆகாரம்
காசினி யிலளித் தன்புசெய்தீர் கற்பகன் நின்கழல் கழல்சேர
மாசுறை நாயேன் நன்றறியேன் வாலிகண்ட புரத் தேன்மழையே
ஈசுரன் நீரே ஏற்காமல் யாரே ஏற்பார் என்றனையே

5. பொங்கமு தப்பால் ஆநிரையும் பூமிய டிச்சுவை கிழங்களித்தே
இங்குறை மானிடத் துடல்வளர்த்தீர் ஏழிசை யோடுயர் வான்பெறவே
மங்கினிச் சிதடன் ஏதறிவேன் வாலிகண்  டபுரத்  தேன்மழையே
எங்கோன் நீரே ஏற்காமல் யாரோ ஏற்பார் என்றனையே

6. செம்போ டொன்பது உலோகமுடன் செஞ்சுடர் நவமணி தந்துவந்தே
அம்பொன் னகையலங் காரமுடன் அகமகிழ்ந் தேநினை வழிபடவே
மம்மர் மமதை நாயறியேன் வாலிகண்  டபுரத்  தேன்மழையே
எம்மான் நீரே இரங்காமல் யாரே இரங்குவர் என்றனுக்கே

7. செந்தா மரைமலர் பவளமல்லி சிதறாக் கொன்றை எருக்கலரும்
இந்தார் மாலைகள் செய்துவந்தே எம்மான் நினைத்துதித் திடுக்கறவே
மந்தா கினியேன் மதியில்லேன் வாலிகண்  டபுரத்  தேன்மழையே
எந்தாய் நீரே இரங்காமல் யாரே இரங்குவர் என்றனுக்கே

8. பேச்சுள மொழிகள் பலநூறு பேதஞ்செய் மானுடம் பல கோடி
ஏச்சற நின்றன் நாமமுரைத் தெந்தாய் நின்கழல் வழிபடவே
மாச்சுறை நாயேன் எழுத்தறியேன் வாலிகண்  டபுரத்  தேன்மழையே
ஈச்சுரன் நீரே இரங்காமல் யாரே இரங்குவர் என்றனுக்கே

9. அறையார் கரங்கள் நாதமுற ஐந்தோ டிருசுரத் தற்புதங்கள்
நிறைவாய் அளித்தே மகிழவைத்தீர் நிமலன் நினைச்சார்ந் தினிதுறவே
வறையேன் ஏதுங் கற்றறியேன் வாலிகண் டபுரத் தேன்மழையே
இறைவா நீரே ஏற்காமல் யாரே ஏற்பார் நின்றனையே

10. குறையா மெல்லிசை நன்மொழிகள் குவலயத் தாயிரம் இசைக்கருவி
மறையாய் நின்றன் திருநாமம் வாழத்தி நின்கழல் வழிபடவே

வறையேன் ஊமை வருந்துகிறேன் வாலிகண் டபுரத் தேன்மழையே
இறைவா நீரே ஏற்காமல் யாரே ஏற்பார் என்றனையே

–திருச்சிற்றம்பலம்–

## 24. பறவை

**வன்னிபுரீசுவரர்** **கலிவிருத்தம்**

1. நாமகள் குறைதீர் நாடகப் பேரருள்
காமனைக் காய்ந்த கவின்விழிக் கருணையன்
பூமடிக் கங்கையின் புரைதீர் புண்ணியன்
தாமரை பறவையின் சங்கர மூர்த்தியே

2. பானக வேடனாய பாசுப தந்தரும்
ஏனக்கு ருளைக்கும் ஏரமைச் சளித்த
ஞானமும் கல்வியும் நல்கிம லமழி
தானநல் பறவை சங்கர மூர்த்தியே

3. அமரப் புவனரும் அருளடி துதிமகிழ்
சமரக் கரியுரி தற்பரஞ் சோதியன்
இமயக் கடலூழி எழுநில மெனப் பிரித்த
தமருக பறவையின் சங்கர மூர்த்தியே

4. அச்சுதன் பூசைக்கு ஆழிஅ ளித்தகோன்
உச்சியி லொளிப்பிறை ஊர்த்துவத் தாண்டவன்
எச்சனொ டுதக்கன் இருளுடல் அழித்த
சச்சரிப் பறவையின் சங்கர மூர்த்தியே

5. உக்கிர மறியா ஒளிஅனல் அருவம்
பக்குவத் திருவருள் பாற்கட லமுதன்
மக்களின் மதிநிதி வாழ்வருள் துணைவன்
தக்கவர் பறவையின் சங்கர மூர்த்தியே

6. பண்ணே சுரமே பாட்டிசைப் பதமாய்
மண்ணுயிர் தானாய வடிவது வேறாய்
எண்ணா யிரம்பிறப் பெழுதா தியக்கும்
தண்கழல் பறவையின் சங்கர மூர்த்தியே

7. ஒலிவரி எழுத்தொன்ப தாயிரம் மொழியளி
கலிநிலத் துயிர்களில் கலந்தொளிர் கடவுள்
வலிவுடன் இராவணன் மகிழிசைக் கருளிய
சலிலநல் பறவையின் சங்கர மூர்த்தியே

8. மந்திரத் திருமுறை இருபதின் எழுவர்க்கும்
தந்தசி வத்தனல் சரிகமச் சுரத்திறை
விந்தைசெய் சதுரர் விதிமுறை மாற்றருள்
சந்தனப் பறவையின் சங்கர மூர்த்தியே

9. வருவிளை இருப்பொடு வாழ்வுறை வினைகளை
உருமும் மலமாக உயிர்நுகர் உடலளி
திருவினைச் செஞ்சுடர் சிவலோ கத்திறை
தருமநல் பறவையின் சங்கர மூர்த்தியே

10. ஒப்புமை இல்லா ஓரிறை பேரனல்
செப்புரை அருவுரு உருவமும் அருவம்
குப்பைஎ னைப்பல கோயில்மெ மூகவருள்
சப்பரப் பறவையின் சங்கர மூர்த்தியே

-திருச்சிற்றம்பலம்-

## 25. குரும்பூர்

**வைத்தியநாதன்** **கலிவிருத்தம்**

1. வடிவெழில் சுடர்மமு வான்மீன் திலகன் வளர்மேகம்
இடிமின் மழைதரும் இருங்கார் விளைவயல் இளம்பிறையன்
அடிமுடி அறியா அயனரிக் கருளிய அறிவமுதன்
கொடிமலர் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

2. ஆடிய பாதன் அம்புவிப் பிறையன் ஆனந்தன்
சூடிய கூவிளம் கொன்றையம் பேரெதில் கோகழியன்
தேடிய இருவரும் தீத்தணல் கண்டிறைஞ்சி மகிழ்
கோடியர் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

3. கடிமதில் திரிபுரம் கடைஇதழ் புன்னகை யாலெரித்த
செடிமலர் நந்தியம் செருந்தியும் சூடிய திருவருளன்
படிஒரு காசொடு பத்தரின் துயர்தீர் பனிமலையன்
குடியமர் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

4. தோடிக்கல் யாணியும் சுவைக்காம் போதிநீ லாம்பரியும்
பாடிப்ப ரவுவோர் பவமறத் தருள்தரும் பாட்டிசையோன்
ஆடியில் அழைத்த ஆலால சுந்தரர்க்கும் அன்பளித்த
கோடிரக் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

5. பொடிநீ றணிமலை புவியேழ் துதியனல் போதாந்தன்
மிடிமைநல் தருமிக்கும் விரைக்குழல் கவியளி வேணிஅண்ணல்
பிடிபறழ் கேழல்கோன் பெருவளி போற்றிய பேரருளன்
கொடிநிலைக் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

6. போடிநி மூல்யானை புரிவலைச் சிலந்திக்கும் புகழளித்த
கோடித் திருநாமக் கூத்தியல் நாயகன் குகைக்கிரியன்
வாடிய மானிடர் வழிபா டேற்றே வாழ்வளிக்கும்
கூடியர் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

7. துடிகரச் சுடரொளி தோன்றா துணைவன் துயிலறியான்
நடிகழல் நாட்டியன் ஞாலத்தின் பேரிறை ஞானவள்ளல்
விடிவெள்ளி விடையமர் விஞ்சையர் கோமான் விமலீசன்
குடிகவின் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

8. தூடிய வேடனின் தூயநல் சேவைக்கு நளன்செய்தோன்
மூடிய வெப்பறை முதிரலை மாற்றிய முக்கண்ணன்
ஓடிய நீர்நதி உறைமா சகற்றும் உணர்வளித்த
கோடியர் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

9. மடிமலர் எருக்கொடு வன்னிகூ விளமணி மாமதியன்
தொடிஅணி இராவணன் தொகுதவம் மகிழ்நத சுயம்பொளியன்
படிமலை வைணவ தேவியின் எனக்கும் பரிவளித்தோன்
குடிமகிழ் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

10. மாடிம ணிக்கோயில் மாசெங்கட் சோழன் வணங்கிமகிழ்
பீடிகைத் திருமுறை சித்தாந்தப் பெரியோர்க் கருளிறைவன்
காடிஎன் பிறவிக் கணக்கினைத் திருத்திக் கருணைசெய்த
கோடியன் குரும்பூர் கோயிலின் தரிசனம் குவிமகிழ்வே

–திருச்சிற்றம்பலம்–

## 26. நன்னை

**திருமேனிநாதர்** **கலிவிருத்தம்**

1. காதொரு தோடுடை கற்பகத் திரிசடை
ஞாதிரு பூசைசெய் நன்னையின் நம்பனை
ஏதுசெய் தீதெதிர் நன்றிஎன் றுரைப்பேன்
பாதம லர்தினம் பணிதலொன் றின்றியே

2. கூனல்வென் பிறையணி குங்குமத் திலகன்
ஞானநல் உடலளி நன்னையின் நம்பனை
ஏனலன் ஏதுசெய் தெதிர்நன் றென்பேன்
தேனடி தினம்நான் துதித்தலொன் றின்றியே

3. பொற்புவிப் புனிதன் போதாந் தத்தனல்
நற்கல்வி நலமளி நன்னையின் நம்பனை

இற்புலி ஏதுசெய் தெதிர்நன்றி ஈதென்பேன்
சொற்பதம் பூசையில் துதித்தலொன் றின்றியே

4. கலிகா லத்தூழி கடைசிசெய் நிரந்தரன்
நலிபிணி பசிதீர் நன்னையின் நம்பனை
இலியேன் ஏதுசெய் தெதிர்நன் றீதென்பேன்
ஒலிநா மமுரைத் துருகத லின்றியே

5. பீடுறைச் சுடலையின் பெருங்கூத் தாடொளி
நாடுந கரளி நன்னையின் நம்பனை
ஈடழி ஏதுசெய் தெதிர்நன் றீதென்பேன்
ஆடலங் கழல்துதித் தழுதலொன் றின்றியே

6. ஒன்றார் திரிபுரம் உதிர்பொடி செய்தோன்
நன்மொழி நுண்கலை நன்னையின் நம்பனை
இன்மையன் ஏதுசெய் தெதிர்நன் றீதென்பன்
அன்பால் பூசைசெய் தடிபணி தலின்றியே

7. கோடைக்கொன் றையணி குவலயங் கடவுள்
ஆடைஅ ணிகலன் அருள்நன்னை நம்பனை
ஏடனேன் ஏதுசெய் தெதிர்நன் றீதென்பேன்
பாடிப்ப தம்பணிந் தாடலொன் றின்றியே

8. சூல்மகள் பிரசவம் சுகமுறச் செய்தோன்
நால்வகை ஊர்தியளி நன்னை நம்பனை
ஏல்மனன் ஏதுசெய் தெதிர்நன் றீதென்பேன்
வால்கழல் பூசையும் வணங்கலு மின்றியே

9. மடக்கலர் எருக்கொடு மாவிளம் மரையணி
தடத்த சொரூருப தமர்நன்னை நம்பனை
இடக்கனன் ஏதுசெய் தெதிர்நன் றீன்தன்பேன்
அடக்கழல் அடிதுதித் தழுதலொன் றின்றியே

10. அதிபதி ஏழ்புவி ஆதிக்க மூர்த்தி
நதிமதி நிதிவிதி நன்னையின் நம்பனை
இதிமனன் ஏதுசெய் தெதிர்நன் றீதென்பேன்
கதிகழல் பணிந்தழு கடமையொன் றிண்றியே

–திருச்சிற்றம்பலம்–

## 27. ஓலைப்பாடி

**கைலாசநாதர்** **கட்டளைக் கலித்துறை**

1. தேருருப் புன்னகை செங்கழல் வேதியன் தேனருவி
பேருரு அருவம் பிறவோ அருவுரு உருவமே
பாருறை வோர்க்குடல் பாலிக்கும் ஆதியன் பாம்பணியன்
ஊருல கம்துதி ஓலைப்பா டியுறை உத்தமனே

2. செண்பகப் பூங்கழல் செந்தூ ரக்கரத் திருவருளன்
வெண்பொடி பூசிய விண்ணவர் பூசைசெய் வேணியண்ணல்
கண்ணனுக் கருளிய காலக்க ணிதநல் கங்காலன்
உண்ணலுடையளி ஓலைப்பா டியுறை உத்தமனே

3. சிறுபிறை சூடிய தீந்தணல் ஊழிசெய் ஒரூருவன்
மறுபிறப் பழித்தருள் மாணிக்க மாமலை வானீசன்
தறுகணச் சலந்தரன் தாழுடல் எரித்த சங்காரன்
உறுபிறப் பில்லாத ஓலைப்பா டியுறை உத்தமனே

4. கானக்க திரொளி காஞ்சன மூர்த்தி கருணைமுகில்
ஏனக்கு ருளைக்கும்  இன்னருள் புரிந்த ஏகமலை
தானத்தி ருவிழி தாரணி யோர்க்கருள் சாம்பசிவன்
ஊனந டனத்தன் ஓலைப்பா டியுறை உத்தமனே

5. சேகண்டி சங்கொலி செந்தமிழ் பாட்டுறைச் செம்பொருளன்
நாகம்பு ரள்கழல் நாதத்தி ருவுரு நான்மறையன்
ஏகச்சு டர்மணி இன்னிசை வீணைஎ ரிகரத்தன்
ஊகப்பெ ருமதி ஓலைப்பா படியுறை உத்தமனே

6. சந்திர பிறையும் தாரெருக் கமனிச் சற்குணத்தன்
இந்திர வானவர் ஏழேழ் புவியினர் ஏத்திமகிழ்
பந்தம்ப ரிவருள் பாற்கடல் ஆதியன் பாரிறைவன்
உந்திப்பெ ருஞ்சுடர் ஓலைப்பா டியுறை உத்தமனே

7. அண்டப்ப கிரண்டன் ஆலகா லமுண்ட ஆரமுதன்
செண்டடி யால் மேரைத் திருத்திய செம்மல் சீர்சடையன்
பண்டொரு நாரைக்கும் பாலித் தருளிய பாற்கடலன்
ஒண்சுடர் மேனியன் ஓலைப்பா டியுறை உத்தமனே

8. பறந்தவன் தாருகை வனமழித் தவள்ளல் மாதேவன்
பிறந்தவர் இறந்தோர் பிறப்போர்க கருளும் பேரிறைவன்

மறந்தவர் மீண்டும் பிறந்து மலர்த்தாள் வணங்கிமகிழ்
உறங்கலில் லாவிழி ஓலைப்பா டியுறை உத்தமனே

9. எத்திசை நோக்கினும் அத்திசை ஒளிரொளி ஏகம்பன்
சத்தோ டசத்தும் சதச்சத்து மாக்கியே தானியக்கும்
பத்திசெய் தேதுதி பழமடி யார்க்கருள் பாலிக்கும்
ஒத்திசை சிலம்பன் ஓலைப்பா டியுறை உத்தமனே

10. மறலியைத் தடிந்து மாணியைக் காத்தநல் மாமறையன்
விறலுடல் அந்தகன் வீணுடல் அழித்தே விந்தைசெய்தேன்
அறிவிழி என்னைஅ டிமைகொண் டருளிய ஆகாயன்
உறவிலி ஓரிறை ஓலைப்பா டியுறை உத்தமனே

-திருச்சிற்றம்பலம்-

## 28. துங்கபுரம்

**தோணீசுவரர்** **வெளிவிருத்தம்** **பெரியநாயகியம்மை**

1. பிறைசூ டியநல் பிங்கல மேனி–பேரொளியே
கறைசூ டியசெங் கலியுக மாதவப்–பேரொளியே
சிறைநா ரைக்கும் தெளிமதி தந்தருள்–பேரொளியே
துறையார் ஏரிநல் துங்கபு ரத்துறை–பேரொளியே

2. மழுவார் திருக்கர மாணிக்கம் மாகவின்–மாமதியே
குழுவார் பதிணெண் சித்தருக் கன்பு– மாமதியே
புழுவார் சிந்தனை புண்தீர்த் துலகாள் –மாமதியே
தொழுவார் நிறைவாழ் துங்கபு ரத்துறை –மாமதியே

3. ஆனெழில் வாகனத் தாய்மறை அம்பலக் – கூத்தோனே
பூனெழில் கொன்றையும் புதுக் கூவிளமணி – கூத்தோனே
தேனுளத் தாவடு துறைக்குரு தொழுதெழுங் – கூத்தோனே
சோனமு லாவெழில் துங்கபுரத்துறை – கூத்தோனே

4. கோளொன் பதுசுழல் சூரியக் குடும்பசெய்–ஒளியோனே
நாளென் பகையிருள் நன்னொளி நிலவுநல் –ஒளியோனே
தாளென் தாமரை தாழ்வார்க் கருள்செய் –ஒளியோனே
தூளென் நீறொளி துங்கபு ரத்துறை –ஒளியோனே

5. காழிப்பந் தருக்குக் கனகக்கி ழியருள்– பிங்கலனே
மேழியி ளையான் குடிமாறற் கன்புசெய் – பிங்கலனே
ஊழியக் கூத்தொடு உலகுயிர்ப்புதுமைசெய் – பிங்கலனே
சூழியப் பிறையணி துங்கபு ரத்துறைசெய் – பிங்கலனே

6. துறைசைப் பெருங்குரு சிவப்பிர காசனார்– தொழுஞ்சுடரே
மறைந்த கொடியுரு மறலியும் மீளுறத் – தொழுஞ்சுடரே
நிறைமடி ஆனிரை நிழல்மறிப் பாலுடன் – தொழுஞ்சுடரே
சுறைமறைக் கூவிளந் துங்கபு ரத்தினர் – தொழுஞ்சுடரே

7. இழிசிரம் அறுத்தயன் ஏர்புகழ் காத்ததும் – பரஞ்சோதி
கழிமுகத் ததிபத்தர் கயலேற் றருளியோன் – பரஞ்சோதி
வழியிடைப் பந்தரில் மகிழுணவளிதோன் – பரஞ்சோதி
சுழிமுனை பிரணவத்துங்கபு ரத்தினன் – பரஞ்சோதி

8. புரந்தரன் சாபமும் புரையுடல் தீர்த்தருள் – புண்ணியனே
இரந்துண் வடிவொடு இருள் வனத்தாடிய – புண்ணியனே
கரந்துறை கொடியுருக் காலனுக் கருளிய – புண்ணியனே
துரந்தரன் சுடரொளி துங்கபு ரத்துறை – புண்ணியனே

9. செந்தீ புகுந்தெழு திருவடி யார்க்கருள் – திருத்தழலே
வந்தார்க் கன்பொடு வாரார்க் கருளும் – திருத்தழலே
மந்தா கினியொடு வளர்கா விரியருள் – திருத்தழலே
சுந்தரச் சுடரொளி துங்கபு ரத்துறை – திருத்தழலே

10. நன்னீர் முகிலொடு நதிபல தந்தவிண்– நாயகனே
பன்னீர் பலகனி பாலபி டேகங்கொள் – நாயகனே
மன்னீர் ஊழிசெய் வானவப் பேரொளி – நாயகனே
துன்னீர் அழித்தருள் துங்கபு ரத்துறை – நாயகனே
–திருச்சிற்றம்பலம்

## 29. காடூர்

**சுந்தரேசுவரர்** **கலிவிருத்தம்**

1. தும்பைநொச் சியரளி சூடிய பெருந்தழல்
செம்மலர் காடூர் செஞ்சடை மூர்த்தியை
நம்பிம லர்தூவி நனிபணிந் தெழுமுயிர்
இம்மைஅம் மைமலம் எரிந்துயிர் மகிழுமே

2. சங்கெருக் கரவணிச் சங்கரப் பெருந்தழல்
செங்கதிர் காடூர் செஞ்சடை மூர்த்தியை
பொங்கல முதாடை பூசைசெய் துவப்புயிர்
தங்குலம் மதிநிதி தவம்புகழ் நிறைக்குமே

3. வன்னிஞா ழலணி வளிவெளிப் பெருந்தகை
தென்னைவ னக்காடூர் செஞ்சடை மூர்த்தியை

செண்ணிநி லமுறத் திருக்கோயில் துதிப்புயிர்
மன்பதைத் தாயென வானுற வாழுமே

4. பஞ்சபூ தம்மாயை படைக்கும் பெருந்தழல்
சிஞ்சிதக் காடூர்ச் செஞ்சடை மூர்த்தியை
அஞ்செழுத் தோதிஅ ணிக்கோயில் துதிப்புயிர்
வஞ்சமில் புவிவான் வாழ்வுபெற் றுவக்குமே

5. எறுழி எயிறுபுள் இறகணிப் பெருந்தழல்
செறுவழி காடூர் செஞ்சடை மூர்த்தியை
நறும்புகை தூபதீ பத்துதி செய்யிர்
மறுபிறப் பகலுற வானவ ராகுமே

7. சதங்கை அரவணி சற்குணப் பெருந்தழல்
சிதவனக் காடூர்ச் செஞ்சடை மூர்த்தியை
நிதம்மல ரருச்சனை நிறைபூசை செய்யுயிர்
பதமலர் நிழலரு கமர்கண மாகுமே

8. கருங்குவ ளைக்குமுதம் கலையணி பெருந்தழல்
திருமணிக் காடூர் செஞ்சடை மூர்த்தியை
அருவுரு உருவம் அருவங்கண் டுவப் புயிர்
இருங்கடல் பிறப்பற ஈசனை அடையுமே

9. முயலகன் மிதியுற முதிர்நடம் புரிதழல்
செயலைநல் காடூர் செஞ்சடை மூர்த்தியை
நயசிவாயமறை நவில்தியா னிப்புயிர்
பயிலிசை திருநடம் பயிலொளி காணுமே

10. புவிமலர் கோடியுய் சூடிய பெருந்தழல்
செவிமணிக் காடூர் செஞ்சடை மூர்த்தியை
அவிழ்மலர் பூசைசெய் அடியேன் எனக்கும்
கவிமனச்சிவ நாமம் கருதும திதருமே
–திருச்சிற்றம்பலம்–

## 30. வரகூர்

**சிவலோகநாதர்** **வெளிவிருத்தம்** **சிவகாமசுந்தரி**

1. செங்கண் அரவணிந்த தீபச் சுடரொளியோன்– சிவக்கொழுந்தே
எங்கள் குறைபொறுத் திரக்கப் பரிவருளும் – சிவக்கொழுந்தே
தங்கத் திருவடிவன் சந்திரப் பிறைமுடியன் – சிவக்கொழுந்தே
வங்கப் பெருவிடையன் வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

2. துள்ளும் மரைடபிடித்த சூழலும் பிறையணிந்த – சிவக்கொழுந்தே
எள்ளின் இனிப்பு நன்மை ஏழைமனிதர்க்கருள் – சிவக்கொழுந்தே
வெள்ளம் நெருப்பனலும் விண்ணின் நிறைமீன்கள் – சிவக்கொழுந்தே
வள்ளல் பெருங்கொடையன் வரகூர் நெடுங்சடைன் – சிவக்கொழுந்தே

3. பச்சை பவளவில்வம் பன்னீர் மலரணியும் – சிவக்கொழுந்தே
இச்சை மனிதரின்நல் இதயக் கொடையளிக்கும் – சிவக்கொழுந்தே
நச்சுநா கம்உறை நல்வயிரத் தாரணியும் – சிவக்கொழுந்தே
மச்ச மால்வணங்கும் வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

4. விண்ணேழு பால்வெளியும் மின்னல் திருவிழியும் – சிவக்கொழுந்தே
கண்ணோர் கருணையளி கங்காள மூர்த்திகளும் – சிவக்கொழுந்தே
தண்ணோர் அருள்முகிலன் தம்மணிய பேரொளியும் – சிவக்கொழுந்தே
மண்ணோர் வணங்கிமகிழ் வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

5. கொஞ்சும் மணிக்கொன்றை கோடலும் வன்னியணி – சிவக்கொழுந்தே
நெஞ்சின் பகையழிய நேசக் குணமளிக்கும் – சிவக்கொழுந்தே
அஞ்சே லஞ்சேலென் றவனியம் காப்போன் – சிவக்கொழுந்தே
மஞ்சள் கழலொளிமா வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

6. கொக்கின் சிறகணிந்த கூனல் பிறைமுடியன் – சிவக்கொழுந்தே
குக்கல் மடையனெனை கும்பிட் டழப்பணித்த – சிவக்கொழுந்தே
செக்கில் மறலியெனை தீண்டாமல் காத்தருள் – சிவக்கொழுந்தே
மக்கள் வணங்கிமகிழ் வரகூர் நெடுஞ்சடையன்– சிவக்கொழுந்தே

7. முத்துச் சிவிகையொடு மோகனத் தாளமளி – சிவக்கொழுந்தே
பத்துத் தலைமிதித்துப் பரிவருள் நல்கியதும் – சிவக்கொழுந்தே
எத்தித் திரிவோரை இயக்கந் திருத்தியருள் – சிவக்கொழுந்தே
மத்தம லரணிந்த வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

8. ஏடும் எரியாமல் எகிரும் புனலேற்றும் – சிவக்கொழுந்தே
காடும் இரவேறிகங்காளக் கூத்தாடும் – சிவக்கொழுந்தே
பீடும் பெருநிதியம் பீறாத் துணையருளும் – சிவக்கொழுந்தே
மாடும் வளமருளும் வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

9. காரிக் குபதேசம கல்லானை உண்ணவைக்கும் – சிவக்கொழுந்தே
நாரைக் குயர்வானம் நல்கி வரமளிக்கும் – சிவக்கொழுந்தே
பாரைத் துறக்கமெனப் பாலித் தருள்செய்யும் – சிவக்கொழுந்தே
மாரிப் பெருங்கருணை வரகூர் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

10. யானை உரிபோர்த்தி நாகம் புரள்மேனி – சிவக்கொழுந்தே
மானைக் கரந்தாங்கி வையகம் தான்சுழற்றும் – சிவக்கொழுந்தே
ஈனப் பிறவியெனக் கேர்தாள் நிழலுமருள் – சிவக்கொழுந்தே
வானப் பெருங்கருணை வரகவ் நெடுஞ்சடையன் – சிவக்கொழுந்தே

–திருச்சிற்றம்பலம்–

## 31. ஆகூர்

**சொக்கநாதர்** **கலிவிருத்தம்**

1. தண்பொடி நீறணி சங்கரத் திருவுரு
கண்மலர் பூசைநல் கண்ணனுக் கருளிறை
பண்ணொடு ஆடலும் பயின்றுயிர் காக்கும்
விண்ணொளி பெருமான் விரும்பும் ஆகூரே

2. மங்கல வீணையன் வானர் பூசைசெய்
குங்கும காளிக்கும் குறைதீர் பணியளி
தங்கத் திருவடி தணலுறை பணிமலை
வெங்கதிர்ப் பெருமான் விரும்பும் ஆகூரே

3. பொன்னினி மேனியன் பூங்கழல் புதிரனல்
முன்னைநல் காரிக்கும் முதுமறை உபதேசன்
அன்னையின் அன்பளி ஆலால சுர்தரன்
மின்னலஞ் சடையன் விரும்பும் ஆகூரே

4. சரமஞ் சரிகொன்றை தளிர்வன் னியணி
சிரமறுத் தயன்புகழ் சீர்செய் மங்கலன்
அரவணிப் பெருந்தழல் அபரா சிதச்சுடர்
விரல்மான் கவினொளி விரும்பும் ஆகூரே

5. நீலமி டறொளி நிரந்தரப் பேரிறை
காலனை தடிந்த கனகத்தி ருத்தழல்
ஆலயக் கருவறை அருவுரு நாயகன்
மேலவன்பெருமான் விரும்பும் ஆகூரே

6. தும்பைநல் நந்தியம் தோடெழில் எருக்கணி
நம்பித்து துப்போர் நலிவழித் தருள்தரும்
செம்புனல் கோடிசெய் திரிசடை முழுமுதல்
வெம்மைந டுவிழியன் விரும்பும் ஆகூரே

7. கட்டிப்பெ ருந்தங்கக் கழலெழில் ஏகம்பன்
இட்டிசெய் தக்கனின் இருளுட லழித்தோன்

வட்டவெ ளிநிழல் வளிதீ நிலமளி
மெட்டுச் சுரக்கனல் விரும்பும் ஆசூரே

8. இச்சிநி மூலமர் எண்குணப் பரம்பொருள்
உச்சிஒ ளிப்பிறை ஊழிசெய் அற்புதன்
பச்சைமா லுக்கருள் பாம்பணி சுந்தரன்
விச்சைவெஞ் சுடரன் விரும்பும் ஆசூரே

9. நீண்டநெ டுஞ்சடை நித்தல நீறணி
மீண்டும்பல் ஊழிகள் மீள்புவி செய்யனல்
பாண்டவர் பார்த்தற்கு பாசுப தமளி
வேண்டுதல் வேண்டிலான் விரும்பும் ஆசூரே

10. எதிரொலிப் பேரிசை இடிமின் அளிப்பனல்
மதிமலை மங்கையர்க் கரசிக்கும் அருளளி
கதிஇலி என்நெஞ்சில் காட்சிசெய் அண்ணல்
விதிவினை புனைஇறை விரும்பும் ஆசூரே.

–திருச்சிற்றம்பலம்–

## 32. குன்னம் - பெரம்பலூர் வட்டம்

**ஆதிக்கும்பேசுவரர்** **கட்டளைக் கலித்துறை**

1. வங்கணத் தீம்புனல் வார்சடை திங்களின் பிறைசூடி
அங்கம ருவுரு ஆலால சுந்தரன் ஆரமுதன்
கங்கணச் சூரிய கிரகண கூறொளி கங்காளன்
செங்கு வளைக்குளச் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

2. குஞ்சரத் தூரிபுனை கோங்கலர் மேனி கோவணத்தன்
மஞ்சளங் கொன்றையும் மாபவ ளபல்லி மாலைமகிழ்
அஞ்சலென் றடியார் அகமுறைந் தருளும் ஆதீசன்
செஞ்சிலைக் கோயிலன் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

3. வேங்கைஅ தளனி வெள்ளியங் கிரி உச்சி விண்ணீசன்
தாங்குந்த மூல்கரம் தாரணி உயிர்க்கருள் சந்தானம்
தூங்கடுக் கல்கூடு தூக்கணங் குருவிசெய் மதியளித்த
தீங்கறுத் தருளும் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

4. கோடைவி சும்பிடை குளிரெழிலிசெய் கோடிமின்னல்
ஆடைஅ ணிகலத் தாசையில் லாததோர் ஆணழகன்
மேடைச்சு டலையில் மேய்புகை ஒளியில் மிதந்தாடும்
தேடா தருள்தரும் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

5. மாதா மடிமலர் வாடாக் கருவுயிர் வடிவாக்கும்
ஆதா ரத்திறை ஆதிய னாதியன் அருவுருவன்
கேதா ரக்கங்கை கிளர்சினம் குறைத்த கிரிவாசன்
தீதார் புரமெரி சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

6. ஏறார் மலைவனத் தெழில்சது ரகிரிச் சந்தானம்
கூறார் தவசிக் குகையமர் செல்வன் குளிரொளியன்
மாறாத் திருவருள் வழங்கும் சுந்தர வனத்திசன்
சீறார் அரவணி சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

7. கலையார் திரிசடை கதிர்ப்பிறை சூடிய கங்காளன்
இலையார் வன்னியும் எருக்கலர் நந்தியம் இலங்கீசன்
வலையார் நாகை வான்புகழ் அதிபத்தர் வணங்கிமகிழ்
சிலையார் கோயிலன் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

8. விடையோர் மோகனன் விண்ணவர் பூசைசெய் விதிவிகிர்தன்
கடைநடு முதல்வன் காலகா லன்நல் கதிர்மணியன்
அடைமழை இரவுண வளிமாறார்க் கருள் ஆனந்தன்
திடமலர் ரஞ்சித சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

9. ஆடகப் பொன்னொளி ஆனந்த மூர்த்திநல் அலங்காரன்
நாடகக் கூத்தொழில் நவயுகப் பேரிசை நாதாந்தன்
ஏடகத் துறையும் ஏந்திசை பெருவெளி ஏகம்பன்
தேடகத் துறையும் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே

10. போதனை கோடிசெய் பூங்கழல் வேதியன் போகமருள்
நாதனெம் கடவுள் ஞானத்தி ருவுரு நான்மறையன்
காதலஞ் சிறியேன் கழல்துதி ஏற்றுக் காட்சிதந்த
சீதளப் பேரருள் சீர்பொழில் குண்ணத்தின் சேகரனே.

–திருச்சிற்றம்பலம்–

## 33. கீழமாத்தூர்

**ஜம்புலிங்கேசுவரர்** **கலிவிருத்தம்**

1. அளப்பரும் ஆற்றல் மிகப் பெரும் கருணை ஆடல்வல்லான்
விளக்கத்திற் கடங்காவிண்ணகம் தாண்டிய விரும்புருவன்
குளமறை இடைவடுகுருதியும் காட்டிய கோமேதன்
கிளுவை எருக்கணி கீழமாத் துருறை கிரிசனனே

2. நிலத்தினர் வானவர் நிலைமதி அனைந்தோர் நிதந்துதிக்கும்
திலகத் திருநுதல் செம்பொன் மேனியன் திசைகடந்தோன்
கலங்குள வேடனின் கனவினில் தோன்றுதே விகாபுரன்
கிலுபதக் கோயிலன் கீழமாத் தூருறை கிரிசனனே

3. அதிபதி ஏழேழ் பகிரண்டத் தானந்த வாரியண்ணல்
புதிர்விழிக் கருணை புரவலர் மூர்த்தி போதாந்தன்
பதினொரு மாரிநல் பதிக்கவிச் சேலத்தின் சுகனேசன்
கதியுகக் கோயிலன் கீழமாத் தூருறை கிரிசனனே

4. அறிவறி யாப்பகி ரண்டங்கள் செய்சுடர் அனலெழிலன்
செறிமலர்க் கொன்றையும் சித்திர மூலமும் சிறகணியும்
தறித்தாண் டவன்துணி தானணிந் தருளிய ஈரோடன்
கிறிசும முக்கரன் கீழமாத் தூருறை கிரிசனனே

5. பாடும்ப ழுந்தமிழ் பாட்டிசைக் காடல்செய் பரம்பொருளன்
ஓடுமொ ருகரன் ஒளிர்மழு மறுகரன் உருவிலியன்
கூடுவாய் பெயர்ந்த கோயில்ப வானிச் சாகரத்தன்
கீடம ணிக்கோயில் கீழமாத் தூருறை கிரிசனனே

6. சிற்பர வியோமத் திருவைந்தெழுத்தமர் செஞ்சடையன்
அற்புத வளிநலம் அண்டப் பகிரண்டம் ஆக்கியகோன்
புற்றடி மண்ணால் புதிர்பிணி தீர்சாம ளபுரத்தன்
சிற்பநல் கோயில் கீழமாத் தூருறை கிரிசனனே

7. சினப்புலி உரிபுனை செருகரி அதளுரி திருவருளன்
இனத்துயிர் மலமற இனிமைநல் மாயையை படைத்தளித்த
வகைக்கரி வலம்துதி மகிழ்கரு வேலங்குளத் தமர்ந்தோன்
கிளைநிழற் கோயில் கீழமாத் தூருறை கிரிசனனே

8. மீட்டிய வீணையின் விண்மண் ஒளிமொழி விரும்பிசையன்
காட்டெரிச் சுடலையின் காபாலக் கூத்தன் கனகமலை
நாட்டிய மங்கையர் நல்விளம் பரிதிக்கும் நலமளித்த
கூட்டெழில் கோயில் கீழமாத் தூருறை கிரிசனனே

9. நச்சுநல் அரவணிநாதத்திருவுரு நற்றமிழ்செய்
விச்சைசெய் விழிமலர் விண்ணவர் துதிமகிழ் விமலீசன்
இச்சைநான் முகற்கருள் பிச்சாண் டார்கோயில் பெருந்தேவன்
கிச்சிலி வனமலி கீழமாத் தூருறை கிரிசனனே

10. வெண்மஞ்சு விடையமர் வெற்றித்தி ருவிழி வேதமணி
செணபகச் சீரிதழ் சிறுமென் புன்னகை தேவதேவன்
மண்மட நாயெனை வைணவ தேவியில் மகிழவைத்த
கிண்கிணி சதங்கையன் கீழமாத் தூருறை கிரிசனனே

–திருச்சிற்றம்பலம்–

## 34. சிறுவாச்சூர்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்** **மதுரகாளியம்மன்**

1. கந்தம லரணிக் கானகக் கொன்றையன்
இந்திர பூமியர் ஏத்தித் தொழுமிறை
மந்திர மூலரை மன்புவிக் கனுப்பிய
சுந்தரச் சிறுவாச் சூருறைச் சுடரனே

2. கோலம ணிக்கழல் குறையறு திருவிழி
ஞாலத்தி ருத்தொண்டர் நாளும் தொழுமிறை
ஆலால சுந்தரத் தன்பரை அனுப்பிய
சீலநல் சிறுவாச் சூருறைச் சுடரனே

3. யாழிசை வானவர் ஞானம னச்சித்தர்
ஆழிய மாலொடு அயன்தினம் தொழுமிறை
காழியரைச் சிவ கவிமழை பொழிவுசெய்
சோழியச் சிறுவாச் சூருறைச் சுடரனே

4. கூனப் பிறையொடு கொன்றைம லர்மகிழ்
ஏனப் பெருங்கோ இலங்கையனும் தொழும்
ஞானக் களஞ்சிய நாவர சர்க்கருள்
சூனச் சிறுவாச் சூருறைச் சுடரனே

5. சேணியன் சந்திரன் சீர்நிதி ஆளுநன்
காணிக்கை தூவிக் கழல்பணிந் தேகுவர்
மாணிக்க வாசக மதியை அனுப்பிய
தோணியன் சிறுவாச் சூருறைச் சுடரனே

6. கண்டக் கறைக்கவின் கற்பூர நறுமணம்
கொண்டதோர் பெருந்தழல் கூவிளந் தாரிறை
தொண்டர றுபதின் மூவரு டனுறையும்
சுண்டெழில் சிறுவாச் சூருறைச் சுடரனே

7. நாட்டியக் கவின்கழல் நாகமு றைமேனி
மீட்டிய வீணையின் விளங்கிசைப் பேரிறை
கூட்டெழில் தூக்கணாங் குருவிக்கு மருளிய
சூட்டெழில் சிறுவாச் சூருறைச் சுடரனே

8. செக்கர் முகிலிடை செய்வரை ஒவியன்
திக்கிலர்க் கருளிய சிவக்கொழுந் தீசுரன்
சக்கரைப் பால்சுவை தவமுறை சிந்தனை
சொக்கர் சிறுவாச் சூருறைச் சுடரனே

9. முத்தலர் மல்லிகை முல்லையும் சூடிய
தத்துவந் தந்தருள் சற்குரு நாதன்
வித்தகத் தந்தை விண்ணவர் வேந்தன்
சுத்தகச் சிறுவாச் சூருறைச் சுடரனே

10. முதிரா மூவிழி முறுவலந் திருவாய்
அதிரா மென்னடை அரையொரு கரியதள்
மதிவா னவரும் மண்ணோர் தொழுமிறை
துதியோர் சிறுவாச் சூருறைச் சுடரனே

–திருச்சிற்றம்பலம்–

## 35. சிறுவயலூர்

**ஏகம்பரீசுவரர் கலிவிருத்தம் மீனாட்சியம்மன்**

1. மருமணக் கழலெழில் மலமெரி திருவிழி
பருமணி சூட்டியே பத்தர்கள் தொழும் ஒளி
தருவன வேடுரு தாங்கிய தழலனல்
செருமரு கரமுறை சிறுவய லூரரே

2. அகப்புறம் புதரற ஆசற மெழுகியும்
முகப்புமு முக்கோயில் முகடெலாம் வெள்ளைசெய்
உகப்புழ வாரப் பணித்தொண்டர்க் கருளிறை
திகழொளி மழுக்கர சிறுவய லூரரே

3. அண்டப் பெருந்தழல் ஆலவா யண்ணலின்
கண்டிகை நீறணி தொண்டரின் கழல்பணி
பண்புறை மாந்தரின் பவமறுத் தருளும்
செண்பகத் திருவடி சிறுவய லூரரே

4. செடிமர மல்லிகை செருந்திசூ டழலன்
படிகம ணிலிங்கம் பனிமலர் பூசையும்
கொடிமரம் கோயில்முன் கும்பிடும் யாவர்க்கும்
திடவரம் தருமிறை சிறுவய லூரரே

5. நிலவிளம் பிறையணி நித்திய நிமலனை
மலரிளம் தளிரொடு வழிபடும் அடியவர்
உலகுறை அனைந்தோர் எனப் பணிந் துவப்போர்
திலகனென் றாக்குவார் சிறுவய லூரரே

6. மதிலகம் புறமுற வலம்மும் முறைதுதி
பதிபசு பவமறி பழமடியா ரைப்பணி

புதுஇளம் பத்தரின் பொதுமதி நிறைப்பார்
சிதன்தினம் பூசைசெய் சிறுவய லூரரே

7. நறுமலர் பொருளோடு நாளும் பூசைசெய்
செறிமதி தொண்டரின் திருக்கழல் பணிபவர்
அறிவுந லம்கல்வி அமைதிவாழ் வருளும்
திறலெரி கரமுறை சிறுவய லூரரே

8. பூரண விஞ்ஞானர் புவிவாழ் அணைந்தோர்
சீரடி பணிந்தே சிவனடி துதிப்பார்
நேரடித் திருத்தொண்டில் நிதம்பயில் வரந்தரும்
தேரெழில் மழுக்கரன் சிறுவய லூரரே

9. காரிருள் கேவலர் கதியறி சகலரும்
பாரிடை பிறப்பில் பவச்சஞ் சிதமற
சேரிடம் சிவக்கழல் எனத்துதிப் பார்க்கருள்
சீரிளம் பிறையணி சிறுவய லூரரே

10. ஞானம்மெய் கல்வியும் ஞாலநல் நெறிதரும்
கானநல் வீணையன் காசிநல் காஞ்சியன்
ஈனம னனென்னை ஏற்றடி மைகொண்ட
தேனலர் சூடிய சிறுவய லூரரே.

–திருச்சிற்றம்பலம்–

## 36. செட்டிக்குளம்

**ஏகாம்பரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **காமாட்சியம்மன்**

1. ஓரொளி இருநிறத் தோங்காரன் உலகேழ் படைப்பருள் ஊழிமழை
காரிருள் கழனிநல் அமுதேற்றே கனிவுள மாறனுக் கருள்செய்தோன்
பேருரைத் துருகுளப் புழுவெனக்கும் பிச்சைய ளித்திட மறுப்பீரோ
தேரெழில் ஆரூர்ச் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

2. இடிமழை வெள்ளிங் கிரிமலையன் இகபர வினைவிதி ஏகம்பன்
அடிமழைத் தேரைக்கும் அருளளித்த ஆனந்தத் தாண்டவத் திருமூர்த்தி
நொடியும் மறவாப் புழுவெணக்கும் நுனிக்கழல் நிழல்தர மறுப்பீரோ
செடியறு தில்லையம் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

3. யானைஉ ரிபோர்த்த நடனசபை நட்சத் திரம்புனை செஞ்சடையன்
மானொடு வேடற்கும் வானளித்த வையகக் கார்முகில் கருணைவள்ளல்
ஊனுறச் சிதைவுறும் புழுவெனக்கும் ஒளிக்கழல் நிழல்தர மறுப்பீரோ
சேனைமா மதுரையன் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

4. வெந்திறல் இராவனன் பதின்சிரத்தை விரலோர் தடவலில் நொறுக்கிய கோன்
வந்தனை செய்சிறு காரிக்கருள் வானப்பே ரண்டத்தின் முழுமுதல்வன்
சிந்தையு றத்தொழும் புழுவெனக்கும் திருவடி நிழல்தர மறுப்பீரோ
செந்திரு நெல்வேலிச் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

5. மரையொரு கரமிளிர் மாநடனன் வாசுகி உயிர்க்கயி றுகந்தளித்தோன்
கரைநதி நாரைக்கும் கதியளித்த கற்பகக் கருணைக் கயிலைமுகில்
அரைநொடி மறவாப் புழுவெனக்கும் அழல்கழல் நிழல்தர மறுப்பீரோ
திரைக்குற் றாலச் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

6. இலைஎழில் கூவிளந் தார்மகிழும் ஏகம்பப் பெருவளி இருஞ்சுடரன்
அலையுறு கேழலுக் கருளளித்த அம்பலக் கூத்தன் அழலேந்தி
குலையுறச் சிவம்சொல்லும் புழுவெனக்கும் குளிர்கழல் நிழல்தர மறுப்பீரோ
சிலையாலங் காடன் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

7. கருநா கம்புரள் கற்பகனே கரியுரி போர்த்திய கங்காளன்
தருவுறைச் சிலந்திக் கருளியகோன் தம்பளப் பூச்சிக்கும் வரமளித்தோன்
உருகுயிர் சிவம்சொலும் புழுவெனக்கும் ஒளிக்கழல் நிழல்தர மறுப்பீரோ
திருவா வடுதுறைச் செம்பவளன் செட்டிக் குளத்துறைச் சிவக்கொழுந்தே

8. பால்வெளி விண்மீன் படைப்பொளியன் பன்னிரு திருமுறைப் பாட்டுவந்தோன்
நூல்புனை சிலந்திக்கும் நுவல்நிதியும் நூதனச் சோழ நாடுதந்தோன்
ஏல்சிவ சிவசொலும் புழுவெனக்கும் இன்கழல் நிழல்தர மறுப்பீரோ
சேல்வயல் காஞ்சிச் செம்பவளன் செட்டிக் குளத்துறை சிவக்கொழுந்தே

9. வெண்பொடி பூசிய வெஞ்சுடரோன் விளக்கெழில் மறைக்கா டமர்ந்தபிரான்
விண்ணவர் மண்ணோர் தொழுமிறைவன் வேடுவர் கண்ணேற் றன்புசெய்தோன்
எண்ணமே சிவம்நிறை புழுவெணக்கும் எழில்கழல் நிழல்தர மறுப்பீரோ
தெண்ணீர் ஆனிலைச் செம்பவளன் செட்டிக் குளத்துறை சிவக்கொழுந்தே

10. அரும்பிய பிறையணி அலங்காரன் ஆலயம் கோடிக்கும் ஓரிறைவன்
இரும்புவி அடியார் விரும்புருவில் இனிதுறத் தோன்றும் பேரொளியன்
கருத்துறச் சிவம்சொலும் புழுவெனக்கும் கழல்கதி நிழல்தர மறுப்பீரோ
திருவண் ணாமலை செம்பவளன் செட்டிக் குளத்துறை சிவக் கொழுந்தே

–திருச்சிற்றம்பலம்–

**ஏகாம்பரேசுவரர் கலிவிருத்தம் காமாட்சியம்மை**

1. இண்டை எருக்கலர் இருவாட்சியணி எழில்தீபன்
தண்டைசி லம்பிசை சங்கர மூர்த்தி தற்பரமன்
பண்டைபி ரமனின் பழிச்சிரம் அறுத்த பாற்கடலன்
செண்டலர்த் திருவடி செட்டிகு ளத்துறை செங்கரனே

2. கோடிய பிறைமுடி கொன்றையன் செண்பகன் கொடுமுடியன்
நாடிய யாவர்க்கும் நற்றவம் பேறளி நாதமலை
பாடியா டிப்பத்தர் பணிந்துளம் மகிழும் பரமேசன்
சேடியத் திருவருள் செட்டிகுளத்துறை செங்கரனே

3. பஞ்சபூ தத்திறை பதிணெண் கணஞ்சூழ் பரிவுருவன்
தஞ்சமென் றடியவர் தாழ்ந்துளப் பூசைசெய் சங்கீதன்
அஞ்சுமுயிர்களின் ஆணவத் திருவினை அழிப்பனலன்
செஞ்சொல் திருமுறை செட்டிகு ளத்துறை செங்கரனே

4. தங்கத் திருநிறள் சாத்திரம் தோத்திரம் தந்தபிரான்
பொங்குந் தழலுரு புங்கலன் புண்ணியத் திருமூர்த்தி
அங்ககன் உடலழிதன்பருள் நல்கிய ஆனந்தன்
சிங்கநல் வாகனன் செட்டிகுளத்துறை செங்கரனே

5. ஐராவனத்தமா அம்பலக் கூத்தன் ஆதியண்ணல்
எயிலார் திரிபுரம் எரித்தருள் புரிந்த ஈசானன்
உயிரார் மனக்கோயில் உத்தமன் ஊர்த்துவன் உலகொளியன்
செயரார் வினைதீர் செட்டிகு ளத்துறை செங்கரனே

6. சிங்கக்கு ரலிசை செம்பவளமேனி சிங்காரன்
வங்கநவமணி வானவன் பேரொளி மலர்க்கழலன்
தக்கனின் இறைவன் தோள் பணிவோர்க் கருள் சடைமகுடன்
திங்களம் பிறையணி செட்டிகு ளத்துறை செங்கரனே

7. சந்திர சேகரன் தற்பரஞ்சோதியன் தயவுருவன்
மந்திர வீணையனவார்சடை நாயகன் மங்கலத்தோன்
செந்திருக் கழலன் செட்டிகுளத்துறை செங்கரனே

8. வெண்பா அகவல் விருப்பிசை கலிவஞ்சி தமிழகவிஞன்
பெண்பால் ஆண்அலி பேரொடு கோடியன் பெரியபிரான்
தண்பால் அமுதளி சார்புகள் சாரா தனிநிலையன்
செண்பகச் சீரடி செட்டிகு ளத்துறை செங்கரனே

9. தொன்னூற் றாறு நல் தத்துவம் உயிர்க்களி சுயம்பமுதன்
மன்னூல்திருமுறை மாமறை அளித்த வாகீசன்
பன்னூல் புலமைபல் லாண்டுபண் சேந்தருக்களித்தபிரான்
தென்னூற் றதிகையன் செட்டிகு ளத்துறை செங்கரனே

10. நற்றாய் தந்தையும் நற்குணத் தமையன் நாதவிந்தன்
வற்றாப் பேரருள் மன்னுயிர்க் களிக்கும் மாதேவன்

கற்றார் கல்லார் கடுமலம் ஒடுக்கும் கங்காளன்
செற்றார்புரமெரி செட்டிகு ளத்துறை செங்கரனே
–திருச்சிற்றம்பலம்–

## 37. பாடலூர்

**கைலாசநாதர்** **தரவு கொச்சகக் கலிப்பா**

1. ஆடகப் பொன்னொளியன் ஆறாதா ரம்அமர் வோன்
நாடகம் நடத்தியுயிர் நண்புணரும் மதிதருவோன்
கேடய மாயிருந்தே கிளைகளுக்கும் அருளளிக்கும்
சேடலம் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

2. செந்தாது செஞ்சுடரன் சீர்வேங்கைத் தழலுருவன்
கந்தாக இருவரின்முன் காட்சியளிக் கயிலாயன்
குந்தாத நல்வாழ்வும் குன்றாத நிதிஅருளும்
சிந்தூரப் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

3. தேசிகத் திருவெளியன் செந்தழலன் திரிசடையன்
காசியின் கடையூழி கணித்தியக்கும் கங்காளன்
பாசச்சந் ததியோடும் பவங்குறைந்த வாழ்வருளும்
சீசநல் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

4. காஞ்சனப் பேரொளியன் கற்பகங்கள் கடந்ததனல்
நாஞ்சிலோன் பழியகற்றி நல்லவரம் தந்தபிரான்
ஊஞ்சலாய் ஆடுமனம் துதிஏற்று வினைதீர்க்கும்
தீஞ்சுடர் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

5. கனகத் திருக்கழலன் காலமணி கார்வெளியன்
பினாகு பாணமுறை பீதகநல் திருக்கரத்தன்
இனமனத் தறிவுணர்ந்தி இன்பமிகு வாழ்வருளும்
தினமும் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

6. வேங்கரையு ரிபுனைந்த வெஞ்சுடரன் விழிக்கவினோன்
தூங்கலர் கொன்றையணி தூதுநடை ஆரூரன்
ஏங்குமோர் சிவத்துதியும் இப்புவியின் சுகமருளும்
தீங்கழிப் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

7. தமனியத் தனியுலகன் சந்தனச்சாந் தணிதிலகன்
அமிலப் பெருமூலி அழகீழ்ழ கண்டசித்தன்
உமிமலம் ஒடுக்கயுலிர் ஒலியுலகில் தானேற்கும்
சிமிலன் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

8. இரணியப் புதிரொளியன் ஈகையருள் ஏகம்பன்
கரமழுச் சுடரேந்தி கார்த்திகைநாள் தீபமலை
வரமளித் தவனியுயிர் வானகத்தின் நுகர்ச்சிதரும்
திரள்மணிப் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

9. அத்தத் தழகொளியன் ஆசைஏமத் திருவடிவன்
வித்தமா ழைச் செங்கோல் விதிவினைதீர் நிதிமருடன்
புத்தியும் புதுநிதியும் புகரதீர்க்கும் வாழ்வருளும்
சித்திசெய் பாடலூரன் திருவடியின் பணிவதுவே

10. சந்திரச் சாக்கொளியன் தனமருத்தத் திரவியத்தன்
பந்தம னந்தவசு பண்டமளி பாற்கடலன்
மந்திர பொருள்பூரி வழங்கிமண்ணில் வாழ்வருளும்
சிந்தியன் பாடலூரன் திருவடியின் பணிவதுவே
-திருச்சிற்றம்பலம்-

## 38. சாத்தனூர் (மருதையாறு)

**விசுவநாதர்** **தரவு கொச்சகக் கலிப்பா**

1. கருவறைச் சோந்தமெலாம் காடுவரை நடந்துவரும்
இருநிதி இருப்பெல்லாம் இருநொடியில் புகைந்தோடும்
அருவுருக் கழல்துதிசெய்அடுத்தநொடி துணையருளும்
தருநிறை மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

2. ஆடாத ஆட்டமெல்லாம் ஆடியுடல் பிணமாகும்
தேடாத செல்வமெல்லாம் தேடிவைத்த உயிர்பிரியும்
வாடாமல் நமச்சிவாய மந்திரஞ்சொல் துணையருளும்
தாடாளன் மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

3. ஆணாகி பெண்ணாகி அலியான பிறவியெல்லாம்
வீணாகி வினையாகி வேதனையாய் நினறநெஞ்சே
கோணாத சிவச்சுடரை கும்பிடுவாய் சுகமருளும்
சாணாளும் மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

4. காய்கனி பூவளிக்கும் காணிநிலச் செடிகொடியாய்
ஆய்ந்தாய்ந்த பிறவிகளால் அடைந்ததென்ன சிறுநெஞ்சே
ஓய்ந்துநீ பிறவியற ஊர்த்துவனின் கழல்துதிசெய்
சாய்வறும் மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

5. சேராத இடமெல்லாம் சேர்த்தெடுத்த பதவிநிதி
பேரான புகழபொருளால் பெற்றதென்ன பிணிநெஞ்சே

பாராளும் பரஞ்சுடரை பணிந்தெழுவாய் பரிவளிப்பார்
தாராளன் மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

6. உற்றவர் உடன்பிறப்பால் உருகுதுயர் வஞ்சகங்கள்
கற்றோர்க்கும் மற்றோர்க்கும் கருத்திலொடு மாற்றமில்லை
பற்றிப் பரஞ்சுடரை பணிந்தெழுவாய் பரிவளிப்பார்
சற்குண மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

7. வித்தாரம் வேதாந்தம் வெறும்பேச்சில் உலகளந்தே
எத்தாலும் கெஞ்சலிலும் எதுகண்டாய் ஏழைநெஞ்சே
சித்தான சிவக்கழலை தினந்துதிப்பாய் சிறப்பளிப்பார்
சத்தான மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

8. முகத்துதி புறம்பேசி முயற்சியெலாம் சுயநலமாய்
இகபரப் படிப்பின்பம் என்னகண்டாய் ஏழைநெஞ்சே
வெகுமதித் திருவருளன் வெஞ்சுடரை துதி அருள்வார்
தருதவ மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

9. கேவலத் துயில்மாறி கேடறியும் சகலவுயிர்
காவலன் பரம்பொருளன் கருணையினால் களித்தநெஞ்சே
பூவடிச் செஞ்சுடரை பூசைசெய்வாய் போதளிப்பார்
தாவரன் மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

10. முந்துசெய் சிறுநன்மை முகமனிதப் பிறவிகண்டாய்
மந்தமதிப் பழுபபூச்சி மரஞ்செடியாய் இருந்தநெஞ்சே
செந்தழல் திருவடியை தினம்துதிப்பாய் பிறப்பறுப்பார்
சந்தன மருதைநதி சாத்தனூரின் தற்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 39. குலக்கால் நத்தம்

**ஆதிசுவரன்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஏடார் கொன்றைச் சடைமுடியன் ஏமனைத் தடிந்த இன்னருளன்
காடார் பலமலை காட்சியருள் கங்கணப் பேரொளி கயிலாயன்
நாடாச் சகலர்க்கும் நன்மைதரும் ஞானத்தி ருவடி நால்யுகத்தன்
கோடா நீதிசெய் கொழுந்தழலன் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

2. நாவலஞ் தீவின் நாகரிகம் நற்றமிழ் வித்தகம் நல்குமண்ணல்
பூவலம் சுழற்றும் புதிரியக்கம் புகைக்கொடி கோடிசெய் பூங்கழலன்
கேவலத் துயிரினில் கூடிநின்றே குளிமனச் சகலத் துடலளிக்கும்
கூவலும் மழைநதி கொடுத்தருளும் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

3. தாரகை வெண்சுடர் தழலழகன் தத்துவச் சித்ததாந்த சற்குணத்தன்
ஆரமென் றரவணி அலங்காரன் அன்பா னந்தம்செய் ஆடல்வல்லான்
காரகில்சந்தனக் கங்காளன் காலைமா லைவிண்ணின் கதிர்கனலன்
கூரறி வழகருள் கொடைவள்ளல் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

4. எலிதனை மாவலி ஆக்கிமகிழ் இளங்கதிர் பிறைமுடி ஏகம்பன்
மெலிவிசை பாணபத் திரர்க்கருளி விழவெழில் மதுரைப் புகழ்வளர்த்தோன்
நலிவுணர் பிரளயர் நடுநுதலில் நாட்டியக் காட்சி நல்குமண்ணல்
குலிசனுக் கருளிய கோமேதன் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

5. பாறையில் தேரையை படைத்தருளி பல்லான் டுணவளி பாற்கடலன்
காறைன் றரவுக்கும் கதிஅளித்த கருணா கரச்சுடர் கங்காளன்
ஏறைத்தன் வாகன மென்றேற்ற எங்கள் சீருயிர் ஈசானன்
கோறைம ணிவடக் குங்குலியன் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

6. மாங்குயில் தேனிசை மணியாழோன் மணிவா சகத்தோன் மகிழினியன்
பூங்கவி தருமிக்கும் புகழளித்த பொழிவிசை மதுரைப் பொலங்கழலன்
ஓங்குபு கழ்தில்லை ஒளிவெளியன் உருவரு வுருவன் ஓங்காரன்
கோங்கலர் சூடிய குளிர்குன்றன் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

7. ஈனமும் மானமும் இரண்டல்ல எல்லாம் நானே என்றுணர்த்தும்
கானமும் கவிதையும் ஆனகம்பன் கனலும் குளிரும் கழல்நிழலே
ஞானமும் கல்வியும் நல்குவள்ளல் யாழிசை மூர்த்தி நாதாந்தன்
கூனலம் பிறையோன் கோடிமலை குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

8. மேதைமை பேதமை தானாகி மேதினி உயிருடல் மேவுமனல்
போதையும் வேதையும் புரிமாயை புவனியில் படைத்த பூங்கழலன்
ஆதியும் அந்தமும் அளிக்குமண்ணல் ஆலயந் தோறும் அருளளந்த
கூதிரும் கோடையும் கொடுத்தவள்ளல் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

9. சுத்தம சுத்தமா மாயையளி சுந்தர திருநுதல் சுகதேவன்
பத்தநிதி லமெலாம் பரவலுற பலபல பழநிலை படிப்பளித்தோன்
அத்துவா தத்துவம் அவனியுற அறிவொளி காட்டிய ஆதாரன்
கொத்தெழில் கொன்றை கொடுமுடியன் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

10. பொறிப்புலன் உயிர்க்களி பூதேவன் பொன்மலை திருவருள் பூந்தழலன்
நெறிமுறை அறிவளி நிமலவெளி நிரந்தரன் நிரந்தரன் நெடுஞ்சுடரன்
அறிவறி யாஎனை அடியரொடு ஆரன்கழல் துதிசெயும் அருளளித்த
குறைநில வணிந்த குளிர்மலையன் குலக்கால் நத்தத்தின் கூத்தோனே

–திருச்சிற்றம்பலம்–

## 40. குளத்தூர்

சுந்தரேசர் கட்டளைக் கலிவிருத்தம்

1. புதுமக ரந்தநல் பூப்புனை நாயகன் பொன்னுருவன்
சதுரகி ரிவளர் சந்தனச் சாந்தணி சங்கொலியன்
சிதரொளி மணிக்கச் செறிவட நாகம் திகழ்மேனி
விதிவினை புனையும் மேலவன் குளத்தூர் விடையோனே

2. இடைஇடை நவமணி எண்மலர் சூடிய ஏகம்பன்
கடைமடைக் காவிரிகாரோ ணத்தெழில் கதிர்மழுவன்
படைமழுக் கரத்தோன் படர்சடை மேவும் பாரனவன்
மிடறெழில் ஆதியன் மேலவன் குளத்தூர் விடையோனே

3. அறிவியல் தாண்டிய ஆதியஞ் சோதியன் அமர்தேவன்
பொறிப்புலன் கொடுத்துயிர் பொதிமலம் தீர்க்கும் பொன்னீசன்
நெறிமுறைச் சித்தாந்த நேர்முகப் பயிற்சி நிறைவாசான்
வெறிபுலித் தோலுடை மேலவன் குளத்தூர் விடையோனே

4. நகைமுகப் பேரொளி நால்புவி தாண்டிய நடனமணி
சிகையலங் காரன் திரிசடை மேனியன் சீரழகன்
படையொன் றில்லாத பாசுப தந்தந்த பரஞ்சுடரன்
மிகைப்பரி வன்பளிமேலவன் குளத்தூர் விடையோனே

5. அறஞ்செய விரும்பும் மறஞ்செய விரும்பார் அறிவாசான்
நிறமஞ் சளின்பொன் நிரந்தரத் திருவருள் நீள்வானன்
கறைமிட றெழில் மணிககனப் பெருந்தாள் காரோணன்
மிறல்நிறை வாசகன் மேலவன் குளத்தூர் விடையோனே

6. மணிமுடி வழுதிக்கு வழங்கிய வானன் மாறாத
கணிகதி வினையருள் காலாகாலன்நல் கற்பகத்தன்
பிணியுடல் மாற்றி பெரும்பே றளிக்கும் பிறைமுடியன்
முணவலில் மோகனன் மேலவன் குளத்தூர் விடையோனே

7. களிறுரி போர்த்திய கனகச் சுடரன் காசியண்ணல்
ஒளிஇடைத் திகழ்வளி உலகுறைத் தீநீர் ஓரருவன்
தெளிமதிச் சீருடல் சிந்தனை ஓட்டமும் தேர்ந்தளிக்கும்
விளிஇசை வாசகன் மேலவன் குளத்தூர் விடையோனே

8. துடிஇசை யால்புலி தோன்றுயிர் இயக்கும் சுயம்பொளியன்
படிநிலைக் கேற்பநல் படிப்பளி ஆசான் பரஞ்சோதி

மடியமர் மழலையின் மாதா மடிபோல் வாழ்வருளும்
விடிமீண் ஒளியருள் மேலவன் குளத்தூர் விடையோனே

9. போர்த்ததும் தோலுடை புனைவோ சிறுபிறை போதாந்தன்
ஆர்த்ததோர் நரசிமமம் அழித்தரி செய்த ஆண்டவனார்
ஊர்த்துவத் தாண்டவன் உலகொளி நாயகன் ஓங்காரன்
வேர்க்கரு படைக்கும் மேலவன் குளத்தூர் விடையோனே

10. எண்குணம் பேரொளி ஏழிசை வீணையன் ஏகமலை
கண்ணென முக்கோடி ககனமீன் தழலன் கைலாயன்
குண்டுணி எனக்கும் குஞ்சிதத் தாள்தொழும் வரமீந்த
விண்ணவன் தண்ணொளி மேலவன் குளத்தூர் விடையோனே

–திருச்சிற்றம்பலம்–

## 41. அரியலூர் - வட்டம்

**ஆலந்துறையார்　　அறுசீர் ஆசிரிய விருத்தம்　　அருந்தவநாயகி**

1. மேடரி நதிமடு மேவுநிலம் விண்தொலை உடுக்கள் மிகச்செய்தே
காடவர் கோன்கழற் சிங்கருக்கும் கழலரு குறையும் உரிமைதந்தோன்
நாடதில் இல்லற வாழ்வுயர நன்மனத் தாடவர் நங்களுக்கும்
ஆடகப் பொன்னொடு அன்பளிப்பீர் அரியலூர் மேவிய அம்மானே

2. செம்பொன் வைரமும் துத்தநாகம் திறல்மிகு அயமொடு வங்கமளி
நம்பிஇடங் கழிக்கும் அன்புசெய்தே நன்னிழல் அமர்த்திய நாயகனே
கும்பிடும் மங்கைம டந்தையரும் குங்குமக் கோதையர் நங்களுக்கும்
அம்பிகை மதிநிதி அழகளிப்பீர் அரியலூர் மேவிய அம்மானே

3. கன்னல் கனிவகைக் கிழங்குடனே கானக மூலிகை தந்துவந்தே
மன்னவன் செருத்துணை வானேகி வாழ்வுற வரமளி மந்திரனே
என்னென் பிழைகள் யாதறிவோம் இளங்சிறி யோர்கள் நங்களுக்கும்
அன்பறி வாண்மைநல் குணமளிப்பீர் அரியலூர் மேவிய அம்மானே

4. செஞ்சா லிநவ தானியமும் தினைமூங் கில்நெல் தந்தபிரான்
நெஞ்சுறை சிவநாமப் புகழ்துணைக்கும் நீள்வான் புவியளி நெடுஞ்சுடரன்
பஞ்சமில் படிப்பறி வன்பளிப்பீர் பவமில் ஏழையர் எங்களுக்கும்
அஞ்சலென் றருளளி அம்பலனே அரியலூர் மேவிய அம்மானே

5. உயிர்சம நிலைக்கோ ரணுமுதலாய் உயர்களி றும்படைத் தருள்வள்ளல்
வெயில்வேல் கோட்புலிக் கருளியசீர் வெள்ளியங் கிரியுறை வெஞ்சுடரே
பயில்மா மதிக்கல்வி யாதறிவேம் பாமரத் தோன்றல் நங்களுக்கும்
அயிர்தீர்த் தறிவளி ஆண்டவனே அரியலூர் மேவிய அம்மானே

6. கமுகொடு காளான் முக்கனியும் கபம்தீர் இஞ்சியும் மிளகளித்தோன்
குமுதநின் றவூரின் பூசலர்க்கும் குறையா வரமருள் கொடை வேந்தன்
இமிழ்கடல் வைப்பினில் ஏதறிவேம் இயல்பே டன்பேடி நங்களுக்கும்
அமிழ்தறி வாண்மையும் அளித்தருளே அரியலூர் மேவிய அம்மானே

7. இத்திய ரசத்தி வேம்போடே இலுப்பை புங்கமால் நிழற்கொடையன்
நித்தம டியவர்க் காடையளி நேசனுக் கருளிய நெடுஞ்சடையன்
சித்தஞ் சிவநெறி செய்தறியேம் திருவடி துதியா நங்களுக்கும்
அத்தனே அருள்தரல் நின்கடனே அரியலூர் மேவிய அம்மானே

8. சூல்நிறை மீனினம் சுறவோடும் தொகைமிகு கடலுயிர் கோடிசெய்த
நூல்வலைச் சிலந்தியை செங்கணனாய் நுதனச் சோழமு டியளித்தோய்
கால்மனம் உடலுருப் பூனமுற்றேம் கலங்கிய சிதடுகள் ஏதறிவேம்
ஆல்மதி நிதிகதி வாழ்வளிப்பீர் அரியலூர் மேவிய அம்மானே

9. முல்லைமல் லிகையும் நீர்மலர்கள் முதிர்சரக் கொன்றையும் படைத்துவந்தே
மெல்லடி ஊரனைத் அகம்சுமந்த மிகுபுகழ் சடையருக் கருளியகோன்
கல்வியும் கற்பனை ஏதறிவேம் கலியுகக் சோதனை மானிடத்தேம்
அல்லல ழித்தருள் வாழ்வளிப்பீர் அரியலூர் மேவிய அம்மானே

10. குளஞ்சுனை ஏரிநல் நதிசெய்தே குவலய நீர்வளம் காத்தபிரான்
இளந்தமிழ் ஊரனை மடிசுமந்த இசைஞா னிக்கருள் ஏகம்பன்
உளமுணர் பல்பிறப் பெடுத்தழ்ந்தேம் ஒருதுளி அறிவதும் கற்றறியேம்
அளகல ராக்கிஅ ணிந்தருள்வீர் அரியலூர் மேவிய அம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 42. அரியலூர்

**விசுவநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. விரிசடை படர்வெளி விளைவளி பரம்பொருள் விசுவநாதா
கரியதள் உடைபடை கடுமுறை மழுக்கர வாசீசா
தெரிந்ததும் தெரியா பிழைபல கோடியும் பொறுத்தருளே
அருநெறித் தவந்தரும் அறிவளி அரியலூர் அன்பரனே

2. விடைவலி வாகன விண்ணவப் பெருந்தகை விசுவநாதர்
கொடைமடித் தாலேழ் குவலயம் காக்கும் கொற்றவனே
மடைமனத் தேழையன் மனஞ்செயல் வாக்குறை பினைபொறுத்தே
அடைந்துன் கழல்துதி அறிவளி அரியலூர் அன்பரனே

3. பகிரண்டச் படர்சுடர் பசுபதி விதிபுனை விசுவநாதா
தகிர்தத்த தகதிமி தாண்டவத் திருவடி தற்பரனே

நுகர்பல நதிமணல் அளவுகள் நுகர்ந்துயிர் நொடித்தோற்தேன்
அகித்துயர் போதும் அறிவளி அரியலூர் அன்பரனே

4. விரிபுரம் மூன்றெரி மென்னகை பொற்கவின் விசுவநாதா
நரிபரி பரிநரி நாடகம் நடத்திய நாயகனே
புரிந்ததும் புரியும் புரைபல கோடியும் நானறியேன்
அரிந்தெனைக் காக்கும் அறிவளி அரியலூர் அன்பரனே

5. சிறுபிசை சூடிய செறிசடை மகுடநல் விசுவநாதா
மறுகிடை மாணிக்கம் விலைபகர் மதுரையம் பரஞ்சோதி
தறிஇடை நூலெனச் சஞ்சலம் நெய்ததைத் தணித்தருளே
அறிதுயில் அரிக்கருள் அறிவளி அரியலூர் அன்பரனே

6. மெருகெழில் விடமணி மிடறொளிர் மாணிக்க விசுவநாத
இருவே டுவரை நளன்குக ணாக்கிய ஈசுவரனே
பெருகிய சஞ்சித் பிறப்புறை கன்மமும் புரைமாற்றி
அருளுணர் தீக்கை அறிவளி அரியலூர் அன்பரனே

7. வெளிறூ மத்தமும் வெட்சியும் சூடிய விசுவநாதா
வளிவெளிப் பகிரண்டம் வானெல்லை தாண்டிய வளர்தழலே
எளியவன் நான்நிலை இறைஞ்சிநின் றுளறும் மொழி பொறுத்தே
அளியனென் றுணை உணர் அறிவளி அரியலூர் அன்பரனே

8. விதுலமில் நாயகன் வெந்தழல் மூர்த்தி விசுவநாதா
புதுப்புது பொருளுரு புதுக்கியும் படைக்கும் புவநேசா
எதுளது நிறைகுறை இயலறி யாநாய் எனைப் பொறுத்தே
அதலன்கின் கழலளி அறிவளி அரியலூர் அன்பரனே

9. மூவகை நிலையைந் தவத்தைநல் மருந்தளி விசுவநாதா
தேவைஎல் லாம்பெற திருவருள் புரிஇறை சிவலோக
நாவகை நெறிமுறை நானறிந் தில்லேன் நாளை எந்தன்
ஆவகை அறியும் அறிவளி அரியலூர் அன்பரனே

10. வித்தையும் விஞ்சையும் மேவிய விண்ணுறை விசுவநாதா
சித்தமும் சிந்தையும் செறிபுலன் இயக்கும் செம்பொருளே
நித்தமும் நீர்மலர் நிறைபூ சைசெய்யும் நெறியறியேன்
அத்தொடு தீக்கைகள் அறிவளி அரியலூர் அன்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 43. மேலைப் பழுவூர்

**சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஊதுசங் சிகையன் சங்காரன் உலகொளி பெருந்தழல் ஊனநடன்
தீதுப்பு ராமலி திருகையன் திங்களின் குறைதீர் செஞ்சுடரன்
ஆதிரை நாயகன் அம்பலத்தோன் ஆனந்தத் தாண்டவன் அழகீசன்
மேதினித் திரிசடை மணிமகுடன் மேலைப்பழுவூரின் விண்ணவனே

2. ஏழிசை வளர்மொழி ஏகபாதன் இளையோன் முதியோன் என்றுமுள்ளோன்
பாழிநல் சுனைகுளம் நதிதந்த பவ்வத்திருப்புனல் பரஞ்சோதி
காழியர் கோனுக்கு பொற்றாளம் கனிந்தளி கடவுள் காலகாலன்
மேழிய இருருடிக்கும் மேன்மையளி மேலையப்ப முவூரின் விண்ணவனே

3. பாதன் அலங்காரன் அபிடேகப் பிரியன் ஆசையில்லான்
ஓடிய கங்கையை உவந்தேற்ற உஞ்சைசெய் உத்தமன் ஒளியுருவன்
நாடிய அறுபதின் மூவரொடும் நற்றொகை அடியாரை நயந்தேற்ற
வீடியல் உயிர்க்களி விரிசடையன் மேலைப்பழுவூரின் விண்ணவனே

4. காற்றினில் மொழி இசை தனைக்கலந்தே கல்வியும் கலைகளை தந்தபிரான்
கூற்றினைக் காய்ந்த குளிர்விழியன் குணமெட்டுறைதழல் குங்கிலியன்
போற்றித் திருநீறு புனைந்தோரை போகப்பிறப்பறப் புத்திதந்த
மேற்றிசை வெள்ளியங் கிரிக்குகையன் மேலைப்பபழுவூரின் விண்ணவனே

5. பூத்திரன் திருவடி பொன்மேனி பொங்கர வணிந்த புவனிநல்லன்
சாத்திரம் தோத்திரம் தத்துவமும் தானேயாகிய சற்குருவன்
காத்திரு நாளை வருவனென்றே கடல்ரா மேச்சரக் கடைநிறுத்தி
மீத்திறல் தணு;ககோடி சென்றபிரான் மேலைப்ப முவூரின் விண்ணவனே

6. சுலச்சுடர்ப் படைச்சொக்கேசன் தொடர்யுகம் இயக்கும் சுயம்பொளியன்
நூலவை தோன்றிய மொழியாவும் நுதல்விழி யோன்தன் கொடையமுதே
ஆலமர்ந்தறமளி ஆகாயன் அன்பருள் அறிவுரு ஆனந்தன்
மேலன் கீழ்நடுப் பொருளான மேலப்ப முவூரின் விண்ணவனே

7. பாடலன் ஆடலன் பதித்தாளன் பண்ணொடு திருமுறை பார்க்களித்த
கூடலன் தில்லைய்ன குற்றாலன் கோரக்பூர் முத்திநாத் கோகர்ணன்
ஓடலங் காரத் தொளிர்கரத்தன் ஊர்த்துவன் மூர்த்தி யாவுமானோன்
வீடலங்காரம் தருமாசான் மேலப்ப முவூரின் விண்ணவனே

8. பலகறை சிப்பியில் முத்துவந்த பாற்கடல் நாயகன் பரமேசன்
உலகுயிர் பக்குவம் தாமுரை ஒவ்வொரு படிக்கோர் வேதமளி
அலகளியாஞானத் தருங்கடலன் அம்பலத் தானந்தத்திருக்கூத்தன்
விங்குபுள் செடிக்கும் முத்திதந்த மேலப்ப முவூரின் விண்ணவனே

9. நெரப்பொடு அயனிரிஞாயிரவன் நெடுந்தொலை பால்வெளி பகிரண்டன்
செருக்கொடு செய்பூசை வேள்ளிகளை சிதைத்துயிர்க் கன்பளி செஞ்சுடரன்
பருப்பததம் பாசூர் பார்முழுதில் பத்தரின் மனக்கோயில் பசுபதியன்
விரும்புநர் விரும்புருவாய் வருவோன் மேலப்பழுவூரின் விண்ணவனே

10. காசியன் காஞ்சியன் கயிலாயன் கங்கைநல் நருமதையன்
யாசித்த போதெலாம் ஞானமணி நாதப்பரம்பொருள் நாடுலகன்
தேசிகன் தீக்கைசெய் சிவலோகன் செஞ்சுடர் விளக்கன் திருமுறையன்
வீசிய காற்றின் விதிமாற்றும் மேலப்பழுவூரின் விண்ணவனே

–திருச்சிற்றம்பலம்–

**சுந்தரேசுவரர் கலிவிருத்தம்**

1. படருறும் புரமெரி பரன்கழல் சிலம்பொலி
கடறிடைக் கணங்களும் களிக்குர வைசெயும்
தடந்தோள் நாகமும் சரிவுறத் தோன்றும்
விடையமர் அண்ணலின் மேலைப்ப முவூரே

2. திசையொளிர் திருவிழி செஞ்சுடர் மேனி
அசைவுறும் படர்சடை அரிவளி உதிரும்
இசைத்துடி தண்ணுமை எழுசங் கம்முழங்கும்
விசையளி அண்ணலின் மேலைப்ப முவூரே

3. செந்தழல் முருக்கும் சிறுதளிர் வன்னியும்
கந்தலர் கொன்றையும் கணக்குழு சூட்டும்
நந்தியின் துந்துபி நாகசு ரம்பயிலும்
விந்தையெம் அண்ணலின் மேலைப்ப முவூரே

4. கனகநல் சதங்கை கழல்மலர் ஒளிரும்
தனமளி கரமுறை சலஞ்சலம் மிளிரும்
தினமொரு நிறமொளிர் திருவடி தோன்றும்
வினைவிதி அண்ணலின் மேலைப்ப முவூரே

5. புலியதள் துடியிடை புனையிறு வடிவம்
பலிப்புரந் தரன்தினம் பணிந்தெழும் கோயில்
ஒலிமிகு யாழிசை ஊரிடை உலவும்
விலங்கணி அண்ணலின் மேலைப்ப முவூரே

6. பலவிசை நாதநல் பண்ணியம் முழக்கம்
அலகொடு வகுத்தளி வானவர் தொழுதெழ
உலகுறை நறுமணம் ஒளிக்கழல் தூவும்
விலங்கேந் தண்ணலின் மேலைப்ப முவூரே

7. புழுதியங் காடுறை பொடியணி கனலொளி
பழுதறு மாணிக்கப் பாம்பணி மேனியன்
எழுசுர நாதமும் இமையசைந் தொலிக்கும்
விழுதால் அண்ணலின் மேலைப்ப ழுவூரே

8. மயக்களி குறுநகை வாழ்வருள் திருவிழி
கயக்கம லக்கரம் காந்தளம் மெல்விரல்
புயந்தொடு சடைச்சுழல் புவிபடர் சிலம்பொலி
வியப்பளி அண்ணலின் மேலைப்ப ழுவூரே

9. இருக்கையேழ் புவியோன் எருதொரு வாகனன்
செருக்கைய டக்கிய திரிபுர நாயகன்
நெருக்குற முயலகன் நெடுஞ்சிரிப் பொலிதிகழ்
விருப்பமர் அண்ணலின் மேலைப்ப ழுவூரே

10. அடிதொழு தரற்றுவர் அறிவினர் வானவர்
முடிதொழு தெழும்பிறை முனர்தொழும் சூரியன்
கடிகமழ் கழல்மலர் கருணைசெய் சிலம்பொலி
விடிவருள் அண்ணலின் மேலைப்ப ழுவூரே

-திருச்சிற்றம்பலம்-

## 44. நக்கம்பாடி

**கைலாசநாதர்** **வஞ்சிவிருத்தம்**

1. மதிநில வணிந்த மாமறையோன்
அதிபதி ஏழ்புவி ஆனந்தன்
சதிபதிக் கருள்நிதி தரும் வள்ளல்
பதிநக்கம் பாடியின் பரம்பொருளே

2. கண்டிகை கதிர்மணி கயிலாயன்
எண்டிசை விளங்கொளி ஏகம்பன்
மண்டலச் கோடிமீன் வகுத்தபிரான்
பண்நக்கம் பாடியின் பரம்பொருளே

3. யுகம்யுகந் தாண்டிய யோகவள்ளல்
சுகமதிச் சுந்தரச் சுடரொளியன்
மிகுமதி பழமடி யார்க்கருளும்
பகம் நக்கம் பாடியின் பரம்பொருளே

4. ஏகமும் எல்லாமாய் இருக்குமனல்
நாகமும் நவமணி நணிமேனி
தேகமும் சீருயிர் திருத்துவள்ளல்
பாகல்நக் கம்பாடி பரம்பொருளே

5. ஆதவ னிந்திரர்க் கருளளித்த
மாதவப் பெருந்தணல் மணிமகுடன்
ஓதும்ம றைகளை உயிர்க்களித்த
பாதநக் கம்பாடி பரம்பொருளே

6. ஞானபாற் கடலன் நாதாந்தன்
ஊனந டனஞ்செய் துயிர் கருள்வோன்
கானக்க ருங்குயில் யாழிசையன்
பானல் நக் கம்பாடிப் பரம்பொருளே

7. மூன்றுநஞ் சயின்ற முக்கண்ணன்
தோன்றாத் துணையாய் சுகமருள்வோன்
ஈன்றவ ரினும்மிகு இரக்கமருள்
பான்மைநக் கம்பாடிப் பரம்பொருளே

8. வாணிக் கருளிய மழுவெழிலன்
வேணிய லங்கார மேதினியன்
மாணிக்கென மாறனியைத் தடிந்த
பாணிநக் கம்பாடிப் பரம்பொருளே

9. நால்வகை உயிர்பிறப் பளிஞானி
நூல்வளர் சிலந்திக்கும் அரசளித்தோன்
நீல்மணி கண்டத்து நிரந்தரத்தோன்
பால்நக்கம் பாடியின் பரம்பொருளே

10. அதிசயத் தருவுரு ஆறங்கன்
எதிரிஒன் றில்லா ஏகம்பன்
கதியிலி என்துதிக் கருளளித்த
பதிநக் கம்பாடி பரம்பொருளே

–திருச்சிற்றம்பலம்–

## 45. பொன்பரப்பி

**சொர்ணபுரீசுவரர்** **கலிவிருத்தம்** **பிரகன்நாயகி**

1. பகலேநில விரவேஒளி மின்னல்மழை அருளே
நகலாய்நின துருவேயளித் துவந்தீர்மனி தனுக்கே
முகமே விழிப் பெரியோன் நினகழலே தொழு தழுவேன்
புகழோர்தொழும் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

2. காயேகனி விதையேசதை பூவேஇலை உணவும்
தாயார்கருப் பைப்கோரணு தந்தாய்தர வைத்தீர்
சேயாய் நின தடியார் தொழச் சிறியேன்தொழு தழுவேன்
பூயாகநல் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

3. பொருளாசையும் போகம்புகழ் சிறுதேவதைச் செய்ய
இருளோடிணைத் தீரேழ்புறப் பீங்கோயென உணர்த்தும்
உருகாமன முருக்கும்மணி ஒளியேதொழு தழுவேன்
புரிவார்சடை பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

4. தேவாரமும் திருவாசகம் செவிகேட்டருள் பொழிந்தீர்
நாவாரமு தாகும்ஐந் தெழுத்தேசொலப் பணித்தீர்
மூவாப்பெரு மருந்தேநின தடியேதொழு தழுவேன்
பூவார்சடைப் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

5. துடிமாமறை நாதந்தர தொகையூழிகள் கணித்தீர்
கொடியோர்புரம் எரித்தேழ்புவிக் குறைக்காப்பருள் மலையே
நொடியோ இமைப் பொழுதோமற வாதேதொழு தழுவேன்
பொடியார்நுதல் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

6. நலமே தரும் நன்னீரொடு உவர்நீர்க்கடல் உவந்தீர்
மலராலபி டேகஞ்செயும் மதியோர்க்கருள் நிதியே
வலமே நடந்துணையே நினைந்துருகித்தொழு தழுவேன்
பொலம்பூத்தளிப் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

7. பாதாம்புயம் பணிவோர்க்கருள் பரமேச்சரக் குருவே
வேதாகமம் தமிழ்நாதமும் மின்னல்இடி இசையே
தீதோநல மறியாத்தொழும் பாகித்தொழு தழுவேன்
பூதேசனே பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

8. கழிக்கானகச் சுரபுன்னையும் தில்லைமலர் சூடும்
எழிலார்மலர் சூட்டித்தொழும் இளையோர் மகிழ்வடிவம்
மொழியார்மதி அறியாப்பதர் முதல்வாதொழு தழுவேன்
பொழிலார்கவின் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

9. நாதத்திரு வேதப்பொருள் நாகம்புனை முதல்வன்
ஊதைக்குளிர் கோடைக்கனல் ஓடும்வளி ஒளியே
தீதைப்பயின் றின்னல்புரிந் திளைத்தேதொழு தழுவேன்
போதப்பனை பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

10. வேசம்புனைந் தீசன்வடி வென்றே பிழை புரிவார்
நாசம் புனைந் தாசைசுமந் தாறேழ்பிறப் பெடுப்பார்
நேசம்தரும் ஈசன்கழல் நினதேதொழு தழுவேன்
பூசைப்புணர் பொன்பரப்பியின் புதுமேனியச் சுடரே

–திருச்சிற்றம்பலம்–

## 46. செந்துறை

**சிவதாண்டேசுவார்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **பெரியநாயகி**

1. வந்தியின் பிட்டுக்கு மண்சுமந்த மாணிக்கப் பேரொளி நாயகமே
இந்திர போகமு லகுணர ஏழ்பிற விதந்த தாந்திரிகன்
விந்தைசெய் அருவுரு வெண்ணீறன் விரும்பிய வடிவொடு பத்தர்க்கருள்
செந்தமிழ் மந்திரன் திரிசூலன் செந்துறை மேவிய சிற்பரனே

2. வந்தவ ணிகனின் மாமனுமாய் மாறிவந் துதவிய மாதேவன்
எந்திர மதிவளர் முக்கோணம் இணைகரச் சதுரவட் டமளித்த
விந்தைம னிதரை உருவாக்கி விண்ணக மியக்கும் ஒளிவேந்தன்
செந்தழல் மந்திரன் திரிசூலன் செந்துறை மேவிய சிற்பரனே

3. ஏனக் குழந்தையை மந்திரியாய் ஏற்றருள் நல்கிய ஈசானன்
ஊனக் கருவிழி நிறமுணர கோடி நரம்பில் மூளைசெய்த
தானொரு மானிட வடிவாகி தாரணி மானிடம் கோடிசெய்தோன்
தீனபந் தாகிய செஞ்சுடரன் செந்துறை மேவிய சிற்பரனே

4. மாணிக்க வயிரம் விலைபகர்ந்தே மாமது ரைவீதிக் கொளியுவந்த
காணிக்கை மனதைக் கோயிலாக்கி கற்பகப் பத்தரின் பிறப்பறுக்கும்
தூணிலி ருந்தவன் சோரியறத் துயரந் திருத்திய சுயம்பனலன்
சீணம ழித்தருள் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே

5. இளங்கவின் பொன்னனை யாள்மகிழ இரசவா தஞ்செய்த ஞானமணி
துளங்கலர் தூவித் தொழும்பத்தர் தூயநல் பரம்பரை வளர்ந்தோங்க
விளங்கொளி யாய்எழுந் துளம்நிறைவார் விண்ணிதி மதியுறப் பிறப்பறுப்பார்
தெளிவெளி செஞ்சுடர் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே

6. எட்டே யோகமும் சித்தியுமாய் இயற்றிய திருவொளி யோகமலை
பட்டோ டலர்தார் புனைத்துருகும் பத்தரின் விரும்புரு வாய்த்தோன்றும்
கட்டமு தூட்டும் கங்காளன் கானக வேடற்கு மருள்குவித்த
திட்டாய் புவிசெய் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே

7. கடலேழ் நிழல்சூழ் காப்பளித்தே கணக்கில் உயிர்களை வாழவைத்த
தடந்தோள் அரவணி சந்தோசன் சமர்நுதல் விழியன் சங்கீதன்
விடந்தேன் எனவுண் வெஞ்சுடரன் விண்ணவர் நாயகன் சுயம்பொளியன்
திடமார் விடையமர் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே

8. கல்லா னையது கரும்புண்ணும் கண்காட் சிசெய்த கற்பூரன்
கொல்லாச் சிவநெறி குவலயத்தே கொடுத்துயிர் காக்கும் கோமேதன்
வில்லாய் விண்ணில் நிறங்காட்டி விதவித ஓவியக் கலைவளர்த்தோன்
சில்லரிக் கழலன் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே

9. நிழல்மலி ஆலமர் நெடுஞ்சடையன் நெருப்பனல் விழிமலர் நேசக்கடல்
குழலொடு தண்ணுமை சல்லரியும் கொம்புசா மக்களம் தாளமளி
அழகொளி அற்புதன் அம்பலத்தோன் ஆடரங் கேறிய மாதேவன்
செழுவிதி கதியளிச் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே

10. தானே தோன்றிய சங்காரன் தமிழினை முந்துறப் பேசியகோன்
கானோர் சுடலைப் பொடிபூசி கலியுகக் கூத்தொடு உயிர்செய்வோன்
ஆனே றேறிய அலங்காரன் ஆண்டவா என்றதும் அருகிருக்கும்
தேனேர் அருள்தரும் செம்பவளன் செந்துறை மேவிய சிற்பரனே
-திருச்சிற்றம்பலம்-

## 47. நல்லூர் - இலுப்பயைூர்

**கைலாசநாதர்** **காமாடசியம்மை**

**மார்க்புரீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **மரகதவள்ளி**

1. தங்கச் சரக்கொன்றை தாமம்மகிழ் சற்குருபரம்பொருள் தழல்வெளியன்
இங்கிதச் சேவைநல் இயற்பகைக்கும் இன்னருள் வழங்கிய ஈசானன்
பொங்கமு தப்புனல் சங்காரன் பூணும்கண் டமணிக் கருளினியன்
நங்களின் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

2. கீற்றுப் நிறையணி கேதாரன் கிளிஞ்சலின் முத்தணி கிரிவேந்தன்
சேற்றுவிதைநெல்லை அடிசில்செய்த சீரிளயான்குடி மாறர்க்கன்பன்
ஆற்றமு தப்புனல் அலங்காரன் அக்கம ணியணிந் தோர்க்கருளும்
நற்றெழில் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

3. தேனெருக்கமணி சிங்காரன் தென்பொதி கைநகர் திருவருளன்
ஞானச்சி வமதி மெய்ப்பொருட்கும் நலம்மிகு வான்வாழ் வளித்தபிரான்
ஈனம ழித்துயிர்க் கேற்றமளி ஏழிசை யாழ்கரத் தீசானன்
ஞானமா நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

4. மெல்லிசை கிளுவையும் வன்னியணி மேதினி திசைகள் கடந்தசுடர்
பல்மணிக் கோயிலைப் பணிந்தெழுந்த பதிமதிவிறன் மிண்டார்க் கிணியன்
எல்லா மாகிய ஏகம்பன் எதிலும் இயங்கும் இன்னுயிரன்
நல்வயல் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

5. வண்ணநல் கோடலும் மல்லியணி மந்திர வீணையன் மாதேவன்
தண்ணமர் நீதிக்கும் தயவளித்த சங்கரப் பேரருள் தனித்தழலன்
மண்ணொடு விண்ணையும் ஆட்சிசெய்யும் மாதவத் திருவை யஸறமுதன்
நண்ணுநர் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

6. படர்மல் லிமுல்லை பாம்பணியன் பாசுவதம்பார்த் தனுக்களித்தோன்
குடலைசி தைகளி றினைஅறுத்த கொழுமமு எறிபத்தர்க் கருளினியன்
தடம்புனல் அருவிகள் நதிசெய்த தரணி தற்பராஞ் சோதிமின்னல்
நடவெழில் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

7. பவளமல் லிகைகூ விளமணியும் பாற்கட லாதியன் பரம்பொருளன்
அவவே டம்சிவ வேவமென்றே அடிபணி ஏனாதிக் கருளுவநிதோன்
தவமா தவமணி சற்குணத்தன் தாண்டவ மூர்த்தி தார்சதுரன்
நவமார் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

8. வெள்ளி நந்தி யமணி விமலீசன் விரிசுடர் பரிதியின் குறைதீர்த்தோன்
தள்ளைம னத்திண்ண னார்க்கருளி தாரணிக் கண்தானம் வளர்த்தபிரான்
தெள்ளுத்த மிழ்முறை சீரிசையும் சித்தாந் ததத்து வம்மளித்த
நள்ளுநர் நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

9. நொச்சியும் அக்கமும் சூடியகோன் நூதனம் யாவையும் தானானோன்
மெச்சுசெ யல்குங் கிலியருக்கும் விண்ணளி கடவுள் விரும்புருவன்
அச்சுக ளின்றிஆ காயமுறை அனல்மீன் சுழற்சி அளிக்குமிறை
நச்சினி நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே

10. பொன்னடை வில்வமும் புனைந்து நிற்கபூலோ கம்புகழ்ந் திறைஞ்சிமகிழ்
தன்னரும் மகளின் கூந்தலளி மானக்கஞ்சா றர்க்கருள ளித்தோன்
ஒன்றும் தெரியா ஏழைஎன்னை உருகிஉ ருகத் தொழப் பழக்கியகோன்
நன்மணி நல்லூர் பேரிசையன் நான்மறை இலுப்பையூர் நாயகனே
–திருச்சிற்றம்பலம்–

## 48. சென்னிவனம்

**தீர்த்தபுரீசுவரர் கலிவிருத்தம் சொர்ணாம்பிகை**

1. சந்தனச் செண்பகச் சாந்தணிக் கற்பகன்
வெந்தனல் விமலன் மேருவைத் தடிந்த
மந்திர மாமணி வானகத் தோவியன்
செந்தழல் ஆதிரை சென்னிவ னத்தனே

2. கொங்கலர் மேனியன் குளிர்நில வணிமுடி
தங்கம லர்நிறச் சங்கரன் விண்ணவன்
பங்கயக் கழலிறை பரவசம் தருஞ்சுடர்
செங்கதிர் மாலையன் சென்னிவ னத்தனே

3. விண்ணொளி மண்ணெழில் கண்கவின் மூன்றினன்
தண்ணொளி தாரகைச் சக்கரந் தந்தவன்
எண்ணறி யாததோர் இயல்பினன் சுயம்பொளி
திண்ணிய மூர்த்தி சென்னிவ னத்தனே

4. திருவடிக் கமலத்தில் செய்புவி ஆயிரம்
குருவடி வாகிய குறைதீர் மருந்தவன்

அருவடி வம்பலன் அல்லூழிப் பெருஞ்சுடர்
செருவிழி நுதலுறைச் சென்னிவ னத்தனே

5. பார்ப்பன்னத் திருவிரல் பதின்சிரம் நெரிக்கும்
ஆர்ப்பரி ஆழியேழ் அடக்கிய அருளொளி
தேர்ப்பெரும் ஆரூர் செம்புவி நாயகன்
சேர்ப்பெருங் கயிலையன் சென்னிவ னத்தனே

6. கன்னல்கல் யானை கடிக்கும் வரந்தரும்
மின்னலம் மேனியன் வேதத் தமிழ்மறை
தன்னலப் பேய்களைத் தடிந்தழி செய்சுடர்
சின்னப் பிறையணி சென்னிவ னத்தனே

7. ஏலந றுமணம் இதமுகம் செவ்வந்தி
கோல விழியிமை கோபுரத் தேரெழில்
ஆல நிழலமர் அருமறைப் பெருங்குரு
சீல நிதிதரும் சென்னிவ னத்தனே

8. பட்டபி டேகஞ்செய் பத்தரின் சிறுசிரம்
தொட்டொளித் தீக்கைசெய் சுந்தரத் தழல்மலை
எட்டத் திருப்பினும் இன்னருள் தரும்வள்ளல்
சிட்டன்சி வலோகன் சென்னிவ னத்தனே

9. பத்தர்க் கிடும்புசெய் பாவியைத் தண்டிக்கும்
சித்தி சிவநீதி தில்லையஞ் செஞ்சுடர்
முத்துக்கு முன்திரு முகவொளிக் காட்சிசெய்
தித்திக்கு மமுதன் சென்னிவ னத்தனே

10. ஒப்புக் குருவுடை ஒளிமலை அருவமும்
அப்புக்குள் உறையும் அனல்பிழம் பம்பலன்
இப்புவிக் கப்பனி எந்தாய் அண்ணனும்
செப்பச் சொல்லில்லா சென்னிவ னத்தனே

–திருச்சிற்றம்பலம்–

## 49. ஒட்டக்கோயில் - கள்ளமேடு

**சுவர்ணபுரீசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் பெரியநாயகி**

1. குருவெனத் தோன்றி குறைகளை எரிக்கும் கொன்றையர் சடைமுடியன்
அருஞ்செந் நெல்படை அறிவாட டாயர்க்கும் அன்பளி பெருவள்ளல்
கருநால் முறைதோன்றா காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உருவமில் லாத்தழல் ஒட்டக் கோவிலின் ஊர்த்துவத் தாண்டவனே

2. திருமுறை வேள்வியில் செஞ்சுடர் காட்டி திருவருள் புரிஇறைவன்
அருகிசைக் குழலோன் ஆனாயர்க் கருளளி ஆனந்தப் பெருவள்ளல்
கருவிநால் முறைதோன்றா காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உருவமில் லாத்தழல் ஒட்டக் கோவிலின் ஊர்த்துவத் தாண்டவனே

3. அறுபதப் புதுமலர் அடியவர் பூசைசெய் அருவுருத் திருமேனி
நறுருசந் தனக்காப்பு நடத்திய மூர்த்தியர்கும் நலமளி பேரமுதன்
கறுமுக மறியாக காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உறுபிணி தீர்தழல் ஒட்டக் கோவிலின் ஊர்த்துவத் தாண்டவனே

4. அடியவர் திருமுறை முற்றோ தற்கருளி அகச்சுகம் தருஞ்சுடரன்
செடிகொடி மலர்த்தார் சூட்டிய முருகற்கும் திருவடி நிழலளித்தோன்
கடிமதில் எரித்த காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உடுக்கொடு கரத்தோன் ஒட்டக் கோவிலின் ஊர்த்துவத் தாண்டவனே

5. எதிர்ப்பலன் வேண்டலில் உழவா ரப்பணி இயற்றுவர்க் கினிதளித்தோன்
பதிமறை உருத்திர பசுபதி யார்க்கருள் பாலித்து வந்தபிரான்
கதிமதி தருமிறை காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உதிர்தணல் மழுவோன் ஒட்டக் கோயிலின் ஊர்த்துவத் தாண்டவனே

6. தவத்திருக் கோலநல் சற்குணச் சங்கரன் தற்பரஞ் சோதியண்ணல்
சிவபத்தி வடிவம் திருநாளைப் போவார்க்கும் செஞ்சுடர் மேனிதந்தோன்
கவலைதீர்த் தருள்தரும் காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உவகைநல் வானளி ஒட்டக் கோவிலின் ஊர்த்துவத் தாண்டவனே

7. வந்தனை அடியவர் வாநாள் பூசைக்கு வானகந் தருமிறைவன்
செந்தறிக் காஞ்சி திருக்குறிப்புத் தொண்டர் சேவைக்கு தோன்றிநின்றோன்
கந்தம ணிச்சுடர் காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உந்திசை யாழ்கரன் ஒட்டக் கோயிலின் ஊர்த்துவத் தாண்டவனே

8. சிந்தைக்கினியவர் செந்தவப் பரமன் சிவலோகச் சுடரோன்
தந்தையைத் தழந்த சண்டிக்கும் பதவி தந்தருள் புரிந்த தந்தை
கந்தருவர் துதி காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உந்தைளந் தைக்கருள் ஒட்டக் கோயிலின் ஊர்த்துவத் தாண்டவனே

9. கொப்புச் சரக்கொன்றை குங்குமத் திலகன் கோடியு கம்வகுத்தோன்
ஒப்புமை இல்லாச் செப்புரைத் தாண்டகத் தப்பரை அருகேற்றோன்
கப்பரை ஏந்திய காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உப்பறு கக்கவின் ஒட்டக் கோயிலின் ஊர்த்துவத் தாண்டவனே

10. அசலன் சிவலோகன் ஆனந்த நடனன் அணைந்தோர்க் கருளினியன்
தசமுகன் பிறவிகள் சடுதியில் முடிவுற தவமருள் தந்தபிரான்
கசடகன் எனக்குருள் காஞ்சன மூர்த்தி கள்ளமே ரூரமர்ந்த
உசனனும் பூசைசெய் ஒட்டக் கோயிலின் ஊர்த்துவத் தாண்டவனே

–திருச்சிற்றம்பலம்–

## 50. பெரிய திருக்கோணம்

**ஆதிமத்தியார்சுனர்** **கலிவிருத்தம்** **பிரகதுஜாம்பாள்**

1. ஒருசுடர் இருநிறம் உலகினைப் படைத்தருள்.
அருவொளி அயன்மால் அறியா பேருரு
மருகொடு மரைமலர் வயிரமும் சூடிய
குருவருள் ஒளிதிருக் கோணத்தில் காண்பீரே

2. வெள்ளியி லூறிய விடைவா கனத்தோன்
புள்ளிநல் மான்கரன் புதுப்பிறை சூடியே
கள்ளியங் காட்டிடை காளியோ டாடொளி
கொள்ளியம் சூழ்கவின் கோணத்தில் காண்பீரே

3. நாவலந் தீவினில் நான்மறை ஓதொலி
பூவல மாலையன் பொன்திரு மேனியன்
காவலங் கடவுள் கலியுகத் தூழிசெய்
கூவிரந் தாரனை கோணத்தில் காண்பீரே

4. தோளணி நாகமும் தோடது செவியிற்
ஏளன இராவணன் ஏழிசைக் கருளிய
நாளலங் காரன் நாட்டியச் சுடரனை
கோளவை தொழுதெழக் கோணத்தில் காண்பீரே

5. உறங்காத் திருவிழி ஒளியலை மறுவிழி
பிறங்கோர் தொழுமிறை பிங்கலப் பெரியோன்
அறங்காத் தருள்செய் அம்பலத் தேரொளி
சிறங்கணி யனைத்திருக் கோணத்தில் காண்பீரே

6. கொக்கிர கணிமுடி குறுஞ்சிரிப் பெரிமலை
தக்கவர்க் கருள்தரும் தமருகத் துடிகரன்
சக்கர மாலுக்கும் தயவளி பேரிறை
குக்கலுக் கருள்திரு கோணத்தில் காண்பீரே

7. முத்துப் பனிமலை முதல்வன் செங்கழல்
சித்துக ளேசெயும் செம்பவ ளச்சுடர்

வித்துக்குள் மரம்மறை வேதியன் ஆதியன்
குத்துவி ளக்கொளிரக் கோணத்தில் காண்பீரே

8. பச்சைத் திருமால் பதம்பணிந் துருகுற
நச்சிய சக்கரம் நல்கிய மாமலை
இச்சைய ழிந்தோர்க் கெட்டுச் சித்தியருள்
கொச்சிவ டிவினைக் கோணத்தில் காண்பீரே

9. மஞ்சம லர்க்கொன்றை வரிவெள் ளெருக்கணி
குஞ்சரத் தோலுடை குவலயப் பேரொளி
விஞ்சையர் சூழ்கணம் விண்ணவர் பூசைசெய்
கொஞ்சும ணிக்கழல் கோணத்தில் காண்பீரே

10. நட்புத் திருவுரு நாவலா ரூரனைத்
தொட்டுத் தழுவிய சுடர்மலை மாணிக்கம்
எட்டுத் திக் கொளிர இறையோர் பூசைசெய்
கொட்டெழில் கூத்தனைக் கோணத்தில் காண்பீரே

–திருச்சிற்றம்பலம்–

## 51. சுதாமல்லி

**ஆதிமத்திய அர்ச்சுனேசுவரர் தரவுகொச்சக கலிப்பா அகிலாண்டேசுவரி**

1. அந்தரத் திருநடனன் ஆலகால முண்டதழல்
வந்தனை திருத்தொண்டர் மலரடியை பணிவார்க்கும்
இந்திர போகமருள் ஏகம்பப் பெருந்தலைவன்
சுந்தரர் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

2. கண்டங்கி ருத்தமணி கனகமலை செந்தழலன்
வண்டார் மதுமலர்சூழ் வானகத்தின் மாமதுரன்
தண்டனை கைதிகட்கும் தனிமலதை தீர்த்தருளும்
தொண்டர்சூழ் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

3. புள்ளுக்கும் மறையுரைத்த புத்தேளிர் உலகளித்த
அள்ளியருள் சுடலையின் ஆதார நடனமணி
எள்முறை இறைப்பணியும் ஏற்றருளும் ஈசானன்
சுள்ளைநல் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

4. நெற்றிக்கண் சுடர்மறைத்தே நீணிந்த நெடுஞ்சடையன்
உற்றதோர்மலமறுக்க உதவியிரு மலமளித்தோன்
சிற்றின்பத் திசைமாற்றி பேரின்பம் பெய்துவக்கும்
சுற்றநல் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

5. சங்குவெண் விடையமர்ந்த சங்கரரத் திருமூர்த்தி
பொங்குகடல் ஊழிமூன்றும் புரிந்துயரை விடுவித்தோன்
அங்கமு றதுதிப்போன் கானந்தம் தந்தருளும்
துங்கமணி சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

6. நச்சர வஞ்சூடும் நடனசிக மாமணியன்
எச்சனை தக்கனையும் இருளுடலம் அழித்தபிரான்
அச்சனென் றடிபணியும் அனைவருக்கும் வாழ்வளிக்கும்
துச்சநல் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

7. நட்டந டுமுனையில் நழுவாத நீதிபதி
கெட்டதும் நல்லதுமாய் கிளரியக்கம் செய்யுமிறை
பட்டம்ப தவிசுழியல் எனப்பணிவார்க் கினிதளிக்கும்
தொட்டம்நல் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

8. தாவர நீருணவும் தந்தமகான் உயிருழலன்
கூவலும் அருவிநதி கொடுத்துவந்த பேரிறைவன்
கேவலம் தெளிவாக்கி சகலநிலை தந்தருளும்
தூவழிச் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

9. தூலமும் சூக்குமமும் தொடர்பைந்தெ முத்தோதும்
ஞாலநல் மானிடர்க்கு நல்லவரம் நல்கிமகிழ்
காலங்க ணிப்பருளன் கங்காத ரமூர்த்தி
சூலநல் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

10. கஞ்சுகம் நிறைமேனி கற்பங்கள் கடந்தசுடர்
அஞ்செழுத் தோதிமகிழ் அடியவரின் இடையமர்ந்தோன்
பஞ்சைப்ப ராரிஎன்னை பக்குவஞ்செய் தன்பளித்த
துஞ்சலில் சுதாமல்லி தோன்றாத்து ணையரனே

–திருச்சிற்றம்பலம்–

## 52. காமரசவல்லி

**கார்கோட்டீசுவரர் அறுசீர்ஆசிரியவிருத்தம் பாலாம்பிகை**

1. ஞானப் பெருங்கடல் நான்மறையோன் நாடகப் பேரிசைத் தேனமுதன்
கூனப் பிறையணி கொடுமுடியன் கொங்கலர் மாலைகு விந்தமலை
ஏனக் குருளைகள் ஏற்றமுற இப்புவி மந்திரி யாக்கியகோ
கானச் சுடலையில் ஆடுமொளி காமர சவல்லிக் கற்பகனே

2. பார்த்தன் தவங்கனிந் தேற்றருளி பாசுப தம்தந்த பரம்பொருளே
ஊர்த்துவத் தாண்டவ முயிரொடுக்கும் உடனுயிர் கோடியும் பிறப்பளிக்கும்

போர்த்திய புலியதள் சுழன்றாட புரமெரி தாண்டவத் திருமூர்த்தி
கார்கோடன் பணிந்தருள்குவித்த காமர சவல்லிக் கற்பகனே

3. ஆணுரு பெண்ணுரு அலியென்றே அவனியப் பொய்மொழி ஏற்றசுடர்
தூணுறை சிங்கமால் துதித்தேகும் தூய நெருப்பனல் சுயம்புருவம்
ஊனுயிர் அன்புடல் ஆன்மாவில் உணர்வென ஓடியே வாழ்வளிக்கும்
காணுங்கண் ணுக்கருள் கோடிதரும் காமர சவல்லிக் கற்பகனே

4. வானிடி மின்னலில் ஒளியாகி வளியண்டப் பெருந்தொலை நிழலுருவன்
ஆனினிப் பாலமு தருஞ்சுவையாய் அருவிசெல் நதிகுள நீரானோன்
தேனினி மைச்சுவைத் திருவருளன் செருகடல் ஏழினைச் செய்தபிரான்
கானிடைமூலிகை கனிமங்கள் காமர சவல்லிக் கற்பகனே

5. நாமமோர் கோடிய நான்மறையன் நமச்சி வாயத்துறை நாதமழை
பூமணிக் கொன்றைவில் வஞ்சூடி பொன்மலை யாகிய பொறியவித்தோன்
தாமரை நான்முகன் சிரமறுத்த தற்பரஞ் சோதி தனிமமணி
காமரதி தொழப் பேறளித்தோன் காமர சவல்லிக் கற்பகனே

6. ஓங்கா ரச்சுயம் புயிர்நாதம் உருத்திர மாலையன் உலகேழும்
தாங்காப் பெருஞ்சுமைத் தழல்வடிவம் தாங்கு முலகுயிர் தந்தைமடி
ஆங்கா ரத்திருள் அழிக்குமொளி அற்புதத் தாண்டவத் திருமூர்த்தி
காங்கைநல் குண்டலி கதிரேற்றம் காமர சவல்லிக் கற்பகனே

7. தண்டமிழ் கவியிசை தவமளித்த தற்பரஞ் சோதி தாளமழை
வண்டுறை மலர்த்தேன் அபிடேகன் வானவர் வழிபடும் முதலிறைவன்
தொண்டரின் குறைதீர் சொக்கலிங்கம் சுகபோ கந்தரும் தூயவள்ளல்
கண்டமுங் கருத்த கதிரொளியன் காமர சவல்லிக் கற்பகனே

8. நெடுமுடி மாமலை நேசமலர் நிரந்தர மாகிய பேரருளன்
வடிவெழில் மரகத மாணிக்கமே மண்ணகப் பத்தரின் தாயன்பன்
பொடிபூ சியபொன் மேனியெழில் பூதக ணந்தொழும் பொங்கருவி
கடிமதில் திரிபுரம் எரிசுடரன் காமர சவல்லிக் கற்பகனே

9. நரம்பொடு ஊனுறை நல்லுணர்வே நானிலப் புவியுயிர் உறையமரன்
பரம்பரை உருத்திர மாலையணி பத்தரின் சந்ததிக் கோர் தலைவன்
நிரந்தர மில்லாப் பேரண்ட நித்திய பேரலைச் சுயம்பொளியன்
கரந்தைத் தளிரணி அலங்காரன் காமர சவல்லிக் கற்பகனே

10. மங்கள நாதநல் வடிவெழிலன் மஞ்சளங் கொன்றை மலரணியன்
இங்கித வீணையன் நாதசுரம் மேவிய உயிரொலி மாதேவன்
திங்களம் பிறைத்திரு வாதிரையன் தேவா ரத்தமிழ் தீம்பாடல்
கங்கணச் சூரியக் கதிரேந்தும் காமர சவல்லிக் கற்பகனே

–திருச்சிற்றம்பலம்–

## 53. திருமானூர்

**கைலாசநாதர்** **அறுசீர்ஆசிரியவிருத்தம்**

1. பொறிமதி நிறைமலை புனையுயிர் பலப்பல புண்ணியப் புகழேந்தி
செறிவலித் திரிபுரம் எரிபுரி இளநகை ஏரெழில் கயிலாயன்
நெறியுறு புதுமலர் நியமஞ்செய் துருகியே நின்கழல் தொழல்சுகமே
சிறுபொறி அரவணி திருமா னூருறை சிவமணிப் பூங்கொழுந்தே

2. பதிபல கோடிகள் பத்தரும் ஞானியும் பரமநின் திருவடியில்
அதிபதி விதிவினை அவையவை நினதரும் ஆதர வன்புருவே
சிதடறு நியமமும் தேனலர் தூவியும் தினம்பணிந்தழச் சுகமே
திதிஒளி நிதிதரும் திருமா னூருறை சிவமணிப் பூங்கொழுந்தே

3. முனிவனத் துறையுநர் முதிர்மதி யோகியர் மும்மல மறுஞானி
பனிமன நியமமும் பகல்மலர் தூவியும் பணிவுறல் மகிழ்சோதி
இனியொரு பிறப்பற இவண்செய் பவமழிந் தீசநின் கழல்சேரும்
செனிநாள் அருள்தரும் திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

4. புவிச்சுழல் நெறிவகு புண்ணிய மூர்த்தி புரியா மனக்குகையை
தவிப்புறத் தந்தனை தவமதி யுணர்த்தியும் சற்குண முணரேனே
அவிவயி லமுதுற அதைமறந் துனகழல் அடிபணிந் தழச்சுகமே
சிவிகை யருள்கொடை திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

5. செருவிடைக் குருதி தீய்வுற அரிமால் திருவடி பணிந்தெழவே
திருமா லாக்கிய சிம்மச்செவ் வடிவே திரிபுரம் எரிமலையே
ஒருநாள் ஒருநொடி ஒருமுறை சிவசிவ எனச்சொலச் சிவலோகம்
தருமா வள்ளல் திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

6. கீறிய சிரத்தால் மாறிய நான்முகன் கீழ்படிந் தெழமகிழ்ந்தே
தேறிய படைப்பளித் திசைப்புகழ் வளர்த்த செஞ்சுடர் மாணிக்கம்
ஊறிய நாவினில் உளறும் பேயெனை ஒருமுறை பார்த்தருளும்
சீறிய அரவணி திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

7. வாலெரு தேறியேழ் வையகம் வலம்வரும் மாணிக்க மாமலையே
தோலிடை போர்த்திய சுந்தரத் தழலே சுயம்பொளி விண்வெளியே

நூலிடை ஊசியின் நுவலா வினையறுத் தொருநொடி பார்த்தருளும்
சீலம ணிச்சுடர் திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

8. காரிருள் வானிடை கடுந்தொலைப் பால்வெளி கட்டிய பெம்மானே
வேரிருள் அந்தகன் வீழ்ந்தழக் கணமாய் வினையளி விண்ணொளியே
பாரிடை உழலும் பாமரன் நான்நின் பளிங்கடி தொழலின்பம்
சீரிசை உழவுசெய் திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

9. இறவாப் பிறப்பினை மாணிக் கருளிய ஏழ்சுர நாயகனே
மறவா தேவன் தொண்டருக் கருள்புவி மாமறைப் பேரிசையே
உறவார் பகையார் உனையே நினைந்தழ உளமுழுப் பேரின்பம்
திறலார் பெருஞ்சுடர் திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

10. காயாய் கனியாய் கனிச்சுவை விதையாய் கதித்தெழு பெருங்கடவுள்
ஓயாக் கடலலை உதிரா விண்மீன் உலகெழில் மாமலையே
தாயாய் தந்தைத மக்கையாய் வந்தநின் தயவினைத் தொழுதழுவேன்
தேயாப் பிறையணி திருமா னூருறைச் சிவமணிப் பூங்கொழுந்தே

-திருச்சிற்றம்பலம்-

## 54. அழகிய மணவாளன்-நறையனூர்

**காசிவிசுவநாதர் அறுசீர்ஆசிரியவிருத்தம் விசாலாட்சியம்மை**

1. புலர்கதிர் தினமொளிப் பூசைசெயும் பொன்னொளித் திங்கள் குடையேந்தும்
உலவுறு விண்மீன் அலங்காரம் ஓரொளி இருநிறத் துருவருவன்
நலமிகு வரமருள் ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
மலர்மலி அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

2. பறப்புறு தாருகை வனமழித்தே பாருறை உயிர்மகிழ் பரிவளித்த
அறக்கொடை நாயகன் அனலேந்தி அம்பலக் கூத்தன் அருமறையன்
நறவுறை வரமருள் ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
மறமனத் தழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

3. புதுமொழி நாவலன் பூவேந்தன் புண்ணிய நீர்வளி ஆகாயம்
சதுர்மறை விதிபுனை சற்குருவன் சந்ததி வழிபடத் தயவெழிலன்
நதியென வரமருள் ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
வதுவையர் அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

4. பன்னிரு சோதி லிங்கமென பாருறைப் பூரண நிலமமர்ந்த
பொன்னுறை மலைகளும் பூந்தேனும் புதுப்புது அறிவியல் பொழிமுகிலன்
நன்னல வரமருள் ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
வன்னிநல் அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

5. கரியதள் போர்த்திய கானமுகில் கங்கணச் சூரியக் கணையாழி
அரிமால் அயன்தொழும் அமுதீசன் ஆனந்தத் தாண்டவத் தருளாசான்
நரிபரி ஆக்கிய ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
வரிமலர் அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

6. ஓடிய நதிநீர் சுவையாகி உலகினைக் காத்தருள் வைத்தியனே
ஆடிய பாதம் தாரனையில் ஆன்மா அடைக்கலக் களஞ்சியமே
தேடிய தொண்டரின் உளம்புகுந்தே தேவையெல் லாம்தரும் நான்மறையன்
மாடியம் அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

7. விதைமுளை நுனிஉறை அணுத்திரளோன் விண்கழல் கோடித் தீக்கோளம்
புதைமணல் நதிக்குழி பூகம்பம் பொறியனல் எரிமலை அவனியக்கம்
நதித்துறை முத்துகள் நவமணிகள் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
மதிப்பிறை அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

8. பாதளக் கீழ்வெளிப் பாரண்டம் பனிமலர்த் தேனபி டேகமலை
ஆதர வாகியே ஏழுலகில் அருந்தவம் வளர்க்கும் அழகீசன்
நாதவ டிவுயர் நாகரிகன் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
வாதநல் அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

9. சலஞ்சலம் வலம்புரி பாஞ்சசன்யம் சங்கினில் புகுந்தெழும் நாதமழை
கலங்குளத் துணர்விடை ஊடுருவி கற்பகப் பெருமகிழ் தருந்தலைவன்
நலநவ பூமியின் ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
வலமணி அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

10. தெங்கிள நீருறைச் சுவைமுதே சிவனடி யார்மனைத் திருச்சுடரன்
இங்குள மானிடம் துறக்கமுற இணையடி காட்டி அருள் நிறைக்கும்
நங்களின் நாயகன் ஞானவள்ளல் நாட்டிய நெருப்பொளி நான்மறையன்
மங்கல அழகிய மணவாளம் மழுவணி இறைவன் மகிழூரே

–திருச்சிற்றம்பலம்–

## 55. தாமரைப்பூண்டி

**தர்மலிங்கேசுவரர்** **கலிவிருத்தம்** **தர்மாம்பிகை**

1. சலந்தரன் நடுங்குறச் சமர்புரி தழல்மலை
கலங்கரை விளக்கக் காழியர் கவிமகிழ்
நலமளி நம்பன் நாட்டிய நாயகன்
பொலமலர்த் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

2. சாபவெண் சந்திரன் சலந்தீர்த் தருளிய
தாபதர் விரதியர் தவமகிழ் சங்கரன்
கோபவி மோச்சனக் குவலய நாயகன்
பூபடர் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

3. ஞாயிறுக் களங்கமும் நனிதென மாற்றிய
மாயிறு ஞாலநல் வயிரமா மலையொலி
தாயிளம் மடியென தாள்பணி வார்க்கருள்
பூயிளந் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

4. நாணயப் புகழ்துணை நாயனர்க்கருளிய
கோணயக் கூத்தன் கொங்கரின் குலமணி
பாணபத் திரர்க்கும் பலகைப்பொன் அளியொளி
பூணயத் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

5. கந்தகப் பெருமலை கனகநல் அரன்மடி
செந்தழல் ஓவியன் செம்பவ ளக்குவை
குந்தக மழிக்கும் குவலய நாயகன்
புந்தியார் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

6. காற்றலை கனலலை கற்பூரத் தீபம்
கீற்றிடை தூக்கணங் கூடுறைப் புனைகவின்
நாற்றநல் மல்லிகை நான்முகன் பணிந்தெழும்
போற்றிசைத் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

7. நாத்திகம் பேசுவர் நடுமனத் துணர்வினன்
ஆத்திக வேடபொல் லாதவர் பகைஞன்
சாத்திர மாயைகள் தவமுற மாற்றும்
பூத்திரள் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

8. துயிலிலும் மறவாத் தூயரின் மனத்தே
உயிரோ வியமாய் ஒளிரும் சுடரோன்
கயிலையின் நாயகன் கச்சியே கம்பன்
புனுக்கவின் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

9. கோலவட்ட டம்சனிக் கோளுக் கருளிய
ஆலங் கட்டிமழை ஆனந்தக் கூத்தன்
ஏலம்பூ நறுமணத் திதழ்எழில் நாயகன்
பூலதைத் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

10. மனக்குறை தீர்க்கும் மாசிலா மாமணி
தனக்குவை யருள்மழை தத்துவப் போதகன்
எனக்கென் சந்ததி இனிப்பிறப் போர்க்கிறை
புனலுறைத் தாமரைப் பூண்டியின் புண்ணியனே

–திருச்சிற்றம்பலம்–

## 56. உடையார் பாளையம் - வட்டம்

**பயரணீசுவரர்** **கலிவிருத்தம்** **குகசுந்தரியம்மன்**

1. தூவிய வில்வமும் தும்பையும் ஏற்றருள் தூயசுடர்
காவிரி யமுனை கங்கைகோ தாவரி கருணை முகில்
பூவியல் அறிவொடு பொறிமதி தருமிறை புவிமுதல்வன்
ஓவிய நாயகன் உடையார் பாளையத் துத்தமனே

2. மரகத வன்னியும் மத்தமா மலர்புனை அருச்சனையால்
நரகந் தடுத்தருள் நாநில வாழ்க்கையும் தருமொளியன்
கிரகம தொன்பதும் கீழ்வினைத் தீயரின் கேடறுக்கும்
உரகம ணிக்கழல் உடையார் பாளையத் துத்தமனே

3. பண்டொரு தாருகை பாய்வன மேறியே பகையழித்த
அண்ட ரோ டருந்தவர் அவனிய மேழினைக் காத்தபிரான்
கண்டமா றாக்கிய கடல்நிலம் பிரித்துரு மாற்றிய கோன்
உண்டமு தளித்த உடையார் பாளையத் துத்தமனே

4. தன்னிலை மாறாத் தற்பரஞ் சோதி சற்குருவன்
பொன்மனத் திண்ணரின் பூவிழி ஏற்றுமுந் தருள்புரிந்தோன்
தென்னவன் திகம்பரன் தில்லையங் கூத்தன் திரிசூலன்
உன்னதத் தொளிமலை உடையார் பாளையத் துத்தமனே

5. சக்கர மாற்றுருச் சந்தக் கவிமலை சம்பந்தர்
தக்கத மிழ்பண் சாற்றலில் மகிழ்ந்துநல் நடையடைத்த
செக்கர்வின் மேனியன் செந்தழல் மாமலை சிவலோகன்
உக்கிரத் தாண்டவன் உடையார் பாளையத் துத்தமனே

6. வெப்புவி னையற வெண்ணீ றணிந்தே விமலோனை
செப்பிசைத் தமிழொடு திருவடி தொழுதெழப் பிணிதீர்ப்போன்
இப்புவிக் கவினொடு ஏழ்புவி காத்தருள் திருமேனி
ஒப்பனை நாயகன் உடையார் பாளையத் துத்தமனே

7. திருப்புளி யாகியே சீரளி சிந்தையைத் திடமாக்கி
விருப்புற முழுதுடல் வெண்ணீ றனியச்செய் தன்பருளும்
கருப்பூற நறுமணம் கன்னல் கனிமதுரக் கங்காளன்
உருப்பொளித் தீந்தனல் உடையார் பாளையத் துத்தமனே

8. முந்தையன் தந்தை முப்பாட்டன் தந்தைமுழு முதல்வன்
சிந்தையன் செஞ்சொல் செந்தமிழ் செம்மொழி திரிசூலன்
விந்தையன் வெந்தனல் வேதியன் ஆதியன் விதிபுனைவோர்
உந்தையன் எந்தையன் உடையார் பாளையத் துத்தமனே

9. தண்புனல் மாமலை சந்தும லைக்குகைத் தரைநீரன்
எண்குணன் செந்நிறன் ஈச்சம் பழச்சுவை ஏகாந்தன்
பெண்குல மானிடம் பிறப்புசெய் தேதனை இறைஞ்சவைத்தோன்
உண்சுவை ஆற்றினன் உடையார் பாளையத் துத்தமனே

10. சந்ததி சாமீபம் சாருபம் சாயுச்சியம் தருமுனிவன்
கந்தகம் செந்தங்கம் கனிம நல் வயிரமும் தருங்கடவுள்
இந்திரர் வானவர் இறையருள் கணங்களும் தொழுமிறைவன்
உந்தயொ ளித்திரள் உடையார் பாளையத் துத்தமனே
-திருச்சிற்றம்பலம்-

## 57. செயங்கொண்ட சோழபுரம்

**விருத்தகிரீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **பெரியநாயகி**

1. மாமதி மானிடம் கோடிசெய்தே வையகத்தே உயிர் வளருழவன்
நாமகள் தவத்தை ஏற்றருளி நான்முகன் சிரமறுத் துதவியகோன்
பேமன நாயெனைப் பொருளாக்கி இறையடி யாரிடை இணைத்தபிரான்
தேமது ரத்தே வாரமகிழ் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

2. காழியக் கோமான் சம்பந்தர் காவியப் பெருங்கவி சேக்கிழரை
வாழியல் புவியரை மலரவைத்த வானகம் தாண்டிய பெருஞ்சோதி
ஏழமை நாயெனை ஏற்றருளி இறையடி யாரிடை இணைத்தபிரான்
சேழிய மரையயன் தினம்தொழும்சீர் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

3. எப்புவி தேடினும் கிடைப்பரிய ஏழைக்கண் ணப்பர்க் கருளினியன்
வெப்புறை நோய்த்துயர் விதிமாற்றும் விண்ணவ ராசான் வெஞ்சுடரன்
இப்புற நாயெனை ஏற்றருளி இறையடி யாரிடை இணைத்தபிரான்
செப்பலர் சூடிய திரிவேணி செயங்கொண்ட சோழபு ரத்தரனே

4. உச்சி ஒளிமீன் ஆதிரையன் ஓமுறை நாயகன் ஊழியலை
கச்சியே கம்பன் கயிலைமலை கனகத் திரள்மணிக் கங்காளன்
இச்சக நாயெனை ஏற்றருளி இறையடி யாரிடை இணைத்தபிரான்
செச்சைய பிடேகச் செஞ்சடையன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

5. மந்திர வீணைநல் மாமணியே மாமறை போற்றிய வானொலியே
எந்திரி யாகியே ஏழுலகை இயக்கும் எம்மான் ஈசுரனே
இந்திரி நாயெனை ஏற்றருளி இறையடி யாரிடை இணைத்தபிரான்
செந்தூ ரமலை சிவலோகன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

6. காதலம் பேரன்புக் கனகசபை கயிலைம லையுறை கனலீசன்
கேதா ரத்துறை கிண்கிணியன் கேதுச னிதொழும் கேவலந்தீ
ஈதலில் நாயெனை ஏற்றருளி இறையடி யாரிடை இணைத்தபிரான்
சீதலக் கொன்றையன் சிவலோகன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

7. பூரண ஞானப்பொன் மாமாலையன் பொதிகை மலைமணி செந்தூரன்
காரண காரியத் தாதாரம் கருணை பொழிமுகில் கயிலைமலை
ஈரண நாயெனை ஏற்றருளி இறையடி யாரிடை இணைத்தபிரான்
தேரணி மாலையன் செஞ்சுடரன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

8. மீட்டிய வீணையின் மிகுநாதம் வேதியன் ஆதியன் விண்முதல்வன்
நாட்டிய நாயகன் நாதமுனி நஞ்சுண் டமுதளி ஞானவள்ளல்
ஏட்டியல் அறியா நாயெனையும் இறையடி யாரொடு இணைத்தபிரான்
தீட்டிசை மாணிக்க செஞ்சுடரன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

9. கால்நடை மேய்ப்போன் காயுடலில் கயிலைச் சித்தரைக் கலக்கவைத்த
நூல்மதி வகுத்த நுவலறியா நூதனப் பேரறி வாகியகோன்
ஏல்நல மில்ல நாயெனையும் இறையடி யாரிடை இணைத்தபிரான்
சேல்விழி காரைத்தாய்க் கருளியகோன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

10. வளிவெளி நெருப்பொளி மண்ணுலகன் வளர்கூ விளந்தளிர் மாலையினன்
நெளிவுறு பாம்பலர் நிலவணியன் நெடுஞ்சுடர் நடுவுறை நுதல்விழியன்
எளிநா யேனையும் பொருளாக்கி இறையடி யாரிடை இணைத்தபிரான்
தெளிதே னபிடேகச் செஞ்சுடரன் செயங்கொண்ட சோழபு ரத்தரனே

–திருச்சிற்றம்பலம்–

## 58. திருக்களப்பூர்

**திருக்கோட்டிவனத்தீசர் வஞ்சிவருத்தம் காமாட்சியம்மன்**

1. எமக்கும் நுமக்குநல் லருளிறையை
சுமக்கும் வினைச்சுமை இறங்குவண்ணம்
நமச்சிவா யக்கழல் துதித்தெழவே
கமலக்க ளப்பூரில் காண்பீரே

2. முன்னவர் இன்னவர் பின்வருவோர்
இன்னிலின் பாரம ழித்தருளும்
தென்னவர் செங்கழல் துதிதத்தெழவே
கன்னல் களப்பூரில் காண்பீரே

3. ஞானக் கொடைவள்ளல் நாதமழை
ஏனக்கு ருளைக்க ருளினியோன்
தேனமு தக்கழல் துதித்தெழவே
கானக்க ளப்பூரில் காண்பீரே

4. மதம்பல பேசிய ஞானிகளும்
இதமுற ஈறுதியில் காணொளியை
துதநறும் பூங்கழல் துதித்தெழவே
கதம்பக் களப்புரில் காண்பீரே

5. தயவருள் பரிவினைத் தண்டனைசெய்
புயல்வளிச் சுழல்சடைப் பொன்மலையன்
சுயம்பொளிக் கழலைத் துதித்தெழவே
கயலணிக் களப்பூரில் காண்பீரே

6. நாதப் பரம்பொருளின் திருநாமம்
ஓதக் கருணைசெய் ஒளிமலையை
ஆதரித் தருளெனத் துதித்தெழவே
காதவக் களப்பூரில் காண்பீரே

7. தவம்நிதிக் கல்வியும் தந்துவந்தே
அவரவர் விரும்புரு வதில்தோன்றும்
புவனியத் தழலனைத் துதித்தெழவே
கவடிநல் களப்பூரில் காண்பீரே

8. விருப்புவெ றுப்பிலா விதிநீதி
செருக்கறுத் தன்புசெய் செஞ்சுடரை
சுருக்கிலை தூவித் துதித்தெழவே
கருக்குறைக் ளைப்பூரில் காண்பீரே

9. தாயிலும் பேரன்பு தந்துவக்கும்
நேயநல் நிழல்மலை நெடுஞ்சுடரை
தூயம லர்தூவித் துதித்தெழவே
காயநல் களப்பூரில் காண்பீரே

10. தாரகைப் பூவணிச் சதிர்சடையன்
ஓரொளி இருநிறத் தோங்காரன்
தூரநின் றேநிதம் தொழுதெழவே
காரெழில் களப்பூரில்ட காண்பீரே

–திருச்சிற்றம்பலம்–

## 59. எரவங்குடி

**ஏகாம்பரீசுவரர்** **கலிவிருத்தம்**

1. பாரோர்புகழ் தேவாதியன் பாம்பும்அணி மேனி
நீரேநிலம் தீயேவளி ஆகாயமும் ஆனோன்
ஊரோர் புவி உயிரோன் தினம் உருளுந்துதி ஏற்றே
சீரார்புகழ் எரவங்குடி திருவேதரும் கதியே

2. தோலோருடை முடியோர்பிறை துடியோர் கரத்தீசன்
மாலோடயன் முனிவோர்களும் வானோர்செயும் பூசை
நாலாதிசை அடியார்களும் நயந்தேபணிந் தெழவே
சேலார்வயல் எரவங்குடி திருவேதரும் கதியே

3. மதுவார்மலர் விடநாகமும் வன்னித்தளிர் சூடும்
பொதுமானிடர் புரியாதுரை பொய்ஏனம் பொறுப்பார்
எதுபூமியில் நிலையென்றறி இறைமாமதி அளித்தே
செதும்பார்வயல் எரவங்குடி திருவேதரும் கதியே

4. அருவேதணல் உருவோஒளி யாரும் தெளிந்துரையார்
குருவாய்வரும் அறிவேதமும் கூறும்புவி அறியார்
ஒருநாள்வரும் மறுநாளழி காளான்நிலை உயிரின்
செருநெஞ்சறி எரவங்குடி திருவேதரும் கதியே

5. எண்ணோடுறை எழுத்தோடிசை இணைந்தே ஒளிர்கனலன்
பண்ணார்திரு முறைசொல்லிய பரமன்சிவ பெருமான்
அண்ணாமலை அண்ணாஎன அறிவஞ்செழுத் தோதும்
செண்டர்கவின் எரவங்குடி திருவேதரும் கதியே

6. ஓடோர்கரம் உயிரார்மறை உணர்த்தும் மதிகோடி
ஏடோரெலாம் இயம்பும்மொழி இதுவோர் மதிக்குறியே
நாடாதவர் நனிதாள்பணி ஞாலத்துயிர்க் கருளும்
சேடேயருள் எரவங்குடி திருவேதரும் கதியே

7. வெம்மைமதிகழ் மன்னோர்துதி விண்ணோரிறை விமலன்
நம்மையுணர் சித்தோர்துதி சதுரார்மதிச் சோதி
அம்மைஉணர்ந் திம்மையறி உம்மைப் பிறப் பறவே
செம்மாமதி எரவங்குடி திருவேதரும் கதியே

8. அன்பாலிறை அறிவால்குரு அருளால்கொடை வள்ளல்
நன்பேசெயும் நாலேழ்புவி நாதப்பெருந் தகையோன்
இன்பேஎன இருளாருயிர் இறைமாகழல் துதிக்க
தென்னீர்வயல் எரவங்குடி திருவேதரும் கதியே

9. சதிரார்பதம் சமச்சீர்குணம் தவச்சீர்பிறப் பருளும்
பதமுத்தியும் பரமுத்தியும் பதிமா பசுக் கருளும்
மதமேஅழிந் திதமே உணர்மதியோர்துதி ஏற்றே
சிதமார்வயல் எரவங்குடி திருவேதரும் கதியே

10. செந்தாமரை வெண்டாமரை திருவோர்துதி மகிழ்ந்தோன்
இந்தார்மதி எழிலார்முடி இசையார்கழல் நடனன்
மந்தன்மனம் எந்தன்குணம் மாற்றேஅளித் தருளி
செந்தாயென எரவங்குடி திருவேதரும் கதியே

–திருச்சிற்றம்பலம்–

## 60. கூவகம் - தண்டலை

தோனீசுவரர் அறுசீர்ஆசிரிய விருத்தம் திருவேணீசுவரர்

1. வடுவகிர் எருக்கணி மலரிதழ் நறுமண வார்சடைப் பேரொளியன்
கடுமலக் குகைஉறை காரிருள் கேவலக் கனிஉயிர்க் கன்பருளும்
நெடுமதி மடுகவி காரைக்கால் புனித வதித்தாய் கருளிறைவன்
கொடுவரிப் புலியுடை கூவகம் தண்டலை கொன்றையம் கோயிலனே

2. பிறைச்சிகை திரிசடை பிங்கலப் பெருமலை பெத்தம ழித்தருளும்
கறைமிட றருஞ்சுடர் காஞ்சனத் திருக்கழல் கருணையின் திருவுருவம்
மறைக்கவி அப்பரை மனமுறத் துதித்தஅம் பூதிக்கும் வானளித்த
குறையிலா மகவளி கூவகம் தண்டலை கொன்றையும் கோயிலனே

3. ஆதிய நாதியன் அம்பலத் தாண்டவன் ஆறங்க மருளிறைவன்
சோதியத் திருநாள் சுயம்பொளி மூர்த்தி தோன்றாத் துணை உயிர்க்கே
ஊதிச் சிலந்தியை ஒட்டடிய மனையை ஒதுக்குநக் கர்கருளன்
கோதற் றியருள் கூவகம் தண்டலை கொன்றையும் கோயிலனே

4. வருவார் போவார் வானவர் துதிப்பார் மகளிரும் பூசைசெய்யும்
அருவாய் உருவாய் அருவுரு வாயொளிர் அற்புதப் பேரனலன்
திருவா ரூரினர் சிவகண மென்பதை நமி நந்திக் குணர்த்தியகோன்
குருவாய் நின்றருள் கூவகம் தண்டலை கொன்றையம் கோயிலனே

5. தானத்தி ருவடி சங்காரப் பூங்கரம் தாழ்சடைப் பேரருளன்
ஊனந டனத்தில் உலகுயிர் இயக்கும் ஓரிறைச் செஞ்சுடரன்
ஞானக்க வினுரு ஞானசம் பந்தர்க்கும் நற்சிவி கையளித்தோன்
கூனப்பி றையணி கூவகம் தண்டலை கொன்றையம் கோவிலனே

6. பொங்கமு தக்கடல் பொதிவிடம் அயின்ற புண்ணியம் புரிமூர்த்தி
மங்கையர் கரசித்தாய் மகிழ்மது ரைசெய்த மாணிக்கத் தேரழகன்
எங்குரு சுந்தரர் இரும்பழி தீர்வுற ஏயர்கோற் கன்பளித்த
குங்குமத் திலகன் கூவகம் தண்டலை கொன்றையம் கோயிலனே

7. மஞ்சுநி றவிடை வாகனப் பெருந்தகை வானவர் பூசைசெய்யும்
அஞ்செழுத் துரைப்போர் அவலங்கள் தீர்க்கும் ஆனந்தம் பைரவியன்
விஞ்சைமா மந்திரம் மிகுதவ மூவர்க்கும் மிளிர்தொடர் மரபளித்த
குஞ்சித பாதத்தன கூவகம் தண்டலை கொன்றயைம் கோயிலனே

8. ஆர்த்தக நியுரித் தார்ப்பரிப் படக்கிய அம்புசத் திருக்கரத்தன்
பார்த்த விழிமகிழ் பனிமலர்ப் புன்னகை பரஞ்சுடர் பதிமுதல்வன்
தூர்த்த குளச்சுத்தி தொண்டுசெய் தண்டிக்கும் தூவிழி தந்தபிரான்
கூர்த்ததி ருவிழி கூவகம் தண்டலை கொன்றையம் கோயிலனே

9. வண்டமர் பன்மலர் மணியக்கம் சூடிய மாலைவிண் பொன்னொளியன்
கண்டவர் தன்கழல் நிழலமர் வரமருள் கற்பகத் திருமூர்த்தி
தொண்டர்தம் பசியற சூதாடு மூர்க்கர்க்கும் தூயநல் வானளித்த
குண்டலந் தோடணி கூவகம் தண்டலை கொன்றயைம் கோயிலனே

10. இத்திநி ழலமர் ஏகம்ப மூர்த்தி ஈசுரப் பெருந்தழலன்
அத்திரி அகத்தியர் அருந்தவச் சித்தரும் அனுதினம் துதிசுடரன்
புத்தியில் லாஎன்னை பத்தியில் ஆழ்த்தியே முத்திக்கும் வழிவகுத்த
கொத்தலர் சூடிய கூவகம் தண்டலை கொன்றையம் கோயிலனே

–திருச்சிற்றம்பலம்–

## 61. நாயகனைப் பிரியாள் - காரைக்குறிச்சி

**மார்க்கஈசுவரர் மரகதவல்லி கலிவிருத்தம் அவதாரநாயகர்**

1. சிறகுறை முடிக்கவின் செஞ்சுடர் மூர்த்தி
அறநெறி சோமாசி மாறற் கருளிய
குறையிலா காரைக் குறிச்சிஏ கம்பன்
நறவுநா யகனை பிரியாள் நம்பனே

2. பங்கயக் கரமமு பாற்கடல் பரம்பொருள்
தங்கைகல் எறிந்த சாக்கியர்க் கன்பளி
கொங்கலர் காரைக் குறிச்சிஏ கம்பன்
நங்கள்நா யகனை பிரியாள் நம்பனே

3. பஞ்சபூ தமலர் பாம்பனி மேனியன்
அஞ்செழுத் தோதிய சிறப்புரிக் கருளனி
குஞ்சரக் காரைக் குறிச்சிஏ கம்பன்
நஞ்சைநல் நாயகனைப் பிரியாள் நம்பனே

4. சிகையலங் காரநல் செந்திரு விசும்பன்
நகையதில் திரிபுரம் நனிபொடி செய்தோன்
குகைஎழில் காரைக் குறிச்சிஏ கம்பன்
நகர்நா யகனை பிரியாளின் நம்பனே

5. இடைமரு தமர்ந்த இன்னம்பர் மூர்த்தி
படிமகன் கறிசமை பரஞ்சோ திக்கருள்
கொடைநிதிக் காரைக் குறிச்சிஏ கம்பன்
நடைநால் யகனை பிரியாளின் நம்பனே

6. செவித்தோ டணிமலி செஞ்சுடர் திருவருள்
கவிமதி கழறிற் றறிவர்க்கு மருளிய

குவிமதிக் காரைக் குறிச்சிஏ கம்பன்
நவிநா யகனைப் பிரியாள் நம்பனே

7. கரமரை மழவணி கருவூர்ப் பசுபதி
கரமுணர் கணநாதர்க் கன்பருள் பரம்பொருள்
குரலிசை காரைக் குறிச்சிஏ கம்பன்
நரளிநா யகனைப் பிரியாள் நம்பனே

8. ஏடகம் ஏரகம் ஈங்கோய் அமர்ந்த
அடகன் கூற்றுவர்க் கருளளிப் பேரிறை
கூடெழில் காரைக் குறிச்சிஏ கம்பன்
நாடகன் நாயகனைப் பிரியாள் நம்பனே

9. அளப்பரும் அறிவனல் அரவணிச் சுடரோன்
வளமலி புகழ்சோ ழமன்னர்க் கருளிறை
குளமலி காரைக் குறிச்சிஏ கம்பன்
நளிநா யகனைப் பிரியாள் நம்பனே

10. தவவடி விறைவன் தற்பரஞ் சோதி
பவமலி என்னை பரிவளித் தேற்றோன்
குவிமலர் காரைக் குறிச்சிஏ கம்பன்
நவநிதி நாயகனை பிரியாள் நம்பனே

–திருச்சிற்றம்பலம்–

## 62. சமீன் சுதாமல்லி

**சுந்தரேசுவரர்** **வஞ்சிவிருத்தம்** **குந்தளாம்பிகை**

1. தாளம ளித்தசங் கீதமணி
கோளமொன் பதும்செய் குங்கிலியன்
நீளம ணிச்சடை நிலவணியன்
வாளசு தாமல்லி மாணிக்கமே

2. காடொரு நாடகக் கம்பீரன்
நாடக மொழியிலை நலஞ் செலவே
வீடக வாழ்வருள் ஆதியந்தம்
மாடச்சு தாமல்லி மாணிக்கமே

3. நாகம ணிக்கனக நாதலிங்கம்
ஏகப்பொன் மேனியன் ஈசானன்
வேகவிண் மீன்சுழல் வினை விதியன்
வாகச்சு தாமல்லி மாணிக்கமே

4. கோமளப் பாலபி டேகம்மகிழ்
ஈமவ னமுறைந் தாடெழிலன்

சேமப் புகழ்வாழ் வன்பு செய்யும்
வாமச்சு தாமல்லி மாணிக்கமே

5. ஞாலத்தி ருவிழி ஞாயிற்றொளி
நீலக்க டலெழும் பேரலைகள்
கோலக்கொன்றையணி கொடு முடியன்
மாலைச்சு தாமல்லி மாணிக்கமே

6. ஓசையின் னிசைசெய் உலகமொழி
பூசை மகிழ்வன மாமலரன்
மாசும றுவழி மருத்துவனே
வாசச்சு தாமல்லி மாணிக்கமே

7. அண்டம ணுத்திரள் ஆழிமலை
உண்டநஞ் சுறைமிட றொங்காரன்
கொண்டலெண் திசையழி ஊழிமலை
வண்டல்சு தாமல்லி மாணிக்கமே

8. கோகழி ஆதிரைப் பூந்தழலன்
தீகால் பேரண்டம் தாண்டியகோன்
மாகழித் தில்லைசெம் மணவாளன்
வாகச்சு தாமல்லி மாணிக்கமே

9. மூலத் துயிர்வெளி தாரனையாய்
கோலங்கொ டுத்துச்ச மாதிதரும்
ஞாலத் துயிர்செய் ஞானமலை
மாலைச்சு தாமல்லி மாணிக்கமே

10. நஞ்சுக் கொடியுணர் வாதாரம்
மஞ்சும லைக்குகை ஐம்பூதம்
தஞ்சம ளித்தருள் தாயன்பன்
வஞ்சிச்சு தாமல்லி மாணிக்கமே

–திருச்சிற்றம்பலம்–

## 63. அம்பாவூர்

**கோலீசுவரர்** **கலிருத்தம்**

1. நேற்றோ டின்றும் நாளையு மாகிய
கூற்றினை உதைத்த குஞ்குமத் திலகன்
ஊற்றுநல் அம்பா வூருறைப் பரனை
போற்றிய கிழ்வீர் புவனியின் சகலரே

2. அம்பல நடனன ஆலால சுந்தரன்
வெம்மைதண் மையுறை வெந்தழல் பெருமலை
உம்பர்து திஅம்பா வுருறைப் பரனை
கும்பிட்டு மகிழ்வீர் குவலயச் சகலரே

3. எண்ணரும் பேரருள் ஈயுமோர் புன்னகை
வண்ணத் திருமணி வடம்புரள் மேனியன்
உண்மையர் அம்பர் வூருறைப் பரனை
பண்ணிசைத் தேத்துவீர் பவமறும் சகலரே

4. சந்தச் சிலம்பணி சங்கரத் திருவுரு
சொந்தங்கொள் ஓரிறை துதிப்போர்க் கருளிறை
உந்தைநல் அம்பா வூருறைப் பரனை
வந்தனை செய்திம்மை வாழ்வீர் சகலரே

5. புயவலி சலந்தரன் புரையுடல் அழித்தே
தயவுற மறுபிறப் பகற்றிய தழலன்
உயர்நிலத் தம்பா வூருறைப் பரனை
நயந்து துதிப்பீர் நாநிலச் சகலரே

6. நிருத்தத் திருவடி நெடுஞ்சடை பெருமான்
எருக்கம் மத்தமணி ஏகம்பப் படர்சுடர்
உருவரை அம்பா வூருறைப் பரனை
அருமலர் பூசைசெய் தடிபணிவீர் சகலரே

7. கழலெழில் நவமணி களஞ்சியம் கரமருள்
குழல்யாழ் குடமுழா கொக்கரை இசைமகிழ்
உழவெழில் அம்பா வூருறைப் பரனை
பழமடி யாரொடும் பணிவீர் சகலரே

8. இதழிநல் கூவிளம் இளந்தளிர் புனைகனல்
பதிமதி பசுமதி பவமறுத் தருள்தரும்
உதிர்கதிர் அம்பா வூருறைப் பரனை
கதிஎனப் பணிவீர் கதமறும் சகலரே

9. தவளநல் நீறணி தருமநல் தனமூர்த்தி
புவனப் பெருஞ்சுடர் பூதக ணங்கள்சூழ்
உவகையர் அம்பா வூருறைப் பரனை
நவமலர் தூவி நயப்பீர் சகலரே

10. கதகரி உரிபுனை கலியுகம் கணிப்பனல்
இதழெழில் திருமுகம் இசைநட னமூர்த்தி
உதகெழில் அம்பா வூருறைப் பரனை
நிதம்பணிந் துருகி நிறைவீர் சகலரே

–திருச்சிற்றம்பலம்–

## 64. கோவிந்தப் புத்தூர்

**கங்காலிசுவரர்** **அறுசீர் ஆசிரியவிருத்தம்**

1. ஆலநி ழலமர் ஆனந்தன் அருமறை ஓதிய அமரீசன்
காலமி டஞ்செயும் கங்காளன் கனகத் திருவுரு காலகாலன்
ஞாலக்கல் பூசைசெய் சாக்கியர்க்கும் நல்வான் வாழ்வளி நாதாந்தன்
கோலங்கள் மாற்றும் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

2. சக்கரம் மாலுக்குத் தந்துவந்த சற்குணஞ் சம்புநல் சசிதரனே
தக்கணின் வேள்வியைத் தகர்ந்தபிரன் சந்திர சேகரன் சாம்பசிவன்
சொக்கப்பொன் மீனும் சுடரனுக்கே சொந்தஞ்செய் அதிபத்தர்க் கருளினியன்
கொக்கிற கெருக்கம் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

3. அயனுக்குப் பிரம்மப் பதவிதந்த அங்கணன் கூத்தன் ஆதிஅரன்
மயக்கத்தி லுறங்கும் மண்ணுயிரின் மலமற நல்மா யைதந்தோன்
நலமக னைச்சமை சிறுதொண்டர் நல்வான் குடும்பம் நயந்தளித்தே
குயிலிசை வனக்கவின் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

4. கலைமகள் புரையறக் கருணைசெய்த கற்பகன் ஐமுகன் கரச்சூலி
விலைபகர் நவமணி மானிடராய் விரைமது ரைநடந்த விண்ணீசன்
நிலமன நரசிங்க முனையருக்கும் நிறைவான் வாழ்வழி நிமலமலை
குலைமலர் தாரொடு கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

5. பண்ணிசை வீணையன் பூதபதி பசுபதி நந்திநல் பாண்டரங்கன்
எண்குணன் சோதி எண்தோளன் இறைவ னநாதி வாமதேவன்
தென்தன் குருதி விளக்கெரித்த செங்கலி யர்க்கருள் செய்தநம்பன்
குண்டைய மார்பரன் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

6. முன்னவன் பிறப்பிலி முக்கண்ணன் முத்தன் யோகி முழுமுதல்வன்
பொனவைன் வாமன் புண்ணியனே புலித்தோ லுடையன் வாமதேவன்
நன்சிவத் தொண்டரை இகழ்வோரின் நாவறு சத்தியர்க் கருளளித்த
குன்றமர் நிருத்தன் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

7. திரிபு ராந்தகன் அழலாடி தீராக் கருணை மாதேவன்
கரியுரி போர்த்திய கங்காளன் கதிதரும் பிஞ்சகன் வரன்தாணு

பரிவுறை காடவர் கோவைர்க்கும் பரமுத் தியளி பாசுபதன்
குரிசில் பகவன் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

8. பூதே சன்நித்தன் பூங்கழலன் போதம் எிருமலன் ஞானமூர்த்தி
காதோர் தோடணி காலகாலன் கருணா லயன்பரன் காபாலி
தீதிலாக் காரி நாயனார்க்கும் சீரருள் வழங்கிய திருநாதன்
கூதலஞ் சரமலர் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

9. பவனநல் அநாதி பாற்கடலன் பசுபா சமுயிர்க் குணர்த்துமண்ணல்
புவனியன் புலித்தோ லுடைமேனி புண்ணியன் நாதன் புதிர்சடையன்
தவா;மண மயிலை வாயிலர்க்கும் தாள்நிழல் அளித்த சங்காரன்
குவளையும் கோடலும் கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

10. அக்கர வார்த்தன் அதளுடையன் அங்கணன் ஆதி அனந்தன்
பக்குவத் துயிர்கள் படியேறி பதிபதம் பதவி பெறவருள்வோன்
செக்கடி திரிஎறும் பெளியேனை சிவசிவ மறைஉரை வரமளித்த
கொக்கிற காவிரை கொன்றையணி கோவிந்தப் புத்தூர் குளிர்தழலே

–திருச்சிற்றம்பலம்–

## 65. ஸ்ரீபுரந்தன்

**பிரதட்சனேச்சுவரர்** **கலிவிருத்தம்**

1. மொழிமதி நடந்த மூவிழி நாயகன்
கழிமுக வலம்புரி கனிமநல் காவிரி
செழிவயல் சீர்புனல் திருவளர் புரந்தரப்
பழிஅழி நம்பனின் பாதமென் சிரமீதே

2. பேரண்டத் தெரிமலை பெருமழை கார்முகில்
ஊரண்டம் உயிரண்டம் உணர்வண்டங் கடந்த
சீரண்டத் தெரிசுடர் தென்னவர் புரந்தரப்
பாரண்டப் பூரணன் பாதமென் சிரமீதே

3. அருவமும் உருவமும் அருவுரு வாகிய
செருமலம் ஆசைகள் தீதுதீண் டாத்தழல்
கருமுதல் காடுறை நாள்வரைக் கருணைசெய்
பருப்புரந் தரத்தரன் பாதமென் சிரமீதே

4. கயிலையம் கடவுள் காசினி உயிர்களின்
செயிரழிச் சீர்சுடர் திருவருள் பெரியோன்
துயிலுட லுயிரிணை தொடர்ந்தருள் புரந்தரப்
பயில்நடத் தெம்மான் பாதமென் சிரம்மீதே

5. புனல்தீ சுழல்வெளி பொழில்நிலம் கார்வெளி
அனைத்திலும் உறைந்தியக் காற்றலம் சடையோன்
கனல்வினை கனவுயிர் காக்கும் புரந்தரப்
பனைப்பிவிப் பரமனின் பாதமென் சிரம்மீதே

6. அரிஅயன் காண்கிலா ஆனந்தச் சுடருரு
கரிஅதள் போர்த்திய கலியுகங் கோடிருசன்
நரிபரி செய்தழல் ஞாலநல் புரந்தரப்
பரிவெழில் பரமனின் பாதமென் சிரம்மீதே

7. பலிஅதன் போர்த்திய புவனத் திருவருள்
நலிவுசெய் நான்முகன் நகைத்தலை சிதைத்தோன்
வலிவெழில் மதிநிதி வாழ்வருள் புரந்தரப்
பலிஅழி பசுபதி பாதமென் சிரம்மீதே

8. ஏழ்சுர வீணையன் ஏகம்பப் பெருஞ்சுடர்
ஊழ்வினை கேவலம் சகலத்திற் கருளளி
தாழ்மைசெ யவிசயர் தாள்பணி புரந்தரப்
பாழ்மலம் மாற்றரன் பாதமென் சிரம்மீதே

9. மணிமலர்த் திருவடி மாணிக்கப் பெருமலை
பிணிமலம் குறைதீர் பிங்கலத் திருவருள்
துணிவறி வன்பருள் துகள்தீர் புரந்தரப்
பணி வினைப் பரமனின் பாதமென் சிரம்மீதே

10. ஆடலங் கடவுள் அஞ்செழுத் தாதியன்
காடலர் சூடிய கனிவினிக் கயிலையன்
மூடனெ னக்குமருள் முக்கணன் புரந்தரப்
பாடலம் பரம்பொருள் பாதமென் சிரம்மீதே

–திருச்சிற்றம்பலம்–

## 66. புதுக்குடி

**பசுபதீசுவரர்** **கலிவிருத்தம்** **பரமேசுவரி**

1. தவமணிக் கொழுந்தே சங்கர மூர்த்தி
புவனநல் புதுக்குடி பூந்தளிர்ச் சுடரே
பவச் சுமை நெரிதரப் பரிதவித் தழுகிறேன்
இவண்வாழ் இனிதிலை ஏற்றருள் என்னையே

2. தினமொரு கவினுருச் செங்கழல் மூர்த்தி
கனகநல் புதுக்குடி கங்கணச் சுடரே
மனச்சுமை நெரிதர வாழ்வெரிந் தழுகிறேன்
இனிதிலை இனிதிலை ஏற்றருள் என்னையே

3. மருகுமுல் லையணி மாணிக்க மூர்த்தி
தெருவெழில் புதுக்குடிச் செந்தனல் குழம்பே
பெருகிய வினைச்சுமை பிதிர்வுற அழுகிறேன்
எருவுடல் எரியும்முன் ஏற்றருள் என்னையே

4. செப்பொளி பவளநல் திரள்மணிக் குன்றே
கொப்பரைப் புதுக்குடி கொடுமுடிச் சுடரே
அப்பிய பவஞ்சுமந் தழுகிறேன் தொழுகிறேன்
இப்பொழு தேநீர் ஏற்றருள் என்னையே

5. செக்கர்வா னந்தியின் திகைமணிக் குன்றே
முக்கனிப் புதுக்குடி மோகனச் சுடரே
சக்கரச் சுழலெனத் தவறிழைத் தழுகிறேன்
எக்கன முந்துயர் ஏற்றருள் என்னையே

6. மாம்பூ வன்னியும் மகிழ்மலர் சூடிய
வேம்புநல் புதுக்குடி மின்னலஞ் சடையன்
பாம்பொடு தேளிடை பரிதவித் தழுகிறேன்
ஈம்வன மேகுமுன் ஏற்றருள் என்னையே

7. திடமலர் இரஞ்சிதம் செம்மணி மாலையன்
மடப்பனைப் புதுக்கொடி வானகச் சுடரொளி
உடல் மன நோயெரித் துயிர்கனிந் தழுகிறேன்
இடர்களைந் தினிதுற ஏற்றருள் என்னையே

8. தேன் நெய் பால் தயிர் திரள்கனி அபிடேகன்
வான் முகில் புதுக்குடி மங்கலச் சுடரே
ஆன்மா எரியுறும் அல்லலில் அழுகிறேன்
ஈன் நிலம் ஏகுமுன் ஏற்றருள் என்னையே

9. பூரகம் கும்பமும் புதுப்பிர ணவமளி
ஏரகப் புதுக்குடி இயங்கொளி ஈசனே
சீரகத் தான்மா சிதைந்தழிந் தழுகிறேன்
ஈரகம் எரியுமுன் ஏற்றருள் என்னையே

10. சினையுயிர் களிறுகள் திமிங்கிலம் பறவை செய்
பனைக்கதிர் புதுக்குடி பாம்ணிச் செம்மல்
மனை வினை மதிநிதி வாழ்வழிந் தழுகிறேன்
இனையுடல் எரியுமுன் ஏற்றருள் என்னயையே

–திருச்சிற்றம்பலம்–

## 67. திருமயிலாடி – சீர்காழி வட்டம்

**சுந்தரேசுவரர் அறுசீர்ஆசிரிய விருத்தம் தேவநாயகி**

1. இந்திர வானவர் இருடிகள் விரதியர் இறைஞ்சி மகிழ்ந்தொழவே
அந்தரத்துந்துபி தண்ணுமை மத்தளம் அருங்கலம் சிறந்திசைக்க
சுந்தரர் செந்தமிழ் தெகுப்பிசைப் பதிகம் தொடர்ந்துல சினர்பாட
சிந்திசைப் பூசையை திருமயிலாடியில் தினந்தொழுச் சுகமாமே

2. ஆழிய ரவணை அரியயன் அனுதினம் அடிபணிந்துலக்கியக்கும்
நாழிகை திதிநாள் நான்மறை நெறிமுறை நயந்தளி சிவபெருமான்
காழியர் கடலிசை கனித்தமிழ் பதிகம் கருத்துறப் பயின்றாட
சேழியத் திருவை திருமயிலாடியில் தினம் பணிந் தெழுச்சுகமே

3. வானத்து மங்கையர் வரைவில் கன்னியர் மங்கலப் பூசைசெய்யும்
ஏனத்துக்கருளிய ஏகம்பரப் பெருந்தகை இரவொடு பகலானோன்
ஞானப்பேரீசனை நாவர சவரின் நறுந்தமிழ் துதிபாடி
தேனலர் பூசையை திருமயிலாடியல் தினம் பணிந் தெழச்சுகமே

4. மனக்கோயில் சித்துவந்தன் றாடம் மந்திரப் பூசைசெய்யும்
இனக்காவல் செயும் ஈசுர மூர்த்தி இருசடர்த்திரிசடையன்
சினமழி வாதவூர் திருவாசகத்தை திரளாய் இசைத்தாட
தினம் மலர்பூசையை திருமயிலாடியில் சிரமுறத் துதிப்பிணிதே

5. தொண்டரறுபதின் மூவரும் தொகையடி யார்களும் துதித்தோகும்
பண்டொரு நான்முகன் பவச்சிரம் கிள்ளிய பரமேச்சரச்சோதி
தண்டமிழ் சேந்தரின் பல்லாண்டுபாடி தாய்க்குலம் கூத்தாடும்
செண்டலர் பூசையைத் திருமயிலாடியில் சேவிக்கப் பிறப்பறுமே

6. வானகம் சேர்ந்த மண்ணுயிர் பாவையும் மலரடி துதித்தேகும்
மானகக்கரத்தோன் மங்கலயாழிசை வளர்கலை மணிமகுடன்
ஞான்ப்புனிதவதி நற்றாய் பதிகம் யாவரும் சேர்ந்திசைக்க
தேனலர் பூசையை திருமயிலாடியில் சிரம்பணிந் தெழுச்சுகமே

7. சனகாதியரும் இராவணச் செயரும்தாள் பணிந்துடனேகும்
மனவா சகங்கடந் தண்டப்ப கிரண்டம் வளர்தழல் ஏகம்பன்
தினமாள் மதித்திரு மாளிகை தேவரின் திருவிசைப் பாவோடே
சினைமலர் பூசையை திருமயிலாடியில் தினந்தினந் துதிப்பினிதே

8. செருவா னுடுக்களும் திங்களும் கோள்களும் திருவலம் செய்தேகும்
குருமா மதிதரும் குவலய நாயகன் கொன்றையன் குன்றவில்லி

கருவூர்த் தேவரின் கனித் தமிழ் மாலையை கல்வியர் இசைத்திருக்க
திருமாமலர் பூசை திருமயிலாடியில சிரம்பணிந்தெழச்சுகமே

9. நீக்கம றநிறைந் தொளிரும் நிமலன் நேசந்த ரும் இறைவன்
போக்கொடு வரவுசெய் புரையுயிர் யாவைக்கும் போகமும் பொறியளிக்கும்
காக்கும் கடவுளை நம்பிக டாநம்பி நல்லிசைப் பாட்டுடனே
தேக்குவிப் பூசையை திருமயிலாடியில் சிரமுறத் துதிப்பிணிதே

10. செங்கதிர் குளிர்கழல் சேர்ந்தநல் லுயிர்கள் தினந்தினந் துதிக்கும்
சங்கரப் பரம்பொருள் சஞ்சிதம் தீர்க்கும் தாமரைத் திருவடியோன்
மங்கலச் சேக்கிழார் மணித்தமிழ் பாடி மண்ணினர் துதித்தாட
சிங்கநாதப்பூசை திருமயிலாடியில் தினந்துதித் தெழுச்சுகமே

–திருச்சிற்றம்பலம்–

## திருமயிலாடி

**சுந்தரேசுவரர் கலிவிருத்தம் தேவநாயகி**

1. விதிநாயகன் விண்ணோர்குரு மீ மீன்வெளி நாதம்
நதிநீர்வளி நெருப்பே நிலம் நான்மாமறை முதலே
மதி வேதியன் மயிலாடியின் மாறாத்திரு மணியே
புதுப்பூவகில் தேன் நீர் தயிர் நீராட்டுக்கெழுந் தருளே

2. மதமாகரி உறிப்போர்த்திய மண்ணோர்முழுக் கடவுள்
இத வீணையின் ஏழே சுரத் திசையே கணிப் பேந்தல்
சுதனந்தரும் மயிலாடியின் சுயம்பேலிங்கச் சுடரே
உதிராமலர் நறுஞ்சாந்து நெய் நீராட்டுக் கெழுந் தருளே

3. கொலை சுழ்விழி புவியைப்பிளந் ததள்சூடிய அனலே
மலைசூழ் வனம் அருவிக்கரை அழகாருயிர் படைத்த
கலைக்கூத்தியல் மயிலாடியின் கங்காளப்பொன் ஒளியே
இலைக் கூவிளம் மணமார்புகைப் பூசைக்கெழுந் தருளே

4. நாலேழ்புவி மீன்கோள் சுழல் நடத்தும்மணி மிடறே
காலோர்புயல் சூறாவளிக் கடல் நீர்ப்பெருக் கலையே
ஆலே யமர் மயிலாடியின் அண்ணாமலைக் கொழுந்தே
மாலேஅயன் மயிலாள் தொழும் பூசைக்கெழுந் தருளே

5. எறும்போடணு மலையானைசெய் இறைவா தமிழ்க் கவியே
அறுகே வன்னி வில்வத்தளிர் அணியும்மறை இசையே
சிறு காநதி மயிலாடியின் தில்லைச்சுடர்க் கொழுந்தே
நறுமா மலர்த் தூபதீபப் பூசைக்கெழுந் தருளே

6. பிதாம்பரம் நீல்பட்டுடை நிறைமாமலர் சூட்டி
பாதாம் புயம்பாரோர் தொழப் பரிவேயளிப் பரனே
சேதாம்பலர் மயிலாடியின் செக்கர் வானக் கதிரே
போதார் மலர் கதம்பப்புகை பூசைக்கெழுந் தருளே

7. குறை வேள்வியை அழித்தேபுவி குன்றாச்சிறப் பளித்த
பிறைசூடிய பெம்மானேஎம் பெரியோர் தொழும் இறையே
நிறைநீதிய மயிலாடியின் நெடுமா மணிச் சுடரே
நறையார் புகை அகலாரொளிப் பூசைக்கெழந் தருளே

8. பலகோடிய பெருஞ்சூரியக் குவை கூடிய நெருப்பே
உலோகர்சிறும் உயிர் மேவிய உணர்வோநின கருணை
நிலமாய் தொழும் மயிலாடியின் நெடுமாமணிச் சுடரே
பெலன்மாதரும் ஊரோர் தொழும் பூசைக்கொழுந் தருளே

9. உயிர் மூச்சமர்ந் தொன்பான்நொடி உறைந்தேவளி வரவே
பயிரார்களை தீய்ந்தே சுழி முனைக்குண்டலி ஒளிரும்
செயிர் தீரொளி மயிலாடியின் திருமாணிச் சுடரே
புயலார்மனம் இயலார் தொழும் பூசைக்கெழுந் தருளே

10. வானோர்மதி மண்ணோர் உடல் பிணியோர்களும் தொழவே
தேனாரருள் திறலார் மதிதினமா நிதி பெறச்செய்
மீனார்நதி மயிலாடியின் வேதாந்த நல் மணியே
பூனீருடன் புதுமாமலர்ப் பூசைக் கெழுந் தருளே

–திருச்சிற்றம்பலம்–

## 68. மாதிரி வேளூர்

**மாதே சுவரர்** **கலிவிருத்தம்**

1. கரமறை வில்லோடு கதிர்மழு வொளியன்
அரகர சிவசிவ அகவொலி மகிழ்வோன்
சிரமொளிப் பிறையிணிச் செஞ்சடை மேனி
விரைமலர் மாதிரி வேளூர் விமலனே

2. பனிக்கொக் கிறகனி பரம்பொருள் ஆதியன்
இனிமறை சிவசிவ எனச்சொல மகிழ்வோன்
கனிவகை நிழல் மரம் கருணை செய் சோதி
வினயமில் மாதிரி வேளூர் விமலனே

3. கரும் பொறி நாகக் கங்கணச் சுடரோன்
சிரம் பணிந் தரகர சிவ சொல மகிழ்வோன்
உருகுளத் தமர்ந்துயிர் ஒளிவளர் நாயகன்
மிருதும மாதிரி வேளூர் விமலனே

4. அதரக் குறுநகை ஆனந்தத்தாண்டவன்
இத மனம் சிவசிவ எனச்சொல மகிழ்வோன்
பதமலர் துதித்தெழப் பரிவருள் மாதவன்
மிதமழை மாதிரி வேளூர் விமலனே

5. புவிக்கவின் செவிக்குழை புண்ணிய மூர்த்தி
தவி மனம் சிவசிவத் தாலொலி மகிழ்வோன்
கவிக்கடல் காழியற் கருள் மழைத் தாதை
விவரநல் மாதிரி வேளூர் விமலனே

6. நுனிவிரல் மறைநெளி நூதனக் கோலம்
கினிமனம் சிவசிவ கிளத்தலில் மகிழ்வோன்
சனிக்கி ரகங்கள் தாள் தொழ வரமருள்
வினையறு மாதிரி வேளூர் விமலனே

7. மஞ்சம லர்க்கொன்றை வன்னிய ணிதழல்
நெஞ்சுறச் சிவசிவ நெகிழ்வுரை மகிழ்வோன்
துஞ்சலில் துயரில் துணையருள் சோதி
மிஞ்செழில் மாதிரி வேளூர் விமலனே

8. செங்கண் பெருஞ்சுடர் திருவருள் இருவிழி
பொங்குளம் சிவசிவ புகன்றிட மகிழ்வோன்
நங்களின் இறைவன் நான்மறை நாயகன்
வெங்கலர் மாதிரி வேளூர் விமலனே

9. பண்ணுறை நாதமும் பகலிர வொளியன்
எண்ணியே சிவசிவ இயம்புரை மகிழ்வோன்
விண்ணுறை இறைவன் வேதியன் ஆதியன்
வெண்ணலர் மாதிரி வேளூர் விமலனே

10. எண்குண மாமதி எங்களின் ஈசன்
பண்ணொடு சிவசிவ பகர்ந்தெழ மகிழ்வோன்
மண்ணவர் விண்ணவர் மனத்துறை இறைவன்
வெண்ணலர் மாதிரி வேளூர் விமலனே

–திருச்சிற்றம்பலம்–

## 69. குன்னம் – சீர்காழி வட்டம்

**பூமீசுவரர்** **கலிவிருத்தம்**

1. வெஞ்சுரம மாற்றிய வெந்தழல் பொன்னொளி
அஞ்சனத் தருள்விழி அம்பலக் கூத்தன்
குஞ்சரத் தோலுடை குன்னநல் வேந்தன்
நெஞ்சுறைந் தேகும் நிலையுணர்ந் துய்வேனோ,

2. பிட்டுகோர் கூலி பிரம்படி தந்ததும்
கட்டமு தூட்டியே கடும் பசி தீர்த்ததும்
கொட்டடிக் குதிரைசெய் குன்னநல் வேந்தே
நிட்டையு றைந்தேகும் நிலையுணர்ந் துய்வேனோ

3. பச்சைமா லுக்கொரு படர்சுடர் சக்கரம்
இச்சைரா வணனுக்கும் இன்னருள் நல்கிய
கொச்சைம னமழிக் குன்னநல் வேந்தே
நிச்சலக் குண்டலி நினைவுயர்ந் துய்வேனோ

4. எச்சிலஞ் சிலந்தியை எழிற்சோழ வேந்து செய்
கச்சைப் பாம்புகள் கழல் புரள் செந்தீ
கொச்சும ணிக்கொன்றை குன்னநல் வேந்தே
நிச்சலன் நின் கழல் நிழலுறைந் துய்வேனோ

5. செங்கலைப் பொன்செயும் சித்துமா மதிச்சுடர்
அங்கச னைத்தடிந் தன்பு செய் மந்திரன்
குங்கிலி யம்மகிழ் குன்னநல் வேந்தே
நிங்களென் ஆக்கினை நிலையுறைந் துய்வேனோ

6. தெக்கணத் திருமுகம் செக்கர்விண் மேனியன்
அக்கும ணித்தார் ஆதிரைப் பேரொளி
குக்குடத் தாசன குன்னநல் வேந்தே
நெக்குற நின்கழல் நினைந்துயி ருய்வேனோ

7. வாவி நீர்த் தீக்கை வாதவூ ரார்க்கருள்
கோலமாச் சுடரே குமுதப்பூங் கழலே
கூவிள மாலைக் குன்னநல் வேந்தே
ஆவியில் நினையுணர்ந் தடியே னுய்வேனோ

8. கொங்கலர் மேனியில் குளிர்தேன் வழியும்
திங்களம் பிறை முடி தென்னவ மூர்த்தி
குங்குமச் சாந்தணி குன்னநல் வேந்தே
நிங்களென் உணர்வுற நெஞ்சுறைந் துய்வேனோ

9. இந்திர வானவர் இயங்குயிர்ச் சித்தரும்
மந்திர முரைத்துனை வணங்கும்பே ரிறைவா
குந்தனச் செங்கழல் குன்னநல் வேந்தே
வந்தெனைத் தீண்டலில் மகிழ்ந்துயிர் உய்வேனோ

10. வண்ணம ணிக்கழல் வான்முட்டுஞ் செஞ்சுடர்
மண்ணைப் படைத்ததோர் மாணிக்கச் செங்கதிர்
கொண்டைப் பிறையொளிர் குன்னநல் வேந்தே
குண்டலி ஒளியுற குறையுயிர் உய்வேனோ

–திருச்சிற்றம்பலம்–

## 70. நாங்கூர்

**மதங்கீசுவர்** **வஞ்சிவிருத்தம்**

1. பன்மலர்க் கொன்றையன் பரஞ்சோதி
நன்சாக் கியர்க்கருள் நான்மறையன்
பொன்னார் திருவடி பூசைசெய்ய
அன்பருள் நாங்கூர் ஆனந்தமே

2. உம்பரர் தொழுமிறை ஒளியீசன்
செம்மனச் சிறப்புலிக் கன்பெளியன்
கொம்பலர்த் திருவடி கும்பிடுவார்க்
கிம்மைய ழிநாங்கூர் ஏகம்பனே

3. இரும்புலி யதளணி எம்பெருமான்
கருணைசெய் கழற்றி றறிவார்க்கருள்
சுரும்பலர்த் தீருவடி துதித்தெழவே
தரும்நிதி நாங்கூர் தற்பரனே

4. ஊழியத் தாண்டவன் ஓம்பரிறை
காழியில் கணநாதற் கன்புசெய்தோன்
ஆழியத் திருவடிக் கருச்சனைசெய்
ஏழைக்கருள் நாங்கூர் ஈசுரனே

5. வால்நட்சத் திரங்கள்செய் மாமறையன்
வேல்கூற் றுவர்க்கருள் வெஞ்சுடரன்
தோல் புனைத் திருவடி துதித்தெழவே
சூல்தரும் நாங்கூர் சுந்தரமே

6. யுகமோர் கோடிசெய் ஊர்த்துவனே
புகழ்சோ ழர்க்கருள் பொன்னொளியன்
சுகமெனத் திருவடி துதித்தெழவே
இகலறுக் கும்நாங்கூர் இறையோனே

7. சிரமிளம் பிறையணி செங்கழலன்
நரசிங்க ருக்கருள் நாயகமே
அரங்கெழில் திருவடி துதிக்தெழவே
கரந்தரும் நாங்கூர் கற்பகனே

8. ஒலிகடல் யாழிசை ஓங்காரன்
கலிகம்பர்க் கன்பளி கங்காளன்
பலியழி திருவடி பணிந்தெழவே
நலிவழிக்கும் நாங்கூர் நாயகனே

9. சிறகொடு கொன்றையும் சேர்சடையோன்
அறம்வளர் கலியனுக் கன்பளிக்கும்
நிறமலர்த் திருவடி நிதந்தொழவே
உறவுயர்த் தும்நாங்கூர் ஒளிமழையே

10. கோவனச்சுடர்முகக் கூத்தெழிலன்
நாவறி விரிஞ்சையர் நலங்காத்தோன்
பூவனத் தீருவடி பூசித்தழத்
தேவைதரும் நாங்கூர் திருவிளக்கே
–திருச்சிற்றம்பலம்–

## 71. நாங்கூர்

**நம்புவார்க்கம்பர்** **கலிவிருத்தம்**

1. நறவுறை பனிமலர் நாகமும் சூடிய
அறம்வளர் நாயகன் ஆனந்தம் பாற்கடல்
சிறகணி நாங்கூர் திருவே நின்கழல்
துறவுறழில் தென்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

2. விரிதொடர் பெருமலை விண்ணகம் தாண்டிய
கரிஅதள் போர்த்திய காஞ்சனப் பரம்பொருள்
சிரிமலர் நாங்கூர் திருவே நின்கழல்
துரிசறுத் தென்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

3. மாந்தளிர் மேனியன் வளர்வெளி பெருந்தழல்
காந்தத்தி ருவிழி கற்பகத் திருவருள்
சேந்தலர் நாங்கூர் திருவே நின்கழல்
சோந்தைஅறுத் தென்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

4. மகிழமும் மாவிளம் வன்னியும் சூடெழில்
அகப்புற பெருந்தழல் ஆதிரைச் சுடரொளி
திகழ்மரை நாங்கூர் திருவே நின்கழல்
சுகமுற என்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

5. வியர்வுர அந்தகன் வினைவிதி உடலழி
வயல்நெல் தானியம் மறுவகை உணவளி
செயல்மதி நாங்கூர் திருவே நின்கழல்
துயரழித் தென்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

6. பொடிநீ றணிந்த புண்ணியக் கடவுள்
அடிமுடி அறியார்க் கருளளி வள்ளல்

செழமலர் நாங்கூர் திருவே நின்கழல்
சுடர்நடம் என்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

7. கண்ணயங் கல்லீரல் கருப்பித யம்செய்து
இணையிலாக் குருதிஇ யக்குவிசை இணைந்தோன்
திணைவளர் நங்கூர் திருவே நின்கழல்
துணையுற என்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

8. தாயன்பு தந்தையின் தனிமனத் தறிவளி
காயமா காயமும் கருப்பொருள் யாவுஞ்செய்
நேயநல் நாங்கூர் திருவே நின்கழல்
தூயமுற என்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

9. பத்திசெய் பாருயிர் பண்புகள் வளர்த்தோன்
பெத்தமற முத்தியும் பிரிவறு அருள்தரும்
சித்தியருள் நாங்கூர் திருவே நின்கழல்
சுத்தமுற என்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

10. எட்டுத்திசை கீழ்மேல் ஏகம்ப நெடுஞ்சுடர்
கொட்டுமழை வெட்டுமின் குளிர்பனி வளிஅருள்
சிட்டுக்கருள் நாங்கூர் திருவே நின்கழல்
துட்டமழித் தென்நெஞ்சில் தோன்றுவ தெந்நாளோ

–திருச்சிற்றம்பலம்–

## 72. திருச்சிற்றம்பலம் – மயிலாடுதுறை வட்டம்

**நடனபுரீசுவரர்** **கலிவிருத்தம்**

1. துஞ்சலில் லாத்திருச் சுயம்பொலிக் கீதன் தூயமலை
மஞ்சளங் கொன்றை மாணிக்கச் சுடரன் மாவேந்தன்
அஞ்சொல் அவனியன் ஆணவ மலமழி அறவாணன்
செஞ்சொல் மொழிவளர் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

2. தொண்டரின் துதாய் சுவனக்க ழல்நடந்த சுடர்வடிவன்
கண்டம திலுறை காலநஞ் சமர்க்கவின் கங்காளன்
பாண்டொரு நெடுமாறன் பார்முடிப் போர்முழு வெற்றியளி
திண்டேர் மொழிவளர் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

3. வெந்தலை நாகம் வெண்ணீ றணிநுதல் வேதமணி
சந்திர சூரியர் சங்கொழில் மால்பணிச் சங்காரன்
வந்தனை மயிலை வாயிலார்க்கருள்செய் வானவள்ளல்
செந்தலை ஆநிரை திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

4. தண்ணீர் நெருப்பாய் தாரணி நிலமாய் தவழ்தென்றல்
வெண்ணீ றணிந்தலர் மீதமர் அயன் தொழும் சங்கீதன்
கண்ணோர் கழற்சிங்கற் கருளமு தளித்த கங்காளன்
தெண்ணீர் நதியெழில் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

5. தக்கன் வேள்வியைத் தகர்த்தெறி செம்மல் தங்கமலை
கொக்கிற கோடெழில் கொன்றையும் அணிந்த கோமேதம்
நெக்குரு கித்தொழும் நம்பி இடங்கழிக் கருள்வேந்தன்
செக்கலர்க் கழலெழில் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

6. முத்திவ னத்துறை மோகனக் கூத்தெழில் முழுமுதல்வன்
ஆத்திரி பிருகொடு அகத்தியர் மூலரும் தொழுமிறைவன்
சத்தியச் செருத்துணை தாரனைத் தவமருள் சதுர்வேதன்
சித்தியல் செங்கதிர் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

7. குன்றெரு தேறும் குங்குமச் சாந்திணி குணசீலன்
அன்றொரு மாணியின் அழிவறக் காலனைத்தடிந்த செம்மல்
மன்றெழில் நின்றவூர் மறைப்பூ சலருக்கும் மாண்பளித்தோன்
சென்று தொழவருளும் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

8. கொம்பெழில் வன்னியும் கூவிளம் சூடிய கொடுமுடியன்
கும்பகம் பூரகம் குளிர்மணிப் பூரம்செய் கொழுந்தழலன்
மம்மர ழித்தருள் நேசனுக் குயர்வளி மணிகண்டன்
செம்புல மேனியன் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

9. உப்பளமேறிநல் ஓடமும் நடத்திய ஓங்காரன்
கொப்புறைத் தேனபி டேகம் மகிழ்வுறு குறும்பிறையன்
கப்பெழில் சிலந்தியை கருணைச் செங்கண னாக்கிய கோன்
செப்பருந் தீயெழில் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

10. அக்கம ணித்தார் அம்பலக் கூத்தெழில் அலங்காரன்
சுக்கிரன் இந்திரன் சுகமளி மாலயன் தொழு மிறைவன்
தக்கநல் யாழிசைத் தமிழ் நீல் பாணனுக் கருளமுதன்
செக்கர்வின் மேணியன் திருச்சிற்றம் பலத்தின் சிற்பரனே

–திருச்சிறம்பலம்–

## 73. திருச்சிற்றம்பலம் – பட்டுக்கோட்டை வட்டம்

**பூராதன வனேசுவரர் கலிவிருத்தம் பெரியநாயகி**

1. கடிகமழ் விடியலின் கள்மலர் சூடிய காவிரியன்
அடிமுடி அரிஅயன் அறியாப் பெருந்தழல் ஆதியண்ணல்
துடிகரச் சுயம்பொளி சுந்தரக் கூத்திசை தொடர்நடனன்
செடிவழிக் கருதரும் திருச்சிற்றம்பலச் சௌமியனே

2. சுடரரு வுருவன் தூந்தணல் அருவன் சொக்கேசன்
கடலிடை நடந்த கற்பகத் திருவருள் கடலளந்தோன்
நடனசிங்காரன் நற்கலை அறுபதின் நான்கானோன்
திடரெழு நிலமளி திருச்சிற்றம்பலச் சௌமியனே

3. ஆடலங் கலைச்சுடர் ஆனந்த மூர்த்தி அழகுருவன்
பாடலஞ் சிவகவி பத்தரின் பசமற பரிவளித்த
கூடல்ந் தமிழகசு கொற்றவன் நற்பதன் குற்றமிலான்
தேடலந்திருவருள் திருச்சிற்றம்பலச் சௌமியனே

4. பூதக ணத்திரள் பூசைசெய் புங்கலன் சங்காரன்
ஆதவன் அம்புலி ஆதியரு பகிரண்டத் தாகாயன்
காதலங் கடவுள் கணிப்பொறி கோள்மதி கனிந்தளித்த
சேதாம் பல்கழல் திருச்சிற்றம்பலச் சௌமியனே

5. சோதம ணிமுடி சுந்தரக் கூத்தன் தோற்றமிலி
ஆதிமங் கலத்திறை ஆலயக் கருவறை அருவுருவன்
ஞாதிரு யாவையும் நன்மலர் பூசைசெய் நாதாந்தன்
சேதியத் திருவருள் திருச்சிற்றம்பலச் சௌமியனே

6. காந்தளும் பிறைமரை கருவிடத் தரவணி கற்பகத்தன்
பூந்தழல் மங்கலன் புண்ணியச் சங்கிசை புதிர்விழியன்
சாந்தத் திருவருள் சங்கரப் பெருஞ்சுடர் சாம்பசிவன்
சேந்தனார்க் கருளிய திருச்சிற்றம்பலச் சௌமியனே

7. பாட்டொடு பண்ணொளி பல்லிசை தாளத்தில் பதித்தியங்கும்
கூட்டொடு குவலயம் குன்றாப் போகமும் கொடுக்குமண்ணல்
தீட்டொடு உயிர்க்கொலை தீச்சொல் என்றுரை சித்தாந்தன்
சேட்டன் திருவருள் திருச்சிற்றம்பலச் சௌமியனே

8. கஞ்சுக மாலையன் கங்கண மூர்த்தி கதிர்மலையன்
அஞ்செழுத் திறைவன் அங்ககன் உடல்ழி அனல் விழியன்
இஞ்சிய ழித்தவர்க் கினியநல் பதவியும் ஈந்தபிரான்
செஞ்சொல் தேவாரத் திருச்சிற்றம்பலச் சௌமியனே

9. கண்டிகை நீறொடு கயிலைநல் வாழ்வருள் கனகமலை
தண்டிளந் தாமரை தளிர்வன்னி கூவிளம் தார்சூடும்
பண்டையன் இன்றையன் பகலிரா நாளையன் பாசுபதன்
செண்டலங் காரன் திருச்சிற்றம்பலச் சௌமியனே

10. தொல்விளங் காளை சுடர்கொடி வாகனன் தூயதணல்
மெல்லிசை யாழினன் விண்ணவன் தென்னவன் விதிவினைசெய்
அல்லிருள் ஐம்பூதத் தாதியன் அம்பலன் அறிவருளன்
சில்லரிச் சிலம்பன் திருச்சிற்றம்பலச் சௌமியனே

–திருச்சிற்றம்பலம்–

## 74. கிழாய் – மயிலாடுதுறை வட்டம்

**சிதம்பரேசுவரர்** **கலிவிருத்தம்**

1. தேனா ரமுதன் திங்களஞ் சடையன்
மானோர் கரத்தன் வானவ ரிறைவன்
மீனார் வயல் கிழாய் மேவிய வெந்தழல்
கோனே எனத்தெழக் குளிருறும் நெஞ்சமே

2. மாறா மாமணி மாதவக் கொழுந்தன்
தேறார் புரமெரி செந்தழல் விழியன்
சேறார் வயல்கிழாய் சிவமணி மேனியன்
ஆறார் கழல்தொழ ஆனந்தச் சுகவாழ்வே

3. நாகா பரணன் நால்கோடிச் சூரியன்
ஆகா ரந்தந் தாதிரிக்கும் வள்ளல்
பாகார் கழைக்கிழாய் பசும்பூங் கொன்றையன்
ஏகம்பக் கழல் இறைஞ்ச லிறைத்தவமே

4. கூசாத் திருச்சுடர் கோமே தகமணி
ஏசாக் கருணைநல் எந்திய தாய்மடி
தேசார் திருக்கிழாய் செஞ்சுடர் மேனியை
ஈசா எனத்தொழ ஏழுல கின்பமே

5. வீடார் துறக்கமும் விண்தரும் தீபன்
காடார் நீறணி காபாலக் கூத்தன்
வாடா நிலக்கிழாய் வளரொளிச் சடையன்
ஆடார் கழல் தொழல் அவனிப் பெருந்தவமே

6. தேயாப் பிறையணி செங்கமே லக்கழல்
மேயா மான்கரன் மேதினிப் பேரிறை
காயா வயல்கிழாய் கயிலையங் கிரியன்
தாயாய் எனத் தொழல் தவமளிப் பின்பே

7. நாமா மகளின் நற்றவம் தூற்றிய
பூமா மறையன் பூச்சிரம் அறுத்தோன்

தேமாங் கனிக்கிழாய் சிற்றம்ப லமுடைய
கோமான் கழல் தொழல் குவலயத் தின்பே

8. வேதா கமச்சுடர் வேர்விதை உயிரளி
போதார் வெள்ளியங் கிரிமலைப் புங்கவன்
சேதாம் பல்கிழாய் தில்லையம் பலவனின்
பாதா ரவிந்தம் பனிந்தழப் பவமறுமே

9. ஏறா வளியனல் ஏறிய குண்டலி
ஆறா தாரமும் அமர்ந்தாக் கினைசெய்
சேறார் பூங்கிழாய் தில்லைநல் லீசனின்
மாறாக் கழல் தொழ வரும் வாழ் வமுதமே

10. காயாய்க் கனியாய் கருவாய் உருவாய்
சேயாய் தமக்கை செம்மதித் தாத்தன்
நீயாய் நிலக்கிழாய் நெடுஞ்சுட ராகிய
தாயாய் நினைத்தொழ சந்தோசத் தவமே

–திருச்சிற்றம்பலம்–

## 75. ஆற்றூர்

**சொர்ணபுரீசுவரர்** **வஞ்சி விருத்தம்** **அஞ்சனாட்சியம்மன்**

1. தம்பலப் பூங்கழல் சதுர்வேதி
வெம்புகை கொடிசுழல் விண்செய்தோன்
மும்மல மழித்தருள் மூவிழியன்
செம்மரை ஆற்றூர்த் திருவிளக்கே

2. செந்தழல் பூவண்ணத் திருமேனி
நந்தியம் பெருமான் தொழுதசுடர்
வந்தவர் மண்ணிடை வந்தனை செய்
சிந்தியத் தாற்றூர்த் திருவிளக்கே

3. காஞ்சன மூர்த்தி கங்காளன்
நாஞ்சில்சு சீந்திர நாடகத்தோன்
வாஞ்சைசெய் மங்கல வயிரமலை
தீஞ்சுவைத் தேனாற்றூர்த் திருவிளக்கே

4. கிண்கிணிச் சதங்கைக் கேசரியன்
கண்ணப்பார்க் கருளிய கருணைவள்ளல்
வெண்ணீ றணியனல் மருந்தீசன்
தெண்ணீர் ஆற்றூர்த் திருவிளக்கே

5. அண்ணா மலையான் ஆரூரன்
மண்ணார் மாமணி விண்ணிறைவன்
வண்டோர் உறங்கா மலர்க்கோயில்
திண்டேர் ஆற்றூர்த் திருவிளக்கே

6. மங்கலப் பூம்புனல் மாதேவன்
சங்கிதழ்த் தரளநல் தழல்விழியன்
பொங்கழல் புனிதன் பொதி நீதி
திங்களன் ஆற்றூர்த் திருவிளக்கே

7. மாங்கனி காரைத்தாய் வடிவழகை
நீங்குற வரமருள் ஞானவள்ளல்
சேங்குமு தக்கழல் சிவக்கொழுந்தன்
தீங்கழி ஆற்றூர்த் திருவளக்கே

8. கூம் பெழில் கோபுரச் செந்தமிழர்
பூம் பொழில் நைல்நதி பொன்னிலத்தோர்
காம் பெழில் கொன்றையந் தார்மகிழும்
தீம்புனல் ஆற்றூர்த் திருவிளக்கே

9. எண்வகை யோகத்தில் இயல்பாக
வெண்பொடி சூடி அருவுருவை
கண்ணொளி நாசியின் நுனிகாட்டும்
திண்புனல் ஆற்றூர்த் திருவிளக்கே

10. வன்னியந் தாரொளிர் சங்கீதன்
சென்னியில் சிறுபிறைச் செம்பவளன்
பொன்னொளி மரகதப் பூஞ்சடையன்
தென்கரை ஆற்றூர்த் திருவிளக்கே

–திருச்சிற்றம்பலம்–

## ஆற்றூர்

**சொர்ணபுரீசுவரர் கலிவிருத்தம் அஞ்சனாட்சியம்மன்**

1. கடுவெளி இடிமின் கதிர்க்கழல் குளிரருள் காட்சியண்ணல்
கொடுகட்டித் தாண்டவன் கென்றையம் மேனிக் குவிதீபன்
அடுக்கலை எடுத்தவர் ஐஇரு சிரமதில் விரல் வைத்த
திடுமணல் காவிரி திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

2. நிறைபொருள் ஆதியன் நிரந்தரன் வானவன் நிமலுருவன்
இறைத்திருத் தொண்டர்கள் வரலாறளித்த மணிக்கழலன்
குறைமதி வேடுவன் கொலைப்பழி மாற்றிய கோகழியன்
சிறகெழில் மயில்மலி திருவருள் ஆற்றூர் சிவச்கொழுந்தே

3. ஏடுகள் நதியில் எதிர்செலச் செய்த ஏகவள்ளல்
நாடகள் தோறும் நால்வகை நெறிகளில் ஞானமளி
காடுகள் மலையில் கருணையில் உயிர்க்கருள் கறைகண்டன்
தேடுநல் தீக்கைசெய் திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

4. போதுறை பாதிரி புதுவில் வமணி பொன்னொளியன்
யாதொரு நாமத்தில் எஇைறை எனினும் தானாவோன்
தூதுசென்றடியவர் துயர்தீர்த் துதவிய தூயகுணன்
தீதுகள் அழிக்கும் திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

5. மெய்யனல் அருவன் மெலிமனப்; பத்தருக் கருவுருவாய்
பய்யவந் தருளும் பரம்பொருள் ஈசுரன் பாற்கடலன்
நயந்தநல் மாணி நலமுறக் காலனை நையவைத்த
செய்தொழில் ஐந்துடை திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

6. கார்த்திகைத் தீபன் களிறுளி போர்த்திய காளகண்டன்
ஆர்த்தெழு கங்கையை அமைதியில் ஆழ்த்திய அருளமுதன்
பார்த்தனுக் கன்றனல் பாசுபதமளி பரஞ்சுடரன்
தேர்த்திரு விழவணித் திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

7. ஏனலின் கோட்டொடு இரும்புறத் தாமையை ஏற்றணிந்த
மானலங் காரநல் மாணிக்க நாயகன் வானமுதன்
ஆனனல் அனைத்துயிர் அதிபதி பூரணன் அறிவீசன்
தேனலர் மேனியன் திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

8. அம்பலவானன் ஆருயிர்க் கன்பன் அமுதீசன்
வெம்மையும் தன்மையும் வெண்மையும் செம்மையு மானபிரான்
தும்புரு புலத்தியர் அகத்தியர் துருவா சரும்துதித்த
செம்பொன் மேனியன் திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

9. கலகலவிஞ்ஞானர் பிரளயர் அணைந்தோர்க் கன்பளிக்கும்
நுகர்வொன்றில்லா நுதல் விழி நாயகன் நூதனத்தோன்
நகல்வடகயிலை நனிவான் கயிலையின் நாதாந்தன்
திகழ்மருந்தாகிய திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

10. பசுபதி பாசம் பாருயுயிர்க் குணர்த்தும் பரம்பொருளன்
குசும கேதார பீமசங் காரநல் சோதிலிங்கன்
அசுரநல் மானிடம் அறிவிலிப் பொருள்களும் ஆக்குமண்ணல்
திசுஅணுத்திரளுறை திருவருள் ஆற்றூர் சிவக்கொழுந்தே

–திருச்சிற்றம்பலம்–

## 76. ஆனந்தத் தாண்டவபுரம்

**பஞ்சவடீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **கல்யாணசுந்தரி**

1. குருவோர் தீக்கை கொடுத்தருளக் குவலயத் தாயிரம் சந்தோசம்
செருவார் விடையமர் திருமூர்த்தி செங்கண் அரவணி பூங்கழலன்
அருவே உருவே அருவுருவே ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே

2. பெருவான் நிறைந்தெழு கோடிமின்னல் பெருக்கிய பேரோளி ஓருருவன்
விரிகோ வணநல் வெஞ்சுடரோன் வெண்ணீ றணிந்த மாமலையன்
அருளாய் பொருளாய் அன்பளிக்கும் ஆனந்தத் தாண்டவ பரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே.

3. கிருதார் முப்புரக் கேடழித்த கெம்பொளிக் குறுநகை கிரிநாதன்
மருதார் வெள்ளியங் கிரிமலையன் மாணிக்க மாமலை போராளியன்
அருளார் கொடையளி ஆன்மலிங்கம் ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே

4. இருசுடர் தினந்தொழும் ஏகம்பன் இராவணன் இசைக்கருள் ஏழிசையன்
மருகொடு கூவிளந் தாரணியும் வானவர் ஆதிரை வளர்நெருப்பே
அருளொளித் தீக்கை அளிக்குமிறை ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துத் தழவருளே

5. எருதமர் ஈசன் ஏரொளியே ஏழுல காட்சிசெய் பரம்பொருளே
கருதார்க் கேழ்பிறப் பீந்தபின்னே கனகக்க ழல்காட்டும் கற்பகமே
அருவரின் அன்பே அமுதீசா ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே

6. தருமிக்கி ணையாகத் தமிழறியேன் தனிநா ரைமுயற்சி சிறிதுமில்லேன்
குருவிநல் காரியின் தவமுமில்லேன் குவலயத் தடியேன் நாயுண்ணி
அருவிய ருள்மழை அமுதீசா ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே

7. உருகாப் பனிநுரை உள்ளொளியே ஓடுந திநீரின் ஒலியலையே
பெருகாக் கடல்நீர்ப் பேரூழி பிறையணி பாதர சமலையே
அருகாக் கோடி அனல்வெளியே ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழ அருளே

8. தெருவிடை விறகினைச் சுமந்தசைந்தே திருஇசைப் பாணனுக் கருள்பொழிந்த
ஒருமகள் கூந்தலை ஏற்றுவந்தே இனிமனத் தடியார்க் கருளியகோன்

அரும்பொருள் தமிழ்மறை ஆசானே ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழஅருளே

9. இருபுரு வநடுக் குண்டலியே இன்னிசை நாதத் திருவடிவே
பெருகிய அண்டமும் பிண்டமென பித்திகைப் பதஞ்சலிக் கருள்சுடரன்
அரும்பிய அருளொளி ஆசானே ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே

10. துருசுகள் தீண்டாத் தூயமணி தூந்திரப் பூமியின் பகலிரவே
இருசுகள் இல்லா பெரும்தீத்தேர் ஏழ்புவி தாண்டிநின் றெழுந்த சுடர்
அருசுவை ஏழ்திதி எண்குணத்தன் ஆனந்தத் தாண்டவ புரத்தொளியே
திருவடி யாரின் தொழும்பாகி சிவமே நினைத்துதித் தழவருளே
-திருச்சிற்றம்பலம்-

## ஆனந்தத் தாண்டவபுரம்

**பஞ்சவடீசுவரர் கலிவிருத்தம் கல்யாணசுந்தரி**

1. இதஞ்செய் ஈசுரன் ஏகம்பத் திருவுரு இருகூரன்
மதகரி உரிபுனை வானவ மூர்த்தி மழுக்கரத்தோன்
பதஞ்சலிக் காணந்தத் தாண்டவ மாடிய பஞ்சமுகன்
அதஞ்செய் வினைதீர் ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

2. யாதிலும் உடனாய் ஞாதிருக் காசான் ஞானமளி
போதலர் சூடிய பொன்னார் மேனிப் பூங்கழலன்
பாதகக் கயமுகன் பவஉடல் அழித்த பங்காளன்
ஆதிரை மூர்த்தி ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

3. ஞானக் கண் ஒளியலை ஞாலத்தன் வீணைநல் நாதாந்தன்
ஏனக்குருளையை இயங்குமந் திரிசெய் ஏகாந்தன்
மானக்கஞ் சாரரின் மணிமகள் கூந்தலை கேட்டபிரான்
ஆனிப்பொன் மேனியன் ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

4. சொற்பொருள் வாக்கியம் தொடரிலக் கணமாய் துலங்குதணல்
வெற்பெடுத் தோன்சிரம் பீரிட விரல் பதி மென்னகையன்
நற்கவி நம்பியாண்டார் நம்பிக்கும் நலமளித்த
அற்புதத் திருவுரு ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

5. செக்கச்சி வந்தநல் திருவுரு அருவம் சிவலோகன்
முக்கணன் முதல்வன் மூவேழ் பகிரண்ட மூத்ததழல்
தக்கனின் வேள்வியை தகர்த்தழித் தெழுந்த சமநிலையன்
அக்கம ணியணி ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

6. மஞ்சள் மணிக்கழல் மாணிக்க மேனியன் வார்சடையன்
நஞ்சணி கண்டன் ஞாயிறு சந்திரன் புரைதீர்த்த
குஞ்சரத் துரிபுனை குங்குமத் திலகன் குன்றவில்லி
அஞ்செழுத் தாண்டவன் ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

7. தங்கத்திருவுரு தாமரைக் கழலன் தந்தையண்ணல்
மங்கலச் சங்கிசை வானவர் துந்துபிக் காடெழிலன்
செய்கவிக் கடலிசை சீர்காழியர்க்கருள் செய்தபிரான்
அங்கசன் உடலழி ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

8. எட்டுயர் குணத்தோன் ஒன்பான் சுவையளி ஏகாந்தன்
தொட்டொரு திருவடித் தீக்கைசெய் தன்பளி சுயம்பொளியன்
பட்டெரி சம்பாலை பாவைசெய் தருளிய பரம்பொருளன்
அட்டநல் மூர்த்தி ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

9. சத்துச்சித் தானந்தன் சற்குரு நாதன் சாம்பசிவன்
பத்திக்கும் முத்திக்கும் வித்தளி சித்துருப் பாசுபதன்
இத்திநி ழலமர்ந் தீருரு வர்கறம் இயம்பியகோன்
அத்திக்கன் பளித்த ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

10. மெல்லிசை வீணையன் விண்ணவர் பேரிறை வெஞ்சுடரன்
கல்லுரு யானையும் கரும்புணும் காட்சியைக் காட்யகோ
தொல்லிசைப் பாணர்க்கும் சோழர்க்கும் சேரர்க்கும் வானளித்த
அல்லல ழிப்பிறை ஆனந்தத் தாண்டவ புரத்தரனே

–திருச்சிற்றம்பலம்–

## 75. மாமகுடி

**சிவசோமநாதர்** **கலிவிருத்தம்**

1. கடகரி உரிசுடர் கதிர்மதிப் பிறைமுடி
கடவிட தரம்மடல் படர்வுற விடையமர்
சடமுயிர் உடலுற தடுமலம் பொடிசெயும்
வடவரை ரூடநதி மாமா குடியரே

2. இடைகொடு வரிஅதள் இடிமழு பிடிகரன்
சடைஇடைப் பிறதைவழ் தருதிரு தருநடன்
கடையுயீர் தடைமலம் கடியுற நிழல்தரும்
மடைமலி கெளிறுறை மாமா குடியரே

3. தொடரிடி படுமழை தொடுதளம் பிளைவருள்
சுடரிடை படரிருள் சுடலையில் நடமொடு

இடரிடை விடுதலை இருபிறப் பெரிதரும்
மடமதி பொடிகொடு மாமா குடியரே

4. படியடிப் படைமதி பசுவுற விடையருள்
அடியவ ரவடியொடு முடிப்பிறை யவரடி
முடிநில முறத்துதி புதுஅடி யார்ககருள்
வடிவெரி சுடரடி மாமா குடியரே

5. நடைஉடை பதிருறை நகையிசைத் திருவடி
கடைகலி கடலொடு கதியுயிர் பொடியுறை
அடைவுறு மறுபுவி அவையவை எழுவுற
வடிவருள் விடையமர் மாமா குடியரே

6. அடுதழல் எடுகர அதிபதி கதிஅருள்
கொடுமுடி வயுவொளி கொதிகடல் விடமயில்
உடுவிடை சுழல்தட மொடுக்குற இயக்கிசை
வடுமுடி இடியொளி மாமா குடியரே

7. கடலம்ப லடம்போடு கடக்கூ விளமணி
தடநதி உடல்வளர் தகைதா னியமருள்
திடரதத் தெருநடை திருவா ரூரிறை
வடமரத் தமரொளி மாமா குடியரே

8. இடைஇடை இடர்தரு இருமலச் சகலமொடு
நடையுயிர் நடைமலம் நாருறப் புகலருள்
படைமழுச் சுடரரன் பகுதொரு விதிமதி
மடையறக் கொடைதரும் மாமா குடியரே

9. அடர்குகை கேவலத் ததியுயிர் சகலமும்
புடமுற மடமதி பொதிதரு பசுபதி
இடரரக் குடர்கிழி எரிநகத் தரிக்கருள்
மடமலர் எருக்கணி மாமா குடியரே

10. இடவிடை மிசையமர் இடையர் வளிசுடர்
திடக்களி இருபதின் உழுவருக் கருளிறை
மடமதி கடையயிர் மருவுரத் தொகைகருள்
வடவரை குடமலை மாமா குடியரே

–திருச்சிற்றம்பலம்–

## 78. கஞ்சனகரம்

**சுந்தரேசுவரர்** **கலிவிருத்தம்**

1. மலரெழில் கழலொளி வலிமலி தழல்மலை
உலகுயிர் நலம்வளர் ஒளியுமிழ் சிலம்பினன்
தலம்பல கொளுமிறை தவத்திரு மழுவனல்
கலமலி சாலிநல் கஞ்சன கரத்தரே

2. ஆலமர் மறைமொழி அழகிளம் தளிர்க்கரன்
மாலயன் அடிமுடி வடிவறி யாத்தழல்
ஞாலமெ லாமுயிர் நலிவில் மாயைசெய்
காலநல் லமளி கஞ்சன கரத்தரே

3. எலிவிளக் கொளிதிரி இடறமா வலிசெய்
மலிகொடை வாழ்வுறு மதிதவ மருளிய
அலிஆண் பெண்ணென் அழிவிலன் அடர்தழல்
கலியூ ழியமை கஞ்சன கரத்தரே

4. ஞாழலோ டாம்பலும் சரமஞ் சரியணி
வேழநல் தோலுடை விழிவிளக் கெளியன்
ஆழநல் ஆழிசூழ் அவனியின் அழலிறை
காழகத் தளியமர் கஞ்சன கரத்தரே

5. கோலக் குவளையொடு கூவிளந் தாரணி
ஏலமி லவங்கநறும் எழிற்கழல் ஈசுரன்
சூலத்தி ருக்கரன் தொலைவுணர் வறிவளி
காலனை மிதித்த கஞ்சன கரத்தரே

6. ஆலயத் துள்ளொளிர் அதிநிழல் வெளிவளி
மாலய மகில்பால் மலியபி டேகநல்
நூலளி சிலந்தியை சோழர சாக்கிகய
காலம யக்கழி கஞ்சன கரத்தரே

7. கொழுமழு முழுமுதல் குழுவடி யார் மலி
இழுமொலி யாழிசை ஏழேழ் புவியனல்
பழுதளி பழமலம் பழிதீர் குணமொழி
கழுநீர் மலர்க்கழல் கஞ்சன கரத்தரே

8. அழுதநல் மழலைக்கு அமுதா ழியளி
விழுதெழில் ஆலமர் வீழிமி ழலையன்
பொழுதொடு யாண்டுசெய் புலர்பரி தியளி
கழுதொடு களிநடக் கஞ்சன கரத்தரே

9. தளவமும் மாலதி தளவுவ லம்புரி
இளமலர் மாலையன் இழிவழி ஒளிஇறை
வளமனி மலைமழை வளர்கிழங் குணவளி
களமுகர் கழல்தொழும் கஞ்சன கரத்தரே

10. எளியவர் கழல்தொழும் இளம்பழம் அடியவர்
தளிதொழு திசைவளர் தளிர்கா ழியர்க்கருள்
தெளிவிலன் சிறுகுணன் திறமிலேன் எனக்கருள்
களிக்கா பாலியக் கஞ்சன கரத்தரே

–திருச்சிற்றம்பலம்–

## 79. கருங்குயில் நாதன்பேட்டை

**சத்திபுரீசுவரர் அறுசீர் ஆசிரியவிருத்தம் ஆனந்தவல்லியம்மை**

1. கருங்குயி லாகியே புரந்தரன் துதித்தெழும் கங்காள மூர்த்தி
விரும்பிய தொண்டர் விரும்பிய உருவினில் மிளிரொளிப் பேருவே
வரும்புயல் மழையிடி வளர்வயல் நிறைபொருள் வழங்கும் பெருவள்ளல்
நரகறுத் தருளும் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

2. மாலயன் நிதியோன் வானவர் விராதியர் வராகியும் தொழுதெழவே
நீலம ணிகண்டம் நெருப்புரு வான்மழை நிழலொளி காட்டியகோன்
ஆலவி டமுண்ட அற்புதங் காட்டி அன்பருள் அளித்த பிரான்
நாலும் நமக்கருள் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

3. பெரியார் மனமுறை பிங்கலத் திருவடி பேதமில் லாநீதி
அரியார் புரியார் ஆசைம றுத்தவர்க் கமுதாய் எழுந்தகடல்
திரிவார் திரிபுரம் எரிப்பார் கருணையில் திருவிழி நிழலளிப்பார்
நரிபரி யாக்கிய நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

4. செங்குமு தக்கழல் சிலம்பிசை கிண்கிணி சிறுகண் அரவுறையும்
தங்கச் சுடரொளி சங்கரன் திருவருள் சற்குரு மதியளிக்கும்
பொங்கிய கடலேழ் புலர்வுற வேலளி புண்ணியத் திருமூர்த்தி
நங்களின் நாயகன் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

5. சுந்தர நாயகன் சுயம்பொளி மாமணி சூரியன் கோடி செய்த
மந்தரன் மாமதி வானவர் பேரிறை வளரொளி விண்மீனன்
சிந்தனைப் பூங்கா சீகாழிச் சம்பந்தர் சீரிசை கேட்ட பிரான்
நந்திய வாகணன் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

6. சந்தா னந்தரும் சஞ்சலப் புயலறும் சந்ததி நிதிவளர்க்கும்
இந்தும திபுனை ஏகம்பத் தேசிகன் இத்தரை சுழற்றுமொளி

வந்தனை நியமமும் மலர் நிறை பூசைசெய் வளர்மதிக் கருளளிக்கும்
நந்தா விளக்கொளி நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

7. கன்னலன் கதிரொளி கற்பூரம் நறுமிதழ் கண்ணொளி தருமிறைவன்
பொன்னலங் காரமும் பூந்தார் நிறைமகிழ் புங்கவன் புகழீசன்
அன்னியன் எனும்சொலில் ஆயிரம் நெறிவளர் ஆனந்தத் திருக்கூத்தன
நன்னலம் தருந்தாய் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

8. சென்னியில் வளர்பிறை சிறிபொறி நாகமும் சிறகணிச் செவ்வானன்
வன்னியந் தளிரோன் வளர்கூ விளத்தோன் வானகமுழு முதல்வன்
மன்னிய சமயக் குரவோர் தமிழிசை மகிழ்ந்தெழுந் தாடியகோன்
நன்னீர்ப் பந்தலன் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

9. பேச்சினை அடக்கி பிழையறு நியமமும் பிங்கலைப் பிரணவத்தோன்
மூச்சினை ஒடுக்கி முதுகுத்தண் டோட்டி முடிநடு ஆக்கினைசெய்
வீச்சொளி நுதலில் விதவித நிறமுற விளங்கும் திருநாதன்
நாச்சிகி நாயகன் நாதன் பேட்டையின் நம்பனைத் துதிமனமே

10. பல்கலைக் குரிசில் பகுத்தறி வாண்மையும் பார்மனி தர்க்கருளும்
எல்லிடை வானில் ஏழேழ் புவியொடு ஏர்பால் வெளிவகுத்தோன்
கொல்லிமா மலையன் கொழுந்தமிழ் நாவலன் குருமுறைப் பரஞ்சோதி
நல்லியல் மாமறை நாதன் பேட்டையின் நம்பனைத் துதி மனமே

–திருச்சிற்றம்பலம்–

## 80. உளுத்தங்குப்பை

**கைலாசநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. மின்னொளிர் நெற்றிக்கண் விமலோனேவிரிசடை கதிரொளி விண்ணவனே
நின்கோ யில்வீதி கயிலாயம் நினதளிக் கோபுரம் ஐம்பூதம்
இன்னுயிர்க் கேதொரு தனியுடைமை எல்லாம் நின்றன் இறையுடைமை
உன்னமும் உடல்மதி நின்கேணை உளுத்தங் குப்பையூர் உத்தமனே

2. வெந்தழல் ஏந்திய விமலோனே விரைமலர் சூட்டிய விண்ணவனே
சுந்தரக் கோயில் கலசங்கள் சுடர்விழி புருவத் திருக்கவினே
சொந்தமென் றுயிகட் கென்னவுண்டு துகள்பொடி அணுவும் நின்னுடைமை
உந்தியும் சிந்தனை உன்கருணை உளுத்தங் குப்பையூர் உத்தமனே

3. கண்டங்க ருந்தநல் கனகமலை காலநால் யுகங்கள் கணிக்குமண்ணல்
கொண்டத ளிமதில் அண்டமெனில் குளிரொளி கருவறை யாதறியோம்
விண்தொடு கோபுரம் விமானம் விளங்கிடை வெளியுயிர் தண்டுவடம்
உண்டெனும் யாவையும் நின்கருணை உளுத்தங் குப்பையூர் உத்தமனே

4. தளிரிளம் வன்னி தாரணியன் தத்துவச் சுடர்மதி தழலோனே
வெளிர்விடை உயிருடல் காவலெனில் வெண்ணீ றுளத்தில் எப்பொருளோ
அளிப்பாக் கலழி நினதானை அறத்தவத் தோர்களி பதவிகளோ
உளமுணர் பெருமதி நின்கருணை உளுத்தங் குப்பையூர் உத்தமனே

5. பொன்நிறக் கொன்றைப் பூச்சூடும் புரவல ரேறே புதிர்கதிரே
அன்பருள் அறிவுரு ஆண்டவனே அருவம் அறியும் நெறித்தவமே
நன்மையும் தீமையும் நீயானால் நானில உயிர்செயல் நாயகனார்
உன்னை உண்மதி நின்னருளே உளுத்தங் குப்பைநகர் உத்தமனே

6. பாதச் சிலம்பொடுசதங் கையணி பாற்கட லமுதளி பரமேசா
வேதமும் மாகமத் திருமுறையம் விளம்பும் செய்தியின் விரிவடிவே
நாதமும் வேதமும் பாதமெனில் நனிமிகு பேருரு யாரறிவார்
ஓதலும் உணர்த்தலும் நின்கருணை உளுத்தங் குப்பைநகர் உத்தமனே

7. நறுமலர் கோடி மின்னலனி நாலேழ் பேரண்ட நாயகனே
அறுபதின் மூவரும் தொகையடியார் அறிவார் கூறார் அவர்நின்னில்
மறுபிறப் பறுத்தே வானளிக்கும் மாதவப் பேரொளி வடிவழகே
உறுசெயல் வினைவுகள் நின்கருணை உளுத்தங் குப்பைநகர் உத்தமனே

8. கணிதமுத் அறிவியல் எதிர்பார்ப்போ கருவிகள் உயிரின் அபிலாசை
அணிமணி அபிடேகப் பொருளோடும் அறிவுணர் வாவையும் நினதுடைமை
பணிநா கமணி பரஞ்சுடரே பகைஉற வளிக்கும் பசுபதியே
உணர்வலை தவமதி நின்கருணை உளுத்தங் குப்பநைகர் உத்தமனே

9. கதிர்ப்பிறை சூடிய கங்காளன் காவலங் கடவுள் காசியண்ணல்
மதியினர் வரைவுரு மண்ணறியும் வரையா மெய்யுரு யாரறிவார்
புதிர்ப்புதுமையும் பழமையும பொறியும் புலன்கள ளைத்தும் நினைதுடைமை
உதிர்பிறப் பும்புத்தி நின்கருணை உளுத்தங் குப்பைநகர் உத்தமனே

10. மழவிடை மீதமர் வானவனே மணிக்கழல் மிடறெழில் வையகனே
சுழிமுனை ஆறா தாரமணி சுடர்க்கழல் நடனநல் சோதிதரும்
உழவொடு தொழில்கலை உயரறிவும் உணர்வுறு தவங்கல்வி உன்செயலே
ஒழிமதி என்னையும் ஏற்றருளும் உளுத்தங் குப்பைநகர் உத்தமனே

–திருச்சிற்றம்பலம்–

## 81. வள்ளலார்கோயில்-வடகரை

**வதாண்டேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் ஞானாம்பிகை**

1. பிரமனும் கண்ணுவர் பிருகொடு மாரிசி பிழைமால் துதித்துருகி
கரங்கால் மனங்கண் கருத்துறைப் பாவங்கள் கரைத்தருள் நிறையொளியன்

நிரந்தரச் சுகமுறை நீசமில் வாழ்வளி நெடுஞ்சடை நிமலோனும்
வரம்வழி காட்டும் மலரொளிர் வடகரை வள்ளலார் கோயிலிலே

2. கவ்விய புலியெனக் கன்னிகை துயர்செய் கருத்துளப்பேயர்களும்
வவ்விய பொருளுயிர் வாழ்ந்தவர் தாழ்ந்தவர் மனமுறக்  கரைந்துருகி
செவ்விய  சுகமுற சிறைமன வாழ்வுயர் சிவமணி யாய் வணங்க
மவ்வளந் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

3. நெய்யபி டேகமும் நிறைமலர் தூவிய நியமஞ்செய் பூசையினர்
பொய்யாடு களவுசெய் புரைமிகு மனிதரை புறம்பே சாதிருக்கும்
மெய்மைநல் நிலையொடு விமலம னோன்மணி வெஞ்சுடர்த் தீபங்கள்
வையகன் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

4. தறுகன் தாருகை தவழ்வனம் அழித்தோன் தான் மகிழ் மானிடரின்
சிறுசிறு பிழையொடு பெரும் பெரும் தவறுகள் சிதையெனக் கசிந்துருகின்
நொறுங்குறும் பவமலை நூதன மகிழ்வுளம் நுழைவுசெய் பேரொளியோன்
மறுவலந் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

5. கருணை முகில் மழை கற்பகப் பெருநிதி கனிந்தளி பெருங் கொடையோன்
தருனைப்பி ரவிடை தண்வாலைத் தவறுகள் தனித்துநின் றமுதுருகின்
ஒருதுளி விழிநீர் உடன்பவம் தீர்த்தருள் உளமமர் ஓங்காரன்
மருகலர்த் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

6. குழைமகிழ் பாடண குணக்கா லாங்கிக்கும் குளிர் வரம் கொடுத்தபிரான்
இளைமை நல் வாலிபம் இடைவய தோர் பவம் இழை மனம் கசிந்துருகின்
கழையழி உழவோன் கருணைசெய் தருளும் கற்பகத் திருச்சடையன்
வளர் நறுந் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளவார் கோயிலிலே

7. காஞ்சனத் தைலமும் கசிநாவ லூற்றொடு கற்பமுள் சதுரகிரி
கோஞ்சீர் மூலிகைக் கொங்கணர் குழிநீர் குவையளி திரிசூலன்
ஊஞ்சல முளம்செய் உலுத்தமை மாற்றும் ஓங்கா ரத்தொளி யோன்
வாஞ்சையத் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

8. முத்தியில் மூழ்கிய முனிவரும் இருடிகள் முந்துறத் தொழமகிழும்
நித்தியப் பேரோளி நீலம ணிகண்டன் நேசப்பொ ருளளிக்கும்
பத்தியிலூறிய பரனடி யார்க்கெலாம் பரவசத் தேன முதோன்
மத்தம ரைக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

9. குண்டலி மோனமும் கும்பகம் பிங்கலை குதியுறச் சுழிமுனையில்
அண்டர்விண் வேதியன் அடிதொழு தமர்வுற அவியுணா வளியாக
புண்டரி கமேறி புதுப்புது நாதமும் புதரொளி கூத்தாடும்
மண்டலன் திருக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே

10. கருமால் அயனும் கண்டறி யாக்கழல் கடுவெளி மீறியதீ
ஒருநாள் வணங்கினும் திருவடி யாரெனில் உளமுறைந் தொளிரிறைவன்
பெருமான் எம்மான் பெருகிய கருணைப் பெரியோன் சுடர்க்கோலன்
வரும்பே ரொளிக்கழல் மலர்ந்தெழும் வடகரை வள்ளலார் கோயிலிலே
-திருச்சிற்றம்பலம்-

## 82. ஆறுமொழித்தேவன்

**விசுவாநாதன்** **கலிவிருத்தம்**

1. ஒருவன் அருவுரு உருவம் அருவம்
செருகளப் புன்னகை செஞ்சுடர் ஆதியன்
பெருகிய உலகுயிர் யாவிலும் உணர்வுரு
திருநிறை அறுமொழித் தேவனின் நிருத்தனே

2. மழவிடை வாகனன் மலர்மலைக் குவிகவின்
குழல்மகிழ் யாழிசை குருவருள் தருமிறை
உழவொடு தொழில்வளர் உலகிசை நாயகன்
செழிவயல் அறுமொழித் தேவனின் நிருத்தனே

3. பொதுமதி புரியா புரைகே வலமதி
புதுவுடல் சகலமும் பொறிப்புலன் அளிப்பனல்
வதுவைநல் மானிடம் மலமிந் துயர்வுற
செதுகா ஆறுமொழித் தேவனின் நிருத்தனே

4. கோதறு வெள்ளியங் கிரிசது ரகிரி
மாதா மலர்மடி மாமலை லிங்கமாய்
பாதம்ப பணிந்தோர் பவமறக் கருணைசெய்
சீதனன் அறுமொழித் தேவனின் நிருத்தனே

5. நாதமும் நான்மறை நாயகத் திருவருள்
காதணித் தோடுறை கவிமுகில் பேரலை
சோதனை சிறிதொடு சுகம்நிறை தருமிறை
தீதிலா அறுமொழித் தேவனின் நிருத்தனே

6. தவவடித் தழல்மலை தாண்டவ மூர்த்தி
சிவசிவ எனத்துதி செய்வோர்க் கருள்மழை
கவலைகள் தீர்க்கும் கருணையங் கடவுள்
தெவமலி ஆறுமொழித் தேவனின் நிருத்தனே

7. பூவனம் புவனம் புதிர்பகி ரண்டத்தன்
கோவணத் தாடையன் குங்குமத் திலகன்
நாவர சர்க்கருள் ஞானமா மூர்த்தி
கூவல்நல் ஆறுமொழித் தேவனின் நிருத்தனே

8. சங்கிசை சேகண்டி தண்ணுமை கரடிகை
பொங்கிசை மகிழ்நன் போதாந் தத்திரு
மங்கல வாழ்நிதி வழங்கும் மாணிக்கம்
செங்கதிர் ஆறுமொழித் தேவனின் நிருத்தனே

9. தோன்றாத் துணைவன் சுந்தரச் செந்தி
ஆன்றோர் அணைந்தோர் அருளிரு முத்தியர்
வான்றோய் மந்திரர் வானவர் பூசைசெய்
தோன்றா டாறுமொழித் தேவனின் நிருத்தனே

10. அறிந்தேர் புரிந்தோர் ஆயிரங் கோடிநூல்
நெறியுறப் பயின்றோர் நிறைமதிக் கருளிறை
சிறியேன் எனைச் சிவப் பூசைசெய் வரமளி
செறிசுடர் ஆறுமொழித் தேவனின் நிருத்தனே

–திருச்சிற்றம்பலம்–

## 83. பாண்டூர்

**வைத்தியநாதர்** **வெளிவிருத்தம்**

1. தாரகை சூரியர் சந்திரர் தாள்பணி – பாண்டூரே
ஓரொளி யானவர் ஊன்றிய தாளருள் – பாண்டூரே
தேரெழில் ஆரூர்த் திருவா திரையன் – பாண்டூரே
ஊரவர் பூசையும் உற்றார்க் கருளரன் – பாண்டூரே

2. நாகம ணித்திரள்நடம் பயின் றாடெழில் – பாண்டூரே
சோகம ழித்துயிர் சுக முறச் செய்வதும் – பாண்டூரே
ஆகமக் கோயிலன் அம்பிறை நாயகன் – பாண்டூரே
யாகமும் பூசையும் நண்பரன் ஏற்றருள் – பாண்டூரே

3. இந்திர வானவர் ஈசனைப் போற்றுமூர் – பாண்டூரே
மந்திரச் சித்தர்கள் வானவி ராதியர் – பாண்டூரே
அந்தகற் கன்புசெய் தாடிய கோயிலும் – பாண்டூரே
செந்தழ லீசனின் திருவடி காட்டலும் – பாண்டூரே

4. விண்ணொளி மாணிக்கம் வெஞ்சுடர் மாமலை – பாண்டூரே
கண்கவின் காதலன் காடுறைக் கூத்தனும் – பாண்டூரே
திண்டிரை ஏழ்புவி செய்தரன் ஆடிய – பாண்டூரே
தொண்டருக் காரமு தாகிவ ரந்தரும் – பாண்டூரே

5. பேரொளி மின்னலன் பிஞ்சகன் எந்தைநல் – பாண்டூரே
சீரொளி நீள் சடை செஞ்சுடர் ஆதியன் – பாண்டூரே
கூருளி யாகியே கோதழி மங்கலன் – பாண்டூரே
காரிருள் ஊணளி மாறனுக் கன்பரன் – பாண்டூரே

6. நாரணன் நான் முகன் நாளும் தொழுதெழும் – பாண்டூரே
காரண காரியன் கற்பக மூர்த்தியும் – பாண்டூரே
பூரணன் பிங்கலன் பூசைகள் ஏற்றருள் – பாண்டூரே
தோரணன் தில்லையன் சுந்தரக் கூத்தரும் – பாண்டூரே

7. ஆதியெம் மானை அருளெனும் மானிடம் – பாண்டூரே
சோதியச் செந்தழல் துதித்தழு தன்புறும் – பாண்டூரே
வீதியெ லாம்திரு நீறணி மானிடம் – பாண்டூரே
ஓதிய மாமறை உள்ளுருகும் தொண்டர் – பாண்டூரே

8. தாமதத் திருமணம் தானே நடத்தரன் – பாண்டூரே
மாமதம் மாற்றி மனிதருக் கருளொளி – பாண்டூரே
பூமனக் காரைத்தாய் போற்றிய நம்பனூர் – பாண்டூரே
ஏமனைத் தண்டித்த ஈசனமர்ந்ததும் – பாண்டூரே

9. மகிமா லகிமா கரிமா செய்யும் – பாண்டூரே
தகிமா எரியுடல் தாவுறும் குண்டலி – பாண்டூரே
நெகிழா நெஞ்சம் நிறையுயிர் மாற்றும் – பாண்டூரே
ஆகிலோர் ஆண்டவர் ஆதரித் தருள்தரும் – பாண்டூரே

10. ஏரோர் இளையோர் இல்லோர்க்கிறைவனும் – பாண்டூரே
பாரோர் பணிவோர் படித்தோர் தொழுமரன் – பாண்டூரே
ஊரோர் உறவோர்க்கு உயர்நிதி யளியொளி – பாண்டூரே
நேரோர் சுடராய் நிமலன் தோன்றூர் – பாண்டூரே

–திருச்சிற்றம்பலம்–

## 84. திருமங்கலம்

**பூலோகநாதர்** **கலிவிருத்தம்**

1. பூரணப் பூங்கழல் புரிசடை புங்கலன்
காரண காரியன் கலங்களுர் தீர்ப்போன்
நாரணன் பூசைசெய் நற்றமழிழ் வேதியன்
வாரணத் திருமங் கலத்துறை வாமனே

2. உறுவெளிப் பேரண்டம் உருவில் பேராற்றல்
மறுவுரு மானிடர் மதியுணர் வளிப்பவை
செறிமதி செய்கலை சிலைவடி வமர்ந்தருள்
கறுமலர் திருமங் கலத்துறை வாமனே

3. புனல்சூழ் புவிபல பொதிநிழல் வெளியமை
அனல்வடி வருவன் அறுமதி மானிடம்
தனக்குரு வமைக்கும் தவறினைப் பொறுத்தருள்
கனகநல் திருமங் கலத்துறை வாமனே

4. கோளோர் கோடிசெய் கொன்றையன் தாரினன்
கேளாப் பூசையும் கிளருரு அலங்காரம்
ஆளோர் ஆசதை அன்பென் றேற்றருள்
காளகத் திருமங் கலத்துறை வாமனே

5. மெய்ப்பே ராற்றலன் விரிவெளி பரப்பனல்
பொய்யா வடிவங்கள் புனைமனி தர்க்கருள்
அய்யன் அறிவருள் அடியார் விரும்புரு
கய்யாத் திருமங் கலத்துறை வாமனே

6. எல்லையில் லாவெளி இருள்வளி தாண்டிய
வல்லமை ஆற்றலன் மருவறப் படர்ந்தோன்
தொல்பழங் காலமும் தொடர்புது உகஞ்செய்
கல்விநல் திருமங் கலத்துறை வாமனே

7. புண்ணிய பாவமும் புதிரார் பழமலம்
எண்ணுமு யிர்களில் இருந்துணர் வளிக்கும்
பெண்ணியல் ஆணலி பிரிவினர்க் கருணைசெய்
கண்ணிய திருமங் கலத்துறை வாமனே

8. பட்டியத் கடங்க பழம்புதுக் காலத்தன்
இட்டவ டிவெடுக்கும் ஏகம்பப் பெருந்தழல்
கெட்டதும் நல்லதும் கிட்டிலா தனசெய்யும்
கட்டெழில் திருமங் கலத்துறை வாமனே

9. இடம்பொருள் காலத்தின் எல்லையை கடந்ததோர்
தடம்புனல் தீஇயற்கை சங்கமப் பேரொளி
மடமதி கற்பனை மனிதருக் கும்அருள்
கடம்புநல் திருமங் கலத்துறை வாமனே

10. தத்துவம் வித்தகம் சத்துணர் சித்துகள்
புத்தகம் மொத்தமும் கற்றவர்க் குற்றவன்
பத்தியும் புத்தியும் படிப்பிலேன் எனக்கருள்
கத்திசை திருமங் கலத்துறை வாமனே

–திருச்சிற்றம்பலம்–

## 85. சோழம்பேட்டை

**தான்தோன்றீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. பூசனிப் பழஉருப் பூமியுருள் புரையறச் சுழன்று புல்வனமும்
பாசிசெய் படர்கடல் மேல்கீழாய் பகுத்தளித் துயிர்வாழ் விடமமைத்த
நேசநல் மாயைசெய் நிமலவிழி நித்தியன் பூரணன் நெடுஞ்சடையன்
தோசமில் வாழ்வருள் தூயமன்னன் சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

2. இலைபூ காய்கனி கிழங்குவிதை இயங்கிளம் புள்மா இருமூன்றும்
அலைஉயிர் உணவளி ஐமுகத்தன் அறிவொடு பொறிப்புனல் கருவிதந்தோன்
வலவா னூர்தியும் மருத்துவமும் வளவாழ் வருளிய மாகேசன்
தொலைவி லுணர்மதி துணைசெய்த சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

3. முடிவுறு கலியுக மூவாசை முதிர்மா னிடத்துடல் மூழ்கலுற
ஒடுக்குறு நிலக்கோள் உடைந்தாறு உருவுற முதல்கடல் ஊழிசெய்த
நடுக்குறு கேவலத் துயிர்யாவும் நன்னா பாசியில் உடலமைத்த
துடிஇசை யில்எழில் தோற்றமளி சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

4. குமரிமா முகடுறை பனிஉருகி கோட்டுமீன் இமயக் கடல்நிறைக்கும்
தமர்கவிக் கபாட புரநகரில் தமிழாய் புலவோர்த் தமிழ்த்தலைவன்
நமன்நான் முகனுக்கும் நலப்பதவி நல்கிநல் மாலுக்கும் நலமளித்தோன்
சுமங்கலிப் பூசையர் துதிமகிழும் சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

5. ஆடல்வல் வான்கழல் ஆனந்தன் அருகுறை நயில்நதிக் கரைக்கோயில்
ஏடொரு கோடியும் இருங்கடல்சேர் இரண்டாம் ஊழியை இயற்றியகோன்
பீடம் தேறிய பெருங்கூத்தன் பெருங்குருகு நாரை நூல்செய்தோன்
தோடெழில் மாமதிச் சுயம்பொளியன் சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

6. வடகடலைஇமய மலையாக்கி வான்தொடு குமரியைக் கடல்செய்தே
இடவல் நிலஞ்செங் கடலாக இருமூ கண்டங்கள் இயற்றிய கோன்
படப்பாம் பொடுசிற கணிமகிழ்ந்தே பழசெங் கருமணி தருக்கருள்வோன்
சுடலையில் ஆடும் சுகதேவன் சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

7. கூம்புயர் கோபுரம் கோவேந்தன் குளிருடல் புதைநிலக் கோயிலமை
தீம்தமி ழொடுபல மொழியளித்தே சீர்மனி தருக்கினி மாயைதந்தோன்
பூம்பொழில் தில்லைப் பொதுநடனன் புதுமூன் றாமூழி புரிந்தபிரான்
தூம்பா மலரணி சுகதேவன் சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

8. பூவொடு பாம்பணி புரிசடையன் பூவனியத் தவமணி போதாந்தன்
தீவொடு தீபகற் பமும்பிரித்தே சிறுசிறு நிலங்களில் செழிப்பமைத்த
ஆவொடு புள்விலங் களித்தபிரான் அனைத்திலும் உடலுணர் வான்தணல்
தூவெளி தழலன் சுயம்பொளியன் சோழம்பேட்டையின் சுடர்க்கொழுந்தே

9. திருவுரு அரவமர் செறிமகுடன் திருவா திரையன் செஞ்சுடரன்
பருவுரு சூக்குமம் படிநிலைகள் பசுபதி பாசப் பகிர்வுணர்த்தும்
கருவுரு மும்மலத் துரிசறுக்கும் கருணைநல் வாழ்வருள் காலகாலன்
துருவத்தி லுறைஇருள் ஒளியானோன் சோழம் பேட்டையின் சுடர்க்கொழுந்தே

10. எல்லையில் பேரண்டத் தேகம்பன் எல்லா மாகிய ஏகவிசை
பொல்லாப் புரைமலம் புதுமயக்கம் பொறிப்புல னடக்கும் போதமலை
கல்விபட் டறிவொடு கலையுணர்வும் கருத்தறி யாளனைக் காத்தருளும்
தொல்வினை தீர்க்கும் சுயம்பொளியன் சோழம் பேட்டைடயின் சுடர்க்கொழுந்தே

–திருச்சிற்றம்பலம்–

## 86. பண்டாரவாடை - மயிலாடுதுறை

**அழகியநாதர்** **கலிவிருத்தம்**

1. பாற்கடல் விடமுண் பங்கய கழலன்
கூற்றுவ னத்தடிந்த கோயிலின் தலைவன்
ஆற்றுவர்க் கற்றறம் பொருளின்ப வீடளி
பொற்சகப் பண்டார வாடைநல் மழுவனே

2. பாசநா சனுயிர் பணிந்தெழு மைமுகன்
காசளித் தருளாளர் கடும்பசி தீர்த்த
மாசில் வாசகர்க்கும் மறைநூ லருளிய
வாசமலர் பண்டார வாடைநல் மழுவனே

3. பாசுப தமளி பாண்டரங்க கூத்தன்
வீசுமொ ளிச்சடை விண்மீன் மேனியன்
பூசுதத் திருநாளைப் போவார்க்குப் புகலளி
மாசுகிப் பண்டார வாடைநல் மழுவனே

4. பானகம் தண்ணீர் பந்தலை அமைத்தே
போனக மளித்த புண்ணிய மூர்த்தி
தேனகத் திருத்தொண்டர் தொகைபா டவைத்த
வானகன் பண்டார வாடைநல் மழுவனே

5. பாஞ்சசன் யருக்கும் பதிக்சக் கரமளி
பூஞ்சிற கணிந்த புவனப்பே ரிறைவன்
காஞ்சன மேனியர்க் கதிர்முடிப் பெரியோன்
வாஞ்சைசெய் பண்டார வாடையின் மழுவனே

6. பாட்டிசை ஆடலும் பயில்பரஞ் சோதியன்
காட்டுறை வேடனை குகனென் றாக்கிய
கேட்டிருள் மலமதி கிண்கிணிச் சதங்கையன்
வாட்டியப் பண்டார வாடையின் மழுவனே

7. பாடலொன் றளித்தே பசித்தரு மிக்கருள்
எடணிக் கரத்தோன் ஈசுர மூர்த்தி
நாடக நாயகன் நற்றமிழ் மறையளி
மாடகப் பண்டார வாடையின் மழுவனே

8. பாணபத் திரர்க்கொர பலகைப் பொன்னளித்த
கோணலம் வீணையன் கொன்றையஞ் சடையன்
தூணகத் தரிக்கருள் சுந்தரத் தழலன்
மாணல்நல் பண்டார வடையின் மழுவனே

9. பாதிரி கூவிளம் பவளமல் லியணி
மூதறி வளிப்பனல் முக்கண் சோதியன்
நாதத் திருவருள் நாத்திகர்க் குமருள்
வாதுமை பண்டார வாடையின் மழுவனே

10. பாவகம் ஏந்திய பரஞ்சுட ராதியன்
நாவர சர்க்கருள் நான்மறைத் திருவருள்
ஏவலஞ் சிதடெனை ஏற்றருள் புரிந்த
மாவளப் பண்டார வாடையின் மழுவனே
–திருச்சிற்றம்பலம்–

## 87. மன்னம்பந்தல் – தரும புரம் ஆதீனம்

**தருமபுரீசுவரர் எழுசீர் ஆசிரிய விருத்தம் அபயாம்பாள்**

1. கன்னிய ரெழுவரும் கருக்கலில் சாந்தொடு
கயிலயங் கடவுளைத் தொழுதெழவே
சென்னிநல் கதிரவன் செஞ்சுடர் துவியே
திருக்கழல் ஒளிமலர்பூசை செய்யும்
முன்னுற நியமம் முடித்தோர் வழிபட
மும்மலம் தீர்திரு முகந்தோன்ற
வன்தொண்டர் வணங்குறும் வளர்தரும புரத்தின்
மழுவனைத் தொழுதுளம் மகிழ்வீரே

2. நாணினை வீசிய நலமழிப் பவமற
நமன்நள் ளிரவில் பூசை செய்யும்
வேணியச் செஞ்சுடர் மிகமகிழ்ந் தருள்தரும்
விண்ணவர் தொழுதெழும் திருக்கோலம்
ஊணினைக் குறைத்தே உளங்கசிந் துருகுறும்
உண்மையன் பரின்முன் ஒளிதோன்ற
மாணிக்கர் வணங்குறும் வளர்தரும புரத்தின்
மணிக்கழல் தொழுதுயிர் உய்வீரே

3. போகியத் தாருகைப் புரைநிறை முனிவோர்
பொய்மையை மாற்றிய புகழீசன்
ஏகன னாகியே ஏழேழ் புவியுயிர்
இயக்கி யருள்செயும் ஈசானன்

மோகித இராவணன் முதிர்பதின் சிரங்களை
முறித்தெழுங் காட்சிகள் முன்தோன்ற
வாகீசர் வணங்கொளி வளர்தரும புரத்தில்
மனமுறத் தொழுதருள் பெறு வீரே

4. சிந்திய வேர்வுறுப் பந்தக னுடலம்
சீருறக் கணமென செய்தளிகோன்
முந்திய வானவர் முனிவர் இருடிகள்
முத்தியர் சித்துக ளாதீனம்
இந்தியர் அன்னியர் இறையடி சேர்ந்தோர்
இணைபூ சைக்கோலம் தினந்தோன்ற
வந்தனைக் காழியர் வணங்குறச் சுடரொழில்
வளர் தருமபுரத்தில் வணங்கீரே

5. மறைமலை மாணிக்கம் மழுக்கரப் பரம்பொருள்
வானகந் தாண்டிய வளரரொளியோன்
கறைமிட றமுதன் கற்பகத் தேன்மழை
கங்கணக் கிரகணம் செய்தேவன்
சிறையுறை வேந்தன் சிவசிவ எனப்பூசை
செய்ததும் எழுந்தருள் எழில் தோன்றும்
மறைநேசன் வணங்குற வானகத் தீசனை
வளர் தருமபுரத்தில் வணங்கீரே

6. கடறும தகரியை பிடரொடு உரித்தே
கனகநல் மேனியில் போர்த்தியகோன்
இடரிர வடியார்க் கிடமளி வேடனை
இரும்புவிக் கோநளப் பிறவிசெய்தோன்
நெடுவரைக் குமரிநீர் நிறைவுற இமயநீர்
நீள்மலை யாக்கிய நிலைதோன்ற
மடக்கொடி காரைத்தாய் வணங்குற ஈசனை
வளர்தரு மபுரங்கண் டுய்வீரே

7. இமயப் பெருவரை எழுந்ததும் கணங்களும்
இன்னிசைத் தாண்டவம் இணைந்தாடும்
நமன்பரி வாரமும் நறுமனச் சாந்துகள்
நவமணித் தாரொடு காத்திருக்க
அமர்நெறிக் கோடிய அவனியத் தாவிகள்
அழுதுதொ முதுருகி அடிபணிந்த
சமயக் குரவோர்தாள் பணி காட்சிகள்
தருமபு ரத்தெழுத் துதிப்பீரே

8. செந்தலை நாகமும் செவ்வர ளிகொன்றை
சிறுபூ ழையணிச் செஞ்சுடரை
மந்திர மூலரும் வானவர் நாடுறை
மறைக்குரு மாசன்னி தானங்கள்
இந்திர பூமியர் இயற்றமிழ் யோகிகள்
இனிசாந் திசையொடு பூசை செய்ய
சந்தனத் திருக்கழல் சங்கரன் கூத்தினை
தரும புரத்தில் கண்டுய்வீரே

9. கிரியை சரியைக் குண்டலி சுழிமுனை
கிளைநுத லேறிநல் ஒளியாகி
கரியுரி அரவணி கயிலயங் கிரியணை
கனவுந னவுறக் கலந்துருகி
அரியயன் இந்திரன் அண்டபே ரண்டத்தின்
அனைத்துயிர் அகமனப் பூசை செய்ய
வரிசிலைக் கண்ணப்பர் வணங்கிய காட்சியை
வளர்தரு மையில் துதித் துய்வீரே

10.காற்றொடு தீவெளி கனிநிலம் புனல்நதி
கற்பகத் தேழ்புவி படைத்தபிரான்
கீற்று நி லவொடு கிண்கிணிச் சதங்கை
கெம்பும ரகதத் தலங்காரம்
நேற்றின்று நாளைய நேசம னிதர்கள்
நிலமுறத் தொழுதுயிர்ப பூசை செய்யும்
மாற்றுடல் மூலரும் வணங்கிய காட்சியை
வளர்தரு மையில் துதித் துய்வீரே

–திருச்சிற்றம்பலம்–

## 88. மன்னம்பந்தல் – தருமபுரம்

**ஞானபுரீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **ஞானாம்பிகை**

1. மங்கள மாணிக்கத் திருமேனி மாநிதி சந்ததி தந்துவக்கும்
பொங்கமு தப்புனல் பூமாரி பொழிவுற நாடுந லங்காக்கும்
சங்கிடை முத்துக்கள் தனேந்தும் சங்கத்தமிழ்ப் பொன்னி நீரூட்டும்
நங்களின் நலம்வளர் நான்மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

2. ஓங்கிய செந்தமிழ் ஓங்காரன் ஊழியில் உயிரழித் துயிர்புதுக்கும்
பூங்கழல் புண்ணியன் புரிசடையன் பூதகன ணஞ்சூழ் பொன்னுலகோன்

ஏங்கும டியார்க் கின்னமுதன் ஏழையர் நினைத்ததும் அருளளக்கும்
நாங்கள் தினந்தொழும் நான்மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

3. மந்திர வீணையன் மான் மரையோன் மத்தம லரணி வானவில்லோன்
எந்திர பூமியின் இயல் மதியோன் இத்திநி ழல்மர் எழி லீசன்
அந்தமி லாச்சுடர் அலங்காரன் அம்பலக் கூத்தொழில் பூம்பாதன்
நந்தமிழ் நாயகன் நான் மறையோன் ஞானபுரி ரீச்சர நாயகனே

4. பந்தம்ப ரிவளிப் பாற்கடலோன் பசுபதி யாகிய பரஞ்சோதி
கந்தம லர்வனச் கங்காளன் கற்பகப் பரம்பொருள் கனிய முதன்
சொந்மெல் லாம்திரு வடியார்கள் துறக்க மருள்தரும் சொக்கேசன்
நந்திக் கருளிய நான்மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

5. விண்ணிலு லாவரும் வெஞ்சுடரோன் வீரமீ ரந்தரும் விமலோனே
கண்ணிலொ ளியோடு கருத்தறியும் கலந்தளித் துவக்கும் கங்காளன்
மண்ணகத் துணைமனை மக்களுடன் மதிநிதி கல்விப் பதவிதரும்
நண்ணலர் தீர்க்கும் நான்மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

6. மஞ்சும லைமுகில் மழைக்கிழவோன் மாற்றுப்பொன் மூலிகை மகிழ்ந்தளிப்போன்
நெஞ்சுறை பிணிபவம் நீக்குமொழி நீலம ணிகண்டப் பேரிறைவன்
கஞ்சம லர்க்கொன்றை கங்காளன் கருணா மூர்த்தி காவிரியோன்
நஞ்சுண் டமுதளி நான்மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

7. ஏழ்தவ முனிவோர் விண்ணிருக்கும் எழில் மீன் மண்டலம் ஈந்தபிரான்
தாழ்பணி இராவணற் கருளளித்தே தாமரை மாலுக்கும் உறவு செய்தோன்
வாழ்வா தாரங்கள் மண்ணிருத்தி மானிடம் வளர்க்கும் மாமுனிவன்
நாழ்மன மழித்தருள் நான்மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

8. கதிவிதி மதிசெய் கற்பூரன் கார்த்திகை ஆதிரை விண்மீனன்
சதிபதி வாழ்வருள் சங்கீதன் தாரகை ஆன்மா தருஞ்சோதி
அதிபதி பேரண்டம் பலகோடி அவனியு கமுற அருளளித்தோன்
நதிபனி நீரருள் நான் மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

9. வடகலை பிங்கலை வளியேறி வைநுதி சுழிமுனை நுதலேகி
திடமளி யோகத் தியானமுற சிந்தையில் செஞ்சுடர் தோன்றலுறும்
புடமுறு பொன்னிணை மேனியொளிர் புதுப்பொலி வருளும் புங்கவனே
நடம்பயில் அரவணி நான் மறையோன் ஞானபு ரீச்சர நாயகனே

10. குருகிற கறுகொடு கொன்றையந்தார் கூவிளஞ் சூடிய கோமேதம்
பெருகிய மானிடப் பேயழித்தே பிரியநல் மனிதரை வாழவைப்போன்
அருகிய பரிவுளம் திருத்தியருள் ஆலயங் கோடிக் கமுதீசன்
நரகமில் வானருள் நான் மறையோன் ஞானபுரீச்சர நாயகனே

–திருச்சிற்றம்பலம்–

## 89. மாணிக்கப் பங்கு - ஆனைக்கோயில்

**அமிர்தசுந்தரர்** **கலிவிருத்தம்**

1. மின்நெடும் மிளிர்சடை விண்ணவர் பேரிறை
மன்பதை காக்கும் வளர்கலை ஞானியன்
பன்மலர் மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
குன்றிநல் ஆனைக் கோயிலின் சுந்தரமே

2. திங்கட்சி றுபிறை திகழ்நெடுஞ் சடைமுடி
அங்கசன் உருவழி அனல்விழிப் பெருந்தகை
புங்கநல் மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
குங்குமநல் ஆனைக் கோயிலின் சுந்தரமே

3. விஞ்சையன் விமலன் வீணைஓர் கரத்தன்
மஞ்சளங் கனகநல் மலர்தலை மேனியன்
வருகுமில் மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
குஞ்சரத் தானைக் கோயிலின் சுந்தரமே

4. தவளநல் புன்னகை தாமரைத் திருக்கழல்
புவனப் பெருஞ்சுடர் போதம ளிப்போன்
பவளநல் மாணிக்கப் பங்குகறை மழுக்கரன்
குவளைநல் ஆனைக் கோயிலின் சுந்தரமே

5. கந்தம ணிக்கழல் கரும்பொறி அரவணி
பந்தனை மலமழி பாருறை நாயகன்
மந்திர மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
குந்தன ஆனைக் கோயிலின் சுந்தரமே

6. படிக மணிவெண் பொடியணி செம்மலை
அடிகளென் றடிபணி அன்பர கமுறையும்
வடிவெழில் மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
கொடிமலர் ஆனைக் கோயிலின் சுந்தரமே

7. நிறையொளிச் சங்கொடு நாகசு ரம்மகிழ்
உறைவிடம் உறவுகள் உயிர்க்கருள் ஆசான்

மறையொலி மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
குறைதவிர் ஆனைக் கோயிலின் சுந்தரமே

8. உக்கிர மூர்த்தி ஊர்த்துவத் தாண்டவன்
சக்கரத் திருமால் சங்கிசை பூசைசெய்
வக்கனை மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
கொக்கரி ஆனைக் கோயிலின் சுந்தரமே

9. பட்டிகை எனப்பாம் பரையணி ஈசுரன்
வெட்டுகை தடுத்தரி வாட்டாய னார்க்கருள்
வட்டிகை மாணிக்கப் பங்குற மழுக்கரன்
கொட்டிசை ஆனைக் கோயிலின் சுந்தரமே

10. இங்கித யாழிசை ஏகம்பப் பெரியோன்
அங்கத நாயெனக் கடியவர் உறவளி
மங்கல மாணிக்கப் பங்குறை மழுக்கரன்
கொங்கலர் ஆனைக் கோயிலின் சுந்தரமே.

–திருச்சிற்றம்பலம்–

## 90. நல்லத்துக்குடி - குயிலாடுதுறை

**ஆலந்துறையப்பர் கலிவிருத்தம் குயிலாடுநாயகி**

1. காலைக்க திர்தொழும் கங்குலி மதிதொழும்
சோலைக்கு யில்மகிழ் சுந்தரப் பண்ணொலி
ஞாலக் கவிக்கடல் நாவரசும் தொழுத
ஏலநல் லக்குடி ஈசன்ம கிழூரே

2. நீசம னமறும் நேசம திதரும்
பாசக்கி ணற்றுநீர் பார்முழுச் சொந்தஞ்செய்
தேசத் திருவடி சிவனடி யார்தொழும்
ஏசலில் நல்லக்குடி ஈசன்ம கிழூரே

3. ஊணக்கண் ணொளியொடு உள்ளொளி மிளிர்ந்தெழும்
காணக்கன் கூசுமோர் கனகச் சுடர்வரும்
வீணைக்கு ளிரிசை மென்மொழி யார்தொழும்
ஏணம்நல் லக்குடி ஈசன்ம கிழூரே

4. காமனெ ழிலுருவை கருக்கிய சுடர்விழி
தீமைய ழிப்புயர் தேசிக நாயகன்
ஊமைம னிதருக் உருபொருள் நலமருள்
ஏமநல் லக்குடி ஈசன்ம கிழூரே

5. அன்பும களொடும் ஆசைமகனும் தரும்
வன்புரை மானிடர் வழிபட பரிவளி
பொன்னனை யாட்கருள் புண்ணிய மூர்த்தி
இன்புநல் லக்குடி ஈசன்ம கிழூரே

6. கண்டங் கருத்தவன் கயவர்க் கெரிதீ
பண்டுபார்த் தனுக்கும் பாசுப் தந்தந்த
தொண்டர்க்குத் தொண்டனெம் சுந்தர சுடர்மலை
இண்டைநல் லக்குடி ஈசன்ம கிழூரே

7. செங்குமு தக்கழல் திரிசடை விண்ணவன்
சங்குமா லுக்கனல் சக்கரம் தந்தபொன்
கொங்கணர் போகர்க்கும் குணச்செந் தூரமளி
இங்கநல் லக்குடி ஈசன்ம கிழூரே

8. நேருற நின்றுநீ றாகினன் அந்தகன்
போருற வந்தோன் பூதக ணஞ்செய்த
ஆரூரன் அருணையன் ஐயாறு கொண்டோன்
ஏருறு நல்லக்குடி ஈசன்ம கிழூரே

9. ஒருவினைக் காமஞ்செய் இருவினை மானிடம்
பெருகிய மும்மலம் பிறப்பறப் பிஞ்சகன்
அருமறைக் கழல்தொழ அரவணைத் தருள்செய்
இருங்கனி நல்லக்குடி ஈசன் கிழூரே

10. மூச்சை யடக்கியே முன்ரேசம் வஞ்சனை
பேச்சை யடக்கியே பிஞ்சகன் கழலேந்தி
ஓச்சம ணிப்பூரம் ஒளிமணிக் கதிதரும்
ஏச்சில்நல் லக்குடி ஈசன்ம கிழூரே

–திருச்சிற்றம்பலம்–

## 91. மூவலூர்

**திருமார்க்கசகாயர்     தரவுகொச்சகக் கலிப்பா     சௌந்தர்யநாயகி**

1. ஏழமர மாதுகளும் ஈசனைப் பூசைசெய்ய
கோழம்பக் கோபுரத்தின் கூரொளி ஈண்டுவரும்
தாழும் பூ வினைதடிந்த தற்பரஞ் சோதியனை
தோழமைச் சுந்தரரும் தொழுதநல் மூவலூரே

2. அப்பிய பாவமற அயனமர் பூசைசெய்ய
செப்பொலிக் குத்தாலச் செம்மணி அசைந்தொலிக்கும்

ஒப்பனைத் திருவடிவன் ஓங்காரம் மூர்த்தியினை
அப்பரும் தொழுதுவந்த அருள்திகழ்ந்த மூவலூரே

3. பூவடித் திருமாலும் புரையறும் பூசைசெய்ய
ஆவடு துறைக்கோயில் அகில் மணம் வளிசூட்டும்
நாவருள் அளித்தசுடர் நானிலப் படைப்பொளியை
கோவலம் சேக்கிழாரும் கும்பிட்ட மூவலூரே

4. கானுறைக் கொற்றவையும் கவின்மணிப் பூசைசெய்ய
மானுறைத் தேரழுந்தூர் மலர்மணம் அரங்கேறும்
ஈனுயிர்க் கருவளிக்கும் ஈசனின் திருவடியை
ஞானசம் பந்தமணி நனிபணி மூவலூரே

5. பிருகொடு அத்திரியும் பிங்கலரும் தொழுதிருக்க
அருள்நமச் சிவாய மூர்த்திகளும் பூசைசெய்ய
திருவாலங் காட்டுக்கூகை சிவசிவ என்றிசைக்க
குருமூல ரும்பணிந்த குறையறு மூவலூரே

6. துந்துபி நாதமுற இந்திரனும் பூசைசெய்ய
சந்திரனும் சூரியனும் தனிந்துளம் துதித்திருக்க
அந்திர நமச்சிவாயர் அவதரித்தே தொழுதிருந்த
முந்தகன் அருளளந்த முத்திநெறி மூவலூரே

7. நந்தியொடு கின்னரரும் நறுமலர்ப் பூசைசெய்ய
கந்துக வேள்விக்குடி கவர்மணப் புகைபடர
சொந்தமுறச் சுகமளிக்கும் சுடரொளித் திருக்கழலை
செந்தனச் சோழர்குலம் சிரம்பணி மூவலூரே

8. காண்டக் கபாடபுர கடுவெளிச் சித்தர்களும்
தூண்டா மணிவிளக்கைத் தூமலர்ப் பூசைசெய்ய
வேண்டப் பொருள்புகழும் வினையளிச் சுடர்க்கழலை
பாண்டியர் பணிந்துவந்த பரமனின் மூவலூரே

9. மந்தநல் வடகலையும் மாறாப் பிங்கலையும்
செந்தா மரைநுதலில் சேர்வுற கூத்தொளிரும்
விந்தார் அடங்கிவிடும் விரைந்தெழும் மனோன்மணியும்
சந்தா னக்குரவர் தாள்பணியும் மூவலூரே

10. தானநல் மாணிடரும் தமிழ்மறை வேதியரும்
கானநல் தேவாரம் கவித்திரு வாசகமும்
ஞானநல் திருவடியார் நாவிசைத்துப் பூசைசெய்ய
ஏனையரும் தினம்வணங்கும் ஏற்றமளி மூவலூரே

–திருச்சிற்றம்பலம்–

## மூவலூர்

**திருமார்க்கசகாயர் அறுசீர் ஆசிரிய விருத்தம் சௌந்தர்யநாயகி**

1. கருமா மணிமிட றம்பலத்தோன் கவுரிக்குண்டம்முறை கயிலாயன்
ஒருமான் கரத்தெழில் சாமாலியன் உலகுயிர் மனத்துறை ஓங்காலன்
பெருமான் எந்தை பேராளன்பிரியா வீடுநல் பேறளிக்கோன்
திருமால் நான்முன் சிரம்பணிந்த திருநிறை மூவலூர்த் தேசிகனே

2. பறிநிறன் பகலிர வானசுடர் பங்கயத் திருவடிப் பாற்கடலன்
நெறிமுறை மறைத்திரு முறையளித்த நெஞ்சகக் கோயில் நிமலீசன்
பொறிப்புலன் போகமும் உயிர்களித்தே புரையறுத் தினிதருள் புகலூரன்
செயிவிழி வனதுர்க் கைவணங்கும் திருநிறை மூவலூர்த் தேசிகனே

3. ஒப்பினை இல்லா ஒளியனலன் உலகேழ் பகிரண்டத் தோங்காரனே
வெப்பரும் சூலையில் மெலிந்துழைந்தே வெடிப்புறு முன்தம் வினைதீர்ந்த
அப்பரெம் சுந்தரர் வணங்கிமகிழ் அருமறை திருமுறை அருன்துறையன்
செப்பரும் வானவர் பூசைசெய்த திருநிறை மூவலூர்த் தேசிகனே

4. மெய்யொரு கடவுள் விண்ணுருவன் விசயற்கும் பாசுபதமளித்த
பய்யரவம் புரள் பரஞ்சுடரன் பத்தர்வி ரும்புருக் காட்சிதரும்
அய்யனெம் ஈசன் ஆடவல்லான் ஆயிரம் கோடித் திருநாமன்
தெய்வச் சேக்கிழாரும் வணங்கிநின்ற திருநிறை மூவலூர்த் தேசிகனே

5. மன்னிய திருவருள் மாமலையன் வானகங் கைமுகில் வளர்சிலம்பன்
சென்னிநல்லாங்குளிர் திருமுடியன் செய்தமிழ் வேதியன் திருத்தழலன்
என்னிலும் உன்னிலும் உடனாகி இருள்மல மொடுக்கும் ஏகாந்தன்
தென்னவன் சோழரும் வணங்கிநின்ற திருநிறை மூவலூர்த் தேசிகனே

6. பருப்பதம் பனிமலை பாற்கடலன் படர்சுடர் நெருப்புமிழ் பலமலையன்
தருப்பைநல் வில்வமும் தாமரையும் சரக்கொன்றையணிந்த சங்காரன்
தெருவிடை மாணிக்கம் விலைபகர்ந்த சீர்மலி ஆலவாய் செஞ்சடையன்
செருவிசயநகரர் வணங்கிநின்ற திருநிறை மூவலூர் தேசிகனே

7. காவலங்கடவுள் கனகசபை கார்த்திகை தீபன் யிலையண்ணல்
கேவல ஞானம் பரஞானம் கீழ்மேல் பழநிலைக் கருளிறைவன்

ஆவடுதண்துறை ஆதினத் தருள்நமச்சிவாயர் துதித்தணல்
சேவகத் தடியார் வணங்கிநின்ற திருநிறை மூவலூர்த் தேசிகனே

8. முந்தையன் மூவர்க்கும் முழுமுதல்வன் முகைப்பிறை மிளிர்சடை முக்கண்ணன்
அந்திச்செய்வான் நிறத் தழசீசன் அரளி அக்கமணி அனைத்துலகன்
பந்தித்த இருவினை பழமலமும் பணிந்தோர்க் கொடுக்கும் பாசுபதன்
செந்தமிழ் காழியர் வணங்கிமகிழ் திருநிறை மூவலூர்த் தேசிகனே

9. நீரனல்வேர்வழி நிறநைந்தேகி தெறியுயிர் உடல்பிற்புண்வேற்றே
காரணகாரியமூன்றவத்தை கலந்ததில் இயங்கும் கருணைதந்தோன்
நாரணன்அயனுருத்திரர்களுக்கும் நற்றவ பதனிகள் நல்கிய கோன்
தேரா்ம் மலமறிந்தோர் வணங்கும் திருநிறை மூவலூர் தேசிகனே

10. உருவில் அருவன் உயிர்விரும்பும் உருவினில் தோன்றும் உலகீசன்
கருவில் ஒன்றாய் உடனாகி காலமெல்லாம்தான் வேறாகி
குருவாய் திருவாய் வரும்பெருமான் கொன்றையன் சடையன் குவலத்தோன்
தெருள்மதி அடியவர் தினம் வணங்கும் திருநிறை மூவலூர் தேசிகனே

–திருச்சிற்றம்பலம்–

## 92. திருவாலாங்காடு

**வடாரண்யேசுரர்     தரவுகொச்சககலிப்பா     வண்டார்குழலி**

1. செங்குமுதத் திருவடியை செம்பரிதி துதித்தேகும்
திங்களொளி நள்ளிரவில் தென்றலுடன் பூசைசெய்யும்
அங்குமுதக் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
பொங்குதுயர் நீங்குறவே புலம்பியழு நீ நெஞ்சே

2. ஓவியஞ்செய் வெண்மேகம் உச்சிப்போ தில்துதிக்கும்
காவியஞ்செய் தேன்மிளிறும் காழியரின் பாட்டிசைக்கும்
ஆவிரம்பூ காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
பூவியிலின் துயரறவே புலம்பியழுநீ நெஞ்சே

3. கார்மேகம் தென்றலுடன் கைகுலுக்கிப் பூசைசெய்யும்
தேர்தெங்கம் பாளையிளம் தேன்பூக்கள் தூவிநிற்கும்
ஆர்கழனி காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
பூர்வீகப் பவமறவே புலம்பியழுநீ நெஞ்சே

4. நீலவெளி குடைபிடிக்க நிறைமீன்கள் பூசைசெய்யும்
கோலமலர் எரிகற்கள் கோடிதூவி தாள்பணியும்
ஆலநிழல் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
போலிமனம் மாய்வுறவே புழும்பியழுநீ நெஞ்சே

5. செங்கோலி லாதகாலம் சிவச்சின்னம் சிலிர்த்துயரும்
எங்குமுயிர் சிதைந்தோடிச் செங்கொன்றை பூசைசெய்யும்
அங்கபயக் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
பொங்குபி றப்பறவே புலம்பியழுநீ நெஞ்சே

6. வாரண முகத்தசுரன் வாழ்வழித்த சங்கரனை
பூரணத்தே னபிடேகப் பூசைசெய்யும் பூலோகம்
ஆரணநல் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலை
தோரணக் கொன்றை சூட்டித்தொழுதெழு துயர்நெஞ்சே

7. நான் முகனின் சிரமறுத்தே நாமகளைக் காத்தபிரான்
வான்முகத் தாரகைகள்வந்து வந்து பூசைசெய்யும்
ஆன்முகந்த காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
ஈன்குவித்த ஆசையற இயம்பியழுநீ நெஞ்சே

8. மத்தளம் கொட்டக்கொட்ட வடவாலங் காட்டிலாடும்
சித்தெழில் மேனியெங்கும் செந்நாகம் புரண்டோடும்
அத்தி நிழல் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
பத்திபெற பூரணமாய் புலம்பியழுநீ நெஞ்சே

9. காலை மாலைநியமுற காற்றுறையும் குண்டலிசெய்
சோலைமலர் தேன்தூவி தூயலிங்கப் பூசைசெய்தே
ஆலையொலிக் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
ஏலநாய் போலழுதே ஈனப்பிறப் பறுநெஞ்சே

10. தேடித்தேடிக் கண்டதென்ன தேய்ந்துபோன பேராசை
ஓடியுயிர்போம் நாளில்ஊரெரிக்கும் பிணந்தானே
ஆடுமலைக் காவிரித்தென் ஆலங்காட் டரன்கழலில்
ஓடிப்போய் விழுந்தழுநீ உண்மைச்சுகம் வரும்நெஞ்சே

–திருச்சிற்றம்பலம்–

## 93. அரிவாளூர்

**சுயம்புநாத சுவாமி** **கலிவிருத்தம்**

1. கோலச் சுடர்க்கழல் குருவருள் பெருந்தகை
ஞாயத்து யிர்வளர் நகையதில் புரமெரி
காலக்க ணிப்பனல் கதிர்ஞா யிறுக்கருள்
ஆலமர் செல்வன் அரிவாளூ ரரே

2. தக்கனின் வேள்வியை தகர்த்தபொன்சேகரன்
எக்கண மும் உயிர்க் கின்னருள் கொடையளி

செக்கர்விண் தழலன் திங்களுக் கருளிறை
அக்கினி வடிவெழில் அரிவா ளூரரே

3. இகபரப் புவிஉயிர் எழிலுற வளந்தரும்
சகடத் திருமால் விழிப்பூ சைமகிழ்
புகலளி எனத்துதி செய்விச யார்க்கருள்
அகன்மணி சுடரன் அரிவா ளூரரே

4. எங்கும்ப ரவொளி ஏழ்புவிப் பெருஞ்சுடர்
பொங்கல் திருநாள்பூவளை பூசைமகிழ்
தங்கம னப்பத்தர் சண்டிக் கருளிய
அங்கப்பொன் அழலரன் அரிவா ளூரரே

5. நஞ்சுறை பாம்போடு நல்குளிர் பிறையணி
விஞ்சைசெய் விண்ணவன் விற்கொடைப் பெரியோன்
மிஞ்சும்பெ ருநிதி விண்ருபே ரனுக்கருள்
அஞ்சுப ததணல் அரிவா ளூரரே

6. நகத்திருப் பவள நாழிகை யுகஞ்செய்
முகத்துறை மூவிழி முதிர்முக் காலமின்னல்
பகைத்திற மில்லான் பாருறை முனியொடு
அகத்தியர் கருளிறை அரிவா ளூரரே

7. வெட்சிம லரொடு வில்வமே ருக்கமும்
கட்செவி யும்அணி காபா லமூர்த்தி
நட்சத்தி ரப்பொன் னையாட் கன்பருள்
அட்சயன் ஆலமர் அரிவா ளூரரே

8. தடம்புனல் கங்யையும் தமிழ்கா விரியளி
நடம்பயில் கணிசுடர் ஞாதிரு மலமழி
முடத்திரு மாறற்கும் முதிர்பிணி மாற்றிய
அடம்பலர் சூடிய அரிவா ளூரரே

9. மடலலர் ரஞ்சிதம் மல்லிஅக் கமணி
கடச்சேர மானின் கயிலைஉ லாமகிழ்
படர்சுடர் பாரரன் பார்த்தனுக் கருளளி
அடவியந் தில்லையன் அரிவா ளூரரே

10. பொடிநீ றொடுசிற கெருக்கமும் சூடிய
உடைகரை வைகயின் வந்திக்க ருளிறை
நெடுநீள் சடையன் நிரந்தரப் பேரொளி
அடிநாய் எனக்கருள் அரிவா ளூரரே

–திருச்சிற்றம்பலம்–

## 94. கிளியனூர்

**அக்னீசுவரர்** **கலிவிருத்தம்**

1. அஞ்செழுத் தருமறை ஆலால சுந்தரம் சங்கமெங்கும்
நஞ்சுறை அரவங்கன் நல்மலர் தாரணி நம்பனவர்
வஞ்சகர் சலந்தரன் மாடவு டலழி மாதேவன்
கிஞ்சுகம் திருமுறை கிளக்கும் கிளியனூர் கீசனே

2. கண்மலர் பூசைசெய் கார்முகில் வண்ணனுக் காழிதந்த
வெண்பனி விடையமர் விண்ணவர் துதிஇறை விரிசடையன்
மண்ணுறை அந்தகன்மாசறுத் தருங்கலை பதலிதந்தோன்
கிண்கிணிச் சதங்கையன் கேடழி கிளியனூர் கீசனே

3. வெண்ணில வாணிமுடி விந்தைகள் புரிவிழி வில்லாளி
எண்குணப் பேரனல் இயலிசை நாடகத் தமிழளித்த
தண்மலர் பூசைசெய் தாரணி அணைந்தோர் தவம்மகிழும்
கிண்ணரம் திருமுறை கிளக்கும் கிளியனூர் கீசனே

4. மதலெறிக் கரியுரி வடிவுறப் போர்த்திய மகிழீசன்
கதவம் திறந்தடைத் தன்புறக் கலித்தமிழ் காத்தபிரான்
உதவுங் கரமென உத்தமர்க் கருள்தரும் ஓமொலியன்
கிதவமும் கோடலும் கிளுவைநல் கிளியனூர் கீசனே

5. வெம்புலித் தோலுடை விண்ணவர்க் கரியவன் வெந்தழலன்
அம்பக லுமுன்பே அருமென்சிரிப்பில் புரமெரித்த
தம்பலப் பூச்சிக்குத் தனிசிவப் பளித்த தாயன்பன்
கிம்புரு டர்முனி கிளர்கதிர் கிளியனூர் கீசனே

6. நிரந்தரப் பேரொளி நிம்மதி உயிர்களி நேசமன்னன்
நரம்பிசை கேட்டுத்தன் நனிபுகழ் வாளளி நாதந்தன்
புரந்தரன் திருமால் பூவமர் தேவுக்கும் புகலளித்த
கிரகநல் தெருவெழில் நினைவளர் கிளியனூர் கீசனே

7. சரணம் திருவடி சரணமெ னத்துதிப் போர்க்கருளும்
கரணச் செறிமனம் கடவுளின் நினைவுற கருணைதரும்

மரணமா ணிக்கென மறலியைத் தடிந்த மதிமகுடன்
கிரணம தித்துயர் கீறிய கிளியனூர் கீசனே

8. விரிசடை மங்கலன் விண்ணவர் கண்மணி விதிமதிசெய்
திரிபுர சுந்தரன் திசைகளைக் கடந்த செஞ்சுடரன்
பரிநரி செய்தோன் பாற்கடல் லளித்தோன் பரமேசன்
கிரிகிரி மறம்மதி கிழவோன் கிளியனூர் கீசனே

9. பொன்முடி வெண்பிறை பொறிஅர வணிந்த போதாந்தன்
உன்னதன் உலகொளி ஊர்த்துவத் தாண்டன் ஓரிறைவன்
மன்னவன் முசுகுந்தன் மகிழ்வுற விடங்ரும் மகிழ்ந்தளித்த
கின்னரர் விரதியர் கேள்துதி கிளியனூர் கீசனே

10. அறுக்கண்பொன் அம்பலன் ஆனந்த நாட்டியன் ஆரமுதன்
நறுக்கினைக் காட்டியே நாவலா ரூரணை நயந்தேத்றோன்
குறுக்கலும் நீட்டலும் குளிர்தமிழ் இலக்கணக் குறிப்பறிய
கிறுக்கனெ னக்கருள் கிழவோன் கிளியனூர் கீசனே

–திருச்சிற்றம்பலம்–

## 95. நெடுவாசல்

**சௌந்தரேசுவரர்** **கலிவிருத்தம்** **அகிலாண்டேசுவரி**

1. திருமாலயன் நரவாகனன் தேவேந்திரன் தொழுசீர்
கருமா மணி மிடறேயுடை பெருமான் கவிப்பொம்மன்
உலுவாய் வரும் திருவாய் மலர் உலகோர்க்கருள் மழுவோன்
அருளால் மிளிர் நெடுவாசலும் ஆரூரெந்தை ஊரே

2. தாயாகிநல் லுயிரூட்டிய தணிக்கும் தரை நீரோன்
பேயாகுவன் நெஞ்சேர் பிழைபீறித்தருள் கொடையோன்
ஓயாக்கடல் பேராசைநெஞ் சூமைக்கன வாக்கும்
காயாவயல் நெடுவாசலும் கங்காதரன் ஊரே

3. ஆணோர்திறன் பெண்ணோர்கவின் அறிவாலிணைத் தருள்வோன்
தூணேறிய திருமால் வெறிதொடரா தெரிமலையோன்
வீணோர் வினைத்தீயால் புவிவேகும் நிலமாற்றும்
கோணாச்சுடர் நெடுவாசலும் குற்றாலனின் ஊரே

4. மஞ்சார்மலை நெஞ்சால் நகர்மருள் நீக்கியார்மகிழ
பஞ்சார்ந்தி கைலைக்காட்சி பாரித்தருள் பெம்மான்
அஞ்சேலென அடியார்க்கருள் அளித்தேதுயர் நீக்கும்
செஞ்சீர்ப்புகழ் நெடுவாசலும் தில்லை எந்தைஊரே

5. படகோடிடும் துடுப்பன்றியே பரமன்கழல் தொழவே
விடமோடியே அமுதாகிடும் விமலோனளி பரிவே
இடமாறலில் இனிவாழ்வளித் தேற்றம்தரும் அண்ணல்
மடவாழைநல் நெடுவாசலும் சுடரோனது ஊரே

6. ஆகாயமும் தீ நீர்வெளி ஆக்கும் சுடர்த் திறலோன்
பாகாயமு தளித்தேமகிழ் பரமானந்தக் கொடையோன்
நோகாதுடல் பிணிதீர்த்தருள் நுதலோன் விழிச்சுடரோன்
ஈகார் பொழில் நெடுவாசலும் ஏகம்பனின் ஊரே

7. எட்டாத்தொலை கைலயஞ்செல இயலார்க்க தன்காட்சி
வெட்டாத்தடம் வெள்ளியங்கிரிவிடி காலையில் தோன்றும்
நட்டார்களும் நாடோர்தொழ நலமேதரும் இறைவன்
நெட்டால் நிழல்நெடுவாசலும் நிமலோனுறை ஊரே

8. உலகோர்பல நெறிமீறிய செயலாலுயிர் பிழைக்கும்
நிலையாலரன் விதியால்புவி பேரூழியில் அழிக்கும்
கலைமாமணி கயிலாயனின் கழலேபணிந் தழுவார்
நிலயாகுநல் நெடுவாசலும் நிமலோனுறை ஊரே

9. ஒரு நாடியில் வளியோடிட உயிர் நாடியும் எழுந்தே
பெருநாடியில் பிதிரார்சுடர் பிணைந்தேசுழி முனைசேர்
திருநாதமும் சிவநாதமும் சேர்தாரனை யாக்கும்
பெருமானவர் நெடுவாசலும் பெம்மானுறை ஊரே

10. வானோர்களும் மறையோர்களும் காணச்சுடர்ச் செந்தாள்
தேனார்மலர் அயன்மாலவன் தெளியாத்திரு வடிவை
ஆனாயர்க்கும் விழிவேடற்கும் அணித்தேநடம் புரிந்தோன்
மீனார்வயல் நெடுவாசலும் விமலோனுறை ஊரே

–திருச்சிற்றம்பலம்–

## 96. தில்லையாடி

**சத்தரைஈசுவரர்** **வஞ்சிவிருத்தம்**

1. ஊத்தைநா வுளறியே ஓடுங்குடில்
சீத்தைச் சிறுகுழி ஒன்பதுடன்
வாத்தைப் போலுண்டுழன் றுருகுகின்றேன்
ஏத்தரள் தில்லையாடி ஈசுரனே

2. சாக்கடைச் சிந்தனை தாமரநாய்
போக்கிட மில்லாப் புழுவாகி

நோக்கிநின் கோயிலில் உருகுகின்றேன்
ஏக்கைதீர் தில்லையாடி ஈசுரனே

3. ஈனச் செயல் பல இயற்றி மகிழ்
கூனக் கரடி நெஞ் சுறவாகி
தேனப் பொழுதினை சிதைத்தழித்தேன்
நானளி தில்லையாடி நாயகனே

4. பேருக்கு மானிடப் பிறப்புருவில்
ஊருக்குள் தீமைகா மங்கள் செய்தே
யாருக்கும் பயனில் நகைக்குடியேன்
சீரருள் தில்லையாடிச் செஞ்சுடரே

5. முன்னைப் பழம் வினை முக்கோடி
இன்னைப் பிறவியும் இரைமுதலை
பின்னைப் பிறவியைத் தடுத்தருளி
என்னையேல் தில்லையாடிச் செஞ்சுடரே

6. சொத்துச்சு கம்பதவிக் கோடும்நரி
வித்தைக் குரங்கென் விதியறியேன்
செத்தைப் பிணமென்றூர் செப்புமுன்னே
சித்தளி தில்லையாடிச் சுடரே

7. மெத்தக் குழம்பலில் மீன்பிடிக்கும்
எத்துக் கல்விகள வேற்றபிண்டம்
முத்துப்பொன் நிலம்பொருள் மோகப்புலி
பித்தழி தில்லையாடி பிஞ்சகனே

8. கருவிப்பொ றிமருந்துக் கல்விகளும்
பெருகுசு யநலச் சூதாட்டம்
எருப்புழு நெஞ்சதைத் திருத்தியருள்
தருமலர் தில்லையாடித் தற்பரனே

9. ஞானக் குருத்திருத் தாள் போற்றி
ஊனுக்குள் பிரணவத் தொளியேற்றி
மோனத் தவத்துயில் முன்னருள் வீர்
கானத் தில்லையாடிக் கற்பகனே

10. வந்துயிர் சென்றுடல் மாறிமாறி
நொந்தபி றவிகோ டியறியேன்
இந்தப்பி றவியோ டேற்றருள்வீர்
பந்தத் தில்லையாடிப் பரம் பொருளே

–திருச்சிற்றம்பலம்–

## 97. பெருஞ்சேரி

**வாகீசுவரர்** **கலிவிருத்தம்**

1. நாவால்நரி நனிதில்கலை நாடோரிவா எனையும்
தேவாரப்பண் சிவபூசைசெய் அடியாரிடை சேர்த்த
தாவாப்பெரும் தயவேநினைந் தாழ்ந்தேதுதித் தயர்வேன்
பூவார்பொழில் பெருஞ்சேரியின் பொன்னார்கழல் மணியே

2. வயிறோருடல் குறையாப்பசி மதியோரிகழ் எனையும்
செயிர்தீர்திரு வாசகம்பயில் திருத்தொண்டரின் இடைசேர்
இயம்பாப்பெரும் பாரிவே நினைந் தேதேசெய உய்வேன்
வயலார் முகில் பெருஞ்சேரியின் பிதிர்மாஞ்சுடர்க் கொழுந்தே

3. கல்லேன்பணி வில்லேன்நினை நினையாப்புழு எனையும்
பல்லாண்டருள் இசைப்பாபயில் பழம்பத்தரின் இடைசேர்
வல்லாள் கருணைக் கெளியேன்தனித் தேதேசெய துய்கேன்
நல்லார்புகழ் பெருஞ்சேரியின் ஞானாதீதிச் சுடரே

4. பெருங்கோபமும் மூவாசையும் பிணிமூடிய எனையும்
திருமந்திரம் வழிபாடுசெய் சிவபத்தரில் இணைத்த
அருள்மாமலை திருவேநின தடியேதுதித் தழுவேன
தருமாமணிப் பெருஞ்சேரியின் தமிழோதிய திருவே

5. மதிசூடிய மாதேவநின் திருநாமமே பகரேன்
பதினோர்திருத் தொண்டர்கவி பயில்வோரிடை எனைச்சேர்
விதியேபுனைகழலேதொழுல் வேறொன்றறியேன் எளியேன்
புதிரார்சடைப் பெருஞ்சேரியின் பொன்னார் கழல்மணியே

6. அகத்தேசிவம் சுமந்தோர் அறுபதின் மூவரின் வாழ்வின்
தொகுப்பேபயில் தூயோரிடை தொழுநாயெனை இணைத்த
சுகமேநினைத் தொழுதேயுயிர் தோய்வேன் நினகழலே
செகநாதனே பெருஞ்சேரியின் சிவதாண்டவச் சுடரே

7. நெறிமாறிய நரியோருற வகலாச் சித டெனையும்
செறிமாமதிப் பரஞ்சோதியைப் படித்தோரிடை சேர்த்த
பொறியூட்டிய கழலே நினைப் போற்றாத்தினம் நரகம்
பறியார் கழல் பெருஞ்சேரியின் பனிமாமலைச் சுடரே

8. சதகம்பல பதிகம் பல தத்துவத் திருக்கவிகள்
அதிகம்படி அடியாரொடு அடிநாயேனையும் இணைத்த

நதிகள்செயும் ஞானக்கழல் நாளும் துதி செயச்செய்
உதயச் சுடர் பெருஞ்சேரியின் ஓங்காரப்பொன் மலையே

9. வகையோர்கவி தொகையேழிசை வகுஞானம் பந்தன்
மிகைமாமதித் துறைநூலறி திருநாவர சவரும
சிகைதாளுறத் தொழுதேகிய சிரச்சீரடி தொழுதேன்
தகைநல்கிய பெருஞ்சேரியின் தவமாமணிச் சுடரே

10. தழலேநெடு நிழலேபடர் தணியாவளி புனலே
கழலே அர வணியேஇடை கரிமாஉரி போர்த்த
அழகேபுவி உறைமானிடர் நினையேதொழ அருள்வீர்
மழமாவிடை பெருஞ்சேரியின் வானோர்தொழும் இறையே
–திருச்சிற்றம்பலம்–

## 98. பண்டாரவடை - வடுவூர்

**கைலாசநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. புல்பூ டுசெதுக்கி புண்ணியக் கோயில் போம்பா தைதிருத்தி
கல்வேரொதிக்கி கடிமதில் நடைதடம் கவினுறச் களைஎடுத்தோன்
எல்லாப் பணியும் இனிதுறச் செய்வோர் எனைத்தொழும் பேற்றருள்வீர்
பல்லியம் பணிலம் பயிலொளிப் பண்டார வாடையின் பரம்பரனே

2. ஓதித்தி ருமுறை உதயநல் பூவெடுத் துவப்புற மாலைசெய்தே
சோதித்தி ருமுன் சேவகம் செய்வேன் திருப்பொருள் துலக்கிவைப்பேன்
ஊதியம் வேண்டேன் உணவும் கேளேன் உணகழல் துதித்துவப்பேன்
மாதவிப் பூம்பொழில் மணியிசை பண்டார வாடைநல் பரம்பரனே

3. கிளைமலர் கொன்றையும் கிளுவமும் சூடும் கிண்கிணிச் சதங்கையனே
அளைபால் அபிடேகத் தலைகீர் துளைவழி அடியேன் தூய்மைசெய்தே
களைத்தவ ருமடி யார்கழல் நீராட்டுங் கடமையும் செய்துவப்பேன்
வளைத்தொழும் பெனக்கருள் மணியிசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

4. புற்றெழில் பாம்பணி பொங்கொளி மேனிஎம் புரிசடைப் புண்ணியனே
சுற்றுச்சு வர்மதில் துகள்பா சியறச் சுண்ணமும் பூசிவைப்பேன்
மற்றிடப் புழுதி வளைவறக் குளநீர் வார்த்துமெ மூகிநிற்பேன்
வற்படி மைகொள்வீர் மணியிசை பண்டார வாடைநல் பரம்பரனே

5. தவக்கவின் வடிவொளி சற்குரு நாதா தத்துவப் பெருந்தழலே
சுவர்சிலைக் கோபுரத் திடுக்கிடை வளர்செடி சிதைத்தழித் தழகுசெய்தே
சிவசிவ செம்மறை திருயவந் தெழுத்தை சீர்மதி வில்வரை வேன்
மவுன அடிமைகொள் மணிஇசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

6. கயலினை அரவுக்கல் காட்சிவி தானத்தில் கவியோ வியம்புனைந்தே
நயப்பணி மகிழ்வேன் ஞானத் திருக்கழல் நாளும் துதித்தெழுவேன்
பயனொன் றறியா பவச்சிறு சிதடெனை பணிதொழும் பென்றேற்பீர்
வயபுலித் தோலணி மணிஇசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

7. மண்டபம் கொடிமரம் கருவறை மெழுகி மாசறத் துடைத்துவந்தே
தொண்டுழ வார்பணி தொண்டரின் வேர்வை துடைத்தவர்களைப் பகறுப்பேன்
உண்டிட ஒருகை கூழுங் கேளேன் உனகழல் துதித்தயில்வேன்
வண்டலர் சூடிய மணியிசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

8. கலங்களுர் தீர்க்கும் கல்விக்க ளஞ்சியம் கற்பநல் கங்காளன்
தலந் தவனச் செடிகொடி தளிருற தண்ணீர் வார்த்துவப்பேன்
உவகுறை நின்தலம் ஒவ்வொன்றும் தொழுதெழ உரிமைதந் தெனைஏற்பீர்
வலமளி புன்னகை மணிஇசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

9. கோயிலுள் திருவுரு கோபுரம் அருவுருக் கொழுந்தழல் சுடரோனே
வாயிலைத் துடைத்தே மலர்நீர் தெளிப்பேன் வாரிப்பு முதிசுமப்பேன்
நாயினும் கடையேன் நான்நின தடிமை நயந்தெனை அடிமைகொள்வீர்
மாமிளம் பிறையணி மணியிசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

10. ஆர்த்பெ ருங்கடல் அர்த்தநல் ஊழிசெய் ஆனந்த மதியரனே
சேர்த்த தலங்களில் சேவகம் செய்வேன் திருவே நின்னருளால்
வார்த்தைகள் அறியேன் மன்றாடிக் கெஞ்சவே வானனே தொழும்பேற்பீர்
மார்த்தவ மாணிக்கம் மணிஇசைப் பண்டார வாடைநல் பரம்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 99. வழுவூர்

**வீரட்டேசுவரர் அறுசீர்ஆசிரிய விருத்தம் இளங்கிளைநாயகி**

1. ஊழை உணரும்நல் உருவளித்தே உயிர்க்கருள் செய்யும் ஓங்காரன்
மோழைமு கத்துக்கும் வானளித்த முக்கண் சோதி மூத்தபிரான்
ஏழைஎன்னால் நினக்கில்லைபயன் எனினும் கருணையில் கொண்டீர்
வாழைப்ப ரிவளி மாதந்தை வழுவூர் வீரட்ட மன்னவனே

2. நீர்நிலம் காற்றுநெருப்போடு நெடுவெளி யாகிய நீலகண்டன்
ஊர்மனைத் துயிர் ஒவ்வொன்றோடும் உடனாகிச் செயல் உணர்த்துமன்னல்
ஈர்மனப் பூவொன்றும் ஈந்தறியேன் எனினும் கருணையில் தொண்டீர் என்று
வார்மணிச் சடையோன் மாதந்தை வழுவூர் வீரட்ட மன்னவனே

3. சிந்தா மணிக்கழல் சிவலோகன் தேறிய நுண்ணிய மாயைதந்தோன்
முந்தோர் நரகரி மூர்க்குடலை முடிவுறக் கிழித்த முழுமுதல்வன்

எந்தாய் நின்நாமம் இயம்புகில்லேன் எனினும் கருணையில் ஒன்றுகொண்டீர்
வந்தார்க் கருளும் மாதந்தை வழுவூர் வீரட்ட மன்னவனே

4. சீலமெல் லாமிறை நினதென்றே தெரிந்தோர் நூல்செய் தேகிநின்றார்
காலமெல் லாமும் கணித்தருளும் கங்கணன் குங்குமண் கலகாலன்
ஏலா தான்மதி இழிசெய்லேன் எனினும் கருணையில் ஏன்றுகொண்டீர்
மாலோடயன்துதி மாதந்தை வழுவூர் வீரட்ட மன்னவனே

5. நாறா வன்னியந் தாரணிந்த ஞானத்தி ருவுரு நம்பிநல்லன்
காறாக் கருணைக் கங்காளன் கற்பகத் சுடரன் கயிலைநாதன்
ஏறார் நின்நாமம் இறைஞ்சுகில்லேன் எனினும் கருணையில் ஏன்றுகொண்டீர்
மாறாக்கயமுகன் உடல்பொடித்தவழுவூர் வீரட்ட மன்னவனே

6. காதொருகுண்டலம் குழையணிந்த காமநாசவள்ளல் காசியண்ணல்
தீதொரு அந்தகன் திடருடலை தீயுறச் சிரித்த சிலோகா
ஏதொரு மலர்நீர் சுமந்தில்லேன் எனினும் கருணையில் என்றுகொண்டீர்
மாதுளம் பூவிதழ் மேனியனே வழுவூர் வீரட்ட மன்னவனே

7. தோன்றாத் துணைவன் சொக்கலிங்கம் தூயநல் சோதி சுயம்பனலன்
சான்றோ உவமையில் தனிக்கடவுள் சஞ்சலம் தீர்க்கும் தாயன்பன்
ஈன்றோர் காட்டியும் இறைஞ்சுகில்லேன் எனினும் கருணையில் ஏன்றுகொண்டீர்
வான்றோய்ந்தறியா அடியேன் வழுவூர் வீரட்ட மன்னவனே

8. பகலூர் இரவூர் பரம்பொருளன் பாற்கடலமுதளி பரமோசன்
புகலூர் நல்லூர்ப் பெருமணமும் புலியூர் திருவஞ்சிக் களம் துதியேன்
இகழ்ந்தேன் மயிலை இருங்குளத்தில் எனினும் கருணையில் ஏன்றுகொண்டீர்
வகதிநல் வாகனன் மதிமுடியோன் வழுவூர் வீரட்ட மன்னவனே

9. தோற்றமும் ஒடுக்கமும் துணையில்லோன் சுயம்போன் சுடரேனனத் தொழிலைந்தோன்
சாற்றறிவுணரா தனியுரில் சார்நுகர் அவ்ததைகள் ஐந்தளித்தோன்
ஏற்றறிலோடுனை இறைஞ்சுகில்லேன் எனினும் கருணையில் ஏன்றுகொண்டீர்
மாற்றறி வளித்தேழ புவிகாக்கும் வழுவூர் வீரட்ட மன்னவனே

10. பன்னிரு திருமுறை படித்தில்லேன் பகலிர வுன் கோயில் பணிந்தில்லேன்
பொன்னிரு திருவடி புகழ்ந்தில்லேன் புதுமலர் பூசைசெய் தருககில்லேன்
என்னை நினைந்துனை இறைஞ்சுகில்லேன் எனினும் கருணையில்
ஏன்றுகொண்டீர்வன்தொண்டர்க் கருளிய வானிறைவன் வழுவூர் வீரட்ட மன்னவனே

–திருச்சிற்றம்பலம்–

## வழுவூர்

**வீரட்டேசுவரர் அறுசீர்ஆசிரிய விருத்தம் இளங்கிளை நாயகி**

1. பிரளயப் பெருநீர் பெருக்கொளித் திருவே பெம்மான் எந்தந்தாய்
பரமணித் தொடையல் பனிமலர் கொன்றையும் பாம்பணிக் கறைகண்டம்
கரவுபொய் சூதுளம் கரையுற நினைதெரிக் கழல்தொழு தழுகின்றேன்
உரவுநீர் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

2. கயமுக னெரியுறக் கருணைசெய் தருளிய கயிலயப் பெருந்தீபம்
முயலகன் மிதபட மூவிழி அருளூற முகவொளி பேரண்டம்
நயமதி உயிருடல்நவநிதி நலம்பெற நம்பநின் கழல்தொழுதேம்
உயர்புகழ் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

3. மொழிபெயர் தேயங்கள் வெவ்வே றுருவுற முடிதொழும் முழுமுதல்வன்
பொழிலர் கூவிளம் புதுவரி வன்னியும் புனைகவின் பேரூழி
வழிவழிப் பத்தரும் மறுமொழி கற்றவன் வையகத் தோர்தொழுதேம்
உழிஞையம் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

4. முந்தையர் வானவர் முழுதுணர் ஞானியர் மூவரும் தொழுந்தழலன்
அந்தியில் கோடிநல் ஆன்மா துதித்தெழும் ஆறாங்கப் பேரொலியன்
சந்தனக் குங்குமம் சண்பகமெருக்கலர் சாந்துறப் பூசைசெய்தேம்
உந்திநல் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

5. குன்றுறை வன்னியும் கொன்றைநல் அருகொடு கூவிளம் சூடெழிலன்
பன்றிக்கும் மந்திரி பதவிப ரிந்தளி பரமேச் சரமூர்த்தி
அன்பெழில் சந்ததி அறிதுணை மதிமனை அருளுளம் பெறத்தொழுதேம்
ஒன்றுநர் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

6. சிறுசிறு கிருமிகள் செருபுலி யானைமீன் திமிங்கிலத் துயிருருவன்
அறுசுவை எழுநிறம்எண்குணம் ஒன்பது அகவுணர் வளிப்பீசன்
நறும்புகைத் தூபமும் நாள்மலர் தீபமும் நனிபனி பூசைசெய்தேம்
உறுதுணை வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

7. சிற்றணு வாற்றலில் தீநிலம் நீர்வெளி தெளிவான் செய்தேவன்
புற்றுறை நாகமும் புனுகுசவ் வாதகில் புதுமலர் புனைமேனி
கற்றவர் மற்றவர் கருணைசெய் பூசையர் கற்பகக் கழல்தொழுதேம்
உற்சவ வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

8. விரைநதி திரைகடல் வெளிமுகில் பனிப்புகை விண்ணக நெடுஞ்சுடரன்
மரைமலர் அறுகொடு மரகத நவமணி வரைப்பொன் தாரணிவோன்

சிரைகுலை குருதி சிறுநரம் புறுபிணி சிதைவுறத் தொழுதழுதேம்
உரைநல வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

9. படர்சடை இளம்பிறை பாம்பொடு பொன்மிளிர் பருப்பதத் திருமேனி
விடமுறைந் தெழிசெய் விண்ணகத் தீஞ்சுடர் மின்னொளிப் பகிரண்டன்
இடறுறு பிறப்பற இணைகழல் தினந்தொழ இனிவரம் பெறத் தொழுதேம்
உடசநல் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

10. எந்திரம் மந்திரம் இசைவளர் இலிங்கமும் ஏற்புறத் திருப்பூசை
சந்திர சூரியர் சந்தானக் குரவரும் சன்மதித் தொண்டர்தொழும்
செந்திரு வடிநிழல் சேர்வுறத் திருமுறைப் சீரிசை யொடுதொழுதேம்
உந்திநல் வழுவூர் ஊர்த்துவத் தாண்டவத் தொளியே ஒளிர்கவே

–திருச்சிற்றம்பலம்–

## 100. கப்பூர்

**அக்னீசுவரர்** **கலிவிருத்தம்**

1. சொற்பொருள் கடந்த சுந்தரக் களஞ்சியம் சுகஞானி
அற்புதத் தாரகை ஐம்பூ தம்படைப் பருளளித்த
சிற்பர மேவிய செறிமின் டிசைக்கொடி செய்துதரும்
கற்றவர் வழிபடும் கப்பூர் மேவிய கண்ணுதலே

2. விச்சைசெய் கடுமிடி மின்னலும் கலந்ததோர் விரிசடையன்
இச்சையெல் லாமளித் தின்னுயிர் கருள்தரும் ஏகம்பன்
நச்சர வம்புரள் நல்லமு தக்கழல் நாடகத்தன்
கச்சகம் கனிநிறை கப்பூர் மேவிய கண்ணுதலே

3. இஞ்சித்தி ரிபுரம் எரிசெய் தரளவெண் புன்னகையன்
நஞ்சணி கண்டன் ஞானப்பெ ருங்கதிர் நாதமணி
தஞ்சத்தி ருவடி தண்மதி தந்தருள் சங்காரன்
கஞ்சரன் பூசைசெய் கப்பூர் மேவிய கண்ணுதலே

4. நிட்டைநெ டுந்தழல் நிறைமதி நாளெழில் நேசநிலன்
பட்டைவ யிரநகை பாற்கட லதிபதி பாம்பணிந்தோர்
முட்டைநி லம்கோள் முதிரலை மீண்முழு வதுஞ்சுழற்றும்
கட்டமு தளித்தோன் கப்பூர் மேவிய கண்ணுதலே

5. நடையலங் காரன் நாட்டியத் திலகன் நல்லமுதன்
விடையமர்ந் தேழ்புவி விளங்குயிர்க் கண்புருக் காட்சிதரும்
படைமழு பதிகரப் பாம்பணி மேனி பாண்டரங்கன்
கடைக்கண் அருளளி கப்பூர் மேவிய கண்ணுதலே

6. இண்டங்கொ டிமலர் எருக்கம்பூ எனமலர் இசைந்தணியும்
சண்டமா ருதம்மழை தனிமின் னல்காத் தாரகையன்
தண்டக னைத்தழந்த தற்பரஞ் சோதியன் தழல்மலையன்
கண்டம ணியணி கப்பூர் மேவிய கண்ணுதலே

7. அணிதவழ மேனியன் ஆயிரங்கோடிமின் ஆணழகன்
இனிதடை இல்லா ஏர்வொளிக் காலெண் ணில்பொருளள்
பணித்த பரம்பொருள் பாம்பணி விந்தையன் பரமேசன்
கணிதத்தி ருஞான கப்பூர் மேவிய கண்ணுதலே

8. வித்தொடு நால்னகை விதவித உடலளி வேதியலோன்
சத்துசித் தொடுசதத் சத்துக் இருளிறை சாம்பசிவன்
பத்துத்த லையோனின் பாட்டுக்கு வாளளி பரமபதி
கத்திரி கைநடனன் கப்பூர் மேவிய கண்ணுதலே

9. முந்தக முனிவோர் மோணவி ரதியர் பூசைசெய்யும்
செந்தழல் மேனியன் தாமரைத் திருவடி சாந்தருணை
அந்தக னுக்கருள் ஆனந்த மூர்த்தி ஆடல்வல்லான்
கந்தகம் காஞ்சன கப்பூர் மேவிய கண்ணுதலே

10. பருப்பொருளே உடலொடு பழமலம் ஒடுங்குற பதமருளும்
திருப்பெருந் துறைஒளி சேவைசெய் செஞ்சுடர் திருப்பழனன்
தெருப்பொருள் நாயெனை திருவைந் தெழுத்துரை வரமளித்த
கருப்பொருள் தருமிறை கப்பூர் மேவிய கண்ணுதலே

–திருச்சிற்றம்பலம்–

## 101. கூழையூர்

**அகத்தீசுவரர்** **கலிவிருத்தம்** **அபிராமியம்மை**

1. நன்னல ராவிரை நாள்மலர் சூடிய
கன்னல் அமுதே கற்பகத் தேனே
இன்னரு ளொடுபுவி இயங்குற வரமருள்
கொன்றைநல் கூழையூர் கூத்தபெ ருமானே

2. பொன்னொளித் திருக்கழல் போதக மூர்த்தி
என்னுயிர்த் தாயே தந்தைஎன் குருவே
நன்னுயிர் வாழ்வொடு நானிலத் தமைதிசெய்
கொன்றைநல் கூழையூர் கூத்தபெ ருமானே

3. நீலம ணிகண்ட நெடுஞ்சடைச் சுடரே
காலம ழைமுகில் கார்த்திகைக் கரும்பே

சீலம னிதரின் சிந்தையில் வந்தருள்
கோலநல் கூழையூர் கூத்தபெ ருமானே

4. செப்பார் திருவுரு சிந்தொளி மலையே
அப்பா அண்ணா அன்னையின் தந்தாய்
எப்பா வினைக் கினிதே செய்தருள்
கொப்பால் கூழையூர் கூத்தபெ ருமானே

5. முத்தார் மரகத முத்தீச் சுடரே
அத்தா அன்பரின் ஆருயிர் நண்பே
எத்தாள் வணங்கினும் இறைநின தன்றோ
கொத்தால் கூழையூர் கூத்தபெ ருமானே

6. அறுகெருக் கிளம்வன்னி அக்கம ணிதிகழ்
குறுமுனி தொழுகவின் கோமே தமலையே
மறுபிறப் பில்லா மணிகழல் நிழலருள்
கொறிநிறை கூழையூர் கூத்தபெ ருமானே

7. மரமலர் தமனியம் வனமூ லிகையணி
பரமனென் படரொளி பனிவெளித் தொலைவே
அரகர எனுஞ்சொல் அறுபிணி மருந்தே
கொரலிநல் கூழையூர் கூத்தபெ ருமானே

8. மணிவிடப் பாம்பணி மாதவக் கொழுந்தே
அணிநிலத் தத்தனே ஆண்டவச் சித்தனே
பிணிமூப் பறுத்துநின் பிங்கலக் கழலருள்
குணிமணி கூழையூர் கூத்தபெ ருமானே

9. மதிமலர் புரிசடை மறைமமு வுறைகரன்
அதிபதி அருவே அப்பனின் தந்தையே
நிதிநிலம் உடல்வெறி நீங்குறும் மனமருள்
குதிநதிக் கூழையூர் கூத்தபெ ருமானே

10. செடிகொடி புவியேழ் செய்தப ரம்பொருள்
பொடிவெண் ணீறணி புவனியப் பேரொளி
படிகம ணிமனம் பரிவுறைத் திருவருள்
கொடிமலர் கூழையூர் கூத்தபெ ருமானே

–திருச்சிற்றம்பலம்–

## 102. திருவாவடுதுறை – ஆதீன மடத்து உள் கோயில்

**ஞானமா நடராசர் எழுசீர் ஆசிரிய விருத்தம் (உமாபதி சிவம் வணங்கிய திருமேணி)**

1. வலந்துடி இடஞ்சுடர் மான்மறை ஏந்திய
வானவர் திருவொளி மாணிக்கம்
சலந்தரன் அகந்தையை தடிந்தருள் புரிந்தனை
சற்குணக் குருவே தழல்மலையே
மலமிகு சிதடெனை வாவென் றருளினை
மனமுரு கித்துதித் தழுதெழுந்தேன்
நலமளி துறைசை நற்குரு பூசைசெய்
ஞானமா நடராச நாயகனே

2. சிறுபிறை புனைமுடி செந்தழல் ஏந்திய
திருவா வடுதுறைச் செம்மணியே
அறுபதின் மூவருக் கருளிய பெருமா
ஆனந்தத் தாண்டவச் சிவமூர்த்தி
மறுகுறைச் சிதடெனை வாவென் றருளினை
மனமுற மணிக்கழல் பணிந்தெழுந்தேன்
நறுமலர்த் துறைசை நற்குரு பூசைசெய்
ஞானமா நடராச நாயகனே

3. அரும்மலர் கொன்றை அரவணித் திரிவேல்
அவனியப் பேரொளி ஆனந்தம்
கரும்பினைக் கல்கரி கடித்துணக் காட்டிய
கலியுக நவமணிக் கற்பகமே
இரும்புழு எனக்குனைத் தொழும்வரம் அருளிய
இணையடி துதித்துளம் மகிழ்தெழுந்தேன்
நரகெதிர் துறைசை நற்குரு பூசைசெய்
ஞானமா நடராச நாயகனே

4. முள்ளிளம் நெருஞ்சியும் முதிரெருக் கலரணி
மூவிழி முழுச்சுடர் மோனமுனி
தெள்ளுத மிழ்ஞான சம்பந்தர்க் கருளிய
செம்பவ ளமல்லிச் செஞ்சடையன்
அள்ளலென் வினையறுத் தழல்கழல் காட்டிய
அன்பினை நினைந்து அழுகின்றேன்

நள்ளிசை துறைசை நற்குரு பூசை செய்

ஞானமா நடராச நாயகனே

5. வெங்கரி உரியுடை வெண்பிறை சூடிய

வெற்றிவி டையமர் வெஞ்சுடரே

பொங்கமு தப்புனல் புகைவிட மருந்திய

புண்ணியப் பெருங்கொடை புனலீசா

அங்கதக் குரங்கெனை ஆட்கொண் டருளிய

அன்பைநி னைந்துருகித் துதிக்கின்றேன்

நங்களின் துறைசை நற்குரு பூசை செய்

ஞானமா நடராச நாயகனே

6. மொக்குநிறை கொன்றை முள்ளிளம் வன்னியும்

முதிர்வில் வஞ்சூடும் முக்கணனே

செக்கர்விண் எழிலுரு செங்கதிர் மாமலை

திருவா வடுதுறைத் தேனமுதே

மக்கெனை அழைத்தருள் வழங்கிய திருவே

மனமுரு கியுருகித் துதித்துவந்தேன்

நக்கனல் துறைசை நற்குரு பூசைசெய்

ஞானமா நடராச நாயகனே

7. தோடா யிரமரை சூடிய திருவே

சுயம்பே மாணிக்கச் சுடரொளியே

ஏடார் புனலனல் ஏறிச்சம் பந்தர்க்கும்

இனிதருள் சூலன் ஏகம்பன்

தேடா நாயெனைத் தேடிய ருளிய

சிவமே நின்கழல் துதித்தழுதேன்

நாடாள் துறைசை நற்குரு பூசைசெய்

ஞானமா நடராச நாயகனே

8. பொறிவரி நாகம் புனைசெம் மேனியன்

புலத்தியர்க் கருளிய பூந்தழலன்

செறிகட லேழினை சிறுகணை அழிப்புற

திருவருள் கூட்டிய செஞ்சுடரன்

வறிசித டெனக்கும் மலரடி நிழலருள்

மாண்புணர்ந் துருகித் துதித்தழுதேன்
நறுமலர்த் துறைசை நற்குரு பூசைசெய்
ஞானமா நடராச நாயகனே

9. புனைமலர் புலியதள் பொன்னிடை நவமணி
பூதலத் தோர்செய் அலங்காரன்
கனையமை திரிபுரம் கனலுணல் காட்டிய
கயிலயக் கொலுவமர் கங்காளன்
எனைஒரு உயிராய் ஏற்றருள் நல்கிய
ஈசனுன் கருணையை நினைந்தழுதேன்
நனைமலர் துறைசை நற்குரு பூசைசெய்
ஞானமா நடராச நாயகனே

10. மதியருள் பெரியோர் வரகவி வானவர்
மாளிகைத் தேவரும் வணங்கியசீர்
துதிதிரு வாவடு துறையமர் சிவனே
தொல்உமா பதிசிவம் துதி சுடரே
கதியிலா எனக்குநின் கழல்நிழல் ஈந்ததை
கசிந்து கசிந்துருகித் துதித்தழுதேன்
அதிமலர்த் துறைசை ஆதீனக் குரு தொழும்
அருள்ஞான நடராச நாயகனே
–திருச்சிற்றம்பலம்–

## திருவாவடுதுறை – ஆதீன மடத்து உள் கோயில்
## கலிவிருத்தம்

1. பொன்னோ தேனுறைப் பூவோ திருக்கழல்
அன்னாள் பாற்கடல் அருவிட முண்டோன்
என்னையும் அடிமை ஏற்றமன் ஈசன்
தொன்மைத் தவத்துறை தோன்றாத் துணைவனே

2. கற்கண்டு பால்நெய் கலந்தநன் னோக்கம்
அற்புத்த தாண்டவன் ஐம்பொறி உணர்வுயிர்
நற்கதி யான்பெற நல்லருள புரியொளி
சற்குணன் தவத்துறை சான்றோர் துணைவனே

3. கிளிச்சிறைத் தங்கம் கிளர்மலர் மேனியன்
ஒளிமீன் பேரண்டத் தோங்கா ரவடிவன்

எளியே னைஇயக்கும் ஏகம்ப மூர்த்தி
தெளிவளி தவத்துறை தெள்ளமுதத் துணைவனே

4. மஞ்சிலும் மென்மையன் வயிரம லைத்திரள்
தஞ்சங்கொள் அடியவர் தமரருள் தந்தைதாய்
இஞ்சைய ழித்தெனை இன்பத்தி லாழ்தொளி
கஞ்சிகை தவத்துறை கயிலயத் துணைவனே

5. பற்றிய பாம்புகள் பணிவிடைச் செயல்மகிழ்
ஒற்றியூர் மேவிய உயிர்வளி நிறைகுணன்
வெற்றிகள் எனக்கருள் வேதிய நாயகன்
கற்றளித் தவத்துறை கற்பகத் துணைவனே

6. வளைநெளி மான்மறை மணிக்கரத் தேந்தனல்
தளையறு தவமகிழ் சத்துவத் தத்துவன்
அளைபிணி மாற்றிய அம்பலக் கூத்தன்
விளைநெல் தவத்துறை மின்னொளித் துணைவனே

7. ஒன்றினில் கோடி கோடியில் ஓரணு
நன்றுற இயக்கும் நவமதித் திருச்சுடர்
கன்றினை போலெனை காத்தருள் தாய்ப்பசு
பொன்றிகழ் தவத்துறை பொற்பதத் துணைவனே

8. முப்பொழு தமைத்தருள் மூவிழித் திருவுரு
அப்பரின் சூலையை அறுத்தருள் ஆண்டவன்
இப்பிறப் பறுப்புறு இணைகழல் காட்டிய
செப்பெழில் தவத்துறை திருவருள் துணைவனே

9. முப்பதோ டாறுநல் தத்துவத் துடலுயிர்
ஒப்புடன் இயங்கும் ஒலியொளி நாயகன்
அப்பனும் ஆசான் அண்ணனும் ஈசனும்
சப்தரி சிக்கருள் தவத்துறை துணைவனே

10. தண்டை சிலம்பொலித் தற்பரஞ் சோதியன்
அண்டப்ப கிரண்டத் தனல்புனல் மாமலை
பிண்டப்பி திரெனை பிழைபொறுத் தருளிறை
பண்டெழில் தவத்துறை பரம்பொருள் துணைவனே

–திருச்சிற்றம்பலம்–

## திருவாவடுதுறை – ஆதீன மடத்து உள் கோயில்
## கலிவிருத்தம்

1. கலங்குள விளக்கெனும் கயிலயத் திருச்சுடர்
நலந்தரு ஞானமா நடராசத் திருமுகம்
மலர்வனத் துறைசையின் மடநடுக் கோயிலன்
அலமழி கழல்தொழல் ஆனந்த தரிசனமே

2. வலம்புரிச் சங்கிசை மகிழ்புவிப் பேரொளி
தலம்பல கோடியில் தழல்மலை எனஒளிர்
மலர்வனத் துறைசையின் மடநடுக்கோயிலன்
உலகெழில் கழல்தொழல் உயிர்மகிழ் தரிசனமே

3. கயமுகன் உருவழி கனல்விழிப் பேரிறை
பெயல்மனத் தடியவர் பெட்டகத் தமர்ந்தோன்
மயக்கழி துறைசையின் மடநடுக் கோயிலன்
நயமலர்க் கழல்தொழல் நலமுணர் தரிசனமே

4. சித்துந வகோடி திகழுறு சிவநிலம்
தத்துவச் சம்பந்தர் வணங்கிய சற்குரு
மத்தளத் துறைசை மடநடுக் கோயிலன்
புத்தலர்க் கழல்தொழல் பூரணத் தரிசனமே

5. சைவத்தி ருநெறி சந்தானக் குருமுறை
மெய்கண்ட மரபினர் மிகுதுதிப் பேரிறை
மய்யறு துறைசையின் மடநடுக் கோயிலன்
பொய்யறு கழல்தொழல் புண்ணிய தரிசனமே

6. எண்குண மாமதி ஏழிசை வீணையன்
கண்கொடை அடியவர் கருணைக் கருள் தரும்
தண்துறை துறைசையின் மடநடுக் கோயிலன்
நண்புறைக் கழல்தொழல் நலமருள் தரிசனமே

7. அட்டாங்க யோகம் ஆக்கினை அணுத்திரள்
தட்டார் புவிச்சூழல் சந்தனப் பெருஞ்சுடர்
மட்டலர் துறைசையின் மடநடுக் கோயிலன்
பட்டார் கழல்தொழல் பரவசத் தரிசனமே

8. செஞ்சிலைப் பெருந்துறை சிவக்கொழுந் தனல்புனல்
வெஞ்சிறை வாசகர் விடுபெறல் அருள்மழை
மஞ்சலர்த் துறைசையின் மடநடுக் கோயிலன்
அஞ்செழுத் தடிதொழல் அற்புதத் தரிசனமே

9. அன்பமு தநதி அருவுருப் பேரிறை
தென்னவர் பூமியின் பொன்னலங் காரன்
மன்னருள் துறைசையின் மடநடுக் கோயிலன்
இன்னொளிக் கழல்தொழல் இதயப்பொன் தரிசனமே

10. எந்திரக் கதிநிலை இறுதிக்க லியுகம்
வெந்தழல் சூழ்ந்தழி வேளையில் காப்பருள்
மந்திரத் துறைசையின் மடநடுக் கோயிலன்
அந்தரக் கழல்தொழல் ஆன்மநல் தரிசனமே

–திருச்சிற்றம்பலம்–

## திருவாவடுதுறை – ஆதீன மடத்து உள் கோயில்
### அறுசீர் ஆசிரிய விருத்தம்

1. குருவாய் வந்தருள் கொன்றையனே குறும்பிறை சூடிய குன்றவில்லி
கரும்பே கனியே கயிலையனே காலமெல் லாம்செய் கற்பகனே
உருவாய் அருவாய் ஒளிரனலே உமாபதித் தேவரின் பெட்டகனே
அருளா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

2. ஊனமர் நடனம் உவந்தாடி உயிருணர் வேறி அறிவுணர்த்தும்
கானமா பொற்கழல் கயிலாயா கலைவித்தை தரும்திருக் கதிரறிவே
ஞானமா நடராச நாயகனே நல்மனக் கோயில் நவமணியே
ஆனமா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

3. ஏடணிக் கவிமடல் ஏகம்பன் இரசவா தப்பொன் ஈந்தபிரான்
காடகக் காபால நடம்பயின்றே கருணைக்க டையூழி காட்டுமண்ணல்
மூடம னத்துயிர் முத்திபெற மூவகை தீக்கைசெய் மூவிழியன்
ஆடலா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

4. முப்பதினாறொடு அறுபதுசேர் முன்னுணர் தத்துவம் உயிர்க்களித்தே
செப்பரும் மாமலத் திறலொடுங்க திருவருள் தீக்கைசெய் சிவலோகா
எப்பொருள் காலம் எதுவதிலும் இருந்துல கியக்கும் இறையோனே
அப்பா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

5. மழகளி றைரா வணத்தமர்ந்த வானவப்பெருஞ்சுடர் வாகீசா
விழவார் மதுரை வேதியனே வீழிமி ழலையமர் விண்ணவனே
தழலோர் கரமுறை சற்குருவே சங்கப் பலகைதந்த சங்கரனே
அழகா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

6. படமா நாகம் புரள்மேனி பாசுப தமளி பாற்கடலன்
முடமா பனையில் குலையளித்தும் முதலையுண் மகன் வரசித்தளித்தோன்

உடனாய் வேறாய் ஒன்றாகி உயிர்மல மொடுக்கும் உன்னதனே
அடலா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

7. உகிரார் நரசிம்மத்து ருவழித்த உலகேழ் பகிரண்டத் தோமொலியன்
முகிலார் வெள்ளியங் கிரிக்குகையில் முத்திசித் சிபத்தி அருள் முதலே
திகிலார்அந்தகன் திறலழித்தே சிவகண மாக்கிய திருவருளே
அகிலா வடுதுறைமடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

8. திருமுறைத் தழிழ் வளர்செஞ்சுடரே சித்தாந்தச் சைவச் சிற்பரனே
கருவுடல் சேருமுன் கண்டுகொண்டே கரணபுவனமளி காளகண்டா
பெரும்புனல் அன்னப்பன் பேட்டைவளர் பிங்கலக் கதலியப் பேரருளே
அருணா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

9. மன்னவன் நீயெனை மகனாக்கி வையக வான்வாழ் வளிக்கும் மண்ணல்
தன்னையும் தம்மையும் தாமுணரும் தத்துவம் சித்தமும் தருங்கடவுள்
பொன்னுரு மேனிப்புண்ணியனே புவனங்கள் ஏழேழ் பொதிகையனே
அன்பா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

10. நெறிபிறப் பிடநான் கமைத்தருளி நிறையுயிர்ப் புரைதீர் நீள்சடையன்
மறிமழு கரமொளிர் மாதேவன் வனவே டனைக்குகன் ஆக்கியகோன்
செறிபரி வளிசுடர் திருவருளன் தென்னவர் பெருந்தகை சிவலோகன்
அறிவா வடுதுறை மடத்தமர்ந்த அம்பல வானத் தேசிகனே

–திருச்சிற்றம்பலம்–

## 103. பேராவூர்

**ஆதித்தேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **ஞானாம்பாள்**

1. கரைமீ றியநல் கங்கைநதி கனகநெல் கழனிசூழ் கோதவரி
தரையே தவழ்மணிப் பென்னாதி தாமிரங் கலந்த பொருனைநதி
திரையார் கடல்குளம் சிதறருவி செந்நீர் ஏரியும் திருச்சுனையும்
பிரைமோர் பாலிலும் எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

2. கல்லே மலையே கற்சிலையே கானகக் குகைமலை உச்சியனே
வில்லே நாணேவிரையம்பில் விண்ணுறை முகில்மீன் கோள்சுழலே
நெல்லே தானிய நிறைமணியில் நிறமேழ் பூவிலை கனியமுதே
பில்லை தருப்பையில் எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

3. பூமணம் பிஞ்சொடு நறுங்காயில் புல்லொடு மூலிகை வேர்களிலும்
தாமரைக் காய்விதை தரைக்கிழங்கில் தண்ணீ ருறைஅரி உயிர்களிலும்
காமனின் ஐவகை அம்புகளில் கருத்துறை தமிழ்க்கவி ஒலிகளிலும்
பேமணி ஒலியில் எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

4. குழலொடு யாழதன் குயிலுசையில் குவியொலி தண்ணுமை நாகசுரம்
எழுமிசை மறைமுறை இயம்புமிசை இளையோர் சிவசிவ எனுமிசையில்
பழகிய கரமணி ஓசையிலும் பஞ்சாட் சரஞ்சொலும் நாதத்திலும்
பிழையறு துதிப்பிலும் எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

5. கோவில் நடைபடி பூவினிலும் கோபுரத் துச்சியின் கலசத்திலும்
காவியும் வெண்மையும் கலந்தநிறம் கலையெழில் கோபுரச் சிலைகளிலும்
பாவிய பற்பல தீபமதில் பரிவாரச் சிலை மாடங்களில்
பேவியர் வோர்தொழ எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

6. சாற்றிய மாலையில் சாந்துகளில் தரித்தநல் லாடையில் குங்குமத்தில்
ஏற்றிய தீபநல் கருவறையில் இருபுற மணிமலி கதவுகளில்
மாற்றிய மஞ்சன நீராட்டில் மலரொடு கனிதேன் வழிநிழலில்
பேற்றினை யருளிட எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

7. கதிரொளிக் காலைமுன் பிறையொளியில் கற்பகப் பசுக்களின் மடியமுதில்
பதிவலைக் கேணியின் நீரலையில் படர்நிழல் வைகறைப் பறவையொலி
பொதிந்தெழு தென்றலின் பூமணத்தில் புதுமுகை சந்தனச் சாந்துகளில்
பிதிர்புவிக் கவினே எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

8. மங்களக் குங்கும மலர்மாலை மரகத மாணிக்க மணியாரம்
இங்ககம் கோயில் விளக்கொளியில் ஏந்திய கிண்கிணி மணியொலியில்
பொங்கிசைக் காழியன் செந்தமிழில் புத்துணர் வப்பரின் தேவாரம்
பிங்கல வடமதில் எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

9. நந்திக் கருளிய நாயகனே நங்களுக் குடலளி தெய்வதமே
அந்திசந் தியளி அற்புதமாய் ஆனந்தத் தாண்டவத் தருளொளியே
இந்திர வானவர் இடைநின்றே ஏழ்புவி தாண்டிய பெருஞ்சுடரே
பிந்திய ருந்தொழ எழுந்தருள்க பேரா வுருறைப் பெம்மானே

10. ஏழ்புவி விண்மீன் பால்வெளியே இருநிழல் வெளிமுழுப் பரஞ்சுடரே
ஆழ்மனத் தமர்வுறு அடியாரின் அற்புதக் கற்பனைச் செயல்வடிவே
தாழ்பணி பத்தரின் துதியேற்றே தாரணி மானிடத் துயர்தீர்க்கும்
பேழ்கழல் ஒளியுற எழுந்தருள்க பேரா வூருறைப் பெம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 104. கொத்தங்குடி

**கோடீசுவரசாமி** **கலிவிருத்தம்** **பிருகந் நாயகி**

1. திங்களின் தேயுரு திருத்திய செஞ்சுடர்
பொங்கமு தளித்த புண்ணிய மூர்த்தி
எங்கள்முன் னோர்தொழு தேத்திம கிழ்ந்தசெங்
கொங்கலர் சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே

2. இந்திரன் சாபமும் இழிமாற் றியஒளி
மந்திர நாயகன் மறைத்திரு மேனியன்
சிந்துவெ ளியுகச் சீர்புவி துதித்துயர்
குந்துரு சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே

3. காலனின் கொடிவடி வகற்றிய கருணையன்
மாலவன் துதிமகிழ் சக்கர மருள்முனி
ஞாலநல் மானிடம் நமச்சி வாயமெனும்
கோலவெஞ் சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே

4. மன்மதன் துணைதுயர் மாற்றிய மாணிக்கம்
அன்பரின் பசியற அமுதளிக் கொடைமுகில்
தென்கும ரிமலை திரைஇம யஞ்செய்த
கொன்றையஞ் சீர்கொத்தங் குடியறைக் கடவுளே

5. நான்முகன் பவச்சிரம் நறுக்கிய நிரந்தரன்
தேன்கவி சுந்தரர் சீர்விழி மருத்துவன்
வான்முதல் வையமும் வணங்கிய வளரொளி
கூன்பிறைச் சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே

6. நால்வரின் நனிமதி நயக்கவி யருள்குரு
நீல்மணி மிடறொளி நிலத்தினர் தெளிமதி
வால்மீன் புகைக்கொடி வளர்செய் கோள்தரும்
கோல்மணிச் சீர்காத்தங் குடியுறைக் கடவுளே

7. ஏழிருங் கடல்தடிந் தின்னுயிர் காத்தருள்
ஊழிய நாயகன் ஓங்கா ரநாதம்
ஆழிநி லம்வகுத்த அற்புதத் தாண்டவன்
கோழியச் சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே

8. சிலந்திக் கருளிய செஞ்சுடர் வேதியன்
நலந்திகழ் இயற்பகை நல்லறம் போற்றிய
கலந்தனில் வலைவிரி கற்பகத் திருவொளி
கொலுவிரிச் சீர்கொத்தாங் குடியுறைக் கடவுளே

9. அந்தகன் உடல்எரித் தந்தரக் கணஞ்செய்
துந்துபி இசைமகிழ் சுடர்க் கொடி பூம்புனல்
தந்தைதன் தாய்தந்தை தரணிம னிதர்தொழும்
குந்துருச் சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே

10. திருமால் அரியுரு திருத்திய சுடலையன்
ஒருமான் கரமுறை ஓமொலி நாயகன்
வருநாள் நேற்றைய வையகம் தொழுசுடர்
குருமான் சீர்கொத்தங் குடியுறைக் கடவுளே
–திருச்சிற்றம்பலம்–

## 105. கெங்காதரபுரம்

**விசுவநாதர்** **கலிவிருத்தம்**

1. ஓங்கா ரமறை ஒருவான் றில்லோன்
பூங்கா வனத்தென்றல் புண்ணிய மூர்த்தி
தாங்கும்நல் கெங்கா தரபுரம் மேவிய
வேங்கைஉ ரிபுனை வெந்தழல் முதல்வனே

2. அட்சய வானவன் அன்பருள் மாவள்ளல்
சிட்சைசெய் ஆசான் தில்லையம் பதியோன்
தட்சநல் கெங்கா தரபுரம் மேவிய
வெட்சிய ணிமுனி வெந்தழல் முதல்வனே

3. ஆடிய பூங்கழல் அம்புலி அணியலை
நாடிய திருத்தொண்டர் நலிவழி நாயகன்
தாடிரி கெங்காதரபுரம் மேவிய
வேடுருத் தயவளி வெந்தழல் முதல்வனே

4. சாத்திரம் சமயம் தத்துவங் கடந்தோன்
நேத்திரக் கவினொளி நெடுஞ்சடைத் தமரன்
தத்திரிக் கெங்கா தரபுரம் மேவிய
மீத்துயர் மாற்றும் வெந்தழல் முதல்வனே

5. ஓதும றைப்பத்தர் உள்ளொளிப் பேரிறை
யாதுமே தானாய் யாவையு மாகிய
தாதுறைக் கெங்கா தரபுரம் மேவிய
மீதுணை வேதியன்வெந்தழல் முதல்வனே

6. பூபதி யோர்துதி பொன்னொளிர் ஆதியன்
கேபதி அமரா வத்கருள் புரிந்தோன்
தங்தர் கெங்கா தரபுரம் மேவிய
வீபத்த ணிமுடி வெந்தழல் முதல்வனே

7. பூம்புனல் தீவளி புதிர்வெளி நிலம்புடை
தீம்பதி மாயையின் சீர்பெருக் குமருள்
தாம்பிரக் கெங்கா தரபரம் மேவிய
வீம்புரை மாற்றும் வெந்தழல் முதல்வனே

8. கோமதி சமயக் குரவோர்க் கருளிய
காமனை எரித்த கருணைக் கடவுள்
தாமரை கெங்கா தரபுரம் மேவிய
வீமம ழித்தருள் வெந்தழல் முதல்வனே

9. வேய்ங்குழல் மாலுக்கும் விஞ்சைவின் ணோர்க்கும்
காய்கதிர்ப் பரிதிக்கும் கருணைசெய் தருளிய
தாய்மைநல் கெங்கா தரபுரம் மேவிய
மேய்மணி சூடிய வெந்தழல் முதல்வனே

10. சீரணித் திருவருள் செஞ்சுடர் மேனியன்
காரணித் திருவடிக் கருணைநல் நிழலளி
தாரிணிக் கெங்கா தரபுரம் மேவிய
வீரியம் எனக்கருள் வெந்தழல் முதல்வனே
–திருச்சிற்றம்பலம்–

## 106. நல்லடை

**அக்னீசுவரர்** **வஞ்சிவிருத்தம்**

1. மங்கலன் நின்னைநான் மறந்துறங்கேன்
சங்கிசைக் கோயில் வலம்மறவேன்
எங்குமொ ளிர்சுடர் இறைஞ்சிநிற்பேன்
குங்குமன் நல்லடைச் கோயிலனே

2. பந்தங்கள் விலக்கிய பழங்கூலம்
சிந்தையெ லாம்நிறைஎன் திருப்பூசை
வந்தனைச் சிவாய மறையோதல்
குந்துரு நல்லடை கோயிலனே

3. மடையடிக் கிளிஞ்சலன் மதியில்லோன்
உடையோன் நினக்கே நானடிமை
விடையமர் திருவுரு என்நெஞ்சில்
குடைகரி நல்லடைக் கோயிலனே

4. மண்ணடச் சுபப்பெலாம் நின்துதியே
தன்டைநின் சிலம்பொலி சார்ந்தொலிக்கும்
பண்டரங் கநடம் பார்க்கநகை
குண்டலி நல்லடைக் கோயிலனே

5. பொதும்புறைப் பார்வையில் புள்ளிடைப் போல்
கதியொன் றறிந்தேன் நின்துதியே

சதுரநின் புசையில் மகிழ்ந்திரும்
குதும்பகர் நல்லடை கோயிலனே

6. சமயக் குரவோர் சங்கீதம்
இமயப் பெருவரை ஏற்றிசைக்கும்
ஞமலிய்ன கணாத பிதற்றமகிழ்
குமலிநல் நல்லடை கோயிலனே

7. மழலைக்கும் பாற்கடல் வழங்கி மகிழ
விழவெழில் திருவா ரூரமுதன்
பழமலன் நானின் பதம்மறவேன்
குழவியர் நல்லடை கோயிலனே

8. வெம்மையன் துயரில் வீழ்ந்தமனம்
செம்மைசெய் துயர்வுறத் துதிக்கின்றேன்
அம்பலக் கூத்தனே அருள்புரிவீர்
கும்பளம் நல்லடை கோயிலனே

9. பரம்பரைப் பகழுழி பழிமூடன்
சிரம்வாய் மனமுரைக்கும் சிவநாமம்
நிரந்தரக் கடவுள் நினக்கடிமை
குரவக நல்லடை கோயிலனே

10. வருந்துயர்க் கருளளி மாதேவன்
செரும்புலித் தோலுடைச் செஞ்சுடரன்
விரும்பித் துதிசெய்யும் விளையருள்வீர்
குருந்தநல் நல்லடை கோயிலனே

–திருச்சிற்றம்பலம்–

## 107. இலுப்பூர்

**மத்தியர்சசனேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. கழலொன் றுயர்த்திய கதிர்மணிக்கு குன்றன் ககனச் சுழல்வெளியன்
நிழல்மணி மிடறெழில் நெருப்பன்பொருப்பன் நேசத் திருக்கடவுள்
பழமழ யார்வினை படிநிலை மாற்றிப் பரிவருள் திருமூர்த்தி
புழகணி நெடுஞ்சடை புண்ணியன் இலுப்பூர் பொன்னார் மேனியனே

2. ஓரொளி இருநிறன் ஊமத்தம் சூடிய ஊர்த்துவ வெட்சியண்ணல்
தேரொளி மின்னலில் திருவுரு காட்டிய செறிவெள் ளியங்கிரியன்
ஆரொளி விண்மீன் ஆதிரை மண்டலன் அனகன் அனல்மழுவன்
சீரொளி பால்வெளி செய்சுடர் இலுப்பூர் திகம்பரப் பூரணனே

3. ஞானத் திருவிழிச் ஞாதிருக் கெளியன் நடனசி காமணியன்
கூனல் பிறைமுடி கொடுவினை மாற்றளி கூத்தநல சங்கீதன்
ஏனக்கு ருளையை ஏற்றருள் புரிந்த ஈசுரப் பரஞ்சோதி
கானகப் பெருவயல் கதிர்மணி இலுப்பூர் காவிரிப் பெருமானே

4. ஏழேழ் புவிசெய் எண்குண வேந்தே இன்னிசை வீணையனே
கேழேழ் மணமலை கேதா ரப்புனல் கிரிநடுச் சுந்தரத்தீ
ஆழேழ் கடலொடு அறுநில மேடமை ஆனந்தப் புன்னகையன்
காழேழ் மலர்வனக் காட்சிசெய் இலுப்பூர்க் கனகத் திரளோனே

5. பூதமைந் தளித்த பூங்கழல் அங்கணன் புதிர்விழிச் செஞ்சுடரன்
நாதமைந் தோடிரு நல்லொளி புனைந்த நற்கலை வித்தகனே
வேதச்செந்தமிழொடு வேறுள்ள மொழிகளில் மிதிந்தெழும் விழுப்பொருளே
போதனைக் குருவே புவனநல் இலுப்பூர் பூண்ணியச் சங்கரனே

6. உயிர்வளி குருதி ஓடுந் தமனியில் ஒட்டா உருவனலன்
பயிர்பூங் கதிர்செய் பரம்பொருள் கணிதன் பாருயிர்க் கோரொளியன்
செயிர்தீர் செம்மதி திருவருள் நாயகன் செம்புலப் புயல்நீரன்
தயிர்நீர் அபிடேகச் சாந்தன் இலுப்பூர் சற்குணப் பிறையரனே

7. நிலம்நீர் தீவெளி நெடுவெளி அனுவலை நிரந்தரப் பேரிறைவன்
வலம்வரு கதிர்மீன் மருக்கோ ளாக்கி வாழுயர்க் கிடமளித்தோன்
கலம்பயில் வலைவிரி கடல்மிசை நடந்த கயிலையம் கொலுவெழிலன்
நலம் பயில் உயிர்க்குடல் நல்கிய இலுப்பூர் நலநிதிப் பெரியோனே

8. செடிகொடி நெடுமரம் சீர்மலை வனஞ்செய் செழுமணிமுத்தாறன்
அடிமுடி அயனரி அறியாத் திருவனல் அடியார் மனத்தமர் கோன்
பொடிவெண் ணீறணி புங்கவன் சங்கரன் போதம ளிக்கடவுள்
துடியிசை உயிருடல் தொகுக்கும் இலுப்பூர்ப் படர்சுடர்த் திகம்பரனே

9. உருவுரு நடனன் ஒளிஒலித் துடியன் உலகுசெய் அலங்காரன்
அருவுரு லிங்கமென் றமர்ந்தோன் எழுந்தோன் ஆரம்பமிறுதியில்லோன்
கருவுரு கனல்புனல் காரிருள் விண்ணொளி காட்டும் கயிலாயன்
திருவுரு பொன்மிளிர் செயல்மலி இலுப்பூர் செங்கேழ் வைரவனே

10. ஒளிநிழல் இருள்வெளி உலகுயிர்க் குடல்செய் ஓமொளிச் சங்கீதன்
தெளிமதிக் குண்டலி சேர்தணல் தீர்வருள் செந்தமிழ் மாமறையன்
எளிமைநல் அடியவர் எண்ணமும் செயலாய் எழுந்தோளி ரீசானன்
பளிங்கொளி சிலைஎழில் படிவநல் இலுப்பூர் பரம்பொருள் ஆதியனே

–திருச்சிற்றம்பலம்–

## 108. எடுத்துக்காட்டி - சாத்தனூர்

**நித்திவினோதீசுவரர்** **கலிவிருத்தம்**

1. சந்தனச் சாந்தொடு தமணியம் சூடும்
எந்திரச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
மந்திர நாயகன் வானவர் தேவனை
சிந்தனை செய்வார் தீதகல் வாரே

2. வெண்பொடி பூசிய வேதியல் நாயகன்
எண்மலர்ச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
விண்ணவர் நாயகன் வினைவிதி தேவனை
எண்ணித் துதிப்போர்க் கில்லையோர் தொல்லையே

3. செண்பகம் பிறையொடு சிறகணிச் சுடரொளி
இண்டைநல் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
கண்டங் கருப்புறை கழலெழில் நாதனின்
தொண்டராய் துதிக்கச் சுகமோர் கோடியே

4. பட்டைநல் எருக்கலர்பாம்பணி திருவொளி
இட்டியச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
கொட்டிசைக் கூத்தனின் கொங்கலர்த் தேவனின்
கட்டெழில் கழல்தொழ கவலைகள் தீருமே

5. புத்தொளி மரகதம் புனைமலர் மூர்த்தி
இத்தியச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
அத்தனா ரூரன் அம்பலக் கூத்தனை
நித்தமும் துதிப்பார் நிமலனின் அன்பரே

6. மத்தமென் எருக்கலர் மதிப்பிறை சூடெழில்
எத்தனச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
சித்திமுத் தியளி செஞ்சுடர் நாதனை
பத்தியு றத்துதிப்பின் பரனடி சேர்வரே

7. நீலக்க முத்தெழில் நீளமத் தமணி
ஏலநல் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
சீலமெல் லாந்தரும் சிவமணிச் சுடரனைக்
காலைமா லைதொழக் கடுவினை தேய்வரே

8. பச்சிளம் வன்னியம் பால்வெண் ணீறணி
இச்சியல் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்

பிச்சையுண் பேரிறைப் பிஞ்சகன் கழலினை
இச்சையோ டேத்தவார்க் கேழுல கின்பமே

9. நொச்சிநல் கூவிளம் நூதனத் தாரணி
எச்சனச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
விச்சையன் வேதியன் விண்ணவர் தந்தையே
நச்சியே துதிப்பவர் நாடாள் மன்னரே

10. சொக்கர்விண் மேனியன் சிறகணிச் சடைமுடி
இக்கவச் சாத்தனூர் எடுத்துக் காட்டியின்
மக்களு எக்கோயில் மான்மரைக் கரத்தனை
நெக்குறத் துதிப்பவர் நிமலனைச் சேர்வரே
–திருச்சிற்றம்பலம்–

## 109. திருக்களாஞ்சேரி

**நாகநாதர்** **கலிவிருத்தம்**

1. நன்னீ ராட்டியும் நறுமலர் சூட்டியும் நனி பணிந்தே
பொன்னா பரணநல் புனிதன் கழல்தனில் பூசைசெய்யும்
இன்னான் முன்நாள் எதிர்நாள் பத்தரின் துயரறுக்கும்
சென்னா கமுறை திருக்களஞ்சேரியின் செண்பகனே

2. ஊழால் பலப்பல உலகுயிர் பிறப்பாய் உழன்றிடினும்
ஏழேழ் புவியின் எழில்திரு நாமங்கள் இயம்பலுற
மாழாத்து ருகுயிர் வளரொளிக் கயிலையில் வதிந்தோங்கும்
காழேழ் கழலணித் திருக்களஞ்சேரியின் கருணையனே

3. தேராச் சந்ததி செய்துயர் பாவத்தில் தேய்ந்த உயிர்
ஆரா அமுதே அரனே அண்ணால் எனத் துதிப்போர்க்
கூரார் உலகோர் உவக்கும் கழலடி நிழல்தருவார்
ஏரார் பூவடித் திருக்களஞ் சேரியின் இறையோனே

4. பாலிள நீரொடு பஞ்சா மிர்தநன் நீராட்டும்
வாலிபத் தவறற மனமுழுச் சிவமொளிர் மானிடரின்
ஆலிளம் விழுதென ஆயிரம் தலைமுறைக் கருளளிக்கும்
மாலயன் தொழுஞ்சுடர் திருக்களஞ் சேரியின் மரகதமே

5. கண்டம ணிஅக்க மாலைவெண் ணீறணி கடுஞ்சைவர்
மண்டலத் தோர்செய் மாதுயர் மறந்தமணி மிடறன்
செண்டலங் கழல்தொழ சீர்நிலப் புகழ்நிதி திருவடியின்
கொண்டலம் நிழல் தரும் திருக்களஞ் சேரியின் கோமானே

6. வந்தும றைந்தவர் வஞ்சத்தில் மடிந்தோர் வாழந்தோரை
ஐந்தெழுத் தோதியே அக்கநீ றணிந்துடல் அடக்கமுமற
அந்தரர் வானவர் அணிவகுத் தான்மா அரனடிசேர்
செந்திரம் அருள்வார்திருக்களஞ் சேரியின் செஞ்சுடரே

7. ஊறிய வறுமையர் உடல்பிணி மூழ்கியர் உயிரழிவோர்
நாறிய வாயிலும் நமச்சிவாயமறை நவின்றிருப்பின்
ஆறிதழ்த் தாமரை அருந்தவி சேறியே அழிபிறப்பாய்
தேறிய வரந்தரும் திருக்களஞ்சேரியின் சிவமணியே

8. இல்மறந் தோடிய இளையோர் முதியோர் இழிவு செய்யார்
நல்லோர் நங்கையர் நலமில் இல்லறர் நட்பழிந்தோர்
எல்லோ டிரவும் இருமுறை கோயில் வழிபடுவார்க்
கல்லலில் வான்தரும் திருக்களஞ் சேரியின் ஆண்டவனே

9. உறவோ டுதியம் உறுபொரு ளில்லா துயிரிழந்தோர்
மறவா திருமுறை மறைநீல கண்டனை நினைந்ததிருப்பின்
பிறவா வரமும் பிஞ்சகத் திருவடி நிழலமரும்
திறமே தருவார் திருக்களஞ் சேரியின் செம்மணியே

10. குறையே மானிடம் நிறைவே இறைத்துதி மறையோதும்
துறைபோ கியமதி தூய்மையை அளந்திலர் துயரறவே
கறைமா மிடறொளிக் கயிலயன் கழல்பணிந் துளமுருக
சிறைப்பிறப் பறுக்கும் திருக்களஞ்சேரியின் சிவமணியே

–திருச்சிற்றம்பலம்–

## 110. தரங்கம்பாடி - அளப்பூர்

**மாசிலாமணீசுவரர்** **கலிவிருத்தம்**

1. பட்டுத் திமில்விடை பாம்பணி சங்கரன்
பிட்டுக்கு மண்சுமந்த பிஞ்சக மூர்த்தி
கொட்டுந் திரையிசை கொங்கலர் அளப்பூர்
எட்டுக்கு ணமுறை இறைத்துதி துறக்கமே

2. பொன்னொளி மேனியன் பூமரைத் தாளினன்
அன்புகொள் அடியார்க் கானந்தக் கொடைவினை
இன்னிசைக் கடலோர் ஏர்திமில் அளப்பூர்
மன்னவன் மாசிலா மணிக்கழல் துறக்கமே

3. தாரகைச் சுடர்விழி தற்பரஞ் சோதியன்
பூரணத் திருமறை பூந்தமிழ்க் கவியிசை
ஆரம ளித்திரை ஆழிநல் அளப்பூர்
காரணப் பரம்பொருள் கழல்துதி துறக்கமே

4. சூரியன் கோடிசெய் சுயம்பொளி மேதையன்
காரிக்க ருள்புரி கருணா கரமலை
வாரிக்கு ளியல்செய் வலம்புரி அளப்பூர்
பேரிசை பிங்கலன் பேர்சொல்ல துறக்கமே

5. கொக்கிற கும்பிறை கொன்றையும் சூடிய
சக்கரக் கொடையளி சற்குண வேதியன்
எக்கர்வன் கரைகழி இறவுறை அளப்பூர்
பொக்கனின் கழல்துதி புண்ணிய துறக்கமே

6. மஞ்சுவ ரைகலை மாணிக்க மாமலை
அஞ்செழுத் தாகிய அருமறை நீதியன்
கொஞ்சும லைமுத்தம் குவிகரை அளப்பூர்
நஞ்சுமி டறன்கழல் நலமளி துறக்கமே

7. மாமணிப் பாம்புறழ் மந்திரங் கோடியன்
காமனைத் தடிந்துயிர் கருணைசெய் சுடர்க்கொடி
ஓமொலி வலம்புரி உறழ்திரை அளப்பூர்
சோமசுந் தரக்கழல் துதித்தலே துறக்கமே

8. விரிசடைப் பூரணன் வெங்கழல் ஆதியன்
கரியுரி போர்த்திய காபால மேந்தொளி
புரிதரு தரளம் பொதிதரை அளப்பூர்
அரியயன் தொழுங்கழல் அடியவர் துறக்கமே

9. கரமழு உறைஒளி கதிர்பிறை பெறுமொளி
சிரமுறை இறகொளி செஞ்சடை தருமொளி
தரளமண் பொன்துகள் தருதிரை அளப்பூர்
அரகரன் திருக்கழல் அருளொளி துறக்கமே

10. தவமறை உறைகரம் தமனியப் பெருஞ்சுடர்
புவனமேழ் படைத்தருள் புண்ணிய மூர்த்தி
குவைபுரி தரளமும் குளிர்வளி அளப்பூர்
அவனியப் பிங்கலன் அனலடி துறக்கமே

–திருச்சிற்றம்பலம்–

## 111. குண்டையூர்

**சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **மீனாட்சியம்மை**

1. தாயே தந்தைநாம் செய்ததவம் தாரணிக் கறிமுகம் செய்தகுரு
மாயா வினையறக் கல்விதரும் மழுக்கரம் துதிக்கவும் வழிசொல்லும்
நாயேற் கின்றே உணரவைத்தீர் நல்மு தயின்ற சுகமின்றே
கோயா நெடுங்கண் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

2. ஈன்றார் இருவினை இயற்றுசெயல் ஏறிய பிறவி எடுத்த மிச்சம்
சான்றாய் பிறவிகள் கொடுத்தேகும் சங்கரக் கழல்தொழப் பிறப்பழியும்
தோன்றா தின்றெனக் குணரவைத்தீர் சுகமோ ரமுதக் கொடைச்சுகமே
கூன்பிறை சூடிய சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

3. உடன்பிறப் பான்மா உடற்றுவினை ஒருமுறை மறுமுறை உடன்பிறக்கும்
கடனென நன்மையைக் கவர்ந்தோடும் கறைகண் டன்கழல் வினைதீர்க்கும்
மடையனுக் கின்றே உணர வைத்தீர் மாறாவி னையேற் கிதுவமுதே
கொடையரு ளளிக்கும்சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

4. துணைமனை முன்செய் தருமங்கள் தூய்மை கவினதன்மறுபிம்பம்
இணைமனச் செயல்கள் பிணியாகும் ஈசநின் கழல்தொழ வினைமாறும்
அணைசெல் லெனக்கின் றுணரவைத்தீர் அற்புதப் புதுமைக் கண்காட்சி
கெணசில் பிறையணிச் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

5. சந்ததி வானுறைத் தனியான்மா சலந்தந் துவக்கும் வினைஏற்றி
மந்திர நாயகன் மணிக்கழலில் வந்துதொ முதழ வினைதீரும்
எந்திரம் அறிமதி தந்துவந்தீர் ஏழையேற் கிதுவோர் இனியமுதே
குந்தகம் தடுக்கும் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

6. நற்குணச் சந்ததி நயமுணர்ந்த நாலிரு பிறவியின் நட்புகளே
பற்பல விதமாய்ச் செயலியற்றும் பரன்கழல் நிழலுறத் துணைசெய்யும்
இற்றைக் கென்றனுக் குணரவைத்தீர் இதுவோர் வகையில் பெருவிருந்தே
குற்பதில் பாம்பணிச் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

7. பத்தரின் ஆன்மா பரனருளே பாரிடை இணைந்தே நட்பளிக்கும்
சித்தமெ லாம்சிவத் தெளிவளிக்கும் சிலநாள் வாழ்வுறை அறிவளிக்கும்
அத்தனே இன்றெனக் கறியவைத்தீர் அடியேற் கிதுவோர் பேரறிவே
கொத்தலர்க் கொன்றையஞ் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

8. தொண்டர்கள் சிவனடித் திருமலர்கள் சுயநம் அறியாச் சுடரான்மா
கண்டடங் கருத்தநின் கழல்சேரும் கருணைநெ றிசெல்லும் வாழிகாட்டி

இண்டையன் எனக்கின் றுணரவைத்தீர் ஏழையேற் கிதுவோர் பெருநிதியே
கொண்டவர்க் கரள்மழைச் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

9. திருவடி தொழுவோர் பிறவிசெய்தே தினம்தினம் மானிடப் பிறப்பளித்தீர்
அருமறை நெறிமுறை அறிவளித்தே அகமுற இறைக்கழல் துதித்துணரும்
பெருமையை அடியேற் குணரவைத்தீர் பிழையேன் எனக்கிது பெருந்தவமே
குருவடி தருமிறைச் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

10. முன்னோர் பிறவியில் தொழமறந்தேன் மூவிரு பிறவிகள் துயரளந்தேன்
பின்னுறத் தந்தருள் புரிந்தசுகம் பிழையறு பூசைகள் செய்துவந்தேன்
இன்னொரு பிறப்பறுத் தினிதளிப்பீர் ஏழையேன் இறைஞ்சலைக் கேட்டருள்வீர்
கொன்றையம் பூவணிச் சிவக்கொழுந்தே குண்டையூர் மேவிய கோமானே

–திருச்சிற்றம்பலம்–

## 112. எட்டிக்குடி

**சௌந்தரேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் ஆனந்தவல்லி**

1. பொன்னொளி மாமணி வைரமலை பூந்தவி சன்புசெய் பொற்பரனே
மின்னொளிச் சங்கரவிமலோனே வெந்திறன் வேதிய நாயகனே
நின்னொடும் பிணங்கினேன் நேசமுற நிலமிசை வந்தெனைத் தேற்றிடுவீர்
இன்னொளித் தெய்வம் வேறிலையே எட்டிக் குடியுறை ஈசுரனே

2. தங்கத் தளிர்விரல் சற்குணனே சந்திரன் பூசைசெய் தற்பரனே
மங்கலக் குங்கும மாமலையே மாணிக்கப் பேரொளிச் சங்கரனே
நிங்களோ டேநான் பிணங்குகிறேன் நிலமிசை வந்தெனைத் தேற்றிடுவீர்
இங்கொரு தெய்வம் வேறிலையே எட்டிக் குடியுறை ஈசுரனே

3. அண்டபே பரண்டப் பகிரண்டன் ஆனந்த வாழ்வருள் அம்மானே
செண்டலங் காரப்பொன் னோவியனே தில்லைம் பலத்தொளிக் கூத்தோனே
ஞெண்டென் நின்னிடம் பிணங்குகிறேன் நிலமசை வந்ததைத் தீர்த்தருள்வீர்
என்னுறை தெய்வம்வேறிலையே எட்டிக் குடியுறை ஈசுரனே

4. சந்தத்த மிழ்ஞான சம்பந்தரை தத்தெடுத் தருளிய சங்கரனே
கந்தம லருறைப் பேரழகே கார்த்திகைத் திருவா திரையோனே
மந்தனென் வணங்குற பிணங்குகிறேன் மண்மிசை வந்ததைத் தீர்த்தருள்வீர்
எந்தையே தெய்வம் வேறறியேன் எட்டிக் குடியுறை ஈசுரனே

5. புத்தம் புதுக்கதிர் புலர்வானே பொன்நவ மணியுறை புகரரும்பே
சித்திசெய் சிவபுரப் பேரரசே தித்திக்கும் தேனே பாலமுதே
பெத்தனே பெருகொளிப் பெரியோனே பித்தனென் பிணக்கினைத் தீர்த்தருள்வீர்
இத்தரைத் தெய்வம் வேறறியேன் எட்டிக் குடியுறை ஈசுரனே

6. பஞ்சினும் மெல்லிய பணிவிழியே பாரேழ் வானவர் பேரிறையே
கஞ்சிநல் கனியுறை நறுஞ்சுவையே கமலத் திருவடிக் கற்பகமே
பிஞ்சக நின்னுடன் பிணங்குகிறேன் பேதையென் பிணக்கினைத் தீர்த்தருள்வீர்
எஞ்ஞான் றும்தெய்வம் வேறறியேன் எட்டிக் குடியுறை ஈசுரனே

7. கண்ண னயன் தொழும் கயிலயனே காதலன் பருளும் கதிரொளியே
பண்ணுநல் அப்பர்சொல் பரவசனே பார்த்தனுக் கருளிய பரம்பொருளே
அண்ணா நின்னுடன் பிணங்குகிறேன் அன்புறப் பிணக்கறுத் தருள்புரிவீர்
எண்குணத் தெய்வம்வேறிலையே எட்டிக் குடியுறை ஈசுரனே

8. பிட்டுக்கு மண்சுமந்த பெருநடிப்பில் பேதையு யிர்க்கருள் பிறம்படியே
வெட்டுகிணற் றில் வரும் வெண்புனலே வேடர்வி ழியேற்ற வெஞ்சுடரே
துட்டனேன் நின்னுடன் பிணங்குகிறேன் தோன்றிப் பிணக்கறுத் தருள்புரிவீர்
எட்டித் திக்கில் வேறு தெய்வமில்லை எட்டுக் குடியுறை ஈசுரனே

9. பூரணப் பொருளே புண்ணயனே பொங்கழல் நந்தனின் புனல்நெருப்பே
தோரணத் தில்லையில் சுயம்பொளியே துதியரு னைஎழும் சுடர்க்கொழுந்தே
காரண மின்றிநான் பிணங்குகிறேன் கண்டதும் கழல்தொழு தழுதெழுவேன்
ஈரணத் தாண்டவத் திருமூர்த்தி எட்டுக் குடியுறை ஈசுரனே

10. முத்துப் பொன் அரண்மனை மூவுலகம் மூவேழ் புவியொடு பெருவளியும்
பத்துயு கம்ரதி ஊர்வசியும் பாலிப்பி னும்நான் பிணங்குறுவேன்
சித்தனே சிறுநொடி முன்தோன்றும் சிரமுறக் கழல்தொழு தழுதெழுவேன்
இத்தரை வாழ்வினில் இதுபோதும் எட்டுக் குடியுறை ஈசுரனே

–திருச்சிற்றம்பலம்–

## 113. செம்பியன் மாதேவி

**கைலாசநாதர்** | **அறுசீர் ஆசிரிய விருத்தம்** | **பெரியநாயகி**

1. குயிலிசைத் திருமுறை குறையறு மறையொலி குளிர்வளித் திருக்கோயில்
அயிரைம யிரைகள் அன்னமும் களிசெய் அருங்குளக் கரைமரத்தில்
பயிலிசைக் குயிலாய் பாடிட ஆசை பாவியேன் வகையறியேன்
மயிலாள் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

2. பொழிலார் திருவூர் பூம்புனல் மரைமணி புகழார் திருக்கோயில்
எழிலார் மாதரர் இசைமணி ஆடவர் இணைமலர்ப் பூசையிடை
அழலார் கழலில் மலராம் ஆசை மடையேன் வகையறியேன்
மழலைச் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

3. இந்திர னாதியர் ஏழேழ் புவியினர் இணைத்துதிச் சீரெழிலூர்
அந்தர விரதியர்அகவனச் சித்தரும் அடிபணி திருக்கோயில்
செந்தழல் மேனியில் சந்தன மாமாசை சிதடனேன் வகையறியேன்
மந்திரச் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

4. நன்னீர்ப் பொய்கையும் நறுந்தேன் மலர்மலி நானிலத் தேனூரில்
மின்னலம் மழலையர் மேதையர் கோதையர் மிகுதுதித் திருக்கோயில்
பன்னீ ராய்க்கழலில் படர்வுற ஆசை பாவியேன் வகையறியேன்
மன்றெழில் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

5. மால்நான் முகனொடு வானவர் மதனும் மகிழ்வளர் தேரூரில்
ஆல்நிழல் அமர்திரு வடியார் பெருங்குழு அஞ்செழுத் திசைகோயில்
பால்தயிர் அபிடேக நெய்யாய் படராசை பாவியேன் வழியறியேன்
வால்கவின் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

6. இணர்மலர்ப் பூசையில் ஏழிசைத் திருமுறை ஏந்திழையோ ரிசைக்கும்
குணமுயர் மனிதரும் குங்குமச் சாந்துகள் கொடையளித் திருக்கோயில்
மணப்புனு ககிலாய் மலரடி தொடுமாசை வழியறி யேன்மூடன்
வணர்கவின் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

7. சிவநெறி திரும்பிய செங்குணப் புதியோர் திருமலர் சூட்டிமகிழ்
தவநெறிப் பேரூர் தற்பரஞ் சுடரொளி சந்தனத்திருக்கோயில்
நவமணி மாலையில் நான்மணி யாமாசை நாயேன் வழியறியேன்
மவுலிநல் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

8. பரம்பரை அடியார் பகலொடு இரவுவந் தாலயம் தொழுமூரே
நிரந்தரக் கூத்தனே நெடுங்கழலாடலில் நிலமணல் உறுத்தாமல்
விரைமல ராகிநான் மிதிபட ஆசை வீணேன் வழியறியேன்
வரைகவின் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

9. நிழல்மணி கண்டம் நித்திலத திருவிழி நெருப்பனல் நெடுமலையே
மழவிடை வாகனன் மந்திர நாயகன் வானவர் முழுமுதலே
கழலடி முயலகன் கதிபெறும் ஆசை கடையேன் வழியறியேன்
வழிபுனல் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

10. சிறுபிறை நெடுஞ்சடை திரியிலை வேல்கரம் திருநீ றணிமேனி
அறுகெருக் கொடுகொன்றை அருங்கூ விளவன்னி அக்கமும் புரள்மார்பம்
குறுமரை நெளிவிர லிடத்துறை ஆசை கொடியேன் மாப்பளிப்பீர்
மறுகெழில் செம்பியன் மாதேவி செய்தளி மாணிக்க மாமலையே

–திருச்சிற்றம்பலம்–

## 114. வடக்குப் பொய்கைநல்லூர்

**நாதேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் சௌந்தர்யநாயகி**

1. சதுர்மறை ஓதிய சங்காரன் சந்திர சூரிய விண்மீனை
எதிரெதிர்க் கோணச் சுழலருளி ஏழேழ் புவியில் உயிர்வளர்த்த

விதிவினை நல்கி விண்ணோரும் வெஞ்சுடர்க்கழல் தொழ விருப்பமுறப்
புதுப்புது மானிடப் பிறப்பளிப்பீர் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

2. ஒன்றில் ஒன்றினை உருவாக்கி ஒன்றினுக் கொன்றை உணவாக்கி
நன்றோர் சங்கிலி உயிர்ச் சுழலில் நானிலம் வளர்க்கும் மறையோகி
குன்றோ டுறுமணல் குழம்பாக்கி குவலய நடுத்தீ குழம்போடாய்
பொன்றாதயம்ரதி நாகமருள் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

3. கிருமி யணுக்களும் நுண்ணுயிரி கிளுவைப் பழத்தணுபல்கோடி
கருவினைப் புகுத்திக் கரியரியும் கடலுறை கோடி உயிரினமும்
உருவளித் துனகழல் தொழர் செய்யும் ஊர்த்துவத் தாண்டவத்திருமூர்த்தி
புருவத்தி லோர்சுடர் விழியனலே பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

4. செந்தினை சாலிநல் சிறுவரகும் திரள்புல் கால்நடை பெறவருளி
அந்தநல் ஆதியும் ஆகியகோன் ஆரமோர் பாம்பணிச் சுந்தரனே
நந்திமா காளரும் பணிந்துமகிழ் நல்லமு தக்கொடை ஞானவள்ளல்
புந்தியக் குண்டலி புகலளிக்கும் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

5. மூங்கில் முதிர்கள்ளி தந்தமதில் முரள்புரி நந்திலும் முத்துதிர்க்கும்
தேங்கமழ் கிரிவனம்தேவதாரும் தெங்களித் தன்புசெய் செஞ்சுடரே
கோங்கலர் மூலிகைப் பொன்னளித்த கோரக்கர் போற்றுநல் திருக்கோயில்
பூங்கமழ் மகவரம் தந்தருளும் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

6. கொத்தணிப் பவளமென் குன்றுகள் சூழ் குளிர்கடல் படைத்த குங்கிலியன்
மத்தமெ ருக்கலர் வன்னியணி மாதவ மாமறைக் குருமூர்த்தி
சித்திமுத் தியளி செம்முனிவன் திருவா திரைநாள் செஞ்சுடரன்
புத்தமி குமனம் புகழளிக்கும் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

7. மண்மணல் புழுதி சரளைநிலம் வடிநிலம் நதியலைக் கழிமுகமும்
தண்ணலை வாவியும்தந்தபிரான் சங்கரப் பேருருச் செஞ்சடையன்
வெண்ணீ றணிகவின் விரைமழுவன் வேதமெல்லாம் தரும் வெங்கீசன்
புண்டரிகத் தயன் தொழுமிறைவன் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

8. மஞ்சளோ டைநிறம் வானவில்லில் மாமலர் கோடி வகுத்தபிரான்
கஞ்சன மொன்பது லோகமதும் கடுமலை நவமணி மாலைதரும்
அஞ்சனன் ரதியெழில் மானிடத்தை அவனியத்தழ கெனப் படைத்துவந்தோன்
புஞ்சையில் பொன்னொளிப் பூங்கழலன் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

9. பொறிமதி புவியியல் கருவிமதி புதுப்புது எந்திரம் தந்துவக்கும்
அறிவியல் ஆசான் அமுதமளி ஆனந்தத் தாண்டவப் பேரருளன்

தறிபடு துயர்மனம் மாற்றியருள் தற்பரன் சுந்தரன் சாந்தமகான்
புறமதில் மூன்றெரிப் போர்விழியன் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே

10. கன்னலின் தீஞ்சுவைக் கருணையளி காவிய மாமணிக் கதிக்கடவுள்
தென்னவர் மண்ணவர் விண்ணவரின் திருவருள் ஓரொளிப் பேரிறைவன்
என்னையும் மனிதனென் றேற்றபிரான் ஏழிசை நாயகன் ஏகம்பன்
பொன்னருள் சித்தியும் முத்தியருள் பொய்கைநல் லூருறைப் புண்ணியனே
–திருச்சிற்றம்பலம்–

## 115. கீழையூர்

**செம்மலைநாதர்** **தரவு கொச்சக கலிப்பா** **வண்டார்குழலி**

1. சூலைப் பிணிதீர்த்த சூலக்கு றியருளும்
பாலைப் பரல்நிலத்தை படர்நெய்தல் வளமாக்கும்
மாலைத் திருத்தியருள் வாழ்வளித்த செஞ்சுடரை
சோலைக் கீழையூரில் தொழுவார்க் கிலைதுயரே

2. கோயில் நடைதிறந்தும் கொடுபசிக் கமுதளித்தும்
தாயின் அருளளித்த சங்காரத் திருமூர்த்தி
வாயில் அரிமாலின் வன்குணம் தீர்த்தபிரான்
ஞாயிறன் கீழையூர் நம்பனைத் தொழச்சுகமே

3. படிமிசை காசளித்தே பத்தருக் கன்புசெயும்
அடிமுடி அயன்மாலும் அறியாப் பேரொளியன்
முடிப்பிறைக் கவின்மலை முத்துப் பந் தல்தருவோன்
கொடிமலர்க் கீழையூர் கொழுந்தனைத் தொழலினிதே

4. திருவடி சூட்டிமகிழ் செஞ்சுடரத் திருக்கோயில்
குருவடிவாயமர்ந்த குவலய மறையோதி
அருவடி வானதெய்வம் அம்பலத் திருநடனன்
கிரகநல் கீழையூரில் கீழ்ப்படி யச்சுகமே

5. வஞ்சகர் தருநஞ்சை வழிபடத் தீர்த்தழிக்கும்
பிஞ்சிதழ் பாலகற்கும் பெருமறைப் பேச்சளிக்கும்
பஞ்சிதழ் மெல்லடியன் பாற்கட லீந்தபிரான்
நெஞ்செழில் கீழையூர் நிமலனைத் தொழல் சுகமே

6. கரைக்கா விரியருகே கயிலைக்கொழு காட்சிதரும்
விரைக்கா டதிலிரவில் வினைமாறும் கூத்தாடும்
அரைக்கோர் புலியதளன் ஆழியமு தளித்தபிரான்
சுரைத்தேன் கீழையூர்ச் சுந்தரத்தைத் தொழிலினிதே

7. செங்கலைப் பொலமாக்கி திருவடி யார்க்கருளும்
அங்கசன் உருவழித்தே அருவுரு செய்துவக்கும்
தங்கநல் உலவாக் கிளியளித்தே அன்புசெய்யும்
சங்கெழில் கீழையூர்ச் சங்கரனைத் தொழலனிதே

8. பன்னீ ராயிரம் பொன் பணிநதி யதில்வாங்கியதை
நன்னீர் வாவியில் நட்புடன் தந்துவந்த
பொன்னீர் மேனியரன் புதுப்பொன்னின் தாளந்தரும்
குன்றாக் கீழையூர் குருவினைத் தொழலினிதே

9. அட்டாங் கயோகமதும் அருள்மணிமா சித்திகளும்
எட்டாத தவங்களுடன் இணையடிகள் தொழவருளும்
நட்டார் நடுநிசியில் நன்காட் டரங்காடும்
கொட்டார் கீழையூர் கொழுஞ்சுடரன் தொழலினிதே

10. என்பினைப் பெண்ணாக்கி இருமுதலை உண்டவனை
அன்றுறை உடலோடு அணியுற வரவழைத்தம்
முன்புறு பல்லூழி முடித்துயிரின் வாழ்வியற்றும்
கொன்றையங் கீழையூர்க் கூத்தனைத தொழல்தவமே

–திருச்சிற்றம்பலம்–

## 116. ஈசனூர்

**தருமபுரீசுவரர் கலிவிருத்தம் சௌந்தரநாயகி**

1. மின்னலஞ் சடைமுடி வெங்கதிர் வடிவெழில்
கொன்றையந் தொடை புனைகோ மேதகமலை
மன்றினில் தொழுமடி யார்களைத் தொழுமருள்
இன்றெனக் கீந்தனை ஈசனூர் எம்மானே

2. நச்சினை அயின்றனை நாநிலங் காத்தனை
உச்சிக்க யிலையில் ஊர்த்துவ மாடினை
அச்சம ழித்தனை அடியா ரடிதொழும்
இச்சையும் தீர்த்தனை ஈசனூர் எம்மானே

3. பாண்டியற் கன்றொரு பாட்டிசைத் துவந்தனை
தோண்டிய வனத்திடை தூலிங்க மருளினை
தூண்டில அதிபத்தர் தொண்டினை உயர்த்தினை
ஈண்டெனக் கருளினை ஈசனூர் எம்மானே

4. சிலந்தியைச் செங்கட் சோழர சாக்கினை
புலந்தியர் தவமுறப் புதுஞான மருளினை
சலந்தர னைத்தடிந்த சங்கர மூர்த்தி
இலங்ககு எனக்கருள் ஈசனூர் எம்மானே

5. நாரணன் திறலற நான்முகன் சிரமற
தோரண முப்புரம் துகளற எரித்தனை
காரண காரியம் கணிப்பருள் கடவுள்
ஈரெனை ஏற்றனை ஈசனூர் எம்மானே

6. மாதவ ஞானிகள் வையகங் கோடி
காதலந் தொண்டரும் கலியுகத் தாயிரம்
ஆதவன் அம்புலிக் காக்கமளி அனலே
ஏதையை ஏற்றனை ஈசனூர் எம்மானே

7. நெறிமுறை மலைமதி நீள்தவ நாயகர்
குறையறு கல்வியர் கும்பிடும் கடவுளே
அறிவுத வங்கல்வி ஆற்றலு மல்லா
இறலெனை ஏற்றனை ஈசனூர் எம்மானே

8. ஒருநெறி அறியா துருத்திர மணிந்தே
அருவுரு அண்ணலே அனலடி தொழுமனம்
திருநீ றணிநிலை சிறப்பொன் றறிகிலேன்
எருகெனை ஏற்றனை ஈசனூர் எம்மானே

9. பெரும்பொருள் தானமும் பிழையிலாச் சிவநெறி
அருகுளத் தறுபதின் மூவரின் அடிதொழுக்
குருநெறி அறியாக் குக்கலந் சிதடெனக்
கிருபதம் காட்டினை ஈசனூர் எம்மானே

10. திருமுறை நான்மறை செம்பொருள் மாமதி
கருவுறை வளர்மதி கற்பனை கோடியும்
பெருகிய புவியிடை பெயரெழுத் அறியோற்கும்
இருபதம் காட்டினை ஈசனூர் எம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 117. பெருங்கடம்பனூர்

**சதுர்வோதபுரீசுவரர்** **கட்டளைக் கலிவிருத்தம்**

1. திங்களஞ் சடையன் செந்தழல் மேனித் திருவருளன்
கங்கணக் கிரகணங் காட்டும் சூரியன் கறைதீர்த்த
பிங்கலக் குங்குமன் பெருங்கடல் பன்னூர் பெரியோனே
மங்கலப் பூசைசெய் வார்க்கில்லை மண்ணுள துயரமே

2. செக்கர்வி சும்பெழில் திருவடி வன்பன் சீரமுதன்
உக்கிரன் உதயன் ஒமுறைத் தேவன் உயிர்க்கருளும்
மிக்கநல் கழனி பெருங்கடம் பன்னூர்ப் பெரியோனே
நெக்குரு கித்துவ நிதம்செய் வார்கில்லை நீள்துயரே

3. அஞ்சுதற் கருளிறை ஆழிசெய் மூர்த்தி ஆதியண்ணல்
எச்சுவை எப்பொருள் எவ்விசை சொல்லி இயைந்தியங்கும்
பிச்சன் நிரந்தரன் பெருங்கடம் பன்னூர் பெரியோனை
உச்சியில் கையுற உவந்து துதிப்பார்க் குயர்வாழ்வே

4. ஆஞ்செழுத் தாண்டவன் ஆரழல் மூர்த்தி அலங்காரன்
நஞ்சம் தயின்ற நாயகத் திருவருள் நாதர்தன்
பிஞ்சகப் பூங்கழல் பெருங்கடம் பன்னூர் பெரியோனே
இட்டமு டன்துதி தெழுவார்க் கென்றும் இனிதுறவே

5. சிட்டன் திருவா திரையுறை ஒளியோன் தேனிசையன்
அட்டமா சித்தியும் அறிவா னந்தமும் அளிக்குமிறை
பிட்டுக்கூ லிபெற்ற பெருங்கடம் பன்னூர்ப் பெரியோனே
இட்டமு டன்துதித் தெழுவார்க் கென்றும் இனிதுறவே

6. கோணார் பிறையணி கொன்றைநல் நாயகன் குன்றகில்லி
காணார் கயிலையின் கனிவார் திருவிழி கங்காளன்
பேணார் புரமெரி பெருங்கடம் பன்னூர் பெரியோனே
மாணார் கோயில் வலமுறத் துதிப்போர் வானவரே

7. முத்தார் புன்னகை முதிரா மலரணி மூவிழியன்
அத்தா என்றதும் ஆரமு தளிக்கும் அனலழகன்
பித்தார் பெருந்தகை பெரும்கடம் பன்னூர் பெரியோனே
நித்தமும் துதிப்போர் நிம்தி பெருநார் நிறைவாழ்வே

8. விந்தைவி ரிசுடர் விண்ணவர் பேரிறை வேதமருள்
தந்தைதொ டர்மலம் தகர்த்தடக் கியருள் சங்காரன்
பிந்தைமுந் துழிசெய் பெருங்கடம் பன்னூர் பெரியோனே
சிந்தையு றத்துதி செய்வார்க் கருளும் திவப்புவியே

9. செப்பிய திருமுறை செம்பொன் மேனியன் சீரனலன்
தெப்பங்க் ளேறியும் திருவருள் புரியும் செஞ்சடையன்
பிப்பல நிழலமர் பெருங்கடம் பன்னூர் பெரியோனே
அப்புநேய் பால்தயிர் அபிடேகஞ்செய்வார் அடியாரே

10. அம்மான் எம்மிறை அமுதளி சங்கரன் அருளாளன்
சம்மான் காழியில் தாரணி ஊழிசெய் தமரினியன்
பெம்மான் பிரிவிலன் பெருங்கடம் பன்னூர் பெரியோனே
தம்பகன் என்துதி தமிழென் றருள்வீர் தாயெனவே.

–திருச்சிற்றம்பலம்–

## 118. தெத்தி

அக்னீசுவரர் கலிவிருத்தம்

1. அகப்புறத் தொளிமிளிர் அருவுருத் திருவருள்
முகப்புரை நான்முகன் முழுமுகம் திருகிய
பகைபுல மல்லாத பரம்பொருள் ஆதியன்
சிகண்டிநல் திருவூர் தெத்தியின் சைவனே

2. திகிரியை திருமாற் கீந்தநல் எம்மான்
சகடப்பி றப்பற சலந்தர னுக்கருள்
அகரமு கரமக ரமதில் உறையனல்
சிகரிநல் திருவூர் தெத்தியின் சைவனே

3. எங்கனும் பரவியஏகம்பப் பெருந்தணல்
மங்கலத் தண்ணுமை மணவலி இசைமகிழ்
செங்கதிர் குறைதீர் திருவா திரையோன்
சிங்கமா லுக்கருள் தெத்தியின் சைவனே

4. பச்சிளங் குழந்தைக்கும் பாற்கட லளித்த
நச்சனி கண்டன் நாதத்தி ருமுறை
மெச்சுமி சையளி விண்ணவர்க் கருளிறை
சிச்சிலித் திருவூர் தெத்தியின் சைவனே

5. சஞ்சிதப் பவமழி தனிப்பெரு மாயைசெய்
பஞ்சம ழிவுறப் படிக்கா சளித்தோன்
தஞ்சமென் போர்க்கருள் தற்பர மூர்த்தி
சிஞ்சிதத் திருவூர் தெத்தியின் சைவனே

6. வெட்டுவாள் சென்னிக்கும் விரைமலர் ஞாயிற்றில்
தொட்டகு ளந்தனில சுடரொளி காட்டிய
பட்டொளித் திருக்கழல் பரம்பர நாயகன்
சிட்சதே திருவூர் தெத்தியின் சைவனே

7. பத்திர கிரிசிவ வாக்கியர் புசுண்டர்க்கும்
முத்திதந் தயந்தோன் மூவாத் திருவிழி
அத்திரி அகத்தியர் ஆனாயர் துதித்த
சித்திரத் திருவூர் தெத்தியின் சைவனே

8. அந்தக னுக்கருள் ஆதிஅ நாதியன்
சந்திர சூரிய ரிந்திரர் குறைதீர்
விந்தம மர்திரு வெண்பொடி சூடிய
சிந்தன்நல் கூடெழில் தெத்தியின் சைவனே

9. நித்தியன் நிரந்தரன் நிறைமதி நின்மலன்
வித்துறைக் கருவினில் விந்தைசெய் வேதியன்
கத்துங்க டலடி கணக்கில் உயிர்வளர்
சித்துறைப் பசுபதி தெத்தியின் சைவனே

10 உன்னதன் உருவமில் அருவுரு உயர்தணல்
மின்மினிப் பூச்சிக்கும் மிகுபெரும் பரிவருள்
என்னையும் மனிதனென் றேற்றஞ்செய் தலைவன்
சின்மயத் திருவூர் தெத்தியின் சைவனே
–திருச்சிற்றம்பலம்–

## 119. நாகூர்

**நாகைநாதர்** **கலிவிருத்தம்** **நாகவல்லி**

1. சூழல்வளிப் பிரணவம் சுகமுறுந் தேகமும்
உழல்வினை மீறிய உளமுயிர் பிறப்புற
எழுமெழு பிறவியில் இனிதுறத் திருந்தவே
நழுவாதே துதி நாகூர் ஈசனையே

2. படைப்பியல் மறந்த பாழுயிர் பிறக்கும்
இடைதுயர் சுமந்தே ஏழேழ் பிறவிகள்
கடைச்சரக் காகியே கலங்கா துயர்வுற
நடைப்பிறப் பேதுதி நாகூ ரீசனையே

3. தந்தையைப் புழுவென தாயினைப் பளுவெனச்
சந்ததி மதிக்கும் தவறுறைப் பிறப்பே
சிந்தையை மாற்றிநல் சிவப்புவி மலருற
நந்தெனத் துதித்தெழு நாகூ ரீசனையே

4. கோடிய பிறவிகள் குவிவினை தீர்வுற
ஆடுநெய் அலர்தேன் அஞ்செழுத் தோதியே
மாடுறும் பிறவியே மானிட யாக்கை
நாடியே துதித்தழு நாகூ ரீசனையே

5. திருந்தா உயிர்கள் சிதல்புன் மாவினம்
வருந்திய பின்னுயிர் மானிட உலலுறும்
அரும்பலர் தேன்பால் அபிடேக கஞ்செய்தே
நரமே துதித்தழு நாகூ ரீசனையே

6. தேரா அரசொடு தீராப் பிணிமிடி
ஊரே தூற்றுமோர் உறவுணர் வழிக்கும்

பாரே படைப்பருள் பரன்கரு ணைக்கழல்
நாராய்த் துதித்தழு நாகூர் ஈசனையே

7. எண்சார் உடம்புறை எழுகோ டிவெறி
கண்ணால் கருத்திலும் கண்ட துயரறச்
செண்டார் மலரொடு தினநிய மமியமும்
நண்பால் துதித்தழு நாகூர் ஈசனையே

8. தேளே பாம்பென செயல்வினைப் பிறப்பற
கோளோ டுடுக்களும் குவியிடி துயர்தர
வாளாய் வாழ்வதேன் மானிடம் பயனுற
நாளும் துதித்தழு நாகூ ரீசனையே

9. கனவாய்க் கனலாய் காற்றாய் பிறவிகள்
தனமாய் வந்துடல் தனையே எரிக்கும்
புனலாய் அனலாய் பொய்யுடல் தீயுமுன்
நனவுறத் தினம் துதி நாகூ ரீசனையே

10. ஆலமுண் டமுதளி அனலார் மாமலை
கோலநல் மாமணிக் குளிர்சடைச் சங்கரன்
ஞாலமெல் லாமருள் நாயகக் கொழுந்தென
நாலல ரொடுதுதி நாகூ ரீசனையே
–திருச்சிற்றம்பலம்–

## 120. பாப்பாக் கோயில்

**கடம்பவனநாதர்** **கலிவிருத்தம்**

1. திக்குகன் தாண்டியசெந்தழல் மூர்த்தி சீர்மிடறன்
தக்கனின் வேள்வியை தகர்த்தோர் பேரெழில் சற்குணத்தன்
பக்குவத் துயிர்களின் பவமறுத் தன்பருள் பரஞ்சோதி
கொக்குறை பாப்பாக் கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே

2. செங்கதி; சூரியன் செறிகுறை தீர்த்த தேனருளன்
பங்கயத் தயன்மால் படர்துய ரறுத்த பரமேசன்
மங்கையர்க் கரசியின் வளர்மது ரையமர் மாணிக்கம்
கொங்கணி பாப்பாக் கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே

3. நிட்டைநெ டுந்தவன் நீள்வெளி தீமலை நேசமளி
சட்டைநல் அரவணி சங்கர மூர்த்தி சங்கீதன்
குட்டைமு தலையுண் குழந்தையை மீட்டளி கோமேதன்
கொட்டடிப் பாப்பாக் கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே

4. வடிவெழில் ஒளியன் வரைகலை ஞானியன் வானமைத்தோன்
கடிகமழ் பூவணி கார்த்திகை அண்ணா மலையருளன்

அடிமுடி அறியா அயனரிக் கருளிய ஆதாரன்
கொடிமரப் பாப்பாக் கோயிலின் கொடிகொட்டிக் கூத்தோனே

5. சடையொரு பிறையும் தழலடி கீழொரு முயலகனும்
விடையமர் நாட்டியன் விண்ணவர் பூசைசெய் வில்லழகன்
உடையொரு கோவணம் உறவடி யார்மணம் உயிரணுவன்
கொடைமடப் பாப்பாக் கோயிலின் கொடிகொட்டி கூத்தோனே

6. வண்டார் கொன்றை வடிவார் எருக்கம் மாலைஅண்ணல்
பண்டோர்திரிபுரம் பார்வையில் எரித்த பாண்டரங்கன்
தொன்மணக் கோலம்சுந்தரர் கருளிய சுடரமுதன்
கொண்டோன் பாப்பாக் கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே

7. ஒப்பரி தாகிய ஒளியலை தனியலை ஓங்காரன்
வெப்பறை குளிருற அப்பருக் கருள்முனி ஆதியண்ணல்
கப்பிய செடிகொடி காய்கனி பொருளளி கருணையன்னை
கொப்பரை பாப்பாக் கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே

8. இரும்புவி வானொடு எழுதழல் நீர்கடல் ஏர்வெளியன்
கருடவா கனத்தனின் கண்மலர் பூசைக்கு ஆழிதந்தோன்
பருப்பொருள் நுண்பொருள் பசுமதி குறையற பரிவருளும்
கொருடநல் பாப்பா கோயிலின் கொடுகொட்டி கூத்தோனே

9. அலுத்தநல் ஆண்டவன் அருந்தமிழ் திருமுறை அலங்காரன்
வலுமிகு இராவணன் மலைஎடு சிரமிதி மணிக்கொடையன்
செலுமணத் தருமிக்கும் சீர்கவி செம்பொன் கிழியளித்த
கொலுவெழில் பாப்பா கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே

10. உழிஞ்சில் மலரணி உத்தமத் திலகன் ஊனநடன்
அழிஞ்சில் நல்சுடலை ஆடலங் கடவுள் ஆதாரன்
வழியிலன் என்னையும் வாவென் றழைத்தே வாழ்வளித்த
கொழிஞ்சிநல் பாப்பா கோயிலின் கொடுகொட்டிக் கூத்தோனே
–திருச்சிற்றம்பலம்–

## 121. வடவூர்

**விசுவநாதர்** **கலிவிருத்தம்**

1. அலகெழில் தூக்கணங் குருவிக் கறிவளி
உலகுறை நெடுவெளி ஒளிமா யைதந்தோன்
கலங்கரை விளக்கென காலநல் ஊழிசெய்
மலர்வனக் கோயில் வடவூர் வரனனே

2. தோகைம யிலுக்கும் சுருதிக்கு ரலளி
ஈகைத் தளபிறை ஈசுர மூர்த்தி
கூறைநயோ லிவளர் கொடுஞ்சுட லையாடும்
வாகைவ னக்கோயில் வடவூர் வரனனே

3. சிறுகருங் குயிலுக்கும் தேனிசை பாட்டளி
முறுவலில் திரிபுரம் முறுக்கிய முதல்வன்
அறுபதின் மூவர்க்கும் தொகையடி யஸர்க்கருள்
மறுகெழில் கோயில் வடவூர் வரனனே

4. மரங்கொத்திப் பறவைக்கும் வரிப்பொறி சிறகளி
கரங்குவி வார்க்கெலாம் கருணைசெய் கடவுள்
அரங்கநல் தில்லையின் ஆடலம் பேரிறை
வரங்குவி கோயில் வடவூர் வரனனே

5. கருடனுக் கிருநிறம் கடுந்திறல் வழங்கிய
வருடமும் நாள்செய் மாஞாயி றளித்தோன்
இருவினை அளித்தருள் எண்குணம் தருமிறை
மருகெழில் கோயில் வடவூர் வரனனே

6. சங்கலர் சிறுவுடல் தேன்சிட்டுக் கருளிய
தங்கத் திருவடி சற்குணப் பேரிறை
அங்கத னுடலழித் தரனடி கணஞ்செய்த
மங்கல கோயில் வடவூர் வரனனே

7. குக்கும் புறவுக்கும் கொடிமணி கழுத்தளி
விக்கனத் துயிர்த்துயர் விரைந்தழித் தன்பருள்
செக்கார்விண் மேனியன் செஞ்சடை மூர்த்தி
வக்கனை கோயில் வடவூர் வரனனே

8. மீன்கொத்தி பறவைக்கும் மிகுவண்ணச் சிறகளி
மான்மறி ஏந்திய மழுக்கவின் கரத்தோன்
தேன்சிட்டின் சிலிர்ஒலி தினங்கேட் டருளிறை
வான்கவின் கோயில் வடவூர் வரனனே

9. கோழிநல் சேவற்கும் கொண்டைநல் கவினளி
ஊழிச்சீர் காழியை உயர்தோணி செய்தோன்
ஆழியை அளித்தே அரிக்கருள் புரிந்த
வாழிசை கோயில் வடவூர் வரனனே

10. காகத்திற் கொற்றுமை கனிவுணர் வளித்த
நாகம்பு ரள்மேனி நால்யுகக் கடவுள்
ஓகளு மலியெனக் கொளிக்கழல் காட்டிய
மாகலை கோயில் வடவூர் வரனனே

–திருச்சிற்றம்பலம்–

## 122. வேளாங்கன்னி

**இரசிதகிரீசுவரர் கலிவிருத்தம் வேளாங்கன்னியம்மன்**
**(வேல்நெடுங்கண்ணியம்மன்)**

1. படரருள் குன்றன் பாற்கட லமுதன்
இடர்களை நாயகன் ஏழுல காட்சியன்
திடகரி யதளுடை திகம்பர மூர்த்தி
கடலிசை வேளாங் கன்னியின் விமலனே

2. இயலிசை நாடகம் இயம்பிய சோதியன்
மயல்மலம் அடக்கிய வானவ ராதியன்
பயில்மறை நான்கினைப் பயிற்றிய நாயகன்
கயல்மலி வேளாங் கன்னியின் விமலனே

3. குருவருள் தருமிறை குவலயப் பெருஞ்சுடர்
அருவுரு ஏழ்புவி ஆலமர் வேதியன்
திருமுறை யோர்க்கருள் திரவியக் களஞ்சியம்
கருமணி வேளாங் கன்னியின் விமலனே

4. ஓவியம் காவியம் உணர்த்திய அருளொளி
பூவியல் மானிடர் பொதுப்பண் டாரப்பொன்
ஆவிய வணியுடல் ஆன்மாநல்கிறை
காவிநல் வேளாங் கன்னியின் விமலனே

5. மறையினன் மாலொடு வானவர்க் காதியன்
தரைமுழு துஞ்சுழல் தன்வளி தருங்குரு
இரைநலம் வாழ்வளி இன்னிசை வேந்தன்
கரைக்கவின் வேளாங் கன்னியின் விமலனே

6. பூந்தளிர் வனம்மலை போகம ருள்நிதி
ஏந்திய மாலயன் இந்திரன் தொழுமிறை
பாந்தளஞ் சடைமுடி பசுபதிப் பரம்பொருள்
காந்தளம் வேளாங் கன்னியின் விமலனே

7. தேனொடு பால்தயிர் நெய்யபி டேகன்
மானொடு மழுவில் வரியதள் அணியொளி

வானொடு வையகம் மழைதீ காற்றருள்
கானெடும் வேளாங் கன்னியின் விமலனே

8. பூதக ணம்முனி புங்கவர் தொண்டரும்
வேதம கிழிசை விண்ணவர் கிங்கரர்
பாதம லர்த்துதி பரவிய வர்க்கருள்
காதவ வேளாங் கன்னியின் விமலனே

9. நஞ்சம யின்றருள் நல்கிய மாமலை
குஞ்சரத் ததளுடை குவலயப் பரம்பொருள்
நெஞ்சுறத் தொழுமடி யார்வினை தீர்விறை
கஞ்சன வேளாங்கன்னியின் விமலனே

10. சங்கம மர்ந்தருள் தமிழ்வளர் மாகவி
தங்கம ணித்திரள் சம்பந்தர்க் கருளொளி
மங்கல மங்கையர் மனைவினை மகிழ்ந்தருள்
கங்கவி வேளாங் கன்னியின் விமலனே
-திருச்சிற்றம்பலம்-

## 123. குறிச்சி – நாகை வட்டம்

**வான்கீசநாதர்** **கரவு கொச்சக கலிப்பா**

1. விரைத்தளிர் மருகணியும் வேதமுறை ஞானமுகில்
புரைமலம் தீர்துயிரை புவனமொடு வான்சேர்க்கும்
கரைக்கா விரிக்கொழுந்தன் கற்பகச்சீர் பேரொளியன்
தரைத்தலத் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

2. நாலோடு நாலுகுணன் நாகரிகம் வகுத்தபிரான்
பாலோடு நீர்நெய்யும் பழக்கலவை நீராடும்
ஆலால சுந்தரத்தீ அவனிஏழின் அலங்காரன்
தாலாளர் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

3, வேளாண்மை மதியளித்தே வெம்பசியைத் தீர்த்தவள்ளல்
நாளாண்டு கிழமைதரும் ஞாயிறினைத் தந்தருளி
கேளாண்மை செய்துமகிழ் கிம்புருடர் துதிக்குமிறை
தாளாளர் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

4. பாராளும் பண்புகளை படைத்துமனி தம்வளர்த்த
ஏராளம் ஏராளம் கழலடைந்த இன்னுயிர்கள்
ஊராளும் மன்ன னாக்கி ஒருசிந்திக் கன்புசெய்த
தாராளர் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

5. புற்றாடும் அரவணிந்த புவனியத்தின் பொன்மழுவன்
பற்றாகி சிவக்கழலில் பதிந்துவந்த உயிர்களுக்கே
வற்றாத வரமருளும் வான்மீக நாதமுனி
தற்குணன் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

6. எட்டாத விண்வெளியும் இரண்டிரண்டு பூதமுஞ்செய்
கட்டான மாயைதனை கருணையினால் படைத்தவன்பால்
சட்சமா சுரம்பண்ணும் தாளவகை தருங்கலைஞன்
தட்டாளும் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

7. மாறாத திருக்கருணை வழங்கிமகிழ் மணிமகுடன்
ஆறாக ஓடிநிதம் அனைத்துயிர்கரும் உணவளித்தே
நூறாயி ரங்கோடி கோடிகோடி உயிர்வளர்க்கும்
தாறாளும் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

8. பூணாத பூவுமில்லை புரியாத கூத்துமில்லை
ஆணாகப் பெண்ணாக அலியாகப் பிறப்பளித்தே
காணாத காட்சியெலாம் காட்டியிர்க் கருளளிக்கும்
தாணானன் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

9, பாதாளம் மேதரமும் பனிமலைகள் படைக்குமண்ணல்
சேதாரச் சஞ்சிதமும் தீருறவே துயரளிக்கும்
ஆதாரம் ஆறேறி ஆக்ஞையருள் ஆனந்தன்
தாதாவின் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

10. மேனியோர் அருவாமாகி மேதைச் சித்துக் கருளியகோன்
ஞானியரின் ஞானமாகும் நாதாந்தப் பேரருளன்
மானிடப்பி றப்பபெனக்கும் மாயோகஞானந் தந்த
தானிகத் திருக்கோயில் தழல்மலையன் குறிச்சியனே

–திருச்சிற்றம்பலம்–

## 124. சோழவித்தியாபுரம்

**தருமபுரீசுவரர்** **கலிவிருத்தம்**

1. அருளமு தவிழி அறிவளிச் சுடர்க்கரன்
வருமுயிர் போமுடல் வளர்பணிக் கயிலையன்
தெருமுனைக் கோயில் செங்கழல் நிழலுறை
தருநிறை சோழவித் தியாபுரத் தேவனே

2. பிறந்தமு தலாறு அறிவுயிர் துதித்தெழ
மறந்தவர் மீண்டும் எழுந்துதன் மலமற

இறந்தவர் உளமுருகி இறைஞ்சவே வருமருள்
சிறந்தவர் சோழவித் தியாபுரத் தேவனே

3. கங்குலின் ஒளிப்பிறை கவின்சடை மீதுறை
தொங்கலன் செவியோன் துரிசெரித் தருள்தரும்
மங்கல வாத்தியம் மணிஇசை மகிழும்
செங்கதிர் சோழவித் தியாபுரத் தேவனே

4. தாமதக் குணத்துயிர் தன்மலம் தீர்த்தோன்
காமனை எரித்த கருணையாங் கடவுள்
சோமனின் புரையற தொடரருள் புரிந்த
சேமநல் சோழவித் தியாபுரத் தேவனே

5. வெற்றிதோல் விதுயர் வினைவிளை யாடல்
உற்றவர் அனுபவம் உணர்ந்தெழு மதியொடு
பற்றறுத் தருளும் பரம்பொருள் ஞானியன்
சிற்றலர் சோழவித் தியாபுரத் தேவனே

6. அயில்மழுக் கரத்தோன் ஆருயிர் மருத்துவன்
துயிலிறப் பெழுப்பி சுகக்கன் மமருளும்
மயர்விலா மாதவன் மங்கல மூர்த்தி
செயல்மலி சோழவித் தியாபுரத் தேவனே

7. பாடலும் ஆடலும் பண்ணிசை யாகிய
கூடலம் பேரிறை கொன்றைவெட் சியோன்
தேடல்செய் வார்நெஞ்சில் செறிசுடர்க் காட்சிசெய்
சேடலர் சோழவித் தியாபுரத் தேவனே

8. நூதனச் சுடர்விழி நுதலிளம் மலர்விழி
காதலங் கடவுள் கனகச பையண்ணல்
மாதவத் தென்திசை மாணிக்க தனல்புனல்
சேதனர் சோழவித் தியாபுரத் தேவனே

9. சகலத்தில் சகலமும் சகலத்தில் கேவலம்
புகல்தரும் ஆதியன் புனர்பிர ளயர்க்கும்
உகயுகஞ் தோறும் உதவிய ருள்செயும்
சிகரநல் சோழவித் தியாபுரத் தேவனே

10. கானக்க டல்வீணை கரமுறை மாதவன்
ஞானசம் பந்தர்க்கும் நற்சிவி கைதந்தே

ஈனப்பிறப்பெனக்கு மின்னருள் புரிந்த
தேனடை சோழவித் தியாபுரத் தேவனே.

–திருச்சிற்றம்பலம்–

## 125. தலைஞாயிறு

**அம்பலவானேசுவரர்** **கலிவிருத்தம்**

1. வானேழ்கடல் மாறன்பெற வழிகாட்டிய வள்ளல்
கூனோர்பிறை சாபங்கெட குவிநின் சடை கொடையே
தானேஎழும் பரஞ்சோதியன் தாய்தந்தையும் இல்லோன்
ஏனோர்தொழும் இறைவேறல்ல தலைஞாயிறின் தணலே

2. கடலேவயி றுடையேன்பசி கலையும் அன்னம்
உடனேயளித் துயர்ந்தோர் தொழ உலகம் படைப் பொளியன்
மடமாதரின் கருவில்வளர் மாசேசிறி தில்லோன்
இடமோ திருவடியார்மனம் தலைஞாயிறின் தணலே

3. அமராவதி நகரோன்துயர் அறுத்தேசுகம் அளித்த
சமரேஒரு சிரிப்பால்செயும் சங்காரநல் மூர்த்தி
தமரோரென அடியார்தொழும் தான்தோன்றியச் சுடரன்
சமபூமியர் தொழுதேமகிழ் தலைஞாயிறின் தணலே

4. செண்டாலடி கொண்டோர்மலை செருக்கேயறச் செய்த
கண்டாரெலாம் தொண்டாய்த்தொழும் கருணமுகில் கடவுள்
அண்டத்துறை பிண்டம்படை ஆதாதியச் சோதி
தண்டந்தவிர்த் தன்பேதரும் தலைஞாயிறின் தணலே

5. பகையாய்க் கடல் ஏழும் வர பாய்வேல்கொடை நல்கும்
சிகையோர்பிறை சூடும் மலை திருவாதிரை நாளோன்
பகையோரெலாம் பாதம்தொழ பரிவேதரும் இறைவன்
தகையோர்க்கெலாம் தாய்தந்தையும் தலைஞாயிறின் தணலே

6. சித்தாய் வரும் சொம்பொன்தரும் தேனார்தமிழ் செய்யும்
அத்தாஎனத் துதிப்போர்க்கருள் அமுதேதரும் வள்ளல்
வித்தார்பிறப் பில்லாப் பெரும் பிரிவானகச் சுடரன்
தத்தநமர் வரலாற்றுறை தலைஞாயிறின் தணலே

7. கல்லானைநல் கரும்பேஉணும் கண்காட்சியத் தலைவன்
சொல்லோடுல கெல்லாமொழித் தோற்றம் தரும் மேதை
புல்பூடுகள் புள்ளோடுடல் எல்லாம் படைத் தருளும்
நல்லாலமர் ஞானக் குரு தலைஞாயிறின் தணலே

8. மறுகேறியே நவமாமணி வணிகம்பகர் வேடன்
அறுகோடெருக் கலரேபுனைந் தரங்கேறுநல் ஈசன்
ஒறுத்தேகடை அருளேதரும் ஓங்காரவெஞ் சுடரன்
சறுக்காமனத் தமர்ந்தேஒளிர் தலைஞாயிறின் தணலே

9. பன்றிக்கருள் பாலித்தன்று அமைச்சே செயும் கலைஞன்
மன்றிற்கொரு ஆடல்புனைந் தாடுந்திருக் கூத்தன்
இன்றேஎதிர் நேற்றே சுடர் ஒன்றே முதலிறைவன்
நன்றானவர் என்றுந் தொழும் தலைஞாயிறின் தணலே

10. காரிக்குப தேசம்புரிந் தோரிக்கருள் உவந்த
ஏரிப்புனல் மாறிக்கடல் இமயம்மலை செய்த
சூரிச் சுடர் மீனப்பொதி வானைப்படைத் தருள்வோன்
தாரித்திரன் எனக்கன்புசெய் தலைஞாயிறின் தணலே

–திருச்சிற்றம்பலம்–

## 126. வடுகூர்

**பவளசதீசுவரர்** **தரவு கொச்சக் கலிப்பா** **பெரியநாயகி**

1. பால்நிற விடையேறி பவனிசெய் பேரொளியை
நால்மறை ஆறங்கம் நல்கிய பெருமானை
ஏல்தவம் இல்லாமல் எளிதாய் நீகண்டு
மால்தொழும் வடுகூரில்வணங்காய் சிறுநெஞ்சே

2. தேடிய பொன்பொருளும் தீளரித் துணும்போது
வாடிய தேவாங்காய் வாழந்தென்ன சுகங்கண்டாய்
ஆடிய திருப்பாதம் அன்புற நீகண்டு
மாடிய வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

3. ஓதிய மாமதியும் ஊருரைப் புகழ்யாவும்
பாதியில் போம்போது பரிதவித் தேங்காதே
சோதிய திருவுருவைச் சுகமுற நீகண்டு
மாதிரு வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

4. போக்கிய புவிவாழ்வில் பொய்ச்சுகம் புகழ்கண்டாய்
ஆக்கிய நிதியுறவும் அரைநொடிக் கனவாகும்
தூக்கிய மலர்ப் பாதச் சுடரினை நீகண்டு
வாக்குறை வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

5. ஈன்றோர் தருவாழ்வும் இல்லறம் பொய்யாகி
சான்றோர் பழிக்காளாய் சஞ்சலத் தெரியாதே

தோன்றாத திருவடியின் சுடரொளி நீகண்டு
மான்றேர் வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

6. படித்ததும் பதவிகளும் பரம்பரைச் சுகம்யாவும்
அடுத்தவர் மனம்நோக அகம்புரி வெறிமாறி
நடிப்புறு திருப்பாதம் நலமுற நீகண்டு
மடுத்தளிர் வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

7. துணைமனை வெளிவேசம் துயரமும் பலகோடி
இணைமொழி பெருஞ்சூது இல்லறம் வெறுங்காமம்
அணைத்துயிர்ப் பரஞ்சோதி அருளுற நீகண்டு
வணைக்குள வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

8. சதிக்கொரு நெறியென்றும் பதிக்கொரு முறையென்னும்
கதைக்கின்ற புவிவாழ்வில் கடும்புயல் மனைநாகம்
உதிக்கின்ற பெருஞ்சுடரை உளமுற நீகண்டு
மதிவளர் வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

9. பொன்பொருள் நிலம்புகழும் புதுப்புது உறவுகளும்
நன்னெறி பிரிந்தோட நாடெலாம் பெருநாகம்
ஒன்சுடர் சிவம்போற்றி ஓளிர்கழல் நீகண்டு
மன்புகழ் வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

10. உடலுயிர் சிலகாலம் உறவுகள் சிலநாளே
கடமைகள் நெறிபேணி கடவுளின் அடிசேர
நடனநல் சிவக் கோலம் நலிவர நீகண்டு
மடமழி வடுகூரில் வணங்காய் சிறுநெஞ்சே

-திருச்சிற்றம்பலம்-

## 127. புட்பவனம்

**சுகந்தவனேசுவரர்** **கலிவிருத்தம்**

1. கரியதள் இடைஅணி கனகநல் ககனத்தின் கதிர்மலையன்
திரிபுரம் எரியுற செறிமலர் மலைவில் திருக்கரத்தன்
பரிவுற பாலகன் பசியற பாற்கடல் பரிசளித்த
புரிசடை ஆதியன் புட்பவ னத்துறை புண்ணியனே

2. சதிர்புரி இலக்கணம் சற்குணம் உயிர்க்கருள் தாராளன்
கதிமதி திருவருள் கருணைசெய் ஐமுகன் காலகாலன்
பதினென் சித்தர்க்கும் பரிவுநூல் பரிசளி பரஞ்சோதி
புதியவன் பழமையன் புட்பவ னத்துறை புண்ணியனே

3. விந்தியம் சாத்பூரம் மேருவோ மயமும் விரித்தமைத்த
சிந்தியல் மாயைகள் செய்தளித் துவந்த செஞ்சுடரன்
நந்திக்கும் கலைஞானம் நல்கிய நாயகன் நாதாந்தன்
புந்தியின் புகழொளி புட்பவ னத்துறை புண்ணியனே

4. தற்பரஞ் சோதியன்சந்தனச் சாந்தணி தழல் நாதன்
புற்கலத் துயிர்களின் புரைமலம் தீர்த்தருள் புரியுமிறை
சிற்பநூல் திருமந் திரமும் மூலர்க்குத் திருவருள்செய்
பொற்பதப்பெருந்தகை புட்பவ னத்துறை புண்ணியனே

5. சென்னியில் பிறையணி செஞ்சுடர் மூர்த்தி திருவருளன்
மின்மினி பறவைகள் மீனினம் யானைகள் படைத்துவந்த
பன்னிரு காண்டமுன் னூற்றுநாற் பதின்நூல் அகத்தியர்க்கும்
புகன்றபொன் ஒளியன் புட்பவ னத்துறை புண்ணியனே

6. வானப்பெ ருஞ்சுடர் மணியர வணிமலை மாதேவன்
ஊனந டனஞ்செய் துயிர்களைக் காக்கும் உருவருவன்
ஞானசூத் திரத்தொடு நாலிரு நூலினைப் புலத்தியர்க்கும்
போனக மெனத்தந்த புட்பவ னத்துறைப புண்ணியனே

7. ஆர்ப்புற யானையின் அதளுரித் தருளிய ஆகாசன்
கார்ப்புறு அதிமலக் கடுங்குண மறுத்துயிர்க் கன்பளித்தோன்
நீர்க்குறி நோய்க்குறி குணசிந்தாமணி தேரையர்க்கும்
ஈர்பதின் நூலளி புட்பவ னத்துறைப் புண்ணியனே

8. பெருவெளிச் சுடரன் பிங்கல மூர்த்தி பிறப்பிலியன்
கருவறை முதலாய் கடுஞ்சு டலைவரை கருணைசெய்தோன்
இருபெயர் ராம தேவர்க்கும் முப்பது நூலியற்றும்
புருமகிழ் வளித்த புட்பவ னத்துறை புண்ணியனே

9. பாரெழுந் தாடிய பாம்பணிச் சுந்தரன் பரம்பொருளன்
ஊரெழுந் தாடிய உருகித் துதிக்கும் ஓமொலியன்
ஈரிரன்டிருபது நூல்களை காலாங்கிக் கினிதளித்த
போரெழும் புன்னகை புட்பவ னத்துறை புண்ணியனே

10. நாகமெ ருக்கொடு நவமணி சூடிய ஞானமலை
போகர்க்கெ முகாண்டம் புகழிரு பதினெழு நூலளித்த
தேகச்சி தடைனை திருத்தி மதியளித்த தேவதேவன்
பூகதன் பிங்கலன் புட்பவ னத்துறை புண்ணியனே

–திருச்சிற்றம்பலம்–

## 128. கத்தரிப்புலம்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. தாவா மரைக்கரன் தனஞ்செய பேரனல்
ஆவடு துறையமர் அருளுறைக் கூத்தன்
ஏவல்போ கர்க்கிரு பதினேழ் நூலளி
பூவார் கத்தரி புலத்துறை பரமனே

2. ஒலிஇளஞ் சதங்கை உத்தமப் பேரிறை
அலிஆண் பெண்அரு அண்டப்பே ரண்டன்
புலிபாணிக் கொன்பது புதுமூ லிநூலளி
பொலிவுறை கத்தரிப் புலத்துறைப் பரமனே

3. வதிவுறு இளம் பிறைமாதவக் குன்றன்
கதிவிதி உயிர்க்கருள் கற்பங்கள் கடந்தோன்
மதிமச்ச முனிக்குநாற் பதுப்புது நூலளி
புதிரனல் கத்தரிப் புலத்துறைப் பரமனே

4. தஞ்சமென் றடிபணி தாரணி உயிர்களை
அஞ்சே லென்றருள்தரும் ஆரமு தத்தனல்
நஞ்சுமுறி பாம்பாட்டிச் சித்துக் கருளிய
புஞ்சைமணிக் கத்தரிப் புலத்துறை பரமனே

5. நெட்டைநெ டுஞ்சுடர் நின்மலப் பெரியோன்
வட்டப் பொன் காசளி வானவர் தலைவன்
சட்டைமு னிக்கறு பதுநூல் அளித்த
பொட்டெழில் கத்தரிப் புலத்துறை பரமனே

6. மாவைந் தெழுத்தணி மணிக்கழல் மேனியன்
ஆவைந்து நிதியளி அம்பலத் தாண்டவன்
மூவைந்து மூலிநூல் கோரக்கர் குவந்த
பூவைந்து கத்தரி புலத்துறைபரமனே

7. சங்கரப் பூரணன் சங்கீத ஞானி
எங்கனும் பரந்தொளிர் ஏகம்பத் திருத்தழல்
கொங்க ணர்க்கும்நூல் நாற்பது கொடுத்த
புங்கநல் கத்தரிபுலத்துறை பரமனே

8. சிற்பர வியோமநல் தில்லையங் கூத்தன்
பற்பல பூதிரு நீறணி புகழன்
கற்பக்கரு வூரர்க்கும் கவிபதி னொருநூல்
பொற்பளி கத்தரி புலத்துறை பரமனே

9. தாரேழ் பூவொன்றும் தவநுதல் தமணியன்
காரேழ் வாகனன் கசடழித் தன்பளி
ஈரேழ் நூல்ரோம இருடிக்கு மருளிய
பேரேழ் கத்தரிப் புலத்துறை பரமனே

10. பின்சென் றிடைக்காடர் பிணக்கறுத் தருளிய
மின்செயும் திருவடி மிகுசுடர் ஆதியர்
என்செய் லொன்றில்லா எனைஅடி மைகொண்ட
பொன்செய் கத்தரிப் புலத்துறை பரமனே
–திருச்சிற்றம்பலம்–

## 129. மருதூர்

**சோமநாத மதிவிளங்கர்** **அறுசீர்ஆசிரிய விருத்தம்**

1. குணமிரு நான்குறை குருதேவன் கொங்கலர் சூடிய சிவக்கொழுந்தே
கணக்கில் கலியுகம் கணித்துவந்த கார்த்திகைச் செங்குளிர்ப் பேரனலே
மணமலர் மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
அணங்கினம் தினஞ்செய் பூசைகண்டே அரவணித் தாள்பணிந் துவந்தேனே

2. குவளைநல் எருக்கொடு கொன்றையணி கோபுரத் தாரூர் கோவேந்தே
சவலைம தித்துயர் தகர்த்தெறிந்த தற்பெருஞ் சோதிய தழல்மலையே
மவுனியர் மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
சிவகனம் தினஞ்செய் பூசைகண்டே செஞ்சுடர் தாள்பணிந் துவந்தேனே

3. கானக வேடுவ னாகிநின்றே கலைவில் பார்த்தனுக் கருளளித்த
தேனகக் கருணை திருவருளன் சித்திரைப் பவுர்ணமி சீரொளியன்
மானச மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
வானவர் தினஞ்செய் பூசைகண்டே மணிமலர் தாள்பணிந் துவந்தேனே

4. முத்தொளித் திருநீ றிணிமேனி முதிராப் புன்னகை முழுமுதல்வன்
தத்துவப் பெருங்கடல் அப்பரவர் தணலறை குளிர்செய் சற்குணத்தன்
மத்திகை மருகார் சோமநாதா வானோர் துதிசெய் மதிவிளங்கா
சித்துகள் தினஞ்செய் பூசைகண்டே செம்மலர்த் தாள்பணிந் துவந்தேனே

5. பரதமென் நாட்டியம் பைந்தமிழில் பாலித்த ருளிய பரம்பொருளே
சிரமறுத தயனுக்கும் சிறப்பளித்த சிந்தனை செயல்வினைத் திருவருளே
மரவநல் மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
விரதியர் தினம்செய் பூசைகண்டே விரைமலர்த் தாள்பணிந் துவந்தேனே

6. தேறலங் கொன்றை சங்கமலர் தேர்ந்தநல் பாதிரி சேர்த்தணியும்
ஏறமர் பசுபதி எம்மீசன் ஈரேழ் பகிரண்டத் தேகம்பன்
மறுகெழில் மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
துறவியர் தினம்செய் பூசைகண்டே சுயம்பொளித் தாள்பணிந் துவந்தேனே

7. கூலமும் காய்கனி குவிநெல்லும் குவலயத் தார்களி கொற்றவனே
நூலிதழ் சிலந்தியை சோழரசாய் நூவலருள் புரிந்த நுண்ணறிவன்
மாலய மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
நாலனும் தினஞ்செய் பூசைகண்டே காஞ்சனத் தாள்பணிந் துவந்தேனே

8. அரளியும் நந்தியம் ஆம்பலணி ஆதிஅ நாதிய அழலொளியே
கரமொரு மானுறை காலகாலன் கதிரவன் குறைதீர் கயிலாயன்
மரமலர் மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
புரந்தரன் தினஞ்செய் பூசைகண்டே பொன்னொளித் தாள்பணிந் துவந்தேனே

9. கொப்பெழில் சங்கலர் கூவிளமும் கொக்கிற கணிந்த கொன்றையனே
முப்பதோ டறுபது மூவிரண்டும் முந்துறு தத்துவம் உயிர்க்களித்தோன்
மப்புறை மருதூர் சோமநாதா வானோர் துதிமகிழ் மதிவிளங்கா
இப்புவி அடியார் பூசைகண்டே இறைவநின் தாள்பணிந் துவந்தேனே

10. உன்னதப் பேரொளி உலகோனே ஒலிஇசை யாழ்கரத் துத்தமனே
வன்தொண்டர்க் கருளிய மாதேவா மணிவாசகர்கன்பு வழங்கிய கோன்
மன்றலம் மருதூர் சோமநாதா வானவர் துதிமகிழ் மதிவிளங்கா
என்நெஞ்சில் யான்செய் பூசைகண்டே ஈசநின் தாள்பணிந் துவந்தேனே

–திருச்சிற்றம்பலம்–

## 130. தகட்டூர்

**பைரவநாதர் கலிவிருத்தம்**

1. செந்தழல் விழியுடல் சீரழிக் குணமொரு அந்தகனாய்
வந்ததை உலகிடை வானவச் சுடர்மலை அழித்துயிரை
நந்தியங் கணத்திடை நல்கிய அருளுருச் சுந்தரமே
அந்தநல் தகட்டூர் ஆனந்தத் தாண்டத் தற்பரனே

2. வாய்மொழி சிதறிய வக்கரத் தயன்தலை வாட்டியகோன்
தாய்ப்பசு செய்கொலை தவறற நருமதைத் தயவளித்தோன்
காய்கனி விதையிலை கணுநடு வேர்களில் தங்கமருள்
ஆய்கலைத் தகட்டூர் அரங்கிசை காபாலத் தற்பரனே

3. நச்சுள மாகிய நல்லருள் மாலரி உடலறுத்தே
மெச்சுநல் ஒருவாய் மேதினிக் காப்பினைத் தந்தசுடர்
இச்சகம் பேசுறும் எத்தரின் வாழ்வுடல் எரித்தோட்டும்
அச்சமில் தகட்டூர் அற்பதத் தாண்டவத் தற்பரனே

4. சஞ்சலம் தருவினைச் சலந்தரன் அழிவினைத் தந்தமகன்
பஞ்சம்ப முத்ததும் பத்தருக் கருள்படிக் காசளித்தே
மஞ்செழில் திருவிழி மத்தியில் ஒருவிழி அலங்காரன்
அஞ்சுகத் தகட்டூர் அனவரத் தாண்டவத் தற்பரனே

5. தப்பிதச் சோதரர் முப்புரம் எரித்த சங்காரன்
உப்பிடைத் தரளமும் ஓங்கலில் வைரமும் உவந்தளித்த

செப்புளக் குண்டலி சேர்மனோன் மணியுறச் செய்தோன்
பப்புரைத் தகட்டூர் பாண்டரங் தக்கூத் தன்பரனே

6. எரிமனக் கயமுகன் இருளுடல் கிழித்தழி ஏகம்பன்
அரியயன் பணிந்தெழும் அவனியத் தொளிமலை ஓங்காரன்
திரியிலை வேலொடு சிறுமரை நெளிகரச் செங்கோலன்
சரிமதித் தகட்டூர் சங்கரத் தாண்டவத்தற்பரனே

7. கவனஞ் சிதைசெயல் காலனைத் தடிந்த கங்காளன்
தவநா தாக்களும் சற்குரு ஞானியர் தாள்பணியும்
புவனத் திருமுதல்புன்னகைக் கருணையன் பொன்னம்பலன்
பிவயத் தகட்டூர் பிரளயத் தாண்டவப் பிங்கலனே

8. திருத்தவம் கொடுத்தநல் தென்றலந் தேரனைச் சிதைத்தவிழி
நெருப்பென நின்றதும் நிலம்வெளி தோடினர் அரியயனே
கருக்களின் உயிராய் கருப்பொருள் தானாய் காட்சிதரும்
குருமதித் தகட்டூர் கொடிகொட்டித் தாண்டவக் கூத்தோனே

9. குமரிப் பெ ருவரையைக் குரைகடலாக்கிய கோவேந்தேன்
தமனியப் பலகையைத் தருமிக் கருளிய சங்கக்கவி
இமயப்பெ ருவரை ஏறிய அப்பர்தொழ எழுந்தசுடர்
உமற்கடத் தகட்டூர் ஊர்த்துவத் தாண்டத் துத்தமனே

10. நாரைக் கருளிய நான்மறை முழுமுதல் நம்பனவன்
தேரைக்கும் சிறுசிறு பூச்சிக்கும் உடல்உண வளித்தபிரான்
போரைத் தொடுத்தருள் போகக் கருணை செய்புனிதவள்ளல்
ஆரைத் தகட்டூர் ஆனந்தத் தாண்டவத் தற்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 131. பேரளம் – நன்னிலம் வட்டம்

**சுயம்புநாதசாமி** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **பவானியம்மன்**

1. நாரதன் நல்லோர் வானோர் நான்மறை பயின்ற நால்வர்
பாரதில் கோடி யுகமோ படைத்தீ ரளித்த உயிர்கள்
ஓரோர் நெறியில் நின்னை உவந்து தேடி உவந்தேம்
பேரள முனிவன் துதித்த பேரளத் தெந்தை யரனே

2. மந்திரமூலன் சித்தோர் வளிவெளி விரதியச் சான்றோர்
செந்தமிழ்ச் சமயக் குரவர் சிந்திசை சந்தங்க ளிசைக்க
நந்தியம் பெருமா னோடும் நானிலப் பத்தர் சூழ
இந்திரன் துதித்து வந்த எந்தையே பேரளத் தரனே

3. தேரிய பாம்பைச் சூடி சிறுபிறைத் திங்க ளணிந்து
காரிக்கும் வானுல களித்த கங்காளப் பரமேச் சரனே
சூரியற் கருளிய சுடரே சுயம்பொளி மாமறை முதலே
பேரியல் மானிடந் தொழுநல் பேரளத் தெந்தை யரனே

4. பெருந்தவ யாக்ஞ வல்கியர் பெருகிய ஞானக் கடலாய்
வரந்தரு வானத்திருவே வையகப் பேரருள் மூர்த்தி
குரங்கணில் முட்டம் தொழுத கோலச் சிவமாக் கொழுந்தே
பிருங்கியும் வணங்கி மகிழும் பேரளத் தெந்தை அரனே

5. பற்பல முனிவோர் வந்தே பரம்பொருள் ஞானங் கொண்டார்
நற்றவம் கொண்டோர் பாதி நலநிதி கொண்டோர் பாதி
அற்புதத் தேவே திருவே ஆழியின் ஊழிசெய் ஒளியே
பெற்றபே ரெல்லாம் நினதே பேரளத்தெந்தை அரனே

6. அக்கமா மாலைசூடும் அம்பலத் தருளார் அமுதே
செக்கர்வான் ஒளியே அழகே சிவலோகச் செம்பொன் மூர்த்தி
சுக்கிரன் கோள் துதித்திறந்தோர் தோன்றுயிர் வரமும் தந்த
பிக்கா ரிக்கருள் முகிலே பேரளத் தெந்தை அரனே

7. செந்தனம் மதிமாண்பருளும் சிங்காரப் பவளக் குன்றம்
விந்தியம் மேரும கேந்திரம் வெண்பனி இமயச் சுடரே
அந்தண மார்க்கண் டேயன் அழலடி நிழலு மளித்த
பிந்தினும் பேரருள் நல்கும் பேரளத் தெந்தை அரனே

8. நாதமோர் கீதத் திசையே நால்யுகங் கடந்த சோதி
வேதமே விண்ணின் முகடே விண்ணக மண்ணகத் துயிரே
ஆதர வன்பும் நீயே அம்மையம் அப்பன் நீயே
பேதமும் பிணைப்பும் நீயே பேரளத் தெந்தை அரனே

9. வேகமே மின்னல் நொடியே விரிகடல் ஆழப் புனலே
தேகமே முழுதும் பரவும் சீரூயிர் அறிவுப் பொருளே
ஏகமே ஏழேழ் புவியே எண்ணிலா உயிர்ப்பொருள் தொகுதி
பேகனே பெண்ணே அலியே பேரளத் தெந்தை அரனே

10. நெஞ்சிலோர் பாம்பும் ஊரும் நெடுமுடிப்பிறையைத் தாங்கும்
கெஞ்சுவோர்க் கன்பே அருளும் கிஞ்சுக ஞான மூர்த்தி
அஞ்சலென் றருளும் குருவே அகிலமேழ் இயற்றுங் கடவுள்
பிஞ்சினன் எனைஏற் றருளும் பேரளத் தெந்தை அரனே

–திருச்சிற்றம்பலம்–

## பேரளம்

**சுயம்புநாதசாமி** **கலிவிருத்தம்** **பவானியம்மன்**

1. நேரளவுணர்த்தா நெடுஞ்சடை பேரனல் நீலகண்டன்
காரளவாகிய நீரள வென்னும் கருதலினால்
ஓரளவுணர்த்தும் உன்னத நீதியன் உலகீசன்
பேரள முனிக்கருள் பேரள் பெருஞ்சுடர்ப் பெம்மானே

2. நிரந்தரக் கடவுள் நீதிநல் வடிவன் நேசவள்ளல்
கரந்துயிர் மலந்தீர் கற்பக மூர்த்தி கதிர்முடியன்
புரந்தரன் புழையற பூசைசெய் தோருயர் புங்கவனே
பிரசன்னம் தருமிறை பேரளப் பெருஞ்சுடர்ப் பெம்மானே

3. காரிய காரண கருணையங் கடவுள் கதிர்ப்பிறையன்
நாரிகை பொன்னனை யார்க்கும் பொன்னளி ஞானவள்ளல்
சூரியன் சுடர்க்குறை தீர்ந்தொளி பெருக்கிய சும்பொளியன்
பேரியல் ஊழிசெய் பேரளப் பெருஞ்சுடர் பெம்மானே

4. கிளர்மனத் திருவடி கெம்பொளி மேனிக் கேதாரன்
களர்மதி உயிர்களை கருணையில் கடைதேற் றிய கடவுள்
வளர்தவ யக்ஞவல் லிக்கும் பிரம ஞானமளி
பிளவொளிப் பிறையணி பேரளப் பெருஞ்சுடர் பெம்மானே

5. சுடலையம் பொடியணி சுந்தரக் கூத்தன் தூயதணல்
மடல்மலர் எருக்கொடு மத்தமும் மரையணி மாதேவன்
தொடர்தவச் சுக்ராச் சாரிக்கும் சுகப்பே றளித்தபிரான்
பிடர்வேன் வியழி பேரொளப் பெருஞ்சுடர் பெம்மானே

6. ஆணிப்பொன் மேனியன் அறிவருள் தலைவன் ஆகாயன்
தோணிபுரக்கவி துயரறச் சிவிகை கொடுத்தபிரான்
மாணிக்கும் வயதைப் பதினாறாக்கிய மாகேசன்
பேணிப்பேரளிக்கும் பேரளப்பெ ருஞ்சுடர் பெம்மானே

7. சரியை கிரியைநல் யோகமும் ஞானமும் தருமாசான்
அரிமாத் திருமால் அழிவுடல் திருத்திய அமுதவள்ளல்
பரியாய் நரியை பத்தர்க்கென் றாக்கிய பரமசிவன்
பிரியாக் பெருந்துணை பேரளப் பெருஞ்சுடர் பெம்மானே

8. திகுதிகு திமிதக திருநடம் புரியும் சிலோகன்
பொருட்டெழில் தாமரை புரசமும் வேங்கையும் புனைவள்ளல்

தகுதிபெற்றான் தவச் சாம்பா னுக்கும் முத்தி தந்தபிரான்
பிகுகுணம் மாற்றும் பேரளப் பெருஞ்சுடர் பெம்மானே

9. வித்தே விரைவினை வெகுமதி மாயையை தந்தபிரான்
சத்தோடசத்தும் சதசத்துதயிரும் தமையுணரும்
சித்தே தந்தருள் முத்திசெய் திருவருள் சிவலோகன்
பெத்தே தீர்க்கும் பேரளப் பெருஞ்சுடர்ப் பெம்மானே

10. நஞ்சணி நாயகன் நாகங்கள் புரளும் நாதவிந்தன்
தஞ்சங் கொண்டோரின் தம்மிருவினைமலம் தணிக்குமனல்
அஞ்சிடல் வேண்டாம் அருளன் புனைக்கென் ஆதரிக்கும்
பிஞ்சகத் திருவருள் பேரளப் பெருஞ்சுடர்ப் பெம்மானே
–திருச்சிற்றம்பலம்–

## 132. கீரனூர்

**சிவலோகநாதர்** **கலிவிருத்தம்** **கிரிஜராம்பிகை**

1. நட்டந டுவான் நகர்விண் மீண்கள் நவகோடி
திட்டம் வகுத்த செம்மல் செஞ்சுடர் சிவலோக
பட்டம் பதவி பாருறை வாழ்வும் பனிமூட்டம்
கெட்டன எரித்தருள் கீர னூருறை கீர்த்தியனே

2. கத்தும் கடலும் கரையிடைப் பவளப் பாறைகளும்
முத்தும் நவமணி முதிர்வலம் புரிமீன் திமிங்கலமும்
நித்தம் பெருக்கி நிர்மல மாக்கும் நெடுஞ்செயலன்
கெத்தில் வளமருள் கீர னூருறைக் கீர்த்தியனே

3. செற்றார் திரிபுரமே தொண்டரை சிறைசெய் தோரழிய
பெற்றோர் நடத்திய புவிநிறைச் சோதிய நாயகனே
முற்றாய் மூழ்கிய பொருநையை விலக்கிக் காட்சிதந்த
கெற்பருஞ் சுடரே கீர னூருறைக் கீர்த்தியனே

4. பன்னிரு சோதி பரிலிங்க வடிவப் பாற்கடலே
நன்னருள் நாடும் நட்புள மானிடர் நாதமுனி
பொன்னரு ளேந்திய பூவுறை யோன்தொழும் கீரனூரின்
மின்னலஞ் சடைமுடி மேதினித்திருவருள் வேதியனே

5. மந்தம தியுறை மாறும்நெறியினர் தீங்குறுநோய்
வந்துபணிந்தழ மாற்றியருள்தரும் சந்ததனே
அந்தரத் தேநிற்க மஞ்சனக் குடநீர்க் கருளளிக்கும்
கெந்தம லர்புனை கீரனூருறைக் கீர்த்தியனே

6. முன்மதில் சிலைநந்தி மோதும் படையிடை உயிராகி
தன்நிலை ஓடாத்தளித்தேர் ஓடும் மிழலையதில்
பொன்னொளி ஆதியன் புன்னகைப் போர்ப்படை அனலீசன்
கின்னரத் தேனிசைக் கீரனூருறைக் கீர்த்தியனே

7. தாளிதப் பயறினைத் தளிர்த்து வளர்ந்தன தண்துறையில்
ஏளிதக் களியுண் டிதயநல் லடியார்க் கன்புசெய்த
கோளியல் மாறினும் குவலயம் மாறாக் கோலமருள்
கீளுடைக் கோவணக் கீர னூருறைக் கீர்த்தியனே

8. அட்டபந் தனமருந் தடியார் தீண்டலில் உரவரமும்
இட்டமா சித்துகள் எட்டங்க யோகியர் துறவு மகிழ்
பட்டுடல் விரதியர் பத்தரைத் தன்பதம் பதியவைத்த
கிட்டருள் இறைவன் கீர னூருறைக் கீர்த்தியனே

9. செம்பொன் சிலைசெய் பொன்னனை யாள்முன் சித்துருவம்
அம்பொன் பரிசுற அஞ்சுகத் தருமிமுன் கவிஞனுமாய்
நம்புமோர் பன்றியின் நடையிளங் குருளைமுன் கேழலென்றே
கெம்பளித் தல்உருக் கீர னூருறைக் கீர்த்தியனே

10. மங்கல மணிமுடி மறைவுற மாணிக்கந் தந்தபிரான்
அங்கநல் வாணிக னருள்வடி வாகிய அம்பலனே
செங்கட ழேழினைச் செருக்கறத் தடிந்த செஞ்சுடரே
கிங்கணித் திருவடி கீர னூருறைக் கீர்த்தியனே

–திருச்சிற்றம்பலம்–

## 133. பில்லூர் - மாங்குடிக் கட்டளை

**மகாகாளநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. கானகப் பெரும்புலி உரிபுனைந்த கடுவெளி தாண்டிய கங்காளன்
ஏனக்கு ருனைக்கும் ஏற்றமருள் எண்குணப் பேரனல் பிரளயனே
வானவர் பாட்டிசை கேட்டுமகிழ் மாங்குடிக் கட்டளைப் பில்லூரின்
தேனருள் வழங்கும் செஞ்சடையன் சிவலோ கத்திரு நாயகனே

2. பொறிக்கவின் மானதள் புனைந்தபிரான் புவிப்பே ரண்டம் கடந்ததணல்
எறிபத்தர்க் கருளிய ஏகம்பன் எரிகதிர் தண்மதி இயற்றிய கோன்
மறிவிலித்திவ வெழில் யாழிசையன் மாங்குடிக் கட்டளைபில்லூரின்
செறிவருள் தருமிறை செஞ்சடையன் சிவலோ கத்திரு நாயகனே

3. யானைப்பெ ருந்தோல் கிழித்துவந்த ஞாலச்சித் துக்கருள் நான்மறையோன்
ஞானக்கு ழந்தைக்கும் தாளந்தந்த நாலேழ் பகிரண்ட நாதமுனி

மானைப் பிடிகர மங்கலத்தீ மாங்குடிக் கட்டளை பில்லூரின்
சேனைக்க ணஞ்சூழ் செஞ்சடையன் சிவலோக கத்திரு நாயகனே

4. கொக்கிற கணிந்த கோமேதன் கொன்றையந் தாரன் குவிதணலன்
தக்கனின் வேள்வியை தகர்ததெறிந்த சற்குணச் சாந்தன் சங்காரன்
மக்களின் மற்றுடல் உயிருணர்வன் மாங்குடி கட்டளை பில்லூரின்
செக்கர்விண் பொன்னெழில் செஞ்சடையன் சிவலோ கத்திரு நாயகனே

5. காதெழில் தோடுடைக் கங்காளன் கலியுக கூத்தன் காலகாலன்
பூதங்கள் ஐந்தும் பிடிசாம்பல் பொலிவுறக் காட்டும் புனிநீறன்
மாதவ மூலர்க்கும் மறையளித்த மாங்குடி கட்டளை பில்லூரின்
சீதள திருவடிச் செஞ்சடையன் சிவலோ கத்திரு நாயகனே

6. வேட்டுரு வாகியே பார்த்தனுக்கும் விரைவனல் பாசுப தந்தந்தோன்
பாட்டுக்குச் சொந்தம் பரமேசன் பாற்கடல் நஞ்சுண் படர்தணலன்
வாட்படை இராவணற் கன்பளித்த மாங்குடி கட்டளை பில்லூரின்
திட்சைகள் வழங்கும் செஞ்சடையன் சிவலோக கத்திரு நாயகனே

7. கோவணத் தாடையன் குளிர்விழியன் கொடுமல மொடுக்கும் நடுவிழியன்
நாவலந் தீவுநற் றமிழ்மறையில் நனிஅறம் பொருளின்ப வீடமைத்தோன்
மாவனத் தாருகை வனமழித்தோன் மாங்குடிக் கட்டளைப் பில்லூரின்
தேவனெம் தீக்கரன் செஞ்சடையன் சிவலோக கத்திரு நாயகனே

8. பனிப்பிறை முடியணி பாசுபதன் பாட்டிசை தாளத்தில் பதிந்தெழுவோன்
முனிவரின்வனத்தொரு பிச்சாடன் முன்பின் மாசில் முழுமேனி
மனிதர்க் கருளளி மாதேவன் மாங்குடி கட்டளை பில்லூரின்
தினிகைப் பிட்டுண்ட செஞ்சடையன் சிவலோ கத்திரு நாயகனே

9. அரவணி மேனியன் அலங்காரன் அற்புதத் தாண்டவத் திருவொளியன்
நரம்பிசை இராவணற் கருளினியன் நான்முகன் மாலுக்கும் நன்மைசெய்த
வரம்புகள் கடந்த மாமதியன் மாங்குடிக் கட்டளை பில்லூரில்
சிரக்கவின் அற்புதன் செஞ்சடையன் சிவலோ கத்திரு நாயகனே

10. வெள்ளிப்ப வளமல்லி வில்வமணி விடையமர் அருவன் வெல்மதியோன்
வள்ளுவப் பெருந்தகை மகிழ்தமிழில் மறைத்திருக் குறளளி வானீசன்
மள்கிய மதிநாய் எனைஏற்ற மாங்குடி கட்டளைப் பில்லூரின்
தெள்ளிய பிறையணிச் செஞ்சடையன் சிவலோக கத்திரு நாயகனே

–திருச்சிற்றம்பலம்–

## 134. அய்யம்பேட்டை

**சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. அங்கமு மூதுறல் அரவுறை மாகவின் ஆனந்தத் திரிபுரத்தன்
செங்கை ஏந்திய திரள்நெருப்பெழுஞ்சுடர் திருவருள் புதிர்மேனி
பொங்களித் தாரகை புரிவட்டப் பால்வெளி புகைநிழல் காலொலியன்
பிங்கலப் பொன்னழல் அய்யம்பேட்டையின் பிதிரொளிப்பெரியோனே

2. வன்னியம் சூடிய மாணிக்க மாமலை மாலுக்கும் அருளளித்த
சென்னியில் ஓர்பிறை திருக்கரத் தோர்மரை திருவருள் தரும்வள்ளல்
நன்மறைத் திருக்குறள் நற்றமிழ் வள்ளுவர்க்கன்பருள் நாதாந்தன்
பென்னையின் உரியணி அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

3. குஞ்சிதத் திருக்கழல் குறையா வரமருள் கோயிலன் பெருவெளியன்
அஞ்செழுத் தருமறை அமுதக் கருணை ஆலால சுந்தரத்தாய்
தஞ்சமென் றடிபணி தாரணிப் பத்தர்க்கும் தாள்நிழல் தருமிறையன்
பிஞ்சகன் செந்தழல் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

4. இத்திநி ழலமர் ஏழேழ் புவிக்கொரு ஏகம ணித்தலைவன்
அத்திரி பிருகொடு அகத்தியர்க் கருளிய ஆனந்தத் திருமூர்த்தி
முத்திக் கருளிறை முக்கண் முழுமுதல் முறுவலஞ் செஞ்சுடரன்
பித்திகை சூடிய அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

5. மானிடர் செய்சிலை வடிவினில் பரிவொடு வந்தருள் புரியுமிறை
ஆனதன் மீதமர் அம்பல்க் கூத்தன் அமுதத் தமிழக்கவிஞன்
வானகம் வையகம் மதியுறை நெஞ்சகம் மகிழுயிர் வணங்கி எழும்
பேனனும் பூசைசெய் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

6. நயனநன் நோக்கில் நான்மறை வழங்கிய நஞ்சனி சுடர்மிடறன்
அயனச் சுழல்தடம் ஆதித்த னுக்கருள் அணுக்கதிர் அகத்தலைவன்
துயரழித் தன்புசெய் தோன்றாத் துணைவன் சுயம்பொளி ஆதியண்ணல்
பெயல்முகில் வளந்தரும் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

7. கடுங்கதிர் கோடையின் முக்கனித் தேனடை கனிநுங் கமுதருளன்
நடுங்கிய நாரைக்கும் நற்கதி வழங்கிய நாட்டிய நவமணியன்
ஒடுங்கிய மனதில் உள்நின் றொளிதரும் உத்தமச் செஞ்சுடரன்
பிடர்விடை அமரும் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

8. மணிமலைப் பெருங்கவின் மலர்மலைத் திருவருள் வருவிதி மதிமகுடன்
துணிவுறத் தவம்மகிழ் சுகமதி யோர்துதி சுந்தரப் பூங்கழலன்

கணிநொடி நாழிகை காலமும் ஊழியும் கதிவிதி தரும்எழிலன்
பிணியறுத் தருளும் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

9. அண்டவெ ளியுறை அனைத்திலும் இயங்கி அண்டமே தானாகி
எண்டிசைப் புவிஉயிர் யாவிலும் இணைந்தும் பிரிந்தும் இயங்குவிசை
தொண்டர்தம் தொண்டனும் துணைமுத லாளியாய் தொடர்ந்து நல்வினைபுரியும்
பெண்ணர சிக்கருள் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

10. சரமணிக் கொன்றைமலர் தாழ்சடை வேதியன் தற்பரஞ் சோதியண்ணல்
நரகுறை உயிர்க்கும் நல்லுடல் அளித்தே நனிமுத்தி தருமிறைவன்
இரப்போ ரிடைசென் றிரந்துன் நாயெனை இருளறுத் தேற்றபிரன்
பிரம னரிக்கருள் அய்யம் பேட்டையின் பிதிரொளிப் பெரியோனே

–திருச்சிற்றம்பலம்–

## 135. மணவாளநல்லூர்

**சுந்தரேசுவரர் (என்ற) மணவாளீசுவர்      அறுசீர் ஆசிரியவிருத்தம்**

1. எழுத்தறி வில்லாச் சிறுமூடம் ஏளனச் சிறையில் அரசாட்சி
பழுத்தவன் வாகையின் வவ்வாலாய் பரிதவித் துழல்நிலை காண்கிலிரோ
கழுத்தொரு பாம்பணிச் கங்காளா கருணைகொண் டருள்தர மனமிலையோ
மழுக்கரத் தவமணி வான்மன்னா மணவாள நல்லூர் மாமணியே

2. சிந்தனை என்றொரு செயலறியேன் சிற்றின்ப குழுவில் உறுப்பினன்நான்
செந்தரை ஓடையின் நடுக்குரங்காய் சிதைவுற் றமும் நிலை காண்கிலிரோ
வெந்தழல் மழுவணி விமலோனே விண்ணகத் தருள்தர மனமிலையோ
மந்திரத் திருவாய் வையகனே மணவா ளநல்லூர் மாமணியே

3. நினைவாற் றலிலா நெடுந்துயிலன் நெஞ்சமெல் லாம்வீண் பேராசை
மனைவா ரணக்கூட் டரவமென் வாழுமி ழிநிலை காண்கிலிரோ
வினைவிதி கணிக்கும் வேதியனே மிருதுயர் அழிக்கவோர் மனமிலையோ
வனைவடி வகத்தொளிர் வான்சுடரே மணவா ளநல்லூர் மாமணியே

4. வஞ்சம் சூதுவாய் மதுகளவு வடித்ததோர் மானிடப் பெரும்பிண்டம்
அஞ்சறைப் பேழையுள் எலிபோலே அழிவுறு மதிநிலை காண்கிலிரோ
செஞ்சதங் கைக்கழல் சிவலோக செம்மைவ ழிகாட்ட மனமிலையோ
மஞ்சள்நி றக்கொன்றை வானகனே மணவா ளநல்லூர் மாமணியே

5. ஆசையில் பத்தரின் வேடமிட்டே ஆலயம் ஆயிரம் சுற்றி வந்தும்
பூசையில் புகுந்துணும் நாயினைப்போல் புன்மைசெய் என்னைக் காண்கிலிரோ
ஓசைஒ ளிநிறம் படைத்தபிரான் உள்ளந் திருத்தவோர் மனமிலையோ
மாசிம கம்மகிழ் வான்சுடரே மணவா ளநல்லூர் மாமணியே

6. கல்விக்க டல்நதி கண்டறியேன் காலக்க லியுகக் கருத்தறியேன்
கொல்லைமாங் கனியுறை வண்டினைப்போல் குருட்டு மதிநிலை காண்கிலிரோ
எல்லையில் வானகப் பேரொளியே என்மனத் தொளிர மனமிலையோ
மல்லிகை சூடிய வான்மருந்தே மணவா ளநல்லூர் மாமணியே

7. புத்தியொன் றிருப்பதை புரிந்தறியேன் பொன்பெண் போகம் போற்றிநின்றேன்
அத்திக் கனிப்புழு அழிவினைப் போல் அடியேன் அழிநிலை காண்கிலிரோ
சித்திகள் குண்டலி தருமொளியே சிறியேன் எனக்கருள் மனமிலையோ
மத்தம லர்புனை தத்துவனே மணவாள நல்லூர் மாமணியே

8. முத்திசித் திகளின் முறையறியேன் மோனநி லையென்ற செயலுங்கல்லேன்
கத்துங்க டலடிநத்தையைப் போல் காதுகண் கருத்திழி காண்கிலிரோ
வித்தக வைத்திய மந்திரனே விண்ணப்பம் கேட்கவும் மனமிலையோ
மத்தவந் திக்கருள் மங்கலனே மணவா ளநல்லூர் மாமணியே

9. துக்கந்து யரத்தைச் சுகமென்றேன் தோன்றிய நெறியுற வாழ்வுலந்தேன்
தெக்கங்கள் மாந்திய மந்தியைப்போல் திக்கித் திணறுநிலை காண்கிலிரோ
சக்கரம் மாயவற் களித்தபிரான் சஞ்சலம் தீர்த்திட மனமில்லையோ
மக்களுக் கேபுவி செய்தவனே மணவா ளநல்லூர் மாமணியே

10. நட்டம ரம்மனை நகரிருக்கும் நாளைய உலகில் நானில்லை
வெட்டுக்கு ழிவிழு கரடியைப்போல் வேதனை யுறுநிலை காண்கிலிரோ
தட்டுப்பொன் பொண்ணாற் களித்தபிரான் தரித்திரன் எனக்கருள மனமிலையோ
வட்டப்பி ரளயம் வகுத்தபிரான் மணவா ளநல்லூர் மாமணியே

–திருச்சிற்றம்பலம்–

## 136. தேதியூர் - எரவாஞ்சேரி

**பிரத்யக்சய பரமேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் சுந்தர கனகாம்பிகை**

1. கஞ்சரன் சூரியன் கதிர்பனித் திங்களும் கனகபி சேகஞ்செய்
தெஞ்சிய பாவமும் ஏகநல் பரிவொடு ஏழேழ் புவியேகும்
வஞ்சம தில்மூன்றை வளர்ச்சிறு பார் வையில் வாட்டிய மாணிக்கம்
சஞ்சலந் தீர்த்தருள் சந்தனத் தேதியூர் சதுர் மறைத் சிவக்கொழுந்தே

2. மங்கல வீணையன் மாலொடு வானவர் வந்தடி பணிந்தேகும்
பொங்கமுதப் புனல் பொறி தீ பிறையணி புவியோர் பேரிறைவன்
அங்கதத் தயன்சிரம் அறுத்தருள் நல்கிய அம்பலக் கூத்தோனே
சங்கடந் தீர்த்தருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச் சிவக்கெழுந்தே

3. தர்மக்கு பேரனும் சந்தனக் குரவரும் தழலடி பணிந்தேகும்
கர்மவினை விதிக் கற்பக மூர்த்தி காஞ்சனப் பேரொளியே

மர்மமா தாருகை வனமழித் தன்புசெய் மாசிலா மாமணியே
சர்மநோய் தீர்த்தருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச் சிவக்கொழுந்தே

4. ஏந்திய நவமணி இறையேழ் மாதரும் இரவகில் பூசைசெய்தே
பூந்தளிர் மெல்விரல் பொன்னொளித் திருக்கழல் பொலிவுறத் துதித்தேகும்
தீந்தமிழ் வளர்த்த தீப்பிழம் பொளியே திருவா திரையோனே
சாந்தம கிழ்ந்தருள் சந்தனச் தேதியூர் சதுர்மறைச் சிவக்கொழுந்தே

5. புவிமதிச் சித்துகள் பூசைசெய் பத்தரும் புனுகொடு நீராட்டும்
குவிமணி மரகத கோமே தகமலை கோடிவெஞ் சூரியனே
கவினழி திங்களின் கதியொளி மாற்றிய கருணா கரமூர்த்தி
தவம் நிதி தந்தருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச்சிவக் கொழுந்தே

6. குமரிய மலையமர் குஞ்சரத் ததளுடை குளிர்மா மணிச்சுடரே
தமனியப் பூங்கழல் சங்கர மூர்த்தி தாய்மடித் தவமலையே
அமரருக் கமுதளித் தருவிட மருந்திய அற்புதப் பரம்பொருளே
சமதுணை தந்தருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச்சிவக் கொழுந்தே

7. இன்னுரை மாதவர் இயல்புநல் மாதரும் ஏத்திப் பணிந்தேகும்
மின்னலின் நெடுஞ்சடை விரைமலர் கவின்விழி மிதநிழல் வரைபுருவன்
பொன்னனை யாள்மகிழ் பொற்குவை அருளிய பூந்தமிழ்க் கவியமுதே
தன்னலம் தீர்த்தருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச் சிவக்கொழுந்தே

8. இயலிசை நாடகத் திளம்புகழ் மேதையர் இணைகழல் துதித்தேகும்
முயலகன் மகிழ்வுற முதுகொளிர்ந் தாடெழில் மூவிழிப் பெருஞ்சுடரே
கயமுகன் அழிவுற கடுவிழி நோக்கிய கற்பகப் பரஞ்சோதி
தயவுநல் வாழ்வருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச் சிவக்கொழுந்தே

9. மூவிரண் டிந்திரியம் மும்மலஞ் சேர்ந்தோடுங்க மூலநல் லாதாரம்
கோவளி குண்டலியும் கூருறு சுடராய் குறு நுதல் அரங்கேறும்
நாவியல் நரம்பியல் நயமறி சித்தரின் நலங்காத் தருளொளியே
தாவுளம் காத்தருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச் சிவக் கொழுந்தே

10. இமயத் தொடர்மலை ஏழேழ் நதிவளர் இங்கிதப் பேரொளியே
நமச்சி வாயவே நற்றமிழ்க் கீதமே நாதப்பெ ருந்திருவே
தமையனும் தாதையும் தாயொடு தமக்கையின் தயவளி தற்பரனே
சமத்துவச் சுகமருள் சந்தனத் தேதியூர் சதுர்மறைச் சிவக்கொழுந்தே

–திருச்சிற்றம்பலம்–

## 137. கொத்தவாசல் - உருத்திரகங்கை

**ஆபத்சகாயர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஊருறவில்லா உலகன் ஓருரு இருந்தத் தழகன்
காரிருள் கண்டன் கனகன் கருணாமூர்த்தி கானன்
நாரைக் கருளிய நம்பன் நாலுயிர் பிறப்பிடம் நயந்தோன்
ஓரனல் உருத்திர கங்கை உம்பரன் கழல்துதித் தேனே

2. ஆபத் சகாயன் அருவன் அன்பறி வாகிய அமரன்
பாபவிமோசன பரிவன்பக்குவ உயிர்களுக் கெளியன்
தூபதீ பங்கள் ஏற்கும் சுந்தரப் பரம்பொருள் துணைவன்
காபாலன் உருத்திர கங்கை கயிலயன் மழுவொரு கரனே

3. சங்கர மூர்த்தி தலைவன் தந்தைதாய் தமையன் தமரன்
வெங்கதிர் மழுவன் விண்ணோன் வேங்கையு ரிபுனைவிமலன்
பொங்குக டழேழ் புனிதன் பூதலிங்கத்துருப் புலவன்
கங்கணன் உருத்திர கங்கை கருணையன் தோன்றாக் கனலே

4. மெய்யடி யார்மனக்கோயில் விளக்கண் விஞ்சை விதிசெய்
அய்யன வனியன் அரசன் ஆண்டவன் பத்தருக் கன்பன்
நய்யுளத் தருமிக்கு நனிபொன் நல்கிய நாயகன் நம்பன்
கைமழு உருத்ர கங்கை காவிரிக் கொடுமுடி யோனே

5. நாத்திக மானிடம் படைத்தே நலவான் பேறளி ஞானன்
ஆத்திகப் போலிகள் அறிவில் அனல்புனல் அளித்தற முணர்த்தும்
வேத்தியல் பொதுவியல் வேந்தன் விளைகவிக் காழியர்க் கமுதன்
காத்தருள் உருத்திர கங்கை கயிலயங் கடவுள் அரனே

6. ஏகப்ப ராபரன் எம்மான் எண்குணச்சோதி ஈசன்
நாகக் குடைச்சடை முடியன் நால்யுக நான்மறை நல்லன்
சோகாப் பழிக்கும் துணைவன் சொல்லின் செல்வன் தூயன்
காகனை உருத்திர கங்கை காட்சிக் கினியக வினனே

7. மச்சவ லைவிரிப் பரவை வானுல கேழேழ் மன்னன்
பச்சைமா லிந்திரன் துதித்த பகலிர வாகிய பரமன்
எச்சனுக்கருளிறை ஏகன் எரிமழு ஏந்திய இறைவன்
கச்சுரி உருத்திர கங்கை காளத்தி ஏகம்பக் ககனே

8. பார்த்தனுக் கன்றுபா சுபதம் பாலனுக்கும் பாற்கடலும்
கீர்த்தனை இராவணற் கெரிவாள் கேளமை யோடளி கிரிசன்
ஆர்த்த கடலழி வேலை அன்றோர் வழுதிக்கு மளித்தோன்
கார்த்திகை உருத்திர கங்கை காட்சிக் கெளியபே ரனலே

9. குஞ்சர தோலுடை க்கோமான் குகைஎழில் கொல்லிமலையன்
நெஞ்சலர் கோயில் நிமலன் நிறைமதி விழுவனி நேசன்
சஞ்சலச் சந்திரன் குறைதீர் தற்பரஞ் சோதித் தணலன்
கஞ்சனன் உருத்திர கங்கை கடுவிடமிடறெழில் ககனே

10. விதிமதி வினைகணி விமலன் மிகுதவ மேற்கும் வெளியன்
அதிபதி அண்டப்பே ரண்டன் அவனியன் அறிவுரு வன்பன்
பதிமதி மானிட மாக்கி பரிவுறு இல்லறம் பகர்ந்தோன்
கதியருள் உருத்திர கங்கை காவலங் கடவுளெம் கனனே
-திருச்சிற்றம்பலம்-

## 138. அச்சுத மங்கலம்

**சோமநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. தேகந்தூய் மையுற நெஞ்சகமும் துலங்குவெண் ணீறணி மேனியுடன்
ஏககெஞ் சூறிய நின்நாமம் இயம்பிநி யமமுற இறைஞ்சகின்றோம்
போகங்கள் அருளும் புண்ணியனே புத்தம் புதுமலர் தூவிநின்றேம்
ஆகங்கு ளிர்ந்தே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தன்பரனே

2. வேதவ வடிவுறை விண்ணொளியே விழிமூன் றுடைய செங்கரும்பே
நாதப்ப ரம்பொருள் நின்நாமம் நவின்று தலைபணிந் திறைஞ்சகின்றேன்
போதலர் இளநீர் நீராட்டி பூந்தமிழ் திருமுறை பாடிநின்றேம்
ஆதர வளித்தே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தன்பரனே

3. கண்டம ணியணி கண்டத்தராய் கருத்துற நின்திரு வடிவேந்தி
பிண்டத்து றைபொருள் அண்டமதாய் பிறப்பித்த கோடிநின் பேர்போற்றி
பண்டிரு பதினெழு அருளாளர் பாடிய பாடல் பாடிநின்றேம்
அண்டத்தொளியே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தன்பரனே

4. பூதமா கோளினைச் சிறிதுடைத்தே புகைக்கொடி யாக்கிய போதகனே
வேதைநல் மூலிகை நாதாக்கள் மெழுகுபொன் பதங்கச் செந்தூரம்
சோதனை வெற்றியை தந்தபிரான் சொக்கனே நின்கழல் போற்றி நின்றேம்
ஆதாரத் தழலே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தன்பரனே

5. கத்துங்க டலுடு ஏழ்புவியை கண்கா ணாத்தொலை சுழலவைத்த
தத்துவ மேதைச் சங்கரனே சங்கீத மந்திரம் சாற்றிநின்றேம்
மத்தளம் தண்ணுமை மணிச்சதங்கை மண்கனை இசையொடு வணங்குநின்றேம்
அத்தனே அமுதே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தன்பரனே

6. மரபணு வேதியல் மதியளிக்கும் வானவத் தேவர்கள் முழுமுதலே
பிரணவத் திருவே பெரும்பேறே பிங்கல நாமம் போற்றுகின்றேம்

சிரமுடல் நிலமுற வீழ்ந்துவந்தே சிவமே நின்கழல் துதிக்கின்றேம்
அரனலங் காரனே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தன்பரனே

7. கற்குகை நதிக்கரை ஊர்நகரம் கலியுகச் செயற்கைக் கோளுரும்
பற்பல செய்மதி பாலிப்பருள் பரமநின் நாமப் பாட்டிசைத்தேம்
கற்பனைக் கெட்டா கடவுளரே கார்த்திகைத் தீபம் போற்றிநின்றேம்
அற்புதச் சுடரே எழுந்தருள்க அச்சுத மங்கலத் தற்பரனே

8. தக்கனின் வேள்வியைத் தகர்த்தவிழி சக்கரம் மாலுக்கு மீந்தகரம்
செக்கர்வின் மேனித் திருக்கூத்தன் செம்மலர் மாலை சூட்டுகின்றேம்
முக்கணனே முனி புங்கவனே மூத்தத மிழ்குடி முன்தொழுதேம்
அக்கம ணியுடன் எழுந்தருள்க அச்சுத மங்கலத் தற்பரனே

9. வஞ்சகத் திரிபுரம் பொடித்துவந்த மங்களப் பேரொளிச் சங்கரனே
நெஞ்சகக் கோயிலில் நின்றடியார் நேசமு ணர்த்திய நெடுஞ்சுடரே
மஞ்சன நீராடல் கண்டுவந்தே மாணிக்கக் கழல்தொழு துருகுகின்றேம்
அஞ்சலென் றருள்தர எழுந்தருள்க அச்சுத மங்கலத் திறையோனே

10. தொல்பழங் கயமுகன் தோவரித்து சுகமுறக் குவலயம் வாழவைத்த
வல்வழக் கியற்றி வன்தொண்டரை வானகத் துரைத்த நீதிசெய்த
கொல்புலித் தோலணிக் குஞ்சரனே கொஞ்சுத மிழிசைத் திறைஞ்சுகின்றேம்
அல்லல ழித்தருள எழுந்தருள்க அச்சுத மங்கலத் திறையோனே

-திருச்சிற்றம்பலம்-

## 139. கோட்டூர் - திருக்கண்ணபுரம்

**குடுமிநாதர்** **கலிவிருத்தம்**

1. சந்தனச் சாந்தணி சற்குருச் செஞ்சுடர்
வந்தனை செயுமடி யார்க்கருள் வேதியன்
மந்தக்கு ணமழித் தருமதி தருஞ்சுகம்
செந்தினைக் கோட்டூர் சிவபெரு மான்கழலே

2. பாம்புறை மிடறினில் பன்மலர் அணிமலை
தேம்புறும் அடியவர் தீதறுத் தருள்தரும்
கூம்புதம் பதியர்க்கு குழந்தைநி திதரும்
தீம்புனல் கோட்டூர்ச் சிவபெரு மான்கழலே

3. இரந்துன் ஆதியன் இருசுடர் படைப்பனல்
நிரந்தரம் தீவளி நிலம்நீர் தரும்பரம்
சுரம்கபம் இருதய சுகக்கே டழித்தருள்
திரந்தரும் கோட்டூர்ச்சிவபெரு மான்கழலே

4. கொன்றையர் தாரணி குடுமி நாதன்
மன்றினி லாடெழில் மாணிக்கக் குன்றம்
அன்றீன் தாயன் அகம்மக வுடல்நலம்
தென்புதரும் கோட்டூர்ச்சிவபெரு மான்கழலே

5. பொறிமான் கரமலை பொதிகை மணிச்சுடர்
பறியார் மேனியன் படர்சடை நெடுமுடி
நெறிவாழ் மானிடர் நிதிமதி கதிதரும்
செறிமலர்க் கோட்டூர்ச்சிவபெரு மான்கழலே

6. குருவருள் ஆலமர் கொன்றையன் கோமான்
திருநாள் போவார் செஞ்செயல் ஏற்றோன்
வருநிதிக் குறைமனை வளர்த்தருள் நல்கும்
செருமறிக் கோட்டூர்ச்சிவபெரு மான்கழலே

7. உய்நெறி அருளொளி ஊர்த்துவ மூர்த்தி
மெய்ப்பொரு ளார்மகிழ் விண்ணுல களிமுகில்
பொய்வழக் கழித்துயர் பொதுநலம் காக்கும்
செய்நிலக் கோட்டூர்ச்சிவபெரு மான்கழலே

8. வெம்புலி அதளணி விண்ணவர் நாயகன்
அம்புலி அழிநிலை அகற்றிய அருள்நெறி
வம்புளம் மாற்றிநல் வாழ்வீயும் துயிரலும்
செம்புலக் கோட்டூர்ச்சிவபெரு மான்கழலே

9. சுந்தரர் அந்தரர் சுடர்விழி மூன்றினர்
மந்திர மூலனை மண்புவிக் கனுப்பிய
தந்திரர் தமரிடை சமத்துவச் சுகந்தரும்
செந்தினைக் கோட்டூர்ச் சிவபெரு மான்கழலே

10. மத்தம லரணி வயிரத் திருமலை
முத்துப்பந் தல்தரும் மோனச் சிரிப்பொழில்
புத்திபு கழ்நிதி பொன்மனை நலந்தரும்
சித்திரக் கோட்டூர்ச் சிவபெரு மான்கழலே

–திருச்சிற்றம்பலம்–

## 140. ஆனைக்குப்பம்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. பயில்நட னந்தனில் பவத்துயிர் அறிவுணர்
செயல்வளர் நம்பன் செஞ்சுடர் குவலயன்

குயில்பயில் ஆனைக்குப்பத் தரன்அருள்
உயிருறை உடலளித் துளங்கள் காக்குமே

2. மன்றத்த மிழ்கவி தருமிக்கும் பொன்னளி
பன்றிக்க ருளிய பாற்கடல் விடமுன்
கொன்றையன் ஆனைக் குப்பத் தரன்அருள்
நன்றவை தீதும் ஆகியே நலந்தருமே

3. தூணொடு பிளந்தெழு தொருசினத் தரிக்கருள்
ஏணொடு ஏழ்புவி இயல்வெளி கடந்தோன்
கோணலர் ஆனைக்குப்பத் தரன் அருள்
ஆணோடு பெண்ணென ஆகிநன் றளிக்குமே

4. மானனிக் கரக்கவின் வானவச் சீரனல்
ஏனலுக் கருளிறை ஏகம்பச் சங்கரன்
கோனணி ஆனைக் குப்பத் தரன் அருள்
ஞானமும் கல்வியாய் நல்லுயிர் கலந்தெழுமே

5. தொல்மல மடக்கும் சுந்தரத் திருவருள்
இல்லறத் தியற்பகைக் கின்னருள் புரிந்தோன்
அல்லிநல் ஆனைக் குப்பத் தரன்அருள்
சொல்மொழி பொருளுறை சுடரொளி ஆகுமே

6. சின்னஞ்சி றுவன்னி சென்னியில் அணியனல்
புன்னகை யால்திரி புரமெரி பொன்விழி
குளிர்குளத் தானைக்குப்பத் தரன்அருள்
ஒளிஇருள் நிழலாய் உலகிடைத் தவழுமே

7. உவமை ஒப்பில்லா ஊர்த்துவத் தாண்டவன்
தவனைமு றையிலுயிர்த் தனிமல மொடுக்கும்
குவளைநல் ஆனைக் குப்பத் தரன்அருள்
புவனியத் தாவரப் பொலிவாய் திகழுமே

8. எருக்கமத் தமொடு இளங்கூவிளமணி
செருக்கறுத் தருள்தரும் சிந்தனை மதிஉரு
குருக்கத்தி ஆனைக் குப்பத் தரனருள்
நெருக்கத் தவர்களின் நெஞ்சுனர் வாகுமே

9. அருவுரு உருவிலன் அதன்குணம் மூன்றலன்
மருநிறம் ஐந்திலன் வரவொடு போக்கிலன்
குருவருள் ஆனைக் குப்பத் தரனருள்
தரும்மூன் றுகத்துயிர் சலந்தீர் புனிதமே

10. சதிசதங் கையொளி தவமுறை செவியுணர்
அதிர்வலைத் திருக்கழல் அகத்தினி லொளிரும்
குதிர்நிறை ஆனைக் குப்பத் தரனருள்
புதிர்சிந் தனைதரும் புகழ்மூ ளையுணர்வே

–திருச்சிற்றம்பலம்–

## 141. சேங்காளிபுரம்

**துந்துபேசுரர்** **கலிவிருத்தம்**

1. ஆடிய பாதங்கள் அம்புலிச் சடைமுடி
நாடிய மனிதரின் நன்கொடை நாயகன்
வாடிய சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
சேடியம் வான்முதல் செங்காளி புரத்தரே

2. முயலகன் மிதிவுறும் முன்றிலின் கூத்தோன்
கயமுகன் உடலெரிக் கற்பூரத் திருவிழி
அயமனச் சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
செயல்வினை வளர்கலை சேங்காளி புரத்தரே

3. சிறுமான் நெளியுறு செம்பொன் கரத்தோன்
விறகினை விலைபகர் வேடஞா னத்திறை
அறமில்சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
சிறகொடு பிறையனி சேங்காளி புரத்தரே

4. வில்மழு மரைபிறை வேடிக்கை ஒப்பனைப்பீர்
மெல்லிளம் பார்வைஏழ் புவிசெய் தழிக்கும்
அல்லலம் சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
செல்வழி முத்தொழில் சேங்காளி புரத்தரே

5. கூவிளம் வன்னி கொக்கிற கும்புனை
காவலம் பெருமான் கனகத் திரள்மலை
ஆவளிச் சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
தேவமா முதலே சேங்காளி புரத்தரே

6. எருக்கறு கிதழி இலங்கெழில் வடிவே
உருக்குலைத் தரிமால் உயர்வடி வருளொளி
அருக்கிய சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
செருக்கறு சோதி சேங்காளி புரத்தரே

7. ஏறிய கடலை செந்தூரில் விரட்டிய
கீறிய குளத்திடை நாரைக் கருள்சுடர்
ஆறலைச் சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
சிறகொடு பிறையனி சேங்காளி புரத்தரே

8. ஏனம்தன் மானம் ஏற்றதன் குருளையை
தானமந் திரிசெய் தற்பரஞ் சோதி
ஆனச் சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
தேனத்தி ருவருளே சேங்காளி புரத்தரே

9 செஞ்சமல் லாமருள் நெற்றிவெண் ணீறே
துஞ்சலி லாப்பணி தோற்றுமோர் சுயம்பே
அஞ்சிறு சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
செஞ்சுடர்த் திருவே சேங்காளி புரத்தரே

10. பொங்கமு தளித்தே புரைவிட மயின்றனை
செங்கம லத்தயன் சிரமறுத் தருள்சுடர்
அங்கதச் சிதடெனை அடிமைகொண் டேற்றீர்
செங்கதிர்க் கழலே சேங்காளி புரத்தரே

–திருச்சிற்றம்பலம்–

## 142. செல்லூர்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. தானே வகுநிரல் தன்செயல் முடிப்பனல்
கானே ஊராய் கனிமனக் கோயிலில்
ஞானத் திருநடம் நடத்தும் நவுயகன்
தேனாய் அருளளி செல்லூர் நாயகனே

2. பாரோர் நான்முகன் பன்மலர் பூசைசெய்
தாரார் மாலிந் திரவா னவர்துதி
காரார் நிலவளம் கவலையற் றுயிர்வாழ்
சீரார் வரமருள் செல்லூர் நாயகனே

3. பூவார் மேனியன் பொன்மிளிர் திருக்கழல்
மேவார் திரிபுரம் விரைந்தழித் தன்பருள்
தீவார் நிலத்துயிர் செய்பூ சைமகிழ்
சேவா லிகம்நிறை செல்லூர் நாயகனே

4. தோலாம் உடைஅணி சுயம்பொளிச் சுந்தரம்
ஆலாம் நிழலமர் அறிவொளி தருமிறை
கோலார் மூலிகை கோரக்கர்க் கருளிய
சேலார் நெடுவயல் செல்லூர் நாயகனே

5. ஏடோர் இலக்கமும் இருங்கறை யானுண்ண
நாடோர் துதிதே வாரம் சிறிதினை
பீடார் அருண்மொழிச் சோழற் களித்த
சேடார் சிலம்பணி செல்லூர் நாயகனே

6. எண்ணோ டெழுத்தும் இயங்கறி வளித்த
அண்ணா மலையன் ஆரமுதக்கடல்
பண்ணோடாடலும் பயிற்றும் பரம்பொருளே
தெண்ணீர் சூழ்வயல் செல்லூர் நாயகனே

7. சிந்தா மணிச்சுடர் திரள்மணிக் குன்றம்
நந்தா விளக்கம் நடுமுனை நீதியன்
வந்தோர் வாழ்ந்தோர் வருவோர் மலந்தீர்
செந்தா மரைக்கழல் செல்லூர் நாயகனே

8. வண்டார் மணிக்கொன்றை மதிமலை மேனியன்
தண்டா மரைஅயன் சமரரிக் கருளிறை
பண்டோர் சிலந்தியை பாரர சாக்கிய
செண்டார் வளர்சடை செல்லூர் நாயகனே

9. நீரார் நெடுங்கடல் நிறைநிலம் தீவளி
பேரார் பெருவெளி பிரியாத் திருவருள்
யாரார்க் கெப்பணி எனவகுத் தளிப்பரன்
சீரார் சுயம்பொளி செல்லூர் நாயகனே

10. வானோர் மதியோர் வனத்துறை முனிவோர்
ஏனோர் பூசைசெய் ஏற்றருள் தருமிறை
நானோர் கூளம் நலமளித் தேற்றோன்
தேனூர் வரமருள் செல்லூர் நாயகனே

–திருச்சிற்றம்பலம்–

## 143. கோட்டூர் - (நன்னிலம்)

**சுந்தரேசுவரர்** **கலிவிருத்தம்**

1. மரைமா பறவை வளர்மதி மனிதனை
உரைமொழி உலகியல் உறைவிடம் வாழ்சுகம்
திரைகடல் பெருமலை திரவியம் தரும்சுடர்
குரைமணிக் கழலொளிக் கோட்டூர் சுந்தரனே

2. மலைமணி மரகதம் மலர்மணம் மூலிகை
கலைவளர் மனநலம் கவலைகள் தீர்சுகம்
உலைநெருப் புணவுகள் உடலுளம் தருசுடர்
குலைமலர்க் கழலெழில் கோட்டூர்ச் சுந்தரமே

3. மதிமறை முகில்பனி மழைபொழி குளிர்வெளி
உதிர்கதிர் புகைக்கொடி உடுச்சுழல் கோள்வளை
கொதிநிலக் குழம்புறை குவலயத் துயிர் தரும்
குதியொளிர் மலர்க்கழல் கோட்டூர்ச் சுந்தரமே

4. கொடுக்கடித் தேள்குணக் குறைமனை விமக்கள்
அடுத்தவர் பங்கினை அபகரி உடன்பிறப்
பிடக்கண்செய் துளமகிழ் இசைகெடு கேளிரின்
குடரழித் திருக்கழல் கோட்டூர்ச் சுந்தரமே

5. சிறுசிறு உதவிசெய் சிதைதுயர் நண்பரும்
வெறுப்புளத் தீவளர் வீணரும் சூதரும்
மறுகுறைக் கள்வரும் வஞ்சக மாதரும்
குறைஎரி செய்கழல் கோட்டூர்ச் சுந்தரமே

6. பொடிநீ றணிநுதல் புரைகலை உடலுளம்
வெடித்ததள் குருதி மெலியினும் அன்புதிர்
அடிமுடி தெரியா அழற்கழல் நினைந்துருகும்
குடிமனம் தருகழல் கோட்டூர்ச் சுந்தரமே

7. அரைமதி மும்மலம் அறுத்தமு தத்துளம்
தரைப்பரி வியல்புடன் தற்பர னிணைகழல்
உரைநினை செவிச்செயல் உயிருள வரைதரும்
குருமுறை வளர்மதிக் கோட்டூர்ச் சுந்தரமே

8. வன்மலை இடுக்கிடை வருநீர் அருவி
மென்மலர்த் தேன்கனி மின்னிடி ஊழ்வளி
தொன்முதிர் கடல்தரும் தொடர்நன் நீர்மழை
குன்றா தருள்தரும் கோட்டூர்ச் சுந்தரமே

9. அருளமு தளிகழல் அழலொடு கலந்துள
இருபதின் எழுசிவ கவிப்பெரி யோர்தரும்
ஒருஇராப் பெழுத்திதன் உரைப்பிசை கேட்டதும்
குருபரி வின்பருள் கோட்டூர்ச் சுந்தரமே

10. எரிதிரி சிவனடி யார்பதப் புழுதியேன்
அருகதை எனக்கிலை அழலடி தீண்டற்கே
உரித்துயி ரோடெனைக் கருக்கினும் துதிப்பேன்
குரிசிலஞ் சிவமே கோட்டூர்ச் சுந்தரமே

–திருச்சிற்றம்பலம்–

## 144. இறையான்சேரி – திருவாரூர் வட்டம்

**விசுவநாதர் கலிவிருத்தம் விசாலாட்சி**

1. தேன்துளி ஊமத்தம்சிறுபீ றையணி சிங்கத்தமர்
நான்மறை ஓதிய நால்வருக் கருள்குரு நாதமழை
கான்பொன் நவமணி மீனளி பத்தருக் கருள்சைவன்
ஏன்குரு ளைக்கருள் ஈசனூர் இறையான் சேரியே

2. ஞானத்தி ருவுரு நாதப் பெருஞ்சுடர் நாகரிகன்
கானச்சு ரத்தினை காற்றொடு கலந்தளி கற்பகத்தேன்
போனவ ருயுகப் போற்றும டியவர்க் கருள்முருகன்
ஈனனெ னக்குமருள் ஈசனூர் இறையான் சேரியே

3. செப்பிணை யாப்பொன் செம்மே னிக்கவின் திருக்கூத்தன்
ஒப்பளித் துலகுயிர் உயர்வுற மாலய னைப்படைத்தோன்
அப்பரி னடிதொழு அப்பூதிக் கருளிய ஆதிவள்ளல்
இப்பிறப் பெனக்கருள் ஈசனூர் இறைஞான் சேரியே

4. பலமலர் ஞாழலும் பகுவிரல் கோடலும் சூடுமலை
உலகுயிர் யாவையும் ஓரணுத் துகளின் கோடிப்பொடி
நலமமர் நீதியும் துணைமகன் வான்செல வந்தபிரான்
இலமளித் துயிர் தரும் ஈசனூர் இறையான்சேரியே

5. பாலிமுன் பசுந்தமிழ் பாருறை மொழியா யிரங்கள்செய்
கூலியா ளாய்வந்து குணமுயர் வந்தியைக் காத்தபிரான்
சாலிநெல் அமுதளி தமனிய அரிவாட்டர்க் கருளியகோன்
ஈலிய ரசுக்குளி ஈசனூர் இறையான் சேரியே

6. பழம்பெரும் ஊழியில் படர்தொடர்பூமியை பிரித்துடைத்தே
உழல்பவத் துயிர்களை ஒழித்துயிர் புதுக்கிய ஓங்காரன்
குழலிசை ஆனாயர் குயிற்றிநின் றநிலைகொள் கோவேந்தன்
ஏழிலிசைச் சடைமுடி ஈசனூர் இறையான் சேரியே

7. தென்மலையைக் கடலாய் வடகடல் இமயமென் றியக்கியகோன்
பொன்மணி மூலிகை புதைபொருள் நாவலந் தீவுசெய்தோன்
வன்தொண்ட ருறங்கிய மணிவயிற் றிசைஞானிக் கருளமுதன்
இன்னிசை வீணையன் ஈசனூர் இறையான் சேரியே

8. சுடலையங் கூத்தெழில் சுந்தரத் தாண்டவச் சுடர் மூர்த்தி
கடல்மழை அருவியும் கரைக்குளம் கூவல்செய் கருணைமுகில்
இடங்கழிக் கருளிமண் இறைமுறை வளர்த்த ஏகம்பன்
எடுப்புரை அழித்தருள் ஈசனூர் இறையான் சேரியே

9. நயக்குநல் மானிடம் நலமுற வானளி ஞானலிங்கம்
கயக்குமயல் நெறி கடும்பேய் தொழுவார்க் கருநரகே
இயற்பகை துணையொடு இரும்புகழ் வான்செல உடனழைத்தோன்
எயிலழிப் புவியோன் ஈசனூர் இறையான் சேரியே

10. பொடிநீ றணிநுதல் பொறிவரி அரவுறழ் பொன்மேனி
அடியவர்க் கருள்சுகம் அன்புந லவளம் அளிப்பொளியன்

மிடியிலும் மழையிர விடையுண வளிமா றற்கருளும்
இடிமழை வளம்தரும் ஈசனூர் இறையான் சேரியே
-திருச்சிற்றம்பலம்-

## 145. ஆணக்குடி - விரிஞ்சையூர்

**வேதபுரீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **வேதநாயகி**

1. கமலோன் பாம்பனைக் கண்ணனுடன் கலியுகம் முன்யுகம் களிதேவர்
நமனோட ரம்பையர் நற்றொண்டர் நன்மலர் தூவிப் பதம்பணியும்
இமயத்திறைவனின் துதிமறந்தாய் இருக்குறுகாலன் வருமுன்னே
விமலன்கழல் தொழ சிறுநெஞ்சே வேதபுரீச்சரம் செல்லுதுமே

2. நெரிஞ்சிலம் மலர்புனை நெடுஞ்சுடரை நீள்வெளி விரதியர் சித்தமுனி
கருஞ்சிறை புள்ளினம் துரிஞ்சிலோடு கடும்போர் விசயனும் தொழுதழுதார்
தெரிஞ்சுநீ செஞ்சுடர் மேனியனை தினந்துதித் தருள்பெற மறந்தனையே
விரிஞ்சையூ ரணக்குயு யானைத்தொழ வேதபு ரீச்சரம் செல்லுதுமே

3. கொலைபவ பசுவதன் குரலேற்றே கொடும்பவம் கருநிறம் அழித்தலிங்கம்
தலையூர் உருத்திர பசுபதியார் சதுர்மறை இசைகேட்டருளிறையை
இலைமலர் தூவலும் துதிமறந்தாய் இமயனின் தூதர் வருமுன்னே
விலையுளம் முழுதுறத் துதித்தழவே வேதபு ரீச்சரம் செல்லுதுமே

4. அத்திரி அகத்தியர் அரசமுனி ஆயிரம் யுகங்களின் திருத்தொண்டர்
கத்திகை கலிக்காமர் எறிபத்தர் கருணைநல் ஏனாதி துதிச்சுடரை
சொத்தைச் சோறுண்டுநீ தொழமறந்தாய் தோல்சுருங் கிப்பிணப் பேராமுன்
மித்தையி லாதிறைக் கழல்தொழவே வேதபு ரீச்சரம் செல்லுதுமே

5. புலிப்பா ணிசத்தி போதயானர் போகரெ டுசீடர் புலத்தியரும்
கலிக்கம்பர் ஐயடி கணம்புல்லர் கணநா தர்கண் ணப்பர்துதி
பொலிவொளி துதித்தழ மறந்தநெஞ்சே பொறியைந் துலர்ந்தே பொடியாமுன்
மெலிவுடல் தேய்வுற தொழுதழவ வேதபு ரீச்சரம் செல்லுதுமே

6. பதினெண் சித்தரும் பழமடியார் பரவியு ளம்மகிழ் பரன்கழலில்
உதிமலர் உலரா நிலையிருக்க உத்தமர் பெரியோர் உடுவானார்
மதிமீன் கோள்நிலை வாழ்விழந்தாய் வருந்தியின் றழுதுயிர் வாடுநெஞ்சே
விதியெனச் சாயுமுன் தொழுதழவே வேதபு ரீச்சரம் செல்லுதுமே

7. சமயக் குரவோர் சான்றுநின்றும் சந்தனக் குரவோர் நெறிபுகன்றும்
இமயப் பெருஞ்சுடர் இறையோனை எண்ணித் துதிக்க மறந்தநெஞ்சே

சுமைபல் கோடியும் தூக்கிநின்றே சுடுநர கில்விழும் நிலைமாற
விமலப் பெருங்கழல் பணிந்தழவே வேதபு ரீச்சரம் செல்லுதுமே

8. நின்றாநி லைசென்ற நிகழ்வுண்டு நேசராய்க் கலந்த தொண்டருண்டு
அன்றரன் தொண்டே வாழ்வானார் அதையேன் மறந்தாய் நாய்நெஞ்சே
இன்றினிப் பிறக்கும் துயரறவே ஏழையேன் நவிலுரை செவிசாய்ப்பாய்
வென்றியன் விமலன் கழல்தொழவே வேதபு ரீச்சரம் செல்லுதுமே

9. தில்லைகுற் றாலம் காஞ்சிசென்றாய் திருவா ரூர்த்தண்டி தொண்டுகண்டாய்
நல்லது றைசையோ டையாற்றில் நாள்பல சுற்றியும் நன்றுணராய்
பொல்லா நெஞ்சே பொரிநரகம் போகா திருக்கப் புகல்கேளாய்
வில்லாள் சுடர்பணி வினையறவே வேதபு ரீச்சரம் செல்லுதுமே

10. மந்தையின் மாடென வாழ்வுகொண்டாய் வாநாள் தேய்ந்ததும் வாடுகின்றாய்
சிந்தையில் மண்பொன் சிற்றின்பம் சிவத்திரு வடிதொழ ஏன்மறந்தாய்
கந்தையை பொன்னுடை என்றுடுத்தாய் கவலை யறவோர்வழி கேளாய்
விந்தைவெஞ் சுடர்தொழத் துயரெரியும் வேதபு ரீச்சரம் செல்லுதுமே
–திருச்சிற்றம்பலம்–

## 146. திருநெய்ப்பேர் - ஏமப்பேரூர்

**வன்மீகநாதர் கலிவிருத்தம் உமாபரமேசுவரி**

1. கானநல் குயிலொடு கவேரி அணலிசை
ஏனலங் கழனிசூழ் ஏமப்பே ரூரின்
வானத்த ளிநிழலும் மக்களின் நெஞ்சமும்
ஞானநெய் பேரும் நம்பனின் உறைவிடமே

2. ஏந்திய அலைகரன் ஏமப் பேரூரின்
நீந்துநீர்த் தாரா வாளையோ டயறும்
மாந்தரின் மணிமனம் வணங்குறும் தளிகள்
காந்தநெய் பேரும் காபாலி உறைவிடமே

3. நழுவரால் வாலிபிடி ஞெண்டுகள் வயலுழும்
எழுசுடர் மழுக்கரத் தேமப் பேரூரன்
தொழுமடி யார்மனம் துதிதளி சாந்தமும்
குழுநெய்ப் பேரும் கொன்றையன் உறைவிடமே

4. காகமும் பருந்தும் கயலொடு குலவும்
ஏகத் திருவுருவன் ஏமப் பேரூரின்
மேகநல் கொடையும் மிகுநலத்தறிவும்
தோகைநெய் பேரும் சுடரரன் உறைவிடமே

5. கன்னலும் செந்நெலும் கதலியும் குவியும்
இன்னிசை நாயகன் ஏமப் பேரூரின்
பொன்மனம் மழலையர் புனிதஇல் லறர்மனம்
நன்நெய்ப பேர்நமி நந்தியரன் உறைவிடமே

6. கருவரல் கீரியும் கழனியிலாடும்
இருவிழி தருமஞ்செய் ஏமப்பே ரூரில்
குருதிவி ழிசிறுநீ ரகக் கொடை மனங்களும்
திருநெய்ப் பேரும் சிவனவர் உறைவிடமே

7. சீர்கிளி பருந்தொடு சிறைமயில் சிநேகம்
ஏர்வளம் பெருகுநல் ஏமப்பே ரூரில்
ஊர்நலப் பெரியோர் உத்தமர் எளியோர்
தேர்நெய்ப பேரும் சிவக்கொழுந் துறைவிடமே

8. நாயிடம் பூனையும் நரிமறி பாலுண்ணும்
ஏயிலங் கழனிநல் ஏமப்பே ரூரில்
கேயில் நிலம்மனை குத்தகை தருமனம்
நேயநெய்ப் பேரும் நிமலனின் உறைவிடமே

9. மக்களும் மனக்கிளி மறைமுறை பாடும்
எக்கமும் யாழ்மலி ஏமப்பே ரூரில்
அக்கம ணிசூடும் அனைவரின் மனமும்
தக்கநெய்ப் பேரும் தற்பரன் உறைவிடமே

10. களிதமிழ் திருமுறை கனிந்திசைத் தேமகிழ்
இளந்தெங் குங்கதலி ஏமப்பே ரூரில்
எளியவர் நெறியவர் ஏழையர் இனிமனர்
தளிநெய்ப் பேரும் தற்பரன் உறைவிடமே

–திருச்சிற்றம்பலம்–

## 147. குன்னியூர்

**விசுவநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **விசாலாட்சி**

1. நெருஞ்சி குறிஞ்சிநல் கொன்றையொடும் நிறைதும் பையணி நேசவள்ளல்
கருஞ்சிரத் தரவுறைக் கங்காளன் கவின்கலை வளர்க்கும் கண்ணுதலன்
குருகுக்கும் அருளளிக் குன்றவில்லி கோடிமொழி செய்யும் குன்றியூரா
அரும்பலர்க் கழல்துதித் தழுகின்றேன் அடுத்தொரு பிற்பற அவனியிலே

2. தளிர்வன் னிவில்வத் தாரணிந்த சங்கரப் பெருந்தகை தமரீசன்
மிளிர்நீல் விடமுறைமிடறெழிலன் விண்ணவர் பூசைசெய் மென்னகையன்
குளிர்மதிக் குறைதீர் கோமேதன் குங்கிலி யம்மகிழ் குன்றியூரா
ஒளிர்மலர்த் திருவடி துதிக்கின்றேன் உடன்வரு பிறப்பற உலகினிலே

3. வெள்ளெருக் கறுகும் வெண்ணீறும் வெடசிநல் ஆவிரை விரும்பமுதன்
பிள்ளைக் கறிசமை தொண்டருக்கும் பெரும்பே றளித்த பெரியபிரான்
தள்ளைநல் தாயாய் கேழலுக்கும் தயவளிச் சங்கரக் குன்றியூரா
உள்ளொளிக் கழல்துதித் துருகுகின்றேன் ஊனுடல் இறப்பற உலகினிலே

4. கொக்கிற கரளி நந்திவட்டம் கோடெழில் பாதிரிகுவளையணி
அக்கநல் மாலையன் அருணகிரி அம்பலன் நம்பன் ஆதிரையன்
குக்கலுக்கும் அருள் கொடுத்தபிரான் கோமே தகமலை குன்றியூரா
சக்கடிக் கழல்துதித்துருகுகின்றேன் சஞ்சித மகல்வுறத் தரணியிலே

5. மஞ்சள லரியும் மணிக்கொன்றை மரைமலர் புன்னமைமாலையரன்
விஞ்சைந வமணி வெஞ்சுடரன் வீணைக்கவின்கர விமலீசன்
குஞ்சரத் தோலணி குருவமுதன் குங்கிலியர்க்கருள் குன்றியூரா
மிஞ்சொளிக் கழல் துதித் துருகுகின்றேன் மேதினிப் பிறப்பறுத் துய்ந்திடவே

6. அரவொடு சிறகணிட ஆடலங்கோ ஐம்பெரும் தொழல்செய் ஆனந்தன்
மரவுரி இராமனுக் கருளளித்த வையகப் பேரொளி மாதேவன்
குரவோர் எண்மறைக் கொடுத்துலகில் குருமுறை மரபளிக் குன்றியூரா
வரமளி கழல்துதித்து ருகுகின்றேன் மறுபிறப் பிறப்பும் அகலுறவே

7. தக்கனின் வேள்வித கர்த்தபிரான் சற்குணம்நாயன்மார்க்கினிதளித்தோன்
எக்காளத் திசைமகிழ் ஏகம்பன் இளையான் குடிமாறற் கருளினியன்
கொக்குக்கும் வானளி கொடுமுடியன் குஞ்சரமுரித்த குன்றியூரா
உக்கிடார்க் கருள்கழல் துதிக்கின்றேன் உறுபிறப் பகல்வுற உலகினிலே

8. மலர்நீர் பால்தயிர் அபிடேகன் வான்முகில் மழைநதி வழங்கிறைவன்
புலர்கா லைப்பூசை புரிவோர்க்கும் புனிதநல் வரமமளிபுகழீசன்
கொலுக்கயி லைக்காட்சி ஐயாறில் கொடுத்தன் பளித்த குன்றியூரா
பொலங்கழல் துதித்துளம் உருகுகின்றேன் பொல்லாப் பிறப்பறபூமியிலே

9. சங்கிசை மங்கலச்சங்காரன் சக்கரம் மாலுக்குத் தந்தவள்ளல்
தங்கப்ப லகையளிதமரன்பன் சகலருக்கறிவளித் தற்பரமன்
கொங்கணர் கோரக்கர் மூலியளி குவலயப் பேரொளிக் குன்றியூரா
வெங்கலக் கழல்துதித் துருகுகின்றேன் வினைவிதி தீண்டா விண்ணுறவே

10. மந்திர மறைத் தமிழ் வழங்கிறைவன் வானவர் துதிசெய் மதியுருவன்
தந்திரமெந்திரம் தந்தபிரான் தன்னுமைச் சேகண்டிச் சங்கீதன்
குந்திம கற்கருள் குறைதீண்டாக் கோயிலன் குருவெம்குன்றியூரா
செந்திரள் கழல்துதித் துருகுகின்றேன் சிவலோக கஞ்சென்றுய்வுறவே

–திருச்சிற்றம்பலம்–

## 148. திருக்கண்ணங்குடி

**காளத்தீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஊழிப்பு னலலை நின்குளியல் ஓங்கா ரமிதழ் முணுமுணுப்பே
நாழிப்பொ முதுகள் நால்யுகமே நாரணன் அயன்நின் பணியாளே
சோழியப்பை தூக்குமுன் எனக்கருளே சுந்தரக் கூத்தா சுடர்விளக்கே
காழியற் கின்னமுத ளித்தவள்ளல் கண்ணாங் குடியுறைக் கற்பகனே

2. வானப்பு யலுமுன் சிறுமூச்சே வருகூ றாவளி விரலசைவே
தேனருங் காய்கனி நீர்த்தெளிப்பே சீர்நிலப் பிரிப்புன் சதுரங்கம்
கூனல் விழுமுன் எனக்கருளே கூத்தனே குவலயப் பெருமானே
கானநல் ஆனாயற் கன்புசெய்த கண்ணாங் குடியுறைக் கற்பகனே

3. புயல்நின் ஓரிமைச் சிற்றசைவே பூத்தம லர்மலை ஓவியமே
இயல்புநல் காற்றலை எழில்நடையே இயக்கங்கள் யாவும் நின் கற்பனையே
மயலழித் தென்றனை ஏற்றருள்வீர் மாணிக்க மாமலர் மணிக்கொழுந்தே
கயல்நெடு மாறனுக் கருளியகோ கண்ணாங் குடியுறை கற்பகனே

4. இடிமின் னல்நின் பெருஞ்சிரிப்பே ஏழுலகும் நின் கைப்பிடிமண்
வடிவியல் மேதை வண்ணமைந்தில் வளர்கோ டியுடல் செய்தபிரான்
அடிமையென் றென்னை ஏற்றருள்வீர் ஆலயங் கோடியுறை அம்பலனே
கடிமதில் புகழ்சோழற் கருளொளியே கண்ணாங் குடியுறைக் கற்பகமே

5. இருள்நெடு தொலைதெரி பால்வெளியும் எல்கதிர்ஆயிரம் குழுக்குடும்பம்
மருள்தரு புகைக்கொடி எரிகற்கள் வளர்வெளி நின்றன் விளையாட்டே
தருமமில் அடிமையை என்றேற்பீர் தற்பரஞ் சோதித் தனிப்பொருளே
கருஞ்சிறைக் காரிக்கருளொளியே கண்ணாங் குடியுறை கற்பகமே

6. குகையனல் வளிவளர் கொடுநாகம் கோபுரப் புற்றுறைச் சிறுநாகம்
வகைக்கொன் றுறமும் திருமேனி வானவில் புருவச் செஞ்சுடரோன்
தகையிலி சிதலெனை இன்றேற்பீர் தாரணி மாமணிப் பொன்மலையே
ககனச் சித்தர்க்கருள் கங்காளா கண்ணாங் குடியுறை கற்பகமே

7. தெரியாக் காற்றலை அணுவூடே செய்தியொ லிபரப் பாற்றலளி
மரிமா மனமனி தரைவளர்க்கும் மாசில் வீணை நாதமுனி
புரியா நெறிநாய் எனக்கருள்வீர் புண்ணிய நாயகப் பேரொளியே
கரியதள் போர்த்திய கங்காளா கண்ணாங் குடியுறைக் கற்பகமே

8. சதுப்புநி லக்கடல் காடுகளும் சதுரகிரி நடுச் சமவெளிநின்
மதுரம னநனி ஓவியங்கள் வயிரம ணிக்குன்ற மன்னவனே
எதுகைமோ னைஒன் றறியாதேன் இறைநினைப் பாடும் இசைவளித்தே
கதுப்பெழில் காரைத்தாய்க் கருளியகோ கண்ணாங் குடியுறைக் கற்பகனே

9. மூலன்மூ லமளித்தமிழ் மறையம் மூவர் தேவாரம் வாசகமும்
ஞாலத் திருவொளி நின்கருணை ஞானப் பெருங்கடல் நாயகமே
கூலச் சிறுபுழு என்னைநின்னை கும்பிடற் கருளிய குவலயனே
காலனைத் தடிந்துபின் காத்தபிரான் கண்ணாங் குடியுறை கற்பகமே

10. பாதம லர்த்திருக் காட்சிதரும் பாற்கட லமுதளி பரஞ்சோதி
போதும லர்க்கொன்றைப் புங்கலனே பூதமைந் தினைச்செய் புண்ணியனே
ஏதுரை சொல்வேன் ஈசுரனே ஏழையே னக்கருள் மாகருணை
காதலன் பருளின் காரணனே கண்ணாங் குடியுறை கற்பகமே

–திருச்சிற்றம்பலம்–

## 149. அத்திப் புலியூர்

**சிதம்பரேசுவரர்** **கலிவிருத்தம்**

1. சிங்கத் திருமால் திறலழி மாமலை
நங்களின் நாயகன் நான்மறை வேதியன்
பொங்கமு தப்புனல் புரிசடைச் சங்கரன்
அங்கலர்சூழ்வனத் தத்திப்பு லியூரிதே

2. தாமரை அயன்சிரம் தறித்தழித் தன்புசெய்
கோமணி மாலையன் கொன்றையந் தாரிணன்
தூமணி அடியார் துயரறுத் தருளி
ஆமணி வாகனன் அத்திப்பு லியூரிதே

3. வேர்வுசெய் அந்தகன் விறலழித் தருளிய
கூர்மழுப் படையினன் குவலயப் பேரொளி
ஏர்இளை யான்குடிக் கின்னருள் புரியரன்
ஆர்அக்கு மாலையன் அத்திப்பு லியூரிதே

4. கயமுக னையழித்த கருணையம் கடவுள்
நயமணி கண்டன் நாதப் பெருந்தழல்
மயல்வினை தீர்த்துயர் வாழ்வருள் பரம்பொருள்
அயத்திரி சூலனின் அத்திப்பு லியூரிதே

5. சலந்தரன் உடல்கிழி சங்கர மூர்த்தி
நலந்தருங் குஞ்சித பாதப்ப ரஞ்சுடர்
இலம்பையங் காட்டூர் இருமறை சூடிறை
அலங்கையம் மாலையன் அத்திப்பு லியூரிதே

6. இந்திரன் செருக்கழி ஈச்சுர மணிமலை
மந்திர வீணையன் வணங்குவர்க் கெளிமையன்

சுந்தரக் குண்டலி சுயம்பொளித் திருவிழி
அந்தரப் பேரிறை அத்திப்பு லியூரிதே

7. நீங்கொளிச் சந்திரன் நெடுஞ்சா பந்தீர்
பூங்கழல் ஆதியன் புன்னகைப் போர்ப்படை
தாங்கிய தற்பரன் சங்கரச் செந்தழல்
ஆங்கரு ணையரன் அத்திப்பு லியூரிதே

8. ஞாயிறுக் கருளிய ஞானியர் தொழுமிறை
மாயிரு ஞாலநின் வானகம் படைத்தோன்
சேயிளம் புதுமதி திருவடி யார்க்கருள்
ஆயிளங் கூவிளன் அத்திப்பு லியூரிதே

9. நீதிநல் காலனின் நீள்துயர் மாற்றிய
சோதிய மாமலை சுந்தரத் துடியினன்
ஓதிய வேதமும் உட்பொருள் அருவுரு
ஆதிய நாயகன் அத்திப்பு லியூரிதே

10. மானிடம் மண்ணுயிர் வானுல கேழேழ்
தானியற் றியருள் தந்ததோர் தழல்மலை
கானியல் வேடனை நளனென் றரசளி
ஆனெழில் வாகனன் அத்திப்பு லியூரிதே

–திருச்சிற்றம்பலம்–

## 150. பட்டமங்கலம் – கீழ்வேளூர்

**அபிமுக்தீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. தண்ணீரில் தழலு மானோன் தழலிலே தண்ணீரானோன்
மண்ணுக்குள் விண்ணை வைத்து விண்ணுக்குள் மண்ணை வைத்தோன்
பெண்ணுக்குள்ஆணு மாக்கி ஆணுக்குள் பெண்ணுமாக்கி
பண்ணுக்குள் பாட்டும் ஆக்கும் பட்ட மங்கலத் தாரே

2. அம்புலிப் பிறையைச் சூடி அனலேழில் பரிதிக் குதவி
செம்பொன்னைத் தொண்டர்க கருளி துயர்மலம் எல்லாம் தீர்த்த
வைம்மை நல்தீப மாகி விணணவர்க் கருளும் இறைவன்
பம்பையும் பாட்டும் கேட்ட பட்ட மங்கலத் தாரே

3. முத்துச் சிவிகை பந்தர் மூத்த மழலைக் களித்த
கத்துமேழ் கடலுக் குள்ளும் கணக்கிலா உயிரை வளர்த்தோன்
வித்தைகள் வினைகள் தந்து வேரறப் பிறவி அறுக்கும்
பத்தியும் பரிவும் ஊட்டும் பட்ட மங்கலத் தாரே

4. அல்லும் பகலும் இந்த அழகுநல் பூமிக் களித்து
கொல்லும் புவியும் சிங்கம் கொழந்தசை மானும் தந்தே
செல்லும் பிறப்ப பறுத்து திருவடி நிழலும் அளிக்கும்
பல்யுகத் துயிரைக் காக்கும் பட்ட மங்கலத் தாரே

5. ஓடிய ஊழியும் கோடி ஓட்டுமோர் பெரும்பே ராளன்
கோடிப் பிறப்பின் காலம் குறைத்திடப் பூச்சிபுள் ஆக்கும்
ஆடிய சஞ்சி தம்தீர் அழுக்குறைப் புழுவாய் செய்வோன்
பாடியே ஆடுவர்க் கன்பன் பட்ட மங்கலத் தாரே

6. நாணலின் நாட்டி யத்தோன் நல்வினை கூட்டு விப்போன்
வேணலில் மாரியைத் தூவும் வேணிப் பொன்னம் பலத்தான்
காணும்கண் கருத்தில் நிற்கும் கனவொடு நனவில தோன்றும்
பாணருக் இன்பமளித்த பட்ட மங்கலத் தாரே

7. தோரழில் திருவா ரூரன் சீர்காழி திருவை ஆறன்
வேரிடைப் பலாவி னைப்போல் விளைவுநல் கருனை செய்யும்
காரிக்கு ருவிக்கு மருளும் காஞ்சன மாமலை மூர்த்தி
பாருயிர்க் கன்ப ளிக்கும் பட்ட மங்கலத் தாரே

8. புலியதள் போர்த்த பெம்மான் புதுமைகள் யாவும் ஆனோன்
கலியுகக் கடைநல் ஊழி கரைபொரு வெள்ளத் தாடல்
மெலியுயிர் பிறப்ப றுத்தே பிறிதுநல் பிறப்ப ளிக்கும்
பலிதுயர் தீர்த்தே அருளும் பட்ட மங்கலத் தாரே

9. மழுவொளி வானோன் மண்ணில் வாழுயிர் மலமொடுக்கி
தாழுறும் பத்தி அளித்தே தாங்குமோர் தாய்மைத் தந்தை
ஏழுல காட்சி ஆயின் இரந்துணும் பேரும் உடையன்
பாழுயிர் பவம றுக்கும் பட்ட மங்கலத் தாரே

10. உருவுகள் யாவு மாகி உருவமே இல்லா அருவன்
திருக்குறள் செய்த வர்க்கும் திருவடி நிழலைத் தந்தோன்
செருக்கறுத் தென்னை ஏற்கும் சிற்பர வியேமத்தண்ணல்
பருப்பத பேரா ரமுதன் பட்ட மங்கலத் தாரே

–திருச்சிற்றம்பலம்–

## 151. காக்கழனி

**காளத்தீசுவரர்** **தரவு கொச்சகக் கலிப்பா**

1. மின்னல் விழிச்சுடரன் மேகமழை மிளிர்வானன்
பொன்னம் பலத்தரசன் போதாந்தத் தத்துவத்தன்

முன்னைப்ப ழவினைகள் முழுதறுக்கும் மூத்தவிழி
கன்னல் வயல்சூழ்ந்த காக்கழனிக் கண்ணுதலே

2. வெற்றித் திருவிழியன் விண்கடந்த ஏகம்பன்
ஒற்றியூர் உலகீசன் ஊர்த்துவச்சீர் தாண்டவத்தன்
அற்றந்தீர் ஆரமுதன் ஆனந்த மாதேவன்
கற்பகப் பேரனலன் காக்கழனிக் கண்ணுதலே

3. சீரிதழ் கொன்றையொடும் செங்காந்தள் அணிந்தபிரான்
நீரிடைச் சயனமாலின் நீசமழி நெடுஞ்சடையன்
வாரிவ ளங்குவிக்கும் மழைநதியும் தந்தபிரான்
காரிக்கும் அருளளித்த காக்கழனிக் கண்ணுதலே

4. ஆவரம் பூவெழிலன் அருளளந்த பேரமுதன்
பூவார மன்மதனின் பூதவுடல் அழித்ததணல்
தேவாரப் பண்ணிசையன் செந்தமிழில் பாட்டிசைத்த
காவாரக் கங்காளன் காக்கழனிக் கண்ணுதலே

5. பாய்வனக் கரிஉரித்த பாற்கடலின் அருளமுதன்
தேய்ந்த பிறைக்கருளி திரைச்சாபம் தீர்த்தவள்ளல்
வாய்தடித்த இசைவல்லான் மதமழித்த மதுரை அண்ணல்
காய்சசினம் எரித்த பிரான் காக்கழனிக் கண்ணுதலே

6. ஊஞ்சலங் குணத்துயிர்க்கும் உலகளிக்கும் ஓரிறைவன்
பூஞ்சிறை நாரையதன் புரைதீர்த்த வானளித்தோன்
தீஞ்சுவை கரியமுதம் திருத்தாண்டர்க் களித்தவள்ளல்
காஞ்சனத் திருவடிவன் காக்கழனிக் கண்ணுதலே

7. ஞஸனநல் கடலழகன் ஞாதாவுக் கருளினியன்
மானநல் கேழலுக்கும வானளித்த வான்சுடரன்
ஊனநல் நடனமணி ஓங்கார மாமறையன்
கானத் திருவடிவன் காக்கழனிக் கண்ணுதலே

8. செங்காந்தள் சிறகணிந்த தில்லைவனப் போரொளியன்
மங்காத வைரமணி மருக்கொழுந்தும் சூடழகன்
நங்கூர மனச்சித்தர் நாலிரண்டு ஆதாரன்
கங்காளத் திருமூர்த்தி காக்கழனிக் கண்ணுதலே

9. எல்லையில் லாக்கருணை ஈந்துவக்கும் எம்மீசன்
தொல்லைமலம் இருவினையும் தொடராமல் காத்தருளும்
நல்லவினை தருமிறைவன் நாதாந்தப் பேரணலன்
கல்விநல மாணவர்வாழ் காக்கழனிக் கண்ணுதலே

10. தன்னலம் கருதாத தவச்சித்தர் மனத்தொளிக்கும்
பொன்னொளிப் பூங்கழலன் பூதபதி நான்மறையன்
என்னையோர் மனிதனாக்கி இறைக்கழலைத் துதிக்கவைத்த
கன்மந்திர் கங்காளன் காக்கழனிக் கண்ணுதலே

–திருச்சிற்றம்பலம்–

## 152. சாட்டிக்யக்குடி

**வேதபுரீசுவரர்** **கலிவிருத்தம்**

1. உன்னத உலகன் ஊமத்தம் பூவளி
இன்னம்ப ரீசன் ஏழ்புவி வானன்
என்புளம் உருகும் இனியடி யார்க்கருள்
கொன்றைநல் சாட்டியக் குடியுறை நம்பனே

2. தக்கணன் சற்குணன் சந்திரப் பிறையணி
சிக்கலின் செம்மலத் திருவா திரையன்
மக்களு டலுயிர் மனங்கனிந் தேதுதி
கொக்குறை சாட்டியக் குடியுறை நம்பனே

3. எல்லைகள் தாண்டி எழுந்தொளிர் செந்தீ
திலலையங் கூத்தன் திருவருள் மேனியன்
பல்வினை தீர்த்தே பரிவருள் நாயகன்
குல்லைநல் சாட்டியக் குடியுறை நம்பனே

4. செவிமணித் தோடணி செஞ்சுடர் ஆதியன்
அவிநா சியமர் ஆனந்த மூர்த்தி
புவியுயிர் புரையறப் போதந் தருமிறை
குவிநெல் சாட்டியக் குடியுறை நம்பனே

5. அடுக்கலர் கொன்றையும் அரவணி பூந்தழல்
கொடுமுடிக் கொற்றவன் கொடிமின்சடையன்
வடுமூ வாசை மாயைதந் தன்பருள்
குடும்பநல் சாட்டியக் குடியுறை நம்பனே

6. மருகல ரிமல்லி மரைகூ விளமணி
கருவூ ரானிலைக் கண்ணுதல் மூர்த்தி
இருவினை ஒப்புணர் வுயிர்க்கருள் ஆசான்
குருவருள் சாட்டியக் குடியுறை நம்பனே

7. புள்ளிவ ரைஞாழல் புதுவன் னியணி
வெள்ளியங் கிரியன் மிளிரருள் மூர்த்தி

உள்ளமு றத்துதி உயர்தாண்டர் மனத்துறை
கொள்கனிச் சாட்டியக் குடியுறை நம்பனே

8. கோட்புலி உரியணி குளிர்பிறைச் சடையன்
வாட்போக் கியண்ணல் வனச்சது ரகிரியன்
காட்சிய ளித்தே கனவுநனவுறை
கூட்டணிச் சாட்டியக் குடியுறை நம்பனே

9. கோவணத் தாடையன் குவிபசி ரண்டத்தன்
பூவணத் தருவுரு பூதக ணமூர்த்தி
கேவலஞ் சகலமும் பிரளயர் வினைதீர்
கூவல்நல் சாட்டியக் குடியுறை நம்பனே

10, பூவழ குக்கொன்றை பொன்னடை சூடிய
ஆவடு துறையோன் அருள்மய லைச்சிவம்
ஏவல னாக்கினனக் கின்னருள் புரிந்த
கோவணி சாட்டியக் குடியுறை நம்பனே

–திருச்சிற்றம்பலம்–

## 153. மன்னார்குடி – வட்டம்

**சொக்கநாதர்** **கலிவிருத்தம்** **மீனாட்சியம்மன்**

1. கண்ணேறுறும் பொன்னார்கவி கங்காளனின் கழலில்
விண்ணோர்களும் விராதியரும் விரிமாமலர் சூட்ட
மண்ணோர்நிறை மதிமாதரும் மணியாடவர் தொழுவார்
வெண்ணீறணி மன்னார்குடி விமலோன் மகிழ் ஊரே

2. நாளான்மைசெய் ஞாயிறொளி நறுந்தென்றலும் கூடி
சாளரம்புகும் சங்காரனினன் தாள்தீன்றநின் றேக
காளான்வளர் வேளாண்மயர் கருமார்களும் தொழுவர்
மீளாக்கதி மன்னார்குடி விமலோன் மகிழ் ஊரே

3. சிரசேகுறை அயன்மாலொடு தேவர்களும் வந்தே
புரதகனன் பொன்னார்கழல் பூங்கொன்றைநல் பூசை
அரசாள்வரும் அரசூழியர்அடியார்களும் தொழுவார்
விரசம்கொளார் மன்னார்குடி விமலோன்மகிழ் ஊரே

4. பிறையார் முடி பேரொளனின் பிரியாப்பழ மடியார்
கறயைார்மிட றெழிலோன்கழல் தொழுதேமகிழ் பூசை
குறையா உருத் திரமேயணி குலவா ரிசும் தொழுவார்
விறலாரிறை மன்னார்குடி விமலோன் மகிழ் ஊரே

5. செந்தாழமும் செண்பகமலர் தீப்பொய்புகல் பாவம்
இந்நாள் வரை இறைபூசையில் எழிலாம்நிலை துறந்தார்
வந்தார்களும் சென்றார்களும் வருவார்களும் தொழுவார்
வெந்தீஉரு மன்னார்குடி விமலோன்மகிழ் ஊரே

6. புரமூன்றினைக் கணையொன்றினால் பொடியாக்கிய புலவன்
சரக்கொன்றயும் தளிர்வில்வமும் சாந்தோடகி லணியும்
குரவோர்களும் உரவோர்களும் குறையாப்பூசை தொழுவார்
விரலோர்மரை மன்னார்குடி விமலோன்மகிழ்ஊரே

7. ஆராதனை அபிடேகமும் அலர்நீறணிந் தொளிரும்
சீரார்எருக் கறுகோடணி செய்பூசைகள் ஏற்கும்
நீரார்புவி நன்மானிடர்நித்தம்துதி செய்வார்
வீராகரன் மன்னார்குடி விமலோன்மகிழ் ஊரே

8. தடங்கள்தரும் தாளேபணிந் தழலே எனத் தொழுவே
அடங்கும்மனம் ஒடுங்கும் உயிர் அரனே நின கழலில்
புடமூதிய பொன்னாய்பொலி வான்மாவினை ஏற்கும்
மிடறூர்விட மன்னார்குடி விமலோன் மகிழ் ஊரே

9. ஏழேழ்புவி இமையோர்நொடி இயற்றும் பெருஞ் சுடரே
கூழேற்றொரு தொண்டர்க்கருள் கொடுத்தேல் சிவக்கொழுந்தே
ஊழால் நினைந் துருகாதவர் ஒருநாள் தொழ வினைதீர்
வீழாலமர் மன்னார்குடி விமலோன் மகிழ் ஊரே

10. நெய்பால்தயிர் அபிடேகமும் நிறைமாலை கொள் சுடரே
பொய்வேடமும் புதுஞானமும் கொண்டேநடித் துழலும்
உய்யாவகை வாழும் எனை உவந்தேபொறுத்தேற்கும்
மெய்யாம் இறை மன்னார்குடி விமலோன்மகிழ் ஊரே

–திருச்சிற்றம்பலம்–

## 154. ஆ. மன்னார்குடி

**ஏகாம்பரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. பொன்னடி புவனா பூதகணம் பூசைசெய் துவக்கும் புண்ணியனே
நின்னடி யார்போல் நிதம்நடித்தே நிலத்துயர் வாழ்நாள் நெரித்தேனை
மன்னிய திருவருள் வானவனே மலர்ப்பதக் காட்சிதந் தருளாயோ
வன்னிமத் தமணி மேனியனே மன்னார்குடிமறை மந்திரனே

2. அருவா கியதணல் அம்பலனே அந்திநல் வானிறத் தழகோனே
திருநீற் றருமை அறிந்தறியேன் தினம்பன் முறைவாய் பூசிநின்றே

பெருமடி யார்போல் நடித்தேனின் பிழையறக் காட்சிதந் தருளாயோ
மருகொடு அறுகனி மாமணியே மன்னார்குடிமறை மந்திரனே

3. ஆடிய பாதநல் அருவுருவே ஆயிரம் கோடி மனக்கோயில்
நாடிவந்து யிர்க்கருள் நாடகனே நற்றாய் திருவருள் நாயகனே
கோடிநின் அடியாரைத்து தித்தறியேன் குறையறக் காட்சிதந் தருளாயோ
மாடக்கம் சூடிய வளர்சுடரே மன்னார் குடிமறை மந்திரனே

4. முன்னோன் மூத்தோன் முழுமுதல்வன் முழுதும் நடத்தும் முக்கண்ணன்
இன்னார் புரமெரி ஏகம்பன் எளியோர் மனத்துறை ஈசுரனே
பன்னிரு திருமுறை படித்தறியேன் பவமறக் காட்சிதந் தருளாயோ
மன்னிரும் தவத்திரு மாமணியே மன்னார்குடிமறை மந்திரனே

5. பண்ணே பாட்டே பயில்தாளம் படர்கழல் சதங்கை பாம்பணியே
பெண்ணே ஆணாகி பிரித்தளித்த பிங்கலப் பேரொளிப் பிஞ்சகனே
அண்ணே என்றுனை அழைத்தறியேன் அவமறு காட்சிதந்தருளாயோ
மண்ணோர் கடவுள் மாணிக்கமே மன்னார்குடி மறை மந்திரனே

6. எந்தாய் எனத்துதித் துருகுபத்தர் இடையே அவர்போல் வேடமிட்டே
அந்தோ பொய்யாய் நினைத்துதித்தே அவனியை ஏய்த்தேன் அதிசிதடன்
நிந்தனை ஆயினும் நினைத்துதித்தேன் நேர்கழல் காட்சி தந்தருளாயோ
மந்தாகினியுடை வானவனே மன்னார்குடிமறை மந்திரனே

7. உறைபனி மேவிய கயிலாயா உஞ்சவி ருத்திசெய் ஊர்த்துவனே
கறைமிடறெழில் மணிக் கதிரொளியே கயமுக னுடலழி கற்பகனே
குறையே செய்நாய் எனைப்பொறுத்தே கோதறு காட்சி தந்தருளாயோ
மறிக்கர நாயக மாமணியே மன்னார்குடி மறை மந்திரனே

8. உழவராப் பணிக் கோயிலிலே ஒன்றும் செய்யா துண்டுறங்கி
குழல்பூ பொன்னடை எறும்பாகி குற்றமும் குன்றாய் வளர்த்தேனை
அழலே நினைநினைத் தழும்போது ஆசறு காட்சிதந் தருளாயோ
மழவார் விடையமர் வானவனே மன்னார்குடி மறை மந்திரனே

9. சலமதித்துயிர்தன் தண்கழல் சேர் சத்துவக் குணமணி சற்குருவே
நலந்தரும் அறுபதின் மூவரவர் நற்குரு பூசையும் நனிதுதியேன்
உலவுயிர் என்பிழை பொறுத்தருளி உனகழல் காட்சிதந் தருளாயோ
வலம்புரி கோடியில் நீராடும் மன்னார்குடி மறை மந்திரனே

10. பெற்றத்தேறமர் பெரியோனே பிரியாத் திருவருள் பிஞ்சகனே
குற்றமொன்றேசெய்ப் பிறந்தேனென் குறைமனம்சஞ்சிதம் என்வினையே

கொற்றவன் நினையே கும்பிடுவேன் குறையறு காட்சிதந் தருளாயோ
மற்றவர்க் கருளளி மாமணியே மன்னார்குடி மறை மந்திரனே

–திருச்சிற்றம்பலம்–

## 155. நீடாமங்கலம்

**காசி விசுவநாதர்** **கலிவிருத்தம்** **விசாலாட்சியம்மை**

1. கனல்கரப் பேரிறை கற்பகப் பரம்பொருள்
தனதடி யார்நோய் தடுத்தருள் நல்கும்
வனக்கவின் நீடா மங்கலத் திறைவன்
உனக்கவர் துணைக்கே உருகாதே நெஞ்சே

2. தாரணி மானிடம் தாரமுன் சந்ததி
போரணி யாகியே புவியிடைத் துரத்தினும்
வாரணி நீடாமங்கலத் திறைவன்
ஓரிடம் தருவார் உருகாதே நெஞ்சே

3. சுற்றமு றவுகள் தோன்றலு டன்பிறப்பும்
அற்றமே செய்துளம் அறுத்துடல் எரிக்கினும்
வற்சலம் நீடா மங்கலத் திறைவன்
உற்றது ணையிருக்க உருகாதே நெஞ்சே

4. நிலம்நலம் பொன்பொருள் நிம்மதி படைப்புகள்
குலமானக் கள்வரும் குலைத்துளம் கெடுப்பினும்
வலமமு நீடா மங்கலத் திறைவன்
உலவுமுன் துணையிருக்க உருகாதே நெஞ்சே

5. பிணியொரு மூப்பும் பெருகுவ றுமைபகை
துணிவிலா மனமுடல் துயிலிட மில்லெனினம்
மணியழல் நீடா மங்கலத் திறைவன்
உணர்வுன் துணையிருக்க உருகாதே நெஞ்சே

6. பிறப்போ ரம்மணம் இறப்போ ரம்மணம்
சிறப்போ இதனிடை செயல்தரும் விளைவுகள்
மறப்பிலி நீடா மங்கலத் திறைவன்
உறவுன் துணையிருக்க உருகாதே நெஞ்சே

7. தாயொரு தந்தை தன்னொடு பழகியர்
போயொடு நாளில் பூமியில் மறைவார்
மாயநல் நீடா மங்கலத் திறைவன்
ஓயாத் துணையிருக்க உருகாதே நெஞ்சே

8. காற்றினில் கலக்கும் புகையே வாழ்க்கை
போற்றலோ டாற்றலும் புலர்பகல் பனியே
மாற்றமில் நீடா மங்கலத் திறைவன்
ஊற்றருள் துணையிருக்க உருகாதே நெஞ்சே

9. நினைவிலாப் பிறவிகள் நிலமே அறியும்
வினைவிதி இயல்புகள் விளைவுகள் தீர்வுற
மறையற நீடா மங்கலத் திறைவன்
உனையேற் றருள்தரும் உருகாதே நெஞ்சே

10. குஞ்சித பாதன் நஞ்சனி கண்டனன்
தஞ்சமென் றமுவாய் அஞ்சலென் றருள்வான்
மஞ்சளன் நீடா மங்கலத் திறைவன்
உஞ்சைய னுன்துணை உருகாதே நெஞ்சே
–திருச்சிற்றம்பலம்–

## 156. இராமாபுரம் - இராசராசேச்சரம்

**செயங்கொண்டநாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் பெரியநாயகி**

1. மதிபூர் தீக்கையும் வாழ்நெறிக் குருவுரை மனம்பதித் திறைநினைவில்
உதயாதி முன்னம் உடற்றும் நியமம் பூசைசெய் துயிர்வளர்க்கும்
பதிகம் பாடியே பணிந்தமும் அடியவர் பவவினை தீர்த்தருளும்
நதியார் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

2. சனியோ டொன்பது சகடக்கோள் செய்துயர் தாழ்மனர் செய்தீமை
தனிமைகொல் மானிடர் தவித்தமும் உயிர்கள் தமரிடம் ஏமாந்தோர்
பனிப்போர் வீசிய பார்ப்புளர் இல்லறம் பாதம்பணிந் தழத்தீர்க்கும்
நனிநீர் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

3. அன்னிய மோகத்தில் ஆழ்ந்தோர் அழிந்தோர் ஆருயிர் விலைபகர்ந்தோர்
தன்னிலை தாழ்ந்து சகதிநெஞ் சாகிய சவத்துவத் துயர் சூழ்ந்தோர்
மன்னிய நமச்ச வாயம றைசால வாழ்வியல் மாற்றளிக்கும்
நன்னீர் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

4. சோற்றுக்கும் சுகத்துக்கும் தொல்நெறி மாறிய தொகையோர் பிறப்பெடுத்த
ஊற்றுக் கிணற்றாமை உழல்வென உயிரோ டுழல்நிலை காண்குறுவீர்
கூற்றுவ னைஉதைத்த குளிர்கழல் தொழுவீர் கொடும்பிறப் பறுத்துய்வீர்
நாற்றெழில் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

5. பழுதுகள் கோடியும் பாவங்கள் ஆயிரம் பரிதவிப் பேவாழ்க்கை
வழுத்திச் சிவநாமம் மனனஞ்செய் திகைக்க வாழ்வே சுகமாகும்

விழுத்தவ மாமுனி வியாசருக் கருளிய விண்ணவப் பேராசான்
நழுவா இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

6. துணைகளும் சுற்றமும் சுகமழி அரவாய் தோன்றிய கலியுகமே
அணையுடை நீரென ஐஞ்சுக வெறியில் அறிவுழல் பேராசை
இணைவுறு மானிடர் இகழறுத் தன்புசெய் திணிவரு பிறப்பறுக்கும்
நணிநதி இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரனே

7. வித்தகர் வேதியர் விண்மதி விராதியர் விளம்புடல் வைத்தியரும்
செத்தவ ராகுமுன் சிவத்திரு நாமம் செப்பிம னமுருகின்
இத்தரை வாழ்வொடு இகபர வாழ்விலும் இன்னருள் மகிழ்ந்தளிக்கும்
நத்துநல் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரனே

8. வஞ்சம னத்தமர் வரம்புமீ றாசான் வாழ்புவிக் கலியுகத்தில்
நெஞ்சநல் லார்களும் நீதிம னிதரின் நேர்வுறு துயர்நோய்கள்
மஞ்சளங் கொன்றை வன்னிசூட் டிப்பணிய வருதுயர் வரைத் தீர்க்கும்
நஞ்சமில் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரனே

9. இச்சகம் முகத்துதி இல்லாப் பெருமைகள் இயம்பியே நலமுறிஞ்சும்
கச்சளம் மனத்தினர் காரிகைக் குணத்தினர் கரிமதம் நிதிமிகுந்தோர்
உச்சவன் செயல் உளமறி பகைமை ஒழித்துயர் வாழ்வளிக்கும்
நச்சுநர் இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

10. பத்திசெய் கலைமனம் பகுத்தறி வான்மையும் பரம்பரைப் பரிவுகொடை
முத்திசெல் முழுத்தவம் முன்செய் அட்டாங்கமும் முனைநுதல் குண்டலியும்
எத்திசை வாழினினும் இணைகழல் துதித்தழ இன்னருள் அளித்துவக்கும்
நத்திசை இராமா புரநகர் மேவிய இராசரா சேச்சரமே

–திருச்சிற்றம்பலம்–

## 157. முல்லைவாசல்

**முல்லைவனநாதர் கலிவிருத்தம் கற்பகவல்லி**

1. காதுக்கோர் வைரமணி கரத்திலோர் மான்மரை
ஆதிப்பே ரிறைவனே ஆசைமா மனிதனை
ஏதுக்குப் படைத்தனை ஏழ்கோடித் துயரம்
வாதுலம் முல்லை வாசலின் பெரியனே

2. ஓடெடுத் துண்டனை உலகேழ் ஆண்டனை
ஆடலந் தலைவனே ஆசைமா மனிதனை

மாடனாய படைத்தனை மாண்பெது கண்டனை
வாடா முல்லை வாசலின் பெரியனே

3. காலிலோ காறை கருநாக பாம்பே
கூலியாய் வந்தமர் கூத்தெழில் இறைவா
கேலியாய் மனிதனை கிளப்பியென் கண்டனை
மாலதி முல்லை வாசலின் பெரியனே

4. ஆருத்தி ரையனே அம்பலக் கூத்தனே
பாருறைத் தெய்வமே பவமுற மனிதனில்
போருளம் கொடுத்தனை புகழேது கண்டனை
மாருத முல்லை வாசலின் பெரியனே

5. நாதப்பே ரொளியே நாட்டிய மேதையே
காதலஞ் தலைவா கவலைசூழ் மனிதனை
ஏதுறப் படைத்தனை ஏதமென் இறைவா
வாதலம் முல்லை வாசலின் பெரியனே

6. சீரொலித் துடியடி செஞ்சுடர் ஊர்த்துவா
பேரொளிப் பிழம்பனே பெண்ணையேன் படைத்தனை
ஆரெழில் கொடுத்ததில் ஆபத்தும் வைத்தனை
வாரெழில் முல்லை வாசலின் பெரியனே

7. சேநிறப் பூரணன் திகழுயிர்க் காரணன்
நாநிற மனிதனை நங்கையும் படைத்தனை
கோநிறப் பூசலைக் கொடுத்தென்ன கண்டனை
மாநிற முல்லை வாசலின் பெரியனே

8. தென்பால் நோக்கிய செஞ்சுடர் மலையனே
பொன்போல் மேனியே போகநோய் மாதரை
இன்னா தீயவே இயற்றியென் கண்டனை
மன்னார் முல்லை வாசலின் பெரியனே

9. மாதவத் தேந்தலே மாலயற் கரியனே
ஆதிரை நாயக அகமுணர் வளித்தனை
தீதிலே வீழ்த்தியே தேம்புற வைத்ததேன்
வாதிக முல்லை வாசலின் பெரியனே

10. குஞ்சரத் ததளணி கோமே தகமலை
நஞ்சணி கண்டனே நன்னெறி உயிருறத்

தஞ்சமே கொண்டனம் தழல்துயர் தீர்த்தருள்
மஞ்சுயர் முல்லை வாசலின் பெரியனே
–திருச்சிற்றம்பலம்–

## 158. பழையனூர் - மன்னார்குடி வட்டம்

**சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரியவிருத்தம்**

1. செஞ்சடை ஆதி அண்ணல் தேன்மறை சூடும் தேவன்
நஞ்சணி கண்டத் தோனே நான்மறை தந்த பிரானே
நெஞ்சினில் நின்னை எண்ணி நித்தமும் பாடவேண்டும்
பஞ்சின்மெல் மின்னல் பாதன் பழையனூரின் பரனே

2. ஆதிய நாதி யான அம்பலம் மேவும் அனலே
சோதிநின் பாதந்தேடித் துதித்துளம் மகிழ வேண்டும்
நாதியே இல்லை என்னும் நலிவெலாம் மாற வேண்டும்
பாதிரிப் பூவை அணிந்த பழையனூரின் பரனே

3. பிறப்பிலி பேரறி வாளன் பிங்கலச் செஞ்சீர் அருவம்
சிறப்புற நின்னைப் பாடி திருக்கோயிலெல்லாம் சென்று
பொறுப்புற நானும்ப ணிந்தே பூமியை மறக்க வேண்டும்
பறப்பன பணிந்து செல்லும் பழையனூரின் பரனே

4. மழுக்கர மேந்தும் வானன் வரமருள் ஞானதீபன்
விழுப்பொருள் யாதும் வேண்டேன் வெஞ்சுடர்க்கழலை வாழ்த்தி
அழுப்பிலா துணையே பாடி அயர்ந்தயர்ந் துறங்க வேண்டும்
பழுப்பிலா கருணை வள்ளல் பழையனூரின் பரனே

5. தமனிய தாரகைக் கண்கள் சங்கீதச் சிலம்பணி தாள்கள்
அமர்ந்தினி தாக நின்னை ஆயுள் முழுதும் பாடி
விமலநின் தாளை நினைந்தே வீழ்ந்துதுதிக்க வேண்டும்
பமரங்கள் பாட்டிசைக்கும் பழையனூரின் பரனே

6. பூணும் அரவ மெல்லாம் புண்ணியம் செய்த உயிர்கள்
காணும் தழல்கள் யாவம் கங்காளன் நீயே என்று
பேணித் துதிக்க வேண்டும் பேதைநான் நின்பிரி வின்றி
பாணர்க்க ருளிய வள்ளல் பழையனூரின் பரனே

7. இனமுறை கண்ட ஈசன் இறைஞ்சுவோர் கருளு மண்ணல்
கனவினில் நின்னைக் கண்டு கழல் பணிந் துருக வேண்டும்
நனவெலாம் நீயே ஆகி நானுணர் ஞான மாகி
பனம்பரக் காலுற வேண்டும் பழைய னூரின் பரனே

8. வெள்ளே ரின்மீதமர்நத விமலப் பொன்னீசுரனே
உள்ளத்தைக் கோயி லாக்கி உன்னையே துதித்த மர்ந்தேன்
அள்ளிய ணைக்க வுமாசை அதுதவ றென்றால் பொறுப்பீர்
பள்ளிநல் கல்வி தந்த பழைய னூரின் பரனே

9. தேனலர் சூடும்மின்னல் தேவாதி தேவன் ஈசன்
ஞானமாக நிற்கும் நின்னை நான்பணிந் துருக வேண்டும்
ஊனமும் ஞானத் தோடும் ஊழிந டனமும் கண்டு
பானிநான் பாடவும் வேண்டும் பழைய னூரின் பரனே

10. நெற்றிக் கண் நிமலச் சுடரே நீறணி பொன்மேனியனே
கற்றிலேன் ஞானம் வேண்டும் காலகாலத் துறவும் வேண்டும்
மற்றொரு பிறவி இன்றி வந்துநின் அடியுற வேண்டும்
பற்றிய மலம ற்றும் பழைய னூரின் பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 159. கூத்தநல்லூர்

**நீலகண்டேசுவரர்** **வஞ்சிவிருத்தம்**

1. சிகையலங் காரநல் திருவருள் ஞானி செம்பொன் மேனியனே
முகைமலர் கோடியும் மூவிழி நாயகன் முத்தமிழ் ஆதாரன்
நகைமலி கூத்த நல்லூருறை நம்பநின் நற்கழலில் சரணம்
தகைதகவம் தந்தருள் தற்பரஞ்சோதி தாவரச் சங்கமனே

2. தொண்டரின் மனைத்துறை தூயநல் சோதி தொகுமலை ஆதியனே
பிண்டமும் அண்டமும் ஒன்றெனக் காட்டிய பிங்கல மாதேவன்
நண்பளி கூத்தநல் லூருறை வேந்தே நவமணிக் கழல் சரணம்
தண்வனத்துயிரொடு சமநிலை தந்தருள் தாவரச் சங்கமனே

3. பெண்ணான் திருநங்கை பிறப்புடல் அளித்துயர் பெருமலமொடுக்குமனல்
வண்டமர் மாலையன் மரகதக் கோயிலன் வாழ் நெறி காட்டுமிறை
குண்டலிக் கூத்தநல் லூருறை குழகன் குறையா வரமருள்வோன்
தண்முகில் தந்தருள் தற்பரஞ் சோதி தாவரச் சங்கமனே

4. மாரிநள்ளிரவில் விதைத்தநெல் உணவளி மாறற்கும் வானளித்த
ஊரிருள் மாற்றி ஒளியுமிழ் நிலவளி ஓமிசை மந்திரத்தான்
நாரைக் கருள் கூத்த நல்லூர் நாயகன் ஞானத்திருவடிவன்
தாரைமுகிலருள் தண்தமிழ் பாட்டளி தாவரச் சங்கமனே

5. கடல்முதல் மீனளி தொண்டருக் கன்பளி கார்த்திகை தீபநல்லன்
உடல்பெரும் பாம்புறை ஊரிடுபிசசைகொள் ஒருகரத் தோடேந்தி

நடனஒண் கூத்தநல் லூருறை நாயகன் நாலிரு வருக்கெளியன்
கடலைநன் னீர்செய் கலையருள் கம்பன் கதிர்மணிச் சங்கமனே

6. காந்தளம் பூவொடு ஞாழலும் பிறையணி காவிரிப் பெரும்புனலன்
கூந்தலை மனைவியை குழந்தையின் கறியூண் கொடுத்தோர் கினிதளித்த
நாந்தணி கூத்தநல் லூருறை நாயகன் நால்யுகப் பேரழகன்
சாந்தம ளித்தருள் தற்பரஞ் சோதி தாவரச் சங்கமனே

7. கல்லா னையைக்கரும் புண்ணும் காட்சி காட்டிய கதிரொளியன்
பொல்லார் புரமூன் றெரிசெய் புனிதன் பென்னன் புரிசடையன்
நல்லார் கூத்த நல்லூருறை நம்பன் நாடகச் செங்கோலன்
எல்லார்க் கும்அருள் ஈசன் எந்தை இணையுயிர் சங்கமனே

8. கோவணக் கெடைசெய் குற்றமில் அமர்நீதிக் குயர்வான் கொடுத்ததழல்
நாவர சருக்கும் நன்காழியர்ககும் நாள்படிக் காசளிகோன்
கூவலங் கூத்தநல் லூருறை கொழுந்தன் கொடுகொட்டித் திருநடனன்
காவலங் கடவுள் கனகநல் மேனி காசியங் காஞ்சியனே

9. வேலையா ளாகிப் பிரம்படி உயிர்க்களி வேணியஞ் சீரலைன்
ஓலையளித்துயர் பாணருக் கன்பளி உவர்கடல் மிசை நடந்த
ஞாலநன் கூத்தநல் லூருறை நதியன் ஞாதிருக் கருளினியன்
பாலொடு நீரூண் பாரிட பரிந்தருள் பசுபதி ஈசுரனே

10. சித்துயர் தத்துவன் சிந்தையங் கோயிலன் திருவடி நீழல்தருவோன்
நித்தியன் நிரந்தரன் நீர்நிலம் தீவளி நெடுவெளி நிமலீசன்
கொத்தலர் கூத்த நல்லூருறை குழகன் கொடுமுடிக் காவிரியன்
இத்தரை யிடைபத்தி இல்லறம் துறவும் இயற்றும் எம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 160. திருராமேஸ்வரம்

**இராமநாதர் கலிவிருத்தம் மங்கலாம்பிகை**

1. மந்தனக் காட்சிகள் வந்தருள் செய்கின்ற மாணிக்கமே
விந்தைஎல் லாந்தரும் விண்ணருள் கண்டுளம் மிகமகிழவில்
சிந்தைகளிகூர்ந் துருகியுருகி துதிக்கின்றேன்
சந்தன திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

2. யாழிசை நாயகன் ஞாலத்துக் கோரிறை நண்பரனே
காழியச் சம்பந்தர் கணம்மனை சுடர்புகு காட்சியிடை

ஊழிசெய் ஆடலும் உயிர்மிரள் தோற்றங் கண்டுருகுகின்றேன்
தாழிசை திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

3. செந்தமிழ் அப்பரும் சேவைஅப்பூதியும்தேனிசையில்
வந்தனை செய்நிலை மலர்மணப் பூசையும் வாழ்த்துடனே
இந்திரன் நினைத்துதி எழில்காண் மகிழ்வில் இறைஞ்சுகிறேன்
தந்திநல் திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

4. சேரசுந் தரரும் திருமுறை பாடிப் பூசைசெய்ய
பூரண மாமதி எழுபதின் நாயன் மார்துதிக்க
நாரதன் யாழிசை நந்திமத் தளமும் கேட்டுவந்தேன்
சாரணர் திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

5. நான்முகன் திருமால் நங்கையர் வானவர் நனிவணங்க
தேன்பழச் சாறபி டேகமும் பூசையும் தீபதூபம்
மான்மிளிர் விரலொளி மாட்சிமை கண்டுளம் வணங்குகிறேன்
சான்றமை திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

6. குமரிம லைநிலம் கொடுங்கடல் செய்தகுன்றவில்லி
இமயப் பெருங்கடல் எழில்கயிலை செய்த எம்பெருமான்
அமையடுத் தூழி அனைத்துடுக் கோளிடம் மாறல் கண்டேன்
சமைக்கும் திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

7. பிருகத் திரியகத் தியரும் பிறநல் இருடியரும்
குருவருள் மூலரும் கோடிமெய் பத்தரும் கும்பிடுமோர்
அருளுருக் காட்சியும் அரன்நின் திருவடி அகங்கண்டேன்
தருவெழில் திருரா மேச்சரம் மேவிய தற்பரனே

8. பதினெண் சித்தரும் பரணறு சமயப் பத்தருடன்
நதிநீராட்டலும் நல்லணி சூட்டலும் நால்திசையில்
அதியகில் நறும்புகை அட்டம லர்பூசை காண்கின்றேன்
சதிர்கழல் திரு ராமேச்சரம் மேவிய தற்பரனே

9. நடிப்பெழில் ஊர்த்துவன் நால்திசை நடுங்குறு நடனமதும்
வெடித்தெழு மலைநதி விரிபா தாளமும் வீழ்பொடியும்
அடுத்தொரு நொடியில் ஆயிரம் புது அண்டம் காண்கின்றேன்
சடினநல் திருராமேச்சரம் மேவிய தற்பரனே

10. மூவரும் பூதக ணம் முக்கோடிப் பத்தருடன்
தேவர்தி ருத்தொண்டர் சீரூயிர் யாவைசெய் பூசைகண்டே

ஆவலுடனெட்டு அணிமலர் தூவி வணங்குகின்றேன்
தாவணில் திருரா மேச்சரம் மேவியதற்பரனே
–திருச்சிற்றம்பலம்–

## 161. மகாதேவப் பட்டினம்

**சம்போமகாதேவர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஞானவன்பேரொளி நாதாந்தன் நாட்டியன் பத்தரின் நாயகனே
ஊனந டனஞ்செய் ஒளியானோன் ஊர்த்துவத் தாண்டவ உலகீசன்
தானத் தருமங்கள் கற்றிடவே தயவொடு தவமதி தருமிறைவன்
வானவர் மண்ணுவர் வணங்கிமகிழ் மாதேவப் பட்டின மங்கலனே

2. பேரிருள் தாருகை உடலழித்த பிங்கலன் சீரொளி பெரியோனே
தேரிசைத் திருவா ரூரழகன் தேன்பொழில் காவிரி ஐயாறன்
மாரியும் கார்முகில் வழங்கியருள் மங்கலப் பேரிசை வினையோனே
வாரிபெரும் புனல் வணங்கிமகிழ் மாதேவப் பட்டின மங்கலனே

3. மாமுனித் தாரகை வனமேகி வறிதுரு காட்டிய பிச்சாடன்
கோமுத்தி திருவா வடுதுறையன் கோபாக் கினியழிகுணப் புலவன்
சோமனூர் கன்பளி சுந்தரத்தீ துறக் கமுயிர்கருள் தூயதழல்
வாமனும் அயனும் வணங்கிமகிழ் மாதேவப் பட்டின மங்கலனே

4. சந்திரன் சாபத்தை திருத்தியகோன் சற்குண சம்போ மாதேவன்
மந்திர மாமறை நமச்சிவாயன் வானவர் பூசைசெய் வானவில்லன்
இந்திர கோபத்துக் கினிதளித்த ஈசன் எந்தை எம்பெருமான்
வந்தவர் சென்றவர்க் கன்பருளும் மாதேவப் பட்டின மங்கலனே

5. ஏலங் கிராம்பொடு தக்கோலம் எண்மலர் சூடிய ஏகம்பன்
கோலம் ணிக்கழல் கோவேந்தன் குங்குமத் திலகன் குணச்சாந்தன்
முலர்க்கும் மறையளி முக்கண்ணன் மூவேந்தர்துதி முழுமுதல்வன்
மாலயன் இந்திரன் வணங்கிமகிழ் மாதேவப் பட்டின மங்கலனே

6. பாலனுக் காகப் பாற்கடலும் பார்தனுக் கென்று பாசுபதம்
நூலிழைக் சிலந்திக்குச் சோழரசும் நூதனக் கொடைய ளிநுதல்விழியன்
காலனை உதைத்த கனகமணி காமதேனுவை தேரையும் கனிந்தளித்தோன்
வாலர விவரந்து வணங்கி மகிழ் மாதேவப் பட்டின மங்கலனே

7. பொன்மலர்க் கொன்றைபூ மேனி புனிதன் பெருந்தழல் பூவரசன்
நன்றே உயிர்களி நாதந்தன் ஞானப்பெ ருநிதி ஞாலவள்ளல்
ஒன்றே யாவையும் உருவாக்கி உடனாய் அதுவாய் வேறானோன்
மன்றில் ஆடும் வானவர் கோமாதேவப் பட்டின மங்கலனே

8. ஊழ்வினைக் கென்றொரு மாயைதந்த உத்தமப் பேரொளி உயிரன்பன்
பாழ்மா மலமற பரிவளிக்கும் பனிமலைப் பிங்கலப் பரம்பொருளே
கீழ்மேல் ஏழேழ் கேளிருறை கிம்புருடர்துதி கிரிதேவன்
வாழ்வா தாரம் வகுத்தபிரான் மாதேவப் பட்டின மங்கலனே

9. வெள்ளப்பெ ருங்கடல் மீதாடும் வெண்பிறை சூடிய ஊழியன்பன்
உள்ளப் பெருவேடன் உத்தமத்தி உயிருறைக் கழுமலம் ஒடுக்கியகோ
எள்ளுறை நெய்யாய் இருந்தியக்கும் எல்லோன் கண்ணொளிக் காட்சிதரும்
வள்ளத்துறை ஞானசம்பந்தர்க் கன்பன் மாதேவப் பட்டின மங்கலனே

10. முத்தொளி நீறணி முக்கண்ணன் முக்கா லந்தரும் மோனமலை
சித்தொடு மருத்துவத் திருமூலர் திருமந் திராமொழி செய்ய வைத்தோன்
எத்தே செயுமென் பொதுத்தே இன்னமு தக்கழல் நிழல் தந்த
மத்தம லரணி வானமுதல் மாதேவப் பட்டின மங்கலனே

–திருச்சிற்றம்பலம்–

## 162. திருமாக் கோட்டை

**ஞானபுரீசுவரர்** **கலிவிருத்தம்** **பெரியநாயகி**

1. கசிந்துரு குபத்தர் கருணைக் கடவுளன்
வசிட்டர் வணங்கிய மணித்திருக் கோயிலன்
நசிப்பிலா ஞானபு ரீச்சர நம்பன்
பசிப்பிணி தீர்த்தருள் பண்பிணைத் துதிமனமே

2. செந்தமிழ்ச் சோழரும் சீர்குலம் வாழ்வுற
வந்துவ ணங்கிய மங்கலக் கோயிலன்
நந்தனின் ஞானபு ரீச்சர நம்பனின்
பந்தபா சந்தந்த பண்பினைத் துதிமனமே

3. சங்கம்வ ளர்த்தநல் சந்தனப் பாண்டியரும்
மங்கலப் பூசைசெய மாணிக்கக் கோயிலன்
நங்களின் ஞானபு ரீச்சர நம்பன்
பங்கய நிதிதரும் பண்பினைத் துதிமனமே

4. சித்திரச் செண்பகச் சேரர் குலந்தொழும்
புத்தலர்ப் பூசைசெய் பொன்னலர்க் கோயிலன்
நத்தநல் ஞானபு ரீச்சர நம்பன்
பத்தரின் வினைதீர் பண்பினைத் துதிமனமே

5. குங்குமக் கோதையர் கொங்கும ணிக்குலம்
தங்கத்த ளிர்வில்வம் சாற்றித் தொழுதெழும்
நங்களின் ஞானபு ரீச்சர நம்பன்
பங்குரை மருந்தளி பண்பினைத் துதிமனமே

6. இலங்கைக் கோன்பதின் சிரங்கள் நெறிவுற
கலங்கிநல் யாழிசைக் காணிக்கை மகிழ்ந்தருள்
நலங்கொள் ஞானபு ரீச்சர நம்பன்
பலநலம் வளந்தரும் பண்பினைத் துதிமனமே

7. மன்னிய காடவர் மலர்க்குலம் வேந்தரும்
சென்னி நிலமுறச் சேவித்த செஞ்சுடர்
நன்னல ஞானபு ரீச்சர நம்பன்
பன்மனத் தீதழி பண்பினைத் துதிமனமே

8. விசயந கரத்தர் வேந்தரும் மாந்தரும்
தசதலைக் கோனும் தன்னலர்ப் பூசைசெய்
நசலழி ஞானபு ரீச்சர நம்பன்
பசப்பழித் தருள்தரும் பண்பினைத் துதிமனமே

9. மழவரும் நாஞ்சிலர் மழகொங்க மண்ணினர்
விழவெடுத் தனுதினம் விழுந்துவ ணங்குறும்
நழுவலில் ஞானபு ரீச்சர நம்பன்
பழமடி யார்க்கருள் பண்பினைத் துதிமனமே

10. பிறப்புறு மானிடம் பிறவுயிர் யாவையும்
சிறகினம் புல்பூண்டு செடிகொடி படைப்பருள்
நறவுநல் ஞானபு ரீச்சர நம்பன்
பறப்பறுத் தருள்செய் பண்பினைத் துதிமனமே

–திருச்சிற்றம்பலம்–

## 163. கலுவத்தூர்

**சடாயுபுரீசுவரர்** **வஞ்சிவிருத்தம்** **சௌந்தர்யநாயகி**

1. திருவெண் ணீறுறைச் செங்கோலம்
குருவடி வன்பளிப் பொற்கோலம்
ஒருமுறை கழல் தொடப் பேராசை
அருளபடிக் கலுவத்தூ ரம்மானே

2. கட்டெழில் புரிஉரிக் கங்காளா
எட்டே வெள்ளியங் கிரிவாசா
குட்டொன்று படவும் எனக்காசை
அட்டடிக் கலுவத்தூர் ரம்மானே

3. சின்னப் பிறையணி செந்திருவே
தென்கயி லைப்பொதித் தில்லையனே
பொன்னடி காணவும் எனக்காசை
அன்பளி கலுவத்தூ ரம்மானே

4. நல்விடை யமர்ந்த நாயகனே
கொல்லிச் சதுரகிரி குற்றாலா
மெல்லமி திபட எனக்காசை
அல்லழி கலுவல்தூ ரம்மானே

5. கொன்றைநல் கூவிளந் தார்மேனி
மன்றெழில் மதுரை மாமணியே
நின்கர நீறுற எனக்காசை
அன்னநல் கலுவத்தூ ரம்மானே

6. வெற்றித்தி ருவிழி வெஞ்சுடரே
நெற்றிமு முதும்நின் பாதமுற
பற்றித்தொ முதழ எனக்காசை
அற்புதக் கலுவத்தூ ரம்மானே

7. தத்துவ மாமணிச் சங்கரனே
மொத்தவான் முழுதுறை முத்தொளியே
முத்தம்நின் பாதத்தில் தருமாசை
அத்தனே கலுவத்தூ ரம்மானே

8. உருகொளி கயிலை ஊர்த்துவனே
கருவறைச் கதிபதி கற்பகமே
திருவடித் தீக்கையும் பெறுமாசை
அருவுரு கலுவத்தூ ரம்மானே

9. இறகார் திருமுடி இறையோனே
பிறவாப் பெருவரம் பெற்றபின்னே
புறம்போ காதரு குறையாசை
அறமார் கலுவத்தூ ரம்மானே

10. பொடிநீ றணிந்த புண்ணியனே
அடியார்க் கருளமு தாசானே
நொடிபிறி யாதுனைத் தொழுமாசை
கடிமலர் கலுவத்தூ ரம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 164. பாலையூர்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. கோங்கரும் கொன்றையும் கூவிளம் சூடிய குன்றவில்லி
ஈங்கோய் மலையன் ஏழேழ் புவியன் இனிகுணனே
தீங்குசெய் தார்தம் சிறுமையை மறக்கும் மனமருளே
பாங்கார் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

2. தொடுகடல் ஏழளி சுந்தர மூர்த்தி தொடர்மலையாய்
கடுவிட மயின்று கலியுக ஊழிசெய் கங்காளா
கொடுஞ்சொலில் எரித்தோர் குறைதுயர் மறக்கும் குணமருளே
படுபுனல் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

3. ஒன்றிய ஒளிதனால் உலகுயிர்க் குணர்வருள் ஓங்காரன்
மன்றினி லாடும் மாமறைப் பொருளே வான்சுடரே
நன்றியை மறந்தவர் நகைச்செயல் மறக்கும் ஞானமருள்
பன்மணிப் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

4. குளிர்ப்பிறை சூடிய கோமே தகமலை கோடிமின்னல்
தளிநடுக்கருவறை தமனியத் திருவுருச் சங்கரனே
எளியரை வணங்கி இன்னுரை நன்றுசெய் இயல்பருளே
பளிதமண் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

5. எரிதழல் ஏந்திய ஏகம்பச் சுடரின் ஏகாந்தன்
அரிஅயன் வானவர் அனுதினம் துதிக்கும் அறிவுருவே
உரிமையைப் பறித்தவர் உலுத்தமை மறக்கும் உளமருளே
பரிமணி பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

6. நயனத்தி ருவருள் நாட்டிய நாயகன் நான்மறையாய்
கயமுக னுடலழிக் கருணையங் கடவுள் காலகாலா
உயர்பொருள் கெடுத்தவர் வேடத்தை மறக்கும் உணர்வருளே
பயன்விளை பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

7. மறப்பினை நல்கி மண்ணுயிர்க் கினிதளி மாகேசா
இறப்பொடு மயக்கம் ஏழைமை மாற்றும் இறையோனே
பிறப்பினை இகழும் பேதமை மறக்கும் பேரருளே
பறங்கிநெல் பழநல் பாலையூர் மேவிய பரம்பரனே

8. கவைத்திரி வேல்கரன் கருவரி அரவணி காசியனே
நவமணிக் குபேரன் நலநிதிக் கருளிய ஞானநம்பா
சிவத்துதி பழிக்கும் சிறியரை மறக்கும் செயலருளே
பவளநெல் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

9. குருவருள் நல்கி குவலயம் காக்கும் குன்றவில்லி
கருமணி கண்டத்தன் காவிரி நாயகன் கங்காளா
திருப்பணி இகழும் சிறியரை மறக்கும் சீரருளே
பருங்கதிர் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே

10. செறிமலர் செருந்தி சீரிளம் வில்வமும் திகழ்மேனி
அறம்பொரு ளின்பம் வீடளி ஆதிஎம் அம்மானே
நிறைநீ றணியா நெற்றியை மறக்கும் நெஞ்சருளே
பறிகதிர் பழனநல் பாலையூர் மேவிய பரம்பரனே
-திருச்சிற்றம்பலம்-

## 165. பண்ணத்தெரு - திருத்துறைப்பூண்டி வட்டம்

**பன்னாகப் பரமேசுவரர்  கலிவிருத்தம்  சாந்தநாயகி**

1. முன்னேஎழு விடங்கண்டயர் விண்ணோர்குறை தீர்த்தே
மன்னீல்விட உண்டோன்விழி மாறாத்திரு வடிவன்
பன்னீர் தயிர் பாலாவிடேகப் பத்தர்செய மகிழும்
நன்னீர்மலர் பன்னத்தெரு நம்பன்நமக் குறவே

2. எருதூர்தியன் திருவாதிரை ஏந்தல்வருஞ் சுடரன்
கருத்தாலுணர் பத்தர்மகிழ் கனகக்கதிர் மலையன்
அருளாளரின் தமிழ்கேட்டரு குறையம்வரம் அளித்த
திருமால்தொழும் பன்னத்தெரு சிவமேநம திறையே

3. பொன்னோர் நிறம் புட்பராகம் புதுமாமணிக் குன்றம்
தன்னேரிலாத் தழல்மாமலை சான்றோர் தொழும் கருணை
ஒன்றேஒளி இரண்டேநிறம் முன்றேபொழு தியக்கி
நன்றேசெயும் பன்னத்தெரு நம்பன் தவக் குருவே

4. பிண்டத்துறை அண்டத்தொளி பேரூழிசெய் நடனன்
கண்டத்துறை நஞ்சோர்மணிக் குண்டலிசெய் உருவம்
பண்டோர்சிறு பாலற்கரும் பாற்கடளி வள்ளல்
நண்டார்வயல் பன்னத்தெரு நம்பன்புவித் தாயே

5. மாயாவிதிமாலுக்கருள் மாசில்மணி மலையோன்
தேயாப்புவி ஓயாச்சுழல் தீராவளி தந்தோன்
சாயுச்சியம் சாரூபமும் தரவேதவம் பயிற்றும்
தாயார்மனப் பன்னத்தெரு தழலோன்தரும் பரிவே

6. நீரூர்நிலம் நிலமூர்புனல் நெருப்பூர்வளி வெளியே
சேரும்செயல் செய்யுந்திரு செந்தீயொளி மூர்த்தி
ஆரூரிடை நடந்தோன்அருந்தொண்டற்கொரு தூதே
பாரோர்புகழ் பன்னத்தெரு பரன்நாம் தொழும் நட்பே

7. எட்டாள்குணம் ஏழேழ் புவி இசைத்தேஉயிர் வளர்க்கும்
ஒட்டார்புரம் ஒருநேர்கணை எரிக்கும்சிரிப் பெழிலன்

நட்டார்தொழ நற்பேறருள் நாளேர்எழில் வேந்தன்
பட்டோர்க்கருள் பன்னத்தெரு பரனேஇறை புவிக்கே

8. எரிநாகமும் மதிமான்கரன் ஏழேழ்புவி படைத்தோன்
புரியார்செயும் புரைதீர்த்தருள் பொன்னார்கழல் எழிலன்
அரிநான்முகன் அறியாஉரு அடியார்க்கரு கமரும்
பரிவேவளர் பன்னத்தெரு பரமன்கழல் அருளே

9. சிறியோர்தொழப் பெரியோரிசை தேவாரப்பண் மகிழந்தே
வறியோர்க்கருள் வடிவாய்வரும் வானோர்புகழ் சீதன்
அறிவேஇலா அதிமூடனை அடியாரிடை சேர்த்தோன்
பறிமாமலர் பன்னத்தெரு பரமன்கழல் பரிவே

10. ஒன்றே இறை என்றேதொழ இன்றேமதி கொள்வீர்
நன்றேதரும் என்றே திரு மூலன்தொழும் இறைவன்
பொன்றாப்புகழ் புவியேழ்படைத்தொன்றில் நமை வளர்த்தோன்
இன்றேதொழ பன்னத்தெரு இறைவன் தரும் விண்ணே

-திருச்சிற்றம்பலம்-

## 166. திருத்துறைப்பூண்டி

**பவஔசதீசுவரர்** **அறுசீர்ஆசிரிய விருத்தம்** **பிருகந் நாயகி**

1. உயிரணுசெய்ததில் உருவளித்தோன் ஓரறிவாறறி வுயிர்படைத்தே
பயிரணுப் பலப்பல கோடிசெய்தோன் பாரிடைத் தாவரக் குவை செய்தோன்
இயலணுச் சுழற்சியில் எரிவளியும் இருவாய் விணைத்தே நீர்பெருக்கும்
செயிர்தீர் திருமணிச் செம்பவளன் திருத்துறைப்பூண்டியின் செங்கனலே

2. மாணிக்க வயிரம் மரகதத்தன் வைடூரிய நீலன் புட்பராகன்
வேணியச் சிறுபிறை வெண்காடன் வேள்வியைத் தடுத்தழி வெண்ணீறன்
பூணிமி சையமர் பொன்மேனி புரிந்தோர்க் கருவுரு புகழ் கழலன்
சேணுயர் வானெடு தீப்பிழம்பன் திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

3. பூஞ்சிற கணிசிரம் பொன்னொளியன் புரியார்க் கருள்தர வடிவெடுத்த
காஞ்சியே கம்பக் கடவுளனே கபடநெ றியார்க்கும் கருணைசெயும்
ஊஞ்சலம் உடுகோள் பால்வெளியன் உயிருணர் வளித்த ஒளிவள்ளல்
தீஞ்சுவைப் பால்தயிர் நெய்யனோன் திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

4. எட்டொடு இரண்டுநல் திசையறிய இயங்கணுச் சிறுமூளை வழங்கிறைவன்
பட்டொளிச் சுடரே பரம்பொருளே பலயுகப் புவிச்சுழல் படைப்பருளே
தட்டலைக் கடல்கரை தாண்டாமல் தடைவிதி நல்கிய தற்பரனே
திட்டுறைத் தில்லைக் காடுகந்த திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

5. ஓர்பெரும் முதுலூழி உருட்டியதில் உருவறு கண்டம் உருவாக்கி
ஊர்நிறைக் குமரியைக் கடல்செய்தே ஒலிகடல் இமயத்தை மலையமைத்துச்
சீர்கடல் வானில் சிதறாமல் தேர்புவி ஈர்ப்பளி தில்லையனே
சேர்முகில் மழையெனப் பொழிதரும் திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

6. நாதமும் பேரொளி நல்லிசையும் நனிவிரை மின்னொளி இருள்வானும்
ஏதெதன் உறவென இயங்குநெறி ஏற்பளித் தியக்கும் ஏகம்பா
ஆததன் நெறிமுறை பிறழாமல் அருளளிய பிழமபே ஆண்டவனே
சீதனத் தெந்தை சிவபெருமான் திருத்துறைப் பூண்டியின்செங்கனலே

7. உப்புமுப் பூநிலம் பாதரசம் ஊருறை மூலிகை வனச்சுரையும்
கொப்பிலை வேர்பிப்பிசின் குங்குலியம் குழைத்தெடு வேதியல் கிளிச்சிறையும்
தப்புகள் இல்லாத தவநெறியும் தந்தருள் புரியும் தற்பரனே
செப்பெழில் கழல்நிழல் சீதனமே திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

8. அறுசுவை உண்டிகள் உடல்தவிர்த்தே ஆறா தாரத்தில் குண்டலியை
மறுநெறி உயிர்மனோன் மணிசேர வாய்ப்பளி மங்கலப் பேரிறையே
இறுதியில் உயிர்பிரி மூவழியும் இறைநின் கழல்சேர் சிரவெடிப்பும்
செறிவருள் தருவினைச் செம்பவளன் திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

9. பிண்டம் பிரியுயிர் பெருவெளியில் பெய்தவி னையொடு பிறப்பேற்க
அண்டச் சுதந்திரம் அடங்குயிர்கள் அமரோன் வான்புவிவந்துறைய
தொண்டர் திருவடி தொழுதவுயிர் சுயம்பே நின்னடி தொழுதுநிற்க
செண்டருள் நல்கிய சிவபெருமான் திருத்துறைப் பூண்டிச் செங்கனலே

10. கஞ்சம லர்மேனி கற்பகனே கதிர்மதி நல்கிய கயிலையனே
மஞ்சுறை வானே வான்கதிரே வையகப் பேரருள் மாமலையே
தஞ்சமென் றடியேன் தாள் பணிந்தேன் தனியுருவில்லாத் தற்பரனே
செஞ்சுடர் திருவே தில்லையனே திருத்துறைப் பூண்டியின் செங்கனலே

-திருச்சிற்றம்பலம்-

## 167. விளக்குடி

**திருவலம்புரநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. விசும்புறை முகிலொடு மிதந்தாடிவீழ்மழை நீரொடு தாவரஞ்சேர்
அசும்பாய் அடிவேர் இலைதழைபூ அனைத்திலும் உயிரூன் விழிசென்றே
உசும்புடல் விந்தணு உரநீராய் உயிராண் பெண்ணதன் உடல்சேர்த்தே
திசுவாய் உயிரென சீர்செய்யும் சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

2. ஓரறி வீரறி வுயிராகி உடல்கொடுத் தடுத்த உடலேகி
கூருடன் மூன்றொடு நாலறிவாய் குவலயம் வானிலும் பறந்தாடி

நீருறை உயிருடல் நிலைமாறி நெடும்பிற விக்கடல் நீந்தவைத்த
சீரறி வளித்தெனை சிவத்துதிசேர் சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

3. ஐந்தறி வுடல்மான் மறியாகி அருந்திரள் அரிமா புலிக்குணவாய்
சைந்தவம் யானையும் மேதியுமாய் செறிபெரும் உடலாய் திரிந்தேகி
நைந்தவன் என்னிலும் உடனாகி நன்மைகள் செய்த நாயகனே
செய்நன்றி உணர்த்திய திருவருளே சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

4. ஆறாம் அறிவுணர் மானிடனாய் அடியேன் எடுபிறப் பெத்தனையோ
தேறா மதியால் சீரழிந்தே செய்தநல் வினையால் மானிடனாய்
வேறோர் உடலில் குடியேறி மிகுபிறப் பால்தவம் தேய்ந்திருந்தே
சேறார் புழுவெனக் கன்பளித்த சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

5. அலியாண் பெண்பிறப் பெத்தனையோ ஆசையும் வேகமும் எத்தனையோ
மேலியரை ஏய்த்து வீணுடலம் வெறியுறை நெறிபிறழ் வெத்தனையோ
நலிந்துந லிமதி நால்விதமாய் நகைப்பிறுப் பால்நலம் நலிந்தேனை
சிலிர்மனம் மாற்றித் தேறவைத்த சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

6. மந்தம தியுடல் மடிந்தேகி மண்ணிடை மீண்டும் வந்துடலம்
குந்தக முதலை போல்வாழ்ந்தே குறைநிறை வினையால் கொழுத்து நின்றேன்
வந்தனை செய்துனை வாழ்த்தாமல் வாழ்ந்ததும் வீழ்ந்ததும் பலபிறப்பே
சிந்தை சிறியனென் றெனைஏற்ற சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

7. விதிவினை மாற்றும் திருநீறை விளங்குறக் காட்டிய விதம் கோடி
புதிர் மதி புரிய புகலுடம்பும் புவனநல் போகமும் புரைதீர
பதிமதி பக்குவம் எனக்கருளி பாரினில் வாழும் பரிவளித்தே
சிதலமு றாமல் காத்தோனே சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

8. திருவிளை யாடலும் திருத்தொண்டர் புராணமும் சிவஞான போதமதும்
அருவுருத்திருவொளி ஆண்டவனே அனைத்தும் அளித்தது நீயானால்
உருகுளப் பூசையும் உயிர்ச் செயலும் உனக்கே நீசெயும் செயலதனால்
செருக்கென் சிறுமையும் எனதலவே சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

9. உதவாக் கரை உயிர் என்றனையும் ஒருபொரு ளாக்கினை கருணையினால்
பதமலர் காட்டிப் பரன்கவியோர் பன்னிரு திருமுறை படிக்கவைத்தீர்
விதவிதக் கூட்டுறை பிறப்பகற்றி விண்ணக வாழ்வுறும் நெறிகாட்டி
சிதசிவப் பூசைசெய் தீக்கைதந்த சித்திநல் விளக்குடிச் செம்பொருளே

10. எனதொடு நானெனும் அகந்தையினேன் இதுவன்றி மற்றவை நினதருளே
மனதுறை நினைவொடு அறிவனைத்தும் மண்ணுயிர்க்கருளும் பெருங்கருணை
புனைசுகம் போகமும் புரிமதியும் புரைதீர் உவர்மண் போன்றளித்த
சினமழி சிவமே திருவருளே சித்திநல் விளக்குடிச் செம்பொருளே
–திருச்சிற்றம்பலம்–

## 168. சேகல் - வட்டக்குடி

**வர்த்மானேசுவரன்** **கலிவிருத்தம்**

1. தங்கும்பெ ருநிதி தந்தருள் வானவன்
அங்கசன் கவின்வடி வருவுரு வாக்கிய
செங்கழல் அம்பலன் திருவெண் காடன்
கொங்கலர் வட்டக்கு டியுறை சேகலரே

2. குளமரை மத்தமும் கூவிளம் சூடிய
அளகே சனுக்கும் அருமுந் நிதியளி
இளங்கதிர் பிறைமுடி ஏகம்பத் தீசன்
கொளுநிதி வட்டக் குடியுறை சேகலரே

3. போதலர் சாந்தினி பொன்னுறை அம்பலன்
நாதத்தி ருமுறை ஞானநல் பேரொளி
ஓதும் றைஉரை ஒருமா வாக்கியன்
கூதளம் வட்டக் குடியுறை சேகலரே

4. சிந்தனை தாண்டிய செம்பொன் சோதியன்
வந்தனை அடியவர் வருபிறப் பழித்தருள்
செந்தழல் மூர்த்தி திருவெண்ணை ஊரன்
குந்தன வட்டக் குடியுறை சேகலரே

5. இக்கரக் கல்வியை ஈந்தரு ளுமிறை
மக்களும் மற்றுள்ள மண்ணுள் உயிரொடு
பக்குவத் துயிர்க்குப் பதநிழல் பெறவருள்
குக்குடி வட்டக் குடியுறை சேகலரே

6. செம்முத்துச் சிதறொளி செஞ்சடை அண்ணல்
இம்மை மறுமைகள் ஈந்தநல் உடலளி
அம்பல நாயகன் ஆலால சுந்தரன்
கும்பள வட்டக் குடியுறை சேகலரே

7. மாதுளை மணிக்கவின் மாணிக்கத் தாரணி
சாதுக்கள் ஆகிட ஏதுசெய் சற்குணன்
தூதுளை குறிஞ்சான் தொகுமூ லிகையருள்
கூதளம் வட்டக் குடியுறை சேகலரே

8. மேருவில் தாங்கிய மெல்லிய பூவிரல்
தாருகை முனிவோர் தவறினைத் திருத்திய
பேரருள் நாயகன் பிங்கலச் செந்தீ
சூரியர் வட்டக குடியுறை சேகலரே

9. திருவடி நிழலில் சீருயிர் காக்கும்
ஒருகரக் கமலத்தில் உலகப்போ கந்தரும்
அருவுரு அண்ணல் ஆனந்தக் கூத்தன்
குருவருள் வட்டக் குடியுறை சேகலரே

10. மாசிலா மணிநல் மாணிக்க மாமலை
காசளித தேதொண்டர் கடும்பஞ் சந்தீர்
தேசில் சிறிய நாரைக்கும் வானளி
கோசிகை வட்டக் குடியுறை சேகலரே
–திருச்சிற்றம்பலம்–

## 169. மருத்துவக்குடி

**ஐராவதேசுவரர்** **கலிவிருத்தம்** **அபிராமி**

1. இந்திரன் குழுவொடு ஐராவதமும் இணைகழல் தொழுதேகி
தந்துயர் நீங்குற சந்திரன் சாபமும் தீர்வுகண்டே
வந்தனை செய்மகிழ் வாழ்விளம் பூமியர் வானவரும்
மந்திரத் திருக்கழல் வணங்கலால் மருத்ததுவக் குடியழகே

2. பாரதப் போரில் பலிகொள் பார்த்தனும் சாரதியும்
பேரலம் நீங்குற பிங்கலக் கொன்றையும் தூவிமகிழ்
பூரத ரதியவள் புலம்புறக் காமனை எரித்தபிரான்
மாரதத் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

3. பூமியின் பெருஞ்சுமைப் பொதித்துயர் ஏந்திய ஆதிசேடன்
ஓமினி மந்திரம் உரைத்துரு கித்துதி உயர்கோயில்
நேமியத் திருமால் நிறைமறைநான்முகன் நெடுவீழ்ந்தே
மாமிளிர் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

4. பலப்பல மூலிகை மருந்தொடு பதிணெண் சித்தர்களும்
நலநூல் முந்நூறு நல்கிய குருமுனி நனிபணிந்தே
உலகினர் வானவர் உத்தம விரதியர் உயிர்யாவும்
மலமறத் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

5. திருவா வடுதுறை செல்சிவத் திருமுறைக் குரவோரும்
பெருமா மந்திர பிறமுடல் மூலரின் மரபோரும்

பொருவா திருநாளைப் போவார் தில்லைசெல் நெறியிடையே
மருகார் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

6. சேந்தன் வெண் காடரும் சேர்பத் திரகிரி சிவந்தேடி
போந்த வழியிடை பொன்மணிக் கழல்தொழு துவந்ததலம்
பூந்தளிர் மங்கையர் பொன்மணிச் சதங்கை மழலையரும்
மாந்தளிர்த் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

7. நிலவொடு பரிதியும் நீள்வா னுடுக்களும் நெறிமாறா
அலைகடல் தென்றலும் ஆழ்நிலத் தீக்குழம்பளித்தபிரான்
நலமனப் பழமடி யாரொடு ஞானியர் மறையோதி
மலரொடு திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

8. செந்தழல் மூர்த்தி திரிபுரம் எரித்த சிவக்கொழுந்தின்
சந்தக்க வித்தொண்டர் சுந்தர மூர்த்தி தனிநின்றும்
அந்தர விரதியர் அரம்பெயர் நாகரும் ஒருங்காகி
மந்திரத் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

9. கூனிய பிறையொடு தேனிதழ் கொன்றையும் சூடெழிலன்
மேனியா பரணம் மிகுபொறி நாகமும் உருத்தரமே
ஞானியர் நாவலர் நாட்டினர் காட்டினர் நலிந்தோரும்
வானியல் திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே

10. ஏழிசை நாயகன் ஏழேழ் புவியோன் எந்தந்தை
கூழிசைந் துண்டொரு குளிர்மனத் தொண்டருக் கருளியகோன்
யாழிசைக் கருளிய ஞாலநீள் பேரொளி நமக்கருள
வாழிசைத திருக்கழல் வணங்கலால் மருத்துவக் குடியழகே
–திருச்சிற்றம்பலம்–

## 170. திருப்புவனம்

**கம்பரேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் அறம்வளர்த்தநாயகி**

1. கந்தம லரணித் கிண்கிணிச் சதங்கை யன்கற்ப கத்திருமேனி
வந்துவ ணங்கிய வானவர் தானவர் வரகுணன் பிரகலாதன்
இந்திர னாதியர் ஏழ்புவி உயிர்நடுக் கேகுறவாழ் வளித்தோன்
செந்தழல் அருவுருதிருப்புவ னத்துறை சிவக் கொழுந் தீசுரனே

2. மஞ்சளங் கொன்றையன் நஞ்சுறை கண்டத்தன் மஞ்சும ணிக்கழலன்
நெஞ்சன லரக்கரும் தஞ்சமென் றாழ்தவம் வஞ்சனை ஏற்றபிரான்
கொஞ்சும ழலையர் அஞ்சன வண்ணனும் கும்பிட வரமளித்த
செஞ்சிலம் புலம்படி திருப்பு வனத்துறை சிவக்கொழுந் தீச்சுரனே

3. சங்கிசை மங்கலன் தங்கத் திருக்கரன் சந்திரப் பிறைமுடியன்
கொங்கும ரையயன் கோட்டியாழ் நாரதன் குஞ்சரப் பாண்டியரும்
இங்கித மாமலர் மந்திரம் கூறியும் இறைஞ்ச வரமளித்த
செங்கதிர் மிளிர்கழல் திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீச்சரனே

4. வெண்பொடி பூசிய பொன்னொளிர் மேனியன் வெந்தழ லருவுருவன்
விண்ணுயர் ஆதியன் பண்ணி மாதவன் மின்னலஞ் சடைமுடியன்
மண்ணினர் மாந்ததா வன்னிஎ ருக்கொடு வணங்குற மகிழ்வளித்த
திண்ணிய திருவடி திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீச்சுரனே

5. மும்மலம் தீர்விழி மங்கலம் பேரொளி மும்மணித் திரெளெழிலன்
அம்பலக் கூத்தினில் அந்தரப் புவியேழ் அழகுசெய் பேரிறைவன்
தம்பிரான் சாமிகள் தருமையா தீனங்கள் சற்குரு பூசைசெய்யும்
செம்மலர் புனைகழல் திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீசரனே

6. வன்னிகாந் தள்துளசி வளர்நந் தியமலர் மருகொடு சாமந்தி
பொன்னுறை மேனியில் புனைந்தடி யார்தொழும் புதுமின் அலங்காரன்
அன்னிய மண்ணெனும் அண்ணலின் படைப்பினர் அடிபணிந் தருளேந்தும்
தென்னிலஞ் செஞ்சுடர் திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீசுரனே

7. கங்கணச் சூரியன்களிமதி வெஞ்சாபம் கஞ்சம ழித்தபிரான்
பொங்கழல் எரிமலை வெண்பொடி அயம்மீயம் புதுப்புது கனிமமருள்
குங்கும வனிதையர் மங்கல நாண்பெற கும்பிடத் தந்தருளும்
செங்கதிர்ச் சிலம்பணி திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீசுரனே

8. மஞ்சறை சிறுபிறை மிஞ்சொளி விண்மீண் வதிவுறு செஞ்சடையன்
இஞ்சிய ரக்களும் எரிஅரி மால்புவிக் கினிதளி சரபேசன்
தஞ்சமென் றடிதொழும் சஞ்சலப் பிறவிகள் தங்கவாழ் வருள்வள்ளல்
சிஞ்சித மணிக்கழல் திருபுவனத் துறை சிவக்கொழுந் தீசரனே

9. வெண்பொடிப் பொன்னுதல் மின்னிடித் துடியிசை வெங்கதிர்த் திருக்கரத்தன்
பண்ணிசைத் திருமுறை பைந்தமிழச் சந்தத்தில் பயில்மகிழ் திருக்கூத்தன்
எண்ணிலா உருவொடு ஏழேழ் புவிசெய் எந்தந்தை எம்பெருமான்
திண்ணியன் முழுமுதல் திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீசுரனே

10. தந்தத்தி மிர்கரி அந்தரத தறுவுற அதளினை உடுத்தியகோன்
வந்தித்தர் நிந்தித்தர் மண்ணுறை யாவர்க்கும் வாழ்வருள் மெய்ஞானி
மந்தனென் சிந்தையை வந்திக்கச் சொந்தங்கொள் எந்தந்தை என்னுயிரோன்
செந்தழல் பூங்கழல் திருப்புவ னத்துறை சிவக்கொழுந் தீசுரனே

–திருச்சிற்றம்பலம்–

## திருபுவனம்

**கம்பகரேசுவரர்** **கலிவிருத்தம்** **அறம்வளர்த்த நாயகி**

1. இந்தார் பிறையணி எரிகரத் தெந்தை ஏகம்பன்
மந்தா தாதினம் மணமலர் பூசைசெய் வான்சுடரன்
வந்தார் சென்றார் வானவர் தானவர்க் கின்னமுதே
சிந்தா மணிக்கழல் திருபுவனத்திரு வாசகனே

2. புன்னகை யில் புவிப் புதுமைகள் புரிதழல் பொன்னீசன்
அன்னநல் வாகனன் ஆசுறை சிரமறுத் தன்பளித்தோன்
பொன்னனை அவர்க்கும் புரிரச வாதஞ்செம் பொன்னளித்த
சின்முத்திரையன் திருப்புவனத்திரு வாசகனே

3. நீதிநல் இறைவன் நெஞ்சகக் கோயிலன் நெடுஞ்சடையன்
ஆதியும் அந்தமும் அளவைகள் அறிவொளி அளிக்கும் மண்ணல்
ஞாதிருப் பூரணன் நடனசிகாமணி நான்மறையன்
தீதியல் அழிப்பனல் திருப்புவனத்திரு வாசகனே

4. நீலமிடறெழில் நெற்றிக் கண் நாயகன் நேசவள்ளல்
பாலகன் பசியற பாற்கடல் நல்கிய பரம்பொருளன்
மாலரி மாவுடல் மடித்ததைப் பொடிபட வதைத்தழித்த
சீலத்திருவடி திருப்புவனத்திரு வாசகனே

5. நரவாகண்றகும் நவநிதி அளித்த ஞானக்கடல்
பிரமா திதேவர் பிரசம லர்ப்பூசை செய்துவந்த
தரமா மழுவுடை கங்கணமூர்த்தி காசியண்ணல்
சிரமா மதிப்பிறை திருப்புவனத்திரு வாசகனே

6. எருதொடு அரிமா இருங்கரி வாகனன் ஈசாளன்
மருகலர் தளிரணி மாணிக்க நாயகன் வார்சடையன்
பருவுடல் சூக்குமம் பலமென் உடலுயிர்க் களிக்குமிறை
திருமகள் தினம் பணி திருப்புவனத்திரு வாசகனே

7. கிம்புருடர் வான கேளிரில் விரதியர் கிளர்நாமன்
தும்புரு நாரதர் தூயநல் சித்துகள் பூசைசெய்யும்
நம்பன் நல் யாழ் கரன் ஞானத்திருவள்ளல் நாதாந்தன்
செம்பவளக் கழல் திருப்புவனத்திரு வாசகனே

8. ஒப்புமை இல்லா ஊர்த்துவத் தாண்டவன் உலகீசன்
அப்பரோ டறுபதின் மூவர்க்கும் வானளி ஆனந்தன்

முப்புரமூவரும் முனிவரும் இருடியர் இறைஞ்சிநிற்கும்
செப்பெழில் மேனியன் திருப்புவ னத்திரு வாசகனே

9. வித்தகப் பேரொளி விண்பகிரண்டன் வேணியண்ணல்
சித்தமும் சிந்தையும் சேர்புருடன் கலைத் தத்துவமும்
அத்தனெம் குருவாய் அனைத்துயிர்க் களிக்கும் ஆகாயன்
தித்திக்குமருள் தரும் திருப்புவனத்திரு வாககனே

10. கள்ளிவன் காட்டிடை கபாலக் கூத்தன் கங்காளன்
வெள்ளியம் பலத்திடை மெல்லிசைச் சதங்கையன் வேதமலை
தெள்ளிய திருவருள் திருப்புவனத்திரு வாசகனே
–திருச்சிற்றம்பலம்–

## 171. விளத்தொட்டி

**பிரம்மபுரீசுவரர் கலிவிருத்தம் இட்சுரச நாயகி**

1. மணிச்சரக்கொன்றை மாமரை வில்வமும்
அணிதிகழ் மேனி அருமறைக் கூத்தன்
துணிசிரத் தந்தகன் தொழுதழக் கணமெனப்
பணிதரும் விளத்தொட்டிப் பரம்பொருட் சோதியே

2. எருக்கலர் காந்தளும் இளந்தளிர் வன்னியும்
செருக்கயர் கயமுகன் சிரமழி செஞ்சுடர்
திருந்திய மானிடம் திருக்கழல் நிழல்பெற
பரிவருள் விளத்தொட்டிப் பரம்பொருட் சோதியே

3. மறைஇசைத் துடிகரம் மாவிளந் தளிர்புனை
கறைமிட றெழிற்சுடர் கணகக் கதிர்கழல்
முறைமனுடச் சோழற்கும் முத்திசெய் தருள்நிறை
பறிமலி விளத்தொட்டிப் பரம்பொருள் சோதியே

4. தனிமல ரரளிநல் சந்தனச் சாந்தணி
இனிதருள் தருசுடர் வழ்புவிப் பேரிறை
நுனிப்புல் புழுவென் நுவல்மொழி கேட்டருள்
பனிமலர் விளத்தொட்டிப் பரம்பொருள் சோதியே

5. எதிர்கரி அதளுரி ஏகம்பத் திருச்சுடர்
பொதிகையின் குறுமுனிக் கருளிய சோமுனி
அதிர்கழல்திரிசடை அம்பலக் கூத்தன்
பதிமலர் விளத்தொட்டிப் பரம்பொருட் சோதியே

6. கோமே தகமணி கொக்கிற கோடணி
நாமா மகளொடு நான்முக னயற்கருள்
பூமரங் சிகைமகிழ் புண்ணிய மூர்த்தி
பாமதி விளத்தொட்டடிப் பரம்பொருட் சோதியே

7. அக்கம றுகொடு ஆயிரம் இதழ்மரை
செக்கர்வின் அந்தியின் திருவடி வானவன்
எக்களத் திசையுறை ஏகத் திருநடம்
பக்குவர் விளத்தொட்டிப் பரம்பொருட்சோதியே

8. பொன்னார் கொன்றையன் பொடிவெண் ணீறணி
நன்னார் புரமொரி நவமணித் திருவிழி
முன்னூழ் இன்னூழ் முகிழ்தெழு பின்னூழ்
பன்னும் விளத்தொட்டிப் பரம்பொருட்சோதியே

9. காந்தளந் திருமுடி கற்பகச் சுடர்மலை
பூந்தளிர் மேனியன் புன்னகைப் பேரொளி
மாந்துறைக்கோயிலன்மாணிக்கருள் முனி
பாந்தநல் விளத்தொட்டி பரம்பொருட் சோதியே

10. ஊனுடல் உயிருரு உயர்வாழ் வளியொளி
ஏனலென் குறைதீர் ஏகம்ப மூர்த்தி
மானுறைச் சுடர்கரன் வானவர் மாமணி
பானுநல் விளத்தொட்டிப் பரம்பொருட் சோதியே
–திருச்சிற்றம்பலம்–

## 172. திருலோகி

**சுந்தரேசுவரர்** **தரவு கொச்சக் கலிப்பா** **அகிலாண்டேசுவரி**

1. மானார் மணிக்கரத்தன் மங்கலச் செந்தூரன்
கூனார் பிறைமுடியன் கொன்றைந் தாரணியன்
கானார் திருக்கூத்தன் கயிலையம் பலவாணன்
தேனார் பெருங்கழனித் திருலோகிச் சுந்தரமே

2. காதினில் தொடொளிரும் கரமழுச் சுடர்சூலன்
ஓதிய நமச்சிவாயத் துள்ளொளிர் தணல் மலையன்
வேதியல் வனச் சித்தோர் மேலொளி ஆக்கினையன்
தீதிலாப் பெருங்கழனித் திருலோகிச் சுந்தரமே

3. புள்ளியின் புள்ளியதில் புவனமேழ் படைப்பருளன்
கள்ளியில் முத்தளித்த கருணைநல் மாதேவன்

வெள்ளியம்பலத்தாடும் வெங்கதிர்ச் சுடர்மேனி
தெள்ளியின் உரிபோர்த்த திருலோகிச் சுந்தரமே

4. தொடர்நிலக் கோள்பிரித்துத் தோன்றுமேழ் கடல்படைத்
சுடர்மணி நீலகண்டன் தொகையடி யார்க்கருளி
இடர்களை ஏகம்பன் எகிப்திலும் தமிழ்வளர்த்த
திடமைநல் மலர்சூடும் திருலோகிச் சுந்தரமே

5. சங்கீதத் தமிழ்மறையன் சாந்தமருள் தளிக்குளத்தன்
கங்காள நெருப்பொளியன் கைலைமலைக் கொலுவீசன்
அங்கீதத் துடியேந்தும் அலங்கா ரச்சடையன்
தெங்கீயும் நீராடும் திருலோகிச் சுந்தரமே

6. அறமிலா வேள்வியழி ஆனந்தத் திருக்கூத்தன்
உறவிலார்புமெரிக்கும் ஒளிப்பிழம் பருவுருவன்
மறமிலா விரதியரும் வழிபடும் வான்முதல்வன்
தெறவிலாச் சடர்கழலன் திருலோகிச் சுந்தரமே

7. நேசமே நிறைந்தொளிரும் நெடுஞ்சடைக் குருவானோன்
வாசமே பத்தருள்ளம் வணங்குவர்க் கருகுறவன்
ஈசனே ஏகம்பன் ஏழ்புவி படைப்பொளியன்
தேசமே தொழுதுவக்கும் திருலோகிச் சுந்தரமே

8. தொண்டரே வடித்துருக தோன்றியதில் நின்றபிரான்
அண்டமே அளித்தவள்ளல் அருவமே அனலீசன்
பிண்டமதில் அண்டமுற பிணைத்தமணிச் சங்காரன்
செண்டலர் நறுமேனித் திருலோகிச் சுந்தரமே

9. ஞானமே நற்றமிழில் நான்குமறை ஓதுமுனி
வானமே பூமிநீரும் வளர்தீ வளியானோன்
தானமே ஏழ்புவியும் தந்தவுயிர் பல்கோடி
தேனமே தீய்த்தபிரான் திருலோகிச் சுந்தரமே

10. வடிவிலாவான் தழலன் வணங்குவர் மனத்துருவன்
முடிவிலாக் காலவெளி மூமுக் கோடிவிண்மீன்
மடிவிலாப் பேராற்றல் வாழ்புவி மாதவத்தன்
சொடிமலர்ப் பூங்கோயில் தருலோகிச் சுந்தரமே

–திருச்சிற்றம்பலம்–

## 173. திருமாந்துறை

**அட்சநாதர்** **கலிவிருத்தம்** **போதநாயகி**

1. நூலார் புகழ் துதிமீச்சுடர் நுண்ணூர்அணு ஓங்கல்
ஆலார்நிழல் அம்ர்ந்தேதமிழ் அருளார் மொழி வகுத்த
காலச்சுழல் முதலுழிமுன் காடாள்மனிதர்க் களித்தோய்
சேலார்வயல் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

2. ஊனார்புகை செய்வேள்வியை ஒழித்தேமகிழ் ஒளியே
வானார்புகைக் கொடிகாட்டியே மன்னோர் உயிர்பிரிக்கும்
ஆனூர்தியில் அமர்கோனிறை அருள்தூவிய செந்தீ
தேனூர் வயல் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

3. வயிரம்கரிமணியோவியம் அயமோதுரு மண்ணே
பயிரோபொடி பவளங்கடி பாரோருணர் மதிசெய்
எயிலார்பனி மலைமீதமர் எளியோர்க்கருள் விணணோர்
செயிர் தீர்ஒளித்திருமாந்துறைச் செங்கோயிலின் சிவமே

4. அணுவேபிளந் திடிகோடிய ஆற்றல்செயும் திறமே
நிணநீர்எடுத் தயிரேசெயும் நிலையாஇயல் செயலும்
குணமேஎரித் துயிர்வாழ்புவிக் கொடிதேபொறுத் தருளும்
திணநீர்வயல் திருமாந்துறைச் செங்கோயிலின் சிவமே

5. நெஞ்சால்நினை உருக்கோடிமா னிடர்செய்கவின் சிலையில்
அஞ்சேலென அதில்தோன்றிநல் அருளேதரும் அண்ணால்
மஞ்சேயுறை நெருப்பேஇடி வளர்த்தேபுவிக் கருள்செய்
செஞ்சால்வயல் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

6. நாதந்தரும் நீராலுயிர் நல்கிப்புவி கவின்செய்
போதம்வளர் மொழியீந்தருள் புரிந்தேயிசை வளர்க்கும்
ஏதந்தவிர்த் தினிதேவழங் கீசன் அமு தழகன்
சீதப்புனல் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

7. விஞ்ஞானமும் மெய்ஞானமும் விதைத்தேதமிழ் வளர்த்தோன்
அஞ்ஞானமும் அவநீதியும் அழிப்பேகடல் ஊழி
நஞ்சார்புனல் தரித்தே உயிர்நலநீரளித் துவந்தோன்
செஞ்சாலியத் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

8. யாக்கைகுயிர் ஞானந்தரும் ஞாலச்சுடர் தெய்வம்
வாக்குப்பிழை அயனின் சிரம் வதிர்ந்தேயருள் தழலன்
தீக்கைக்கொடை துறைசைக்குரு தினமும் தொழு துருகும்
சேக்கைப் புனல் திருமனந்துறை செங்கோயிலின் சிவமே

9. கூற்றைத்தடிந் திளையோனுயிர் கொடுத்தேமகிழ் வள்ளல்
காற்றைத் திறந்தூழிப்புவி கடைந்தேயழி கடவுள்
சீற்றப்பசி தீர்க்கும்சிவ சித்தாந்தநர் துதிக்கும்
சேற்றுப்புனல் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

10. அவுணோர்புரம் மூன்றும் பொடித் தருளார்புவியளித்தே
நவிவேடற்கும் நாரைக்கருள் நயந்தே மகிழ் இறைவன்
மவுனப்புகழ் துறைசைக்குரு மண்ணோர்தொழு துவக்கும்
திவமேதரும் திருமாந்துறை செங்கோயிலின் சிவமே

–திருச்சிற்றம்பலம்–

## திருமாந்துறை

**அட்சநாதர்** **கலிவிருத்தம்** **போகநாயகி**

1. கரம்மழு மிளிரொளி கசிகாலாமை ஓடணிந்த
புரமெரி நாயகன் புவனங்கள் ஆயிரம் புனைஇறைவன்
உரமலி இராவணண் உறுகிரம் நெருக்கிய உருவமில்லான்
சிரம்தலை யுறத்துதிப் பார்க்கருள் திருமாந் துறைப்பரனே

2. அக்கமும் கேழல்பல் ஆவிரை நொச்சியும் அணிந்தசுடர்
சிக்கலன் அந்தகண் செறிவுடலெரித்த திரிசடையன்
பக்குவம் உயிருற பன்னிரு திருமுறைப் பதிகந்தந்த
செக்கர்வின் மேனியன் திருவருள் திருமாந்துரைப்பரனே

3. விஞ்சையன் மஞ்சுறை வெள்ளியங் கிரிக்குகை விழுப்பொருளனன்
அஞ்சிறை நாரைமென்காரிக்கும் ஆகாயம் அளித்தவள்ளல்
குஞ்சித பாதன் கோணலம் பிறையன் குறைவில்லி
செஞ்செயி வாரணத் துரிபுனை திருமாந் துறைப்பரனே

4. கங்கைநல் காவிரி கோதாவரிக்கு மதைநதியன்
குங்குமத் திலகன் குடந்தை தாராசுரன் குணக்குன்றன்
அங்கசன் உடலழித் தருவுரு வாக்கிய அனலீசன்
செங்கதிர் திங்களில் பிறையணி திருமாந்துறைப்பரனே

5. கட்டிய கோயிலின் கருவறை கோபுரன் கனகமலை
அட்டமாசித்தியும் அறிவொளி ஆனந்தம் அளிக்குமிறை
பெட்டகத் தமர்ந்தே உமாபதித் தேவர்க்கும் பெருமைதந்த
சிட்டன்சி வலோகன் செறிமலர் திருமாந் துறைப்பரனே

6. எத்திசை நோக்கினும் அத்திசை முகமலர் காட்டுமண்ணல்
பத்தர்க்கென் றாயிரம் பார்பகிரண்டமும் படைத்தபிரான்
வித்தக மூலர்க்கும் மென்தமிழ் வேதம் விதந்தளித்
சித்தன்செய் கோடன் சீர்மலி திருமாந் துறைப்பரனே

7. சந்தனம் புனககில் சவ்வாதுமரைத் தளிர்கழலன்
மந்திவடிவை சம்பந்த ராக்கிய மாதேவன்
இந்திர போகமும் இறுதியில் முத்தியும் ஈந்தொளிரும்
சிந்தையுள் கோயிலன் தீபன் திருமாந் துறைப்பரனே

8. விண்ணியல் மண்ணியல் வேதவிதியியல் விளக்குமிறை
கண்ணளி கண்ணப்பர் கனிவுரை கால்மிதி கனிந்தேற்ற
பண்ணிய இருவினைப் பதமறிந் தருள்தரும் பரஞ்சோதி
திண்ணியன் பொன்னொளி திருவருள் திருமாந் துறைப்பரனே

9. மானத் நால்நெறி வழிபாடியற்றி வானகம்சேர்
ஞானமும் கல்வியும் ஞாதிருக் களிக்கும் ஞானவள்ளல்
வானவர் தானவர் மண்ணினர்மற்றோர் வணங்கிமகிழ்
தேனவன் ஐந்தொழில் செய்தழல் திருமாந்துறைப்பரனே

10. முப்புரம் எரித்த மோகனப் புன்னகை மோகமிலி
அப்புறம் இப்புறம் அப்பாலைக் கப்பாலும் அடர்ந்தொளிரும்
செப்புறு மேனியன் திருவை யாறினன் சிவலோகன்
திப்பிய னாதியன் செங்கழல் திருமாந் துறைப்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 174. அத்திப்பாக்கம் – கீழக் காட்டூர்

**வச்சிரத்தம்பேசுவரர்** **கலிவிருத்தம்**

1. இருநிறப் பொறிவரி எழுவிட நாகம் புரள்மேனி
தருமுகில் கொடையருள் தவமணி ஆருர்ச் சங்கீதன்
அருமறை உறைஒலி அறிவுணர் செயல்மிகு ஆதியரன்
கருமலர் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

2. குளிரொளிச் சந்திரன் கொடுங்கனல் சூரியன் குறைதீர்த்த
வெளிவளர் பெருந்தீ விண்ணேழ் புவியோர் வீழ்ந்துதுதி
தெளிமதி இகபர சீரார் வாழ்வருள் திருவருளன்
களிநடம் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

3. மெலிவலி தவமுனி முகுவலி இராவணர் வினைதுயர்தீர்
புலியதன் உடுத்திய பொன்மலர் மேனியப் பூங்கழலன்
அலியன் பெண்ணென அவரவர் வினைக்குடல் அருளியகோன்
கலிங்கநல் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

4. தனிமரை சரக்கொன்றை சங்கலர் பாதிரித் தாரணிந்த
புனிதப்பெ ருமலை பொன்வண்ண வெளித்தணல் போரானோன்
இனிமனம் இயங்குடல் இருவினை தருமிறைத் தாராளன்
கனிவகை கீழக் காட்டூர் நங்களின் காவலனே

5. அடிமுடி அரியயன் அறியாப் பெருந்தழல் ஆகாயன்
படிமிசை காசொடு பிசஉண வளிக்கும் பரம்பொருளன்
வடிவெழில் சுந்தரர் திருத்தொண்டர் தொகைதர பிறப்பபளித்த
கடிமனைக் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

6. அணிமணி யால்தினம் அவனியர் பூசைசெய் ஆரமுதன்
துணிவுடை இராவணன் தொகுமலை தூக்கவே சிரமிதித்தோன்
பணியுநர் இருமலம் பழிப்பிறப் பறுத்தருள் பரஞ்சோதி
கணிணியன் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

7. குவியொளிப் பேரண்ட புவியனைத் திலும்உயிர்க் குலம்வளர்க்கும்
செவியழில் தோடணி திருவருள் மழுக்கரன் சிங்காரன்
தவிதவத் தொண்டரின் தமணிய மனத்துறை சங்காரன்
கவிமுகில் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

8. எதிர்கதிர் இல்லா ஏழ்புவி தாண்டிய எரிசுடரன்
அதிநடம் புரிகழல் அருவுரு கருவறை அமரொளியன்
சதிபதி விதிவினை தகுதரம் உறவுடல் சகலருக்கும்
சகயருள் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

9. விழிமலர் பூசையர் வெறிசிர நான்முகன் விதிமாற்றி
பழிபவ மறுத்த பாற்கடல் அதிபதி பரஞ்சோதி
இழிவறுத் துயிர்ககருள் இன்னருள் வேதியன் ஏகம்பன்
கழிமுகக் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

10. தினகரச் செஞ்சுடர் திரையலைக் கருணைசெய் சீர்மகுடன்
பினகவில் பிங்கலன் பிரிவில் திருவருள் பேரிசையன்
கனகாதியர்க்கும் தவமதி நான்மறை தந்துவந்த
சனகநல் கீழக் காட்டூர் நங்களின் காவலனே

–திருச்சிற்றம்பலம்–

## 175. கதிராமங்கலம்

**காளத்திசுவரர்** **கலிவிருத்தம்** **ஞானாம்பிகை**

1. திரைகட லடக்கிய செஞ்சூலன் தேவர்கள் பூசைசெய் திருவமுதன்
புரைகட றந்தணர் புரைதீர்த்த போகமெல் லாந்தரும் புரிசடையன்
அரையர வம்புனை அறிவுருவன் ஆலகாடமுண்ட அனாதியன்
மரைமலர்க் கதிரா மங்கலத்தின் மாணிக்கப் பேரொளிவானவனே

2. விழிமலர் துவரி வெற்றயுற வெஞ்சுடராழியை வழங்கிறைவன்
பழிபுனை அந்தணன் பவமறவே பணிவேடனுக்கும் பரிவளித்த
எழில் மழுக்கரத்தான் ஈசானன் எண் குணன் மந்திரன் ஏதானோன்
வழிநெல் கதிரா மங்கலத்தின் வையகத்துயிர்குடல் வழங்கரனே

3. நிலவதன் மறுபுறம் நிலமறியா நிலைச்சுழலமைத்த நெடும்பொறியன்
உலவுறும் புகைக்கொடி ஊறுசெய்யாதுருட்டும் பொறிநெறி புகுத்தியகோன்
சிலந்திநல்யானைக்கும் சீரரசும் திருவானளித்த சிவலோகன்
மலர்வயல் கதிரா மங்கலத்தின் மழுக்கர மாமணி வானவனே

4. ஒளிப்பிறை சூடிய ஓங்காரன் உலகுயிர் கெல்லாம் ஒருதாயன்
களியளி சேந்தார்க்கும் ககனமளி கங்கணச் சூரிய கிரகணத்தன்
தெளிசிலைக் கோபுர விமாணன் சிதம்பரப் பெருவெளி சீரணுவன்
வளிஇளங் கதிரா மங்கலத்தின் மானிட வரலாறுரையரனே

5. கனகத் தாளம் காழியர்க்கும் கட்டமுதப்பர்க்கும் கனிந்தளித்த
பினக பாணியன் போக மளிபெண்ணான் அலியலாப் பெருந்தகையன்
தினகரன் திங்களும் பூசைசெய்யும் திருவாலங்காடன் திருநீறன்
மனக்கவின் கதிராமங்கலத்தன் மாணிக்கம் விலைபகர் வானவனே

6. சிறுவினைப் பொன்னனை யாரவர்க்கும் செம்பொன் ராசவாதம் செய்தபிரான்
அறுகெழிலமரைபாதிரி அணியும் அம்பொன் னம்பல அற்புதன்
தறுகண இராவணர் சிரம்மீதித்த சரிவெழில் வெள்ளியங்கிரிமலையன்
மறுகெழில் கதிரா மங்கலத்தின் மாதவ மதியளி வானவனே

7. துதிசெய் நாரைக்கும் வானளித்த தொகுகடல் ஏழளிசுயதேவன்
பதிபசு பாசப் பொருளுணர்த்தி பாரிடைத் தவம்வளர் பாசுதன்
மதிவிதைக் கருவினில் வளரவைத்தே மன்னுயிர் மலவினை ஒடுக்கிறைவன்
வதிபுனல் கதிரா மங்கலத்தின் மாசறு மருத்துவன் வானவனே

8. எதிர்வரும் ஊழியில் இருதீவாய் இந்நிலம் மாற்றும் ஏகம்பன்
முதிர்நில நாடனன் முக்கண்ணன் மோகநு காச்சிஒன்றில்லாதான்
புதியனென் துதிமகிழ் பொன்னாரன் பேகாமெல் லாந்தரும் பூங்கழலன்
மதில்மனைக் கதிரா மங்கலத்தின் மருள்தீர் வைத்தியன் வானவனே

9. அரியஅயன் மானிடத் துதிஏற்றே அறுபதின் நான்கு கலைவளர்க்கும்
பரிவருள் பசுபதி பகலிரவன் பக்குவ உயிருடல் பதியனலன்
துரிசனென் துதிமகிழ் சுடர்க்கோலன் தூயநல் மாயை தொகுதலைவன்
வரியிசைக் கதிரா மங்கலத்தின் மாணிக்கப் பேரொளி வானவனே

10. குஞ்சரத் துரியணி கோலவண்ணன் கூடா நட்பழி கோமேதன்
வஞ்சமொ ழியயன் சிரமறுத்தே வளர்கலை மகளுக்கும் மாண்பளித்தோன்
செஞ்சடைச் சீர்மதித் திருவருளன் தேரா உயிரையும் சிவமாக்கும்
மஞ்செழில் கதிரா மங்கலத்தின் வரமருள் கடவுள் வானவனே

–திருச்சிற்றம்பலம்–

## 176. நரசிங்கம்பேட்டை

**சுயம்புநாதர்** **அறுசீர்ஆசிரிய விருத்தம்**

1. பற்றிய பாசமும் பாவமதும் பாதகத் தோரின் பல்லுறவும்
கற்றமா பொய்களின் கலையறிந்தேன் கலியுகவாழ்வின் காதலுடன்
பெற்றவை பெருந்தீ என்றறியேன் பேதையேன் வாழ்வினை மாற்றிடுவீர்
நற்றமிழ் வேதமெய் நாவலரின் நரசிங்கம்பேட்டை நாயகனே

2. புத்தம்பு துச்சுகம் போதைநெறி பூவையர் சூதுபொய்ப் போர்க்குணமும்
எத்திவாழ் வியற்றும் ஏதமுடன் ஏழையர் பொருள்கவர்இன்னலுடன்
பித்தராய் உழன்றே பேதலிப்போர் பெருந்துயர் மாற்றியருள்புரிவீர்
நத்திசை நயக்கும் நல்லோர்வாழ் நரசிங்கம்பேட்டை நாயகனே

3. பொக்கெனப் போகுயிர் பூதலத்தே பொன்பொரு ளீட்டிய பூதங்களாய்
திக்கினார் புறஞ்சொலச் சிந்தைசெய்யார் சிலநாள் வாடகை பிறவியுணர்
தக்கநன் மதியொடு சஞ்சலந்தீர் தவமுற நெறியுணர் வளித்திடுவீர்
நக்கனே நற்றமிழ் நான்மறையே நரசிங்கம் பேட்டை நாயகனே

4. மச்சும னைதுணை சந்ததியும் மாற்றுயர் பொன்பொருள் பதவிகளும்
எச்சம தாய்ஈன் டுறைந்திருக்க ஏழையன் உயிருடன் பிரிந்தோடும்
இச்சைசெய் மறுபிறப் பேராளம் இடுக்கணைத் தடுத்தருள் தந்திடுவீர்
நச்சரவணிகவின் திருமேனி நரசிங்கம் பேட்டை நாயகனே

5. பத்தியைப் பொன்பொருள் பதவிபெற பாவியர் போலி நாடகஞ்செய்
உத்தியில் கோடிநல் உயிர்யாவும் உலகிடைப் பேயென உழல்நிலையே
அத்துணை உயிரும் அறிவூறி ஐயன்நின் அணித்திரு வாடிசேரும்
நத்துறு மனமளித் தருள்புரிவீர் நரசிங்கம்பேட்டை நாயகனே

6. தட்டையாய்த் தொடர்நிலம் உளமுதலே தாரணி அரசியல் சகதிநதி
பட்டமும் பதவியும் பலபிரிவும் பழிநூல் கள்சொல் பவவிதிகள்
அட்டக விடமழித் தருள்புரிவீர் அடிமைசெய் மானிடம் நினைத்தொழவே
நட்டந டுக்கோட் டற்புதனே நரசிங்கம் பேட்டை நாயகனே

7. குற்றமெல் லாம்நின் கொடும்படைப்பே கூறவும் எனக்கோர் அறிவிலையே
சற்றுநின் சுதந்திரத் தயவதிலே தாரணித் திருட்டுசெய் மானிடங்கள்
கொற்றமெல் லாம்நின் குறும்பரிவே கொடுத்தவர் நீரே குறைதீர்ப்பீர்
நற்றவ நல்லோர் தொழுமிறையே நரசிங்கம் பேட்டை நாயகனே

8. பட்டம ரந்துளித் துயர்ந்தோங்கும் பரம்பொருள் நின்றன் அருளாலே
கெட்டம னம்நொடி கிரிநதியாய் கீழவர்க் குதவும் நினைத்துதித்தே

அட்டமா சித்திகள் அரங்கேறும் அதற்கோர் உவமை வால்மீகர்
நட்டந டுவெளி நாட்டியனே நரசிங்கம் பேட்டை நாயகனே

9. பத்தியில் பரமநின் பதம்பணிந்தே பாருறை பவந்தொடும் நிலைதடுத்தோர்
சித்திமுத் திநின்றன் திருவடியில் சேர்வுறும் ஞானப் பேறுகளே
அத்தநின் அடியார்க் கருளமுதம் அறுபதின் மூவரின் அன்புநிலை
நத்தினேன் கழல்நிழல் எனக்கருளே நரசிங்கம் பேட்டையின் நாயகனே

10. பத்திய உணவநல் பற்பமதும் பதங்கமும் குளிகை கற்பமுடன்
சித்துகள் தெளியுயிர் மூலிகையும் திருவருள் நின்கொடை மருத்துவமே
முத்திநல் மூலனுக் கருளியகோன் மூவேழ் உலகாட்சி மூவிழியே
நத்திய எனக்கருள் நற்கருணை நரசிங்கம் பேட்டை நாயகனே

-திருச்சிற்றம்பலம்-

## 177. பருத்திக் குடி - இடங்கொண்டீசுவரம்

**இடங்கொண்டீசுவரர்** **கலிவிருத்தம்**

1. மாற்றங்கள் செய்யும் வானவர்தலைவன்
தோற்றமொன் றில்லா தோற்றங்க ளானோன்
சீற்றமொன் றில்லாத் திருவருள் மேனியன்
ஏற்றமெ லாம் தரும் இடங்கொண்டீச்சுரரே

2. உருவமொன் றில்லா உருவெல் லாமான
அருவநல் நாயகன் அவனியப் பேரிறை
கருமுதல்கடுவெளி கலக்குறும் நாள்வரை
இருவகை வினைஅருள்இடங்கொண் டீச்சரரே

3. புந்தியின் மந்தியை புவிஉயிர்க் கடக்கி
சிந்தனை விதைக்கும் செஞ்சுடர் மேனியன்
வந்தனைப் பூசனை மகிழ்வுறச் செய்வோர்க்
இந்திர புரியருள் இடங்கொண்டீச்சரரே

4. பத்தியும் சித்தியும் முத்தியும் உணர்த்தி
இத்தரைச் சிற்றின்பம் எல்லா முதவியும்
வித்தகம் புணர்தரும் வெல்சுடர் விண்ணவர்
எத்தசையும் புகழ் இடங்கொண் டீச்சரரே

5. சம்புவ வனத்துறை சந்தனச் சாந்தன்
செம்பொரு ளாகிய தில்லையின் காதலன்
அம்புவி ஏழேழ் அதிபதி விதியுனை
இம்பரும் பர்துதி இடங்கொண்டீச்சரரே

6. கற்றைச் சடைமுடி கங்கண மூர்த்தி
வெற்றிநல் புன்னகை வெறிகமழ் பூங்கழல்
நெற்றித் திருவிழி நிமலன் பூவனன்
இற்றித் தருநிழல் இடங்கொண் டீச்சரரே

7. வட்டப் பெருநிலம் சுற்றும் வெளியிடை
திட்டுத் சிறுபெரும் திடமலை முகடமர்
கட்டுக் குடுமியன் கண்ணப்பர் கருளிறை
எட்டுத்திக் குமொளிர் இடங்கொண் டீச்சரரே

8. கள்ளிவ னத்திடை களிநடம் புரிதழல்
வெள்ளிம ழுவிடை மீதமர் புதிர்மதி
தெள்ளிய திருத்தொண்டர் செம்மனக் கோயிலன்
எள்ளுநர்க் கினிதளி இடங்கொண் டீச்சரரே

9. நடுமுதல் கடைஇடம் நன்றொடு தீயவை
கடுவடு மும்மலம் கதிமதி விதிபுனை
படுதிரை புவியேழ் படர்சுடர் பவந்தீர்
எடுத்துயிர்க் கினிதருள் இடங்கொண் டீச்சரரே

10. விடையமர் கொடைமடன் விடுகனை மேருவில்
உடைமழுப் படைக்கரன் உடுக்கிசை தொடுப்பவன்
சடைஇடை படர்பிறை தடைதவிர் தழல்மலை
இடைவிடத் தரவணி இடங்கொண் டீச்சரரே

–திருச்சிற்றம்பலம்–

## 178. தேப்பெருமாள் நல்லூர்

**விசுவநாதர்** **கலிவிருத்தம்**

1. கான்மகிழ் ககனன் காபா லிநடனன்
மான்மரைக் கரத்தோன் மாணிக்கப் பெருஞ்சுடர்
நான்மணி தேப்பெருமாள் நல்லூர் நம்பனை
தேன்மலர் சூட்டியே துதிப்ப தின்பமே

2. பூதக னம்நிறை போகம ருள்மலை
வேதங்க ளிலிசை வெளிவளிப் பகிரண்டன்
நாதநல் தேப்பெருமாள் நல்லூர் நம்பனை
ஓதித் திருமுறை உணர்வதும் உவகையே

3. ஏடெடுத் துதவிய இரும்புனல்பேரிறை
கூடெடுத் தழுகுசெய் தூக்கணாங் குருவிக்கருள்
நாடெழில் தேப்பெருமாள் நல்லூர் நம்பனை
வீடளித் தருளென வீழ்ந்தழல் மெய்த்தவமே

4. நீரில் நெருப்புறை நெருப்பில் நீருறை
காரியக் கருணைசெய் கங்கணப் பரம்பொருள்
நாரிநல் தேப்பெருமான் நல்லூர் நம்பனின்
சீரெழில் கழல் தொழல் சிந்தைக் கினிதாமே

5. ஆடலந் திருவருள் ஆணலிப் பெண்செய்
கூட லங்காரன் கொன்றையஞ் சடைமுடி
நாடருள் தேப்பெருமான் நல்லூர் நம்பனை
பாடலோ டாடியே பணிவது மின்பமே

6. ஆவாரம் பூவெழிலன் அம்பலத் தழலன்
தேவாரப் பாட்டிசைச் சிவலோக நாயகன்
நாவார் தேப்பெருமான் நல்லூர் நம்பனை
பூவார் பூசைசெய் துருகலும் பெருந்தவமே

7. எதிரில் லாத்தழல் ஏகப் பரம்பொருள்
பொதிகையின் பெருமான் பொன்னிற மேனியன்
நதிக்கவின் தேப்பெருமான் நல்லூர் நம்பனை
துதித்துயிர் வாழ்ந்தால் துறக்கம் பெறலாமே

8. இருநிறத் தோரொளி ஏகம்ப மூர்த்தி
கருவினில் மூவாசை கலந்துட லளித்த
அருளுரு தேப்பெருமான் நல்லூர் நம்பனை
எருக்கலர் பூசைகள் இனிதருள் வழங்குமே

9. தென்புலம் வடபுலம் தெரியாத் தொலைவெளி
முன்பின் காலமும் முழுவினை இன்றருள்
நன்நிலத் தேப்பெருமாள் நல்லூர் நம்பனை
அன்புறத் துதிப்பது அதிமல மறுக்குமே

10. கோணலம் பிறையோன் கொடுகொட்டி நடனன்
சீணம லமொடுக்கி சீருயிர் காவல்செய்
நாணல்நல் தேப்பெருமான் நல்லூர் நம்பனை
பூணுமெண் பூப்பூசை புதுப்பிறப் பறுக்குமே

-திருச்சிற்றம்பலம்-

## 179. ஆறைமேற்றளி - கும்பகோணம் வட்டம்

**கைலாசநாதர்** **அறுசீர் ஆசிரியவிருத்தம்** **கமலநாயகி**

1. செருகணை மனமதன் உடலை சினத்தரு வாக்கிய தேவன்
தொகுசுடர் நூதல்விழித் தோழன் சுந்தரத் தொலைவெளிக் காற்றன்
தகுதமிழ் எண்குர வோர்க்கும் தானளி சங்கரத் தலைவன்
மிகுமகிழ் ஆறை மேற்றளியன் விண்காந்த வாலையளிப் போனே

2. வரையசைப் பதின்சிரம் வாட்டி வாளொடு போர்தந்த வானன்
தரையுறத் துதிப்போர் தமரன் சம்பந்தர்க் குலவா கிழியை
நிரைபொன்ணோடளி நிமலன் நெற்றிக்கண் உத்தம நேசன்
விரைவயல் ஆரை மேற்றளியன் மேலுல காட்சிவின் ணோனே

3. அந்தக னுடலழித் தரனின் அணுக்கநல் கணஞ்செய் அமுதன்
செந்தால் மேனிச் சூலன் திரிபுரம் பொடித்த செம்மல்
நந்தனுக் கருளுளிய நம்பன் ஞானம தாகிய நடுவன்
விந்தை ஆறைமேற் றளியன் மேலுல காட்சி விண்ணோனே

4. சஞ்சலப் பாணபத்திரற்கும் தனிகொடைக்க விமடல் தந்தோன்
அஞ்சேல் என்றருள் அன்பன் ஆலயக் கருவறை அழகன்
குஞ்சன மாலயன குறைதீர் குவலயப் பேரொளிக் குழகன்
விஞ்சைநல் ஆறைமேற் றளியின் மேலுல காட்சி விண்ணோனே

5. தந்திரத் திரிமந்தி ரத்தன் தாரணி யோர்துதிதமரன்
செந்தசைக் கொடைச்சிபிச் சோழன் செயல் மகிழ்ந் தன்பளிதீரன்
வந்திக்கும் வானளி மன்னன் வானமுதளிமணி முடியன்
விந்தைஆறைமேற் றளியன் மேலுல காட்சி விண்ணோனே

6. வெண்ணீ றணிவடிவழகன் மீளுயிர்க் குடலளி விமலன்
தண்ணீர்ப் பஞ்சங்கள் தோன்றா சார்மழை முகிலளி சாம்பன்
புண்ணியம் மானிடம் புரியும் புதுமதி உணர்வளி புனிதன்
வெண்மணி ஆறைமேற்றளியன் மேலுய காட்சி விண்ணோனே

7. கேலியில் வீழ்ந்த தருமியை கிரிவிளக்காக்கிய கிரசன்
ஞாலிய நவமணி பாறை நல்கிய பரம்பொருள் தீபன்
சூலியின் செருக்கழி சுடரன் தொடர்நடம் பதிமுத் திரையன்
வேலிநெய் ஆறை மேற்றளயன் மேலுல காட்சி விண்ணோனே

8. கற்பகப் பசுபதிக் கனலன் பக்குவஉயிர்க்கருள் குருவன்
அற்புதத் அருவுரு அமரன் ஆதிக்க வெறியழி அரசன்
பற்பல தவத்தருச்சுனர்க்கும் பாசுபதமளி பரமன்
வெற்றிலை ஆறை மேற்றளியன் மேலுல காட்சி விண்ணோனே

9. மத்தகக் கரிபுவி உரித்தே மாசுறை வேள்வித கர்த்தோன்
கத்துங்க டழேழைக் கணித்த காவிரிக கங்கையந் தலைவன்
முத்துபந் தல்பொன் முடிப்பும் முனிக்காழியர்களிமூத்தோன்
வித்தகத் சூறைமேற்றளியன் மேலுல காட்சி விண்ணோனே

10. வஞ்சகக் கயமுகன் அழிய மாலுக்ககருளளி வளவன்
தஞ்சமென் றடிபணி உயிர்க்கே தன்கழல் நிழலளி சம்பு
செஞ்சடைப் பிறைக்கவின் அருளன் தெய்வங்கள் துதிக்கும்கடவுள்
விஞ்சை ஆறை மேற்றளியன் மேலுலகாட்சி விண்ணோனே

–திருச்சிற்றம்பலம்–

## 180. அரிசந்திரம்

**சந்திரமௌளீசுவரர் கலிவிருத்தம் சவுந்திரவல்லி**

1. தவம்பல இயற்றும் தாரணி யோர்காள்
கவலையை நொடியில் கழற்றி எறியலாம்
புவனப் பிறவிதரும் புண்ணியன் கழல்தொழ
பவந்தீர்த் தருள்வார் பாற்குளத் தண்ணலே

2. சஞ்சலக் கடலிடை தவிமா னிடர்காள்
நெஞ்சப் பெருநசை நெடுந்துயர் வறுமையும்
தஞ்சமென் றரன்கழல் தரையுறத் துதிப்பீர்
பஞ்சமெல் லாந்தீர்க்கும் பாற்குளத் தண்ணலே

3. சிகைபிய்த் தெறிசிக்கல் திகைவிபத் துழல்வீர்
நகைவெறி புலிமனம் நால்தலை முறைப்பகை
தகைக்குள மாடியே தழற்கழல் துதிப்பீர்
பகையழித் தருள்வார் பாற்குளத் தண்ணலே

4. கழிமுக நதியுமைக் கலமென் றில்லறம்
அழிநிலை கண்டீர் அயர்வுளந் தெளிவீர்
பொழிற்குளம் மூழ்கியே பொலங்கழல் துதிப்பீர்
பழிமுடித் தருள்வார் பாற்குளத் தண்ணலே

5. வணிகம்ப தவிப்பணி வளருளக் கல்வியும்
பிணியுறப் பிறழ்மனம் பீடித்து ழல்வீர்
தணிப்புனல் ஆடிதற் பரன்கழல் துதிப்பீர்
பணிநிதி மதிதருவர் பாற்குளத் தண்ணலே

6. போதையி லூறிய பூமியர் பொறிப்புலன்
வாதைவ னிதையர் வதுவைதாதாமதத் தோர்
நாத நமச்சிவாயம் நவின்றுக் கழல்பணிய
பாதைநல் வாழ்வருள்வர் பாற்குளத் தண்ணலே

7. பொய்யுரப் பத்தர்சொல் புகட்டிய தீமைகள்
கொய்யுடைப் பைப்பொருள் கோடிய நெறியினர்

நெய்தலை நீராடி நிமலனைத் துதிப்பீர்
வைப்பபொருள் மீட்பார் பாற்குளத்தண்ணலே

8. நட்டநல் பயிர்வகை நலிவுறும் கால்நடை
இட்டநல் கலைவினை இடைத்தடை சூழ்ந்தவர்
வட்டலைக் குளமாடி மழுவரன் கழல்தொழ
பட்டம் பதவிதரும் பாற்குளத் தண்ணலே

9. வித்தைவ றியவர்மெலிசிறு தொழிலினர்
சித்தம் சிவமெனச் செய்தொழில் மேவியர்
கொத்துக்கொன் றைசூட்டி குவலயன் கழல்தொழ
பத்திநல் முத்திதரும் பாற்குளத் தண்ணலே

10. நெற்றிவி ழியமுதன் நெடுஞ்சடை மின்னலன்
வெற்றிவி டையூர்தி மீன்வலை வீசிய
ஒற்றியூர் கோயிலன் ஒளிக்கழல் துதித்தழ
பற்றுவி னைதீர்ப்பார் பாற்குளத் தண்ணலே
–திருச்சிற்றம்பலம்–

## 181. முழையூர்

**பரசுநாதர் அறுசீர் ஆசிரியவிருத்தம் ஞானாம்பிகை**

1. சிந்திய வேர்வைசெய் அந்தகனை சிதைத்தொரு கணஞ்செய்திருத் தொழிலன்
நந்தியின் மாமறை நற்றமிழை நல்குதி ருமூலர் நலம்மகிழ்ந்த
முந்துயர் முழையூர் முழுமுதல்வன் மோனத் தவநிலை முக்கண்ணன்
கந்தக் கழல்துதி கரையேற்றும் காலம்வெல் ஞானக் கடுந்தவமே

2. காழிய ஞானிக்குத் தாளமணி கருணா கரச்சிவக் கங்காளன்
ஊழிசெய் நாயகன் ஓங்காரன் ஒருநொடி யில் புவிஏழளிகும்
சோழிய முழையூர்ச் சோதிவள்ளல் சுந்தரர்க்கும்ருள் தொடந்தளித்த
ஆழிப்பே ரலைமின் அலங்காரன் அரன்கழல் துதியும் அருந்தவமே

3. வெண்மதி ஞாயிறின் வினைமாற்றிவிடிவளித் தன்புசெய் வெளியணுவன்
புண்ணியன் தன்சொல்லை எனதாக்கி புவனியர்க் களித்த பொன்னாசான்
முண்டகத் திருவடி முழையூரன் முதிராநிலவணி மூத்ததழல்
தொண்டர் துயர்தீர் தூயவள்ளல் சுடர்க் கழல்துதிப்பதும் தூந்தவமே

4. அங்கசன் உடலழி அன்புருவன் ஆனந்தத் தாண்டவ புரத்தழகன்
சங்கிசைச் சேகண்டி தாளநல்லன் தாரகைத் திருவிழி சம்புலிங்கம்
மங்கல முழையூர் மான்மழுவன் வணங்காத் தலைக்கும் வாழ்வளிக்கும்
தங்கம ணிக்கழல் தாழ்பணிதல் தாரணி மீதொரு தனித்தவமே

5. சூலைப்பி ணியழி சொக்கேசன் தோன்றாத் துணைவன் தூயவள்ளல்
மாலுக்குச் சக்கரம்வழங்கிறைவன் மண்ணிடை மாமுகில்மழையருளும்
காலைசெய் முழையூர்கரிஉரியன் கவனச் சிதைவில் காலகாலன்
கோலத் திருவடி கும்பிடலும் குவலயத் தோர் நெறிக்குகைத்தவமே

6. நாரைக்கு நான்மறை நல்லாசான் நம்புவர்க் கமுதளி ஞானமன்னன்
தேரைக்கும் தேன்சிட்டு தேவருக்கும் திருவருள் புரிகரச் சிவலோகன்
சீரைநல் முழையூர்த்தேவதேவன் தென்குமரிநிலச் சுயம்புலிங்கன்
பேரைநவின்றுளம் பேணுதுதி பேரிசைப் பூசையும் புதுத்தவமே

7. அல்லவர் புரமெரி அனலீசன் அழுகுழந்தைக்கமு தாழிதந்த
வல்லமைச் சித்துகள் வணங்கிமகிழ் மாமாயைதந்த வான்கோவன்
நல்லவர் முகையூர் நவநிதியன் நாளும் உயிர்க்கருள் நலவேந்தன்
தொல்லிளம் மலர்க்கழல்துதியாவும் தூமலர்பூசையும் தொடர்தவமே

8. ஓடோர் கரமுறை ஒளியுருவன் உலகேழ் அண்டஞ்செய் உருவருவன்
நாடோர் நமச்சி வாயமென்னும் நால்யுகந்துதிசெய் நவமலையன்
தோடார் முகையூர்ச் சுந்தரனை துதிப்போர் முன்வான் செல்வோராய்
ஏடார் இறைவன் முன்பதிவில் இருப்பதும் இந்நிலத் திருந்தவமே

9. பாரோர் கோடிப் பெயர்சூட்டி பற்பல நெறிமுறை பாவித்தே
நீரார் விழியுடல் நிலந்தோயநினைக்கும் மானிடர் நேசவள்ளல்
சீரோர் முழையூர்த்திருவருளன் சிந்தைக்கினிய சிவலோகன்
ஆரார் மணிச்சரக்கொன்றையணி அரன்கழல் நினைப்பும் அருந்தவமே

10. தும்மை மரைகூ விளஞ்சூடி தூயவிடையமர் சுழல் சடையன்
ஆம்பைத்தொ டுமுன் அரணழித்த ஆயிரம் மொழிமறை அளிப்பமரன்
செம்பை முழையுர்த்தேன முதன் திரும்புயிர் யாவுக்கும் உடலருள்கோன்
வெம்மைய கப்பூசை வீடுபெறும் விதிமுறைக் கடங்கிய வெல்தவமே

–திருச்சிற்றம்பலம்–

## 182. தாராச்சுரம்

**ஐரவேதீசுவரர்** **எழுசீர் ஆசிரிய விருத்தம்** **தெய்வநாயகி**

1. வீதிவினை இயற்றி விண்நிலம் தீவளி
வெளிவெளி நீந்வெளி வெஞ்சுடரோன்
உதிரமுணர்வுளம் உயிருறைப் பிரணவம்
ஒளியருக் காணிய தொண்டரிடை
மதிமுறிதறியா மானிடப் பதரெனை
மலரடிச் சுடர்தொழ இணைத்த

சுதிமிகு தாராசுர நகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

2. அவனவள் அதுவவை அணுவினைப்
பருவுடல் ஆறறி வுணர்வலை முகுளமதும்
தவழ்வே தியவலி தற்பரத் தாண்டமும்
தாரணி நவக்கோள் தமரொளியே
நவநல் பிறவியை நலமழி உயிரெனை
நமச்சி வாயம்சொல் வைத்தநன்மை
சுவடொளித் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

3. திடமணித் திரளொளி செறிமணத் ததிரலை
சிவபெரு மானெனும் பிறப்பிலியே
உடலுயிர் ஆன்மா உளதில தாகியே
உலகொடு வான்வெளி உயரிசையே
நடைபிறழ் அனிச்சையன் நரகுறல் தடுத்த
ஞானநல் பணிவினை நல்குநன்மை
சுடரொளித் தாரா சுரநகர்அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

4. இந்திரம் மந்திரம் இகலொளி இகபரம்
எதிர்வினை சதுர்விதி எண்குணத்தன்
செந்தழல் அணுத்துகள் சிதைத்தொரு கோடி
சிறுபொடி உலகுயிர் செய்தபிரான்
அந்தக மலத்துயிர் ஐதுயர்ப் பிணியனை
அனற்கழல் துதிசெய் வைத்தநன்மை
சுந்தரத் தாரா சுரநகர் அரனே
சுயம்பே என்கிது அதிசயமே

5. தொல்கவின் வெம்புனல் துதிசுடர் அவிழொளி
தொடர்மதி உயிர்பிறப் புவந்தமதி
பல்கவின் அருவுரு பால்வெளி உடுநடு
பாருயிர் பசுபாசம் பதியறிவும்
செல்கவின் புல்லுயிர் செய்வினை புழுவெனை
சிந்தையில் துதிசெயச் செய்தநன்மை
சொல்கவின் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

6. ஒடிய தொலையுகத் துலவிய பேரொளி
ஓரோர் விதிச்செயல் உயிர்கோடி
காடியல் அணுப்புல் நீருயிர் நிலத்துயிர்
கால்மா மனிதரும் கணித்தமைத்தோன்
ஆடியல் ஐம்பொறி அகம்புனர்ந் தழிக்குமுன்
அழலடி துதிசெய் அளித்த நன்மை
தோடியல் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

7. சித்தியல் மோனமும் தெளிவெளி முத்திசெய்
திகம்பரப் பேரொளிப் பெருமானே
சத்தும சத்தென சகலமும் தானெனும்
தாரணித் தற்பரஞ் சோதியனே
பொத்திய வாயொடு பொற்கழல் துதியேன்
புரைஎரி அடியரோ டிணைத்த நன்மை
துத்திநல் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

8. ஆலமர் ஞானி அருமொழி மேதையும்
ஆயிரமாயிர மொழிக்காசான்
கோலநல் தவமுறக் குண்டலி படிகடந்
தொளிரிசைக் காட்சிகள் தருமிறைவன்
ஞாலவெந் தீமைகள் நனிமதி கெடுகுண
நாடக நாயெனை ஏற்றநன்மை
தூலநல் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

9. வண்ணம்பல் கோடியும் மணம்சுவை கோடி
வடிவுகோ டிகோடி வளர்தழலன்
எண்ணநல் ஞானக்கண் ணுள்ளொளிர் காட்சியன்
ஈசனென் றுலகம் இயம்பொளியன்
உண்ணிஏ ளனஞ்செய் உளறொலி புழுவெனை
உயர்திரு நீறணியச் செய்தநன்மை
சுண்ணகத் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே

10. அஞ்செழுத் தாகிய ஆனந்தத் தாண்டவன்
ஆவடு துறையமர் அருட்சோதி
சஞ்சலத் தார்பணி சங்கர மூர்த்தி
சமயக் குரவோர் தொழுஞ்சுடரே

பஞ்சப்ப ராரியன் பகுத்தறி வில்லோன்
பரமநி னைத்தொழ வைத்தநன்மை
துஞ்சலில் தாரா சுரநகர் அரனே
சுயம்பே எனக்கிது அதிசயமே
-திருச்சிற்றம்பலம்-

## தாராசுரம்

**ஐராவதீசுவரர்** **கலிவிருத்தம்** **தெய்வநாயகி**

1. கவின்கலைச் சிலைநிறை கவிச்சித் திரம்மிளிர் கற்றளியன்
புவிஏ ழேழிலும் புதுப்புது உடலுயிர்க் களித்தணல்
குவிமலரெருக்கணி கொன்றையஞ் சடையன் கூடலண்ணல்
தனியுயிர் கேவலம் தானகற்றியதா ராசுரனே

2. கழிகே நாகைக் காரோணத்தமர் கலைநடனன்
விழிகளில் கருணையும் விரல்களில் அபயமும் விதந்தளிக்கும்
எழில்நிற வானவன் ஏழிசை யானவன் ஈசானன்
தழிஞ்சிய நாயகன் தான்வந் தருள் தா ராசுரனே

3. மன்னிய திருவருள் வார்சடைப்; புண்ணியன் மறைமகுடன்
சென்னியில் சிறுபிறை திகழ் மணிகண்டன் தேனிசையன்
இன்னிசைக் கருவிகள் யாவிலும் இயைந்தெழு நாதமழை
தன்னினி உயிர்க்கருள் தானே தகுந்தா ராசுரனே

4. பஞ்சிடை வெளியன் பரம்பரஞ்சோதி பதிவிதியன்
துஞ்சலில் மயர்வில் தொடர்ந்துயி ரியக்கும் சுடரழகன்
விஞ்சையர் மண்ணோர் விலங்கினம் புள்துதி மேலுலகன்
சஞ்சிதம் தேயவுற தான்மதி தரும்தா ராசுரனே

5. புன்னைநல் அலரிவெள்ளெருக்கமும் குவளை நந்தியமும்
மென்னிதழ் பாதிரி சண்பகம்தாமரை சூடுமண்ணல்
வன்னியம் கிளுவை நொச்சிமா வில்வம் அறுகுணயன்
சன்னிதி யாவிலும் தண்ணருள் தகுந்தா ராசுரனே

6. ஊரணி உலகணி உயிர்களின் உணர்வணு ஒளிரறிவன்
பூரணி பூரணன் புங்கலன் சங்கரன் புதகணன்
காரணி காரணன் கலப்பில் குணம்குணி கோதிலியன்
தாரணி பொருள்களில் தான் உறைக் தொளிர்தாராசுரனே

7. நிறைநிறம் ஐந்தொடு நிலம்பல கோடியும் நிறைத்தளிக்கும்
மறைதரும் நாயகன் வாய்மொழி இசைவளர் வான்வடிவன்
கறைமிளிரகண்டன் காதொரு குழையன் கனகசபை
கறைஉயிர் தவமுற தன்மதி தருந்தா ராசுரனே

8. வான்செய் கோலமும் மண்செய் வளங்களும் வகுத்தருளி
ஊன்செய் உடலுயிர்க் குவந்தளி ஞானியன் ஒளித்தலைவன்
மான்செய் மயல்வினை மாற்றிநல் மதியளி வானாசான்
தான்செய் ஊழிப்பின் தாரணி செய்தா ராசுரனே

9. ஒன்றிலொன் றாகிய உயிர்பல் கோடி யோனிபெறும்
நன்றினை நல்கிய ஞாதிருத் தமரன் நாதவிந்தன்
பன்றப்பல் அமையும் பவளமல் லியணி பரஞ்சோதி
தண்ணிலை மாறா தனிக்கடவுள் தா ராசுரனே

10. கோவணத் தாடையன் குஞ்சித பாதன் குன்றவில்லி
நாவலந் தீவினில் நான்மறை திருமுறை நயந்தளித்தோன்
ஆவணக் காப்பகப் பணிஎனக் களியா தீனக்குரு
தாவர சங்கமம் தான்வந்தருள்தா ராசுரனே.

–திருச்சிற்றம்பலம்–

## 183. சோழபுரம் – கும்பகோணம் வட்டம்

**கைலாசநாதர்** **எழுசீர் ஆசிரிய விருத்தம்**

1. தளிவில் வங்கொன்றை தாமரை நித்தியம்
சாந்தொடு புனைமலர் சதுர்மறையன்
மிளிர்பொன் மேனியன் விண்மண் எண்திசை
விரைசுடர் உடுக்கோள் உயிர்வளர்க்கும்
குளிர்விழி செவ்வாய் குறுநகை கோடி
யுகங்கா ணாசைசெய் கோகழியன்
சுளிநடம் பரிவுசெய் சோழபுரத்துறைச்
சுந்தரப் பேரொளிச் சுயம்பரனே

2. மங்கலச் சங்கொலி மகரயாழ் சிறுகுடி
மத்தளந் தண்ணுமை மகிழிசையோன்
செங்கதிர் மேனியன் சிலம்பிசை கூத்தினில்
செழிநிலச் சீருயிர் தினம்வளர்க்கும்

பொங்கமு த்திறை பூவடி கோடி
யுகங்காண் ஆசைசெய் புலியூரன்
துங்கநல் பரிவுசெய் சோழபு ரத்துறைச்
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

3. நெய்தயிர் பாலிள நீர்ஜங் கனியொடு
நிறைதே னபிடேகம் நெகிழிறைவன்
மெய்யொளி மேனியன் மின்னலஞ் சடைமுடி
விதிவினைப் புதுப்பொறி மதிவளர்க்கும்
செய்யொளி மலர்நுதல் திருக்கவின் கோடி
யுகங்கா ணாசைசெய் சொக்கேசன்
துய்யநல் பரிவுசெய் சோழபு ரத்துறைச்
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

4. கொடிகொட்டி ஊர்த்துவம் குதிமிகு அனவரம்
கூத்தியற் றிமகிழ் குண்டலியோன்
வெடிமின் மேனியன் வெந்தழல் கரமுறை
விண்ணோர்க் குடல் நிரந் தரம்செய்தோன்
கொடிமலர் நாபியின் குவிகவின் கோடி
யுகங்கா ணாசைசெய் குற்றாலன்
துடியிசைப் பரிவருள் சோழபு ரத்துறை
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

5. வண்டீ புள்ளினம் மண்ணிடை ஊர்வன
மாமணி தன்தொழ மகிழ்விழியன்
பண்டோர் தவத்தோன் பணிவுறக் கங்கையை
பாரிடைப் பரிசளி படர்சடையன்
திண்ணார் கறைமிட றினிகவின் கோடி
யுகங்கா ணாசைசெய் நெல்லையரன்
சுண்டால் பரிவுசெய் சோழபு ரத்துறை
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

6. விரும்பார் திரிபுரம் வீழ்பொடி அரைநொடி
விரைகணை ஏந்திய வேதமலை
கரும்பார் சிலையோன் கவினழித் தருளிய
கற்பகத் திருவருள் கங்காளன்
அரும்பார் சிறுமருங் கழகோர் கோடி
யுகங்கா ணாசைசெய் ஆலங்காடன்
சுரும்பார் மணிக்கழல் சோழபு ரத்துறை
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

7. ஊற்றிய கூழுக்கும் உதிர்ந்தபிட் டுணவுக்கும்
ஒவ்வோர் உருவொடு உலவொளியன்
சாற்றிய பாட்டொடு சான்றோ ரவையில்
சமர்மொழி பேசிய சங்காரன்
ஆற்றிடைச் சிலந்தியை அரசுரு வாக்கிநல்
அருள்புரி சந்தனத் தானைகாவன்
தூற்றுநெல் வயல்சூழ் சோழபு ரத்துறை
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

8. மாதங்க மதவுரி மகிழ்வுறும் போர்த்திய
வானவர் பெருந்தகை மதியமுதன்
ஆதங்கப் பூசலன் அகமுறை கோயிலில்
ஆகம முறைசெய் அனலீசன்
தூதங்க நெடுங்கரத் தூவெளி கோடி
யுகங்கா ணாசைசெய் ஆருரன்
சூதங்கப் புலியுரி சோழபு ரத்துறைச்
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

9. புரிடை ஆதியன் பொங்கர வணிமலை
பூதக ணந்தொழும் புகழீசன்
அரியயன் இந்திரன் அதிநிதி அரசனும்
அடியார் துதிமகிழ் அருளமுதன்
நரிபரி செய்மலர் நயனக்கவின் கோடி
யுகங்கா ணசைசெய் பெருந்துறையன்
துரிசுழிச் சுடர்மலை சோழபு ரத்துறை
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

10. உருகுறத் தொழுஞ்சீர் உளம்நினை உருவொடு
ஒளிர்ந்தெழுந் தருள்செய் உலகீசன்
அருந்தமிழ் குரவோர் அறுபதின் மூவர்க்கும்
அன்பளித் தருளிய ஆடவல்லான்
புருவநற் சீர்கவின் புரிநடம் கோடி
யுகங்கா ணாசைசெய் ஐயாறன்
சுருதிநல் திருமுறை சோழபு ரத்துறை
சுந்தரப் பேரொளி சுயம்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 184. ஏரகரம்

**சங்கரநாதர்** **கலிவிருத்தம்** **சங்கரநாயகி**

1. ஓயாத் திரைகடல் உலகுசெய் சிவமே
நேயாய் நினையன்றி இறையெனத் துதியேன்
தாயாய்க் காப்பருள் தழற்கழல் நிழலருள்
காயார் ஏரகரக் கருணா மூர்த்தியே

2. அண்டந் தாண்டிய அழலேர் மலையே
நண்பே நினயைன்றி இறையெனத் துதியேன்
பண்டா ரமளி பரனே நிழலருள்
செண்டார் ஏரகரச் செஞ்சுடர் மூர்த்தியே

3. அந்தி வானப்பொன் ஆரெழில் அரனே
எந்தாய் நினையன்றி இறையெனத் துதியேன்
முந்தையுள் மூவினை முடித்தருள் எனக்கே
வந்தனைத் தேரகர மங்கல மூர்த்தியே

4. உந்தியில் உதித்தோன் ஒருசிர மறுத்தருள்
தந்தனை நினையன்றி இறையெனத் துதியேன்
செந்தமிழ் பாடல்கள் செய்தருள் புரிவீர்
மந்திரத் தேரகர மாணிக்க மூர்த்தியே

5. நஞ்சயின் றருளிய நான்மறை முதலே
தஞ்சமென் றுனையன்றி இறையெனத் துதியேன்
அஞ்சலென் றாதரித் தழலடி நிழலருள்
மஞ்சுறை ஏரகர மரகத மூர்த்தியே

6. துஞ்சலி லாவிழி தூநட்சத் திரமே
குஞ்சர உரியுடை நினையன்றித் துதியேன்
பஞ்சத்திற் காண்டியேன் பவமறுத் தருள்வீர்
அஞ்செழுத் தேரகர அம்பல மூர்த்தியே

7. புன்னகை கோடிமென் பூவலங் காரம்
இன்னொளி நினையன்றி இறையெனத் துதியேன்
கண்ணலின் பாட்டருளிக் கடையெனைத் தேற்றும்
பொன்னொளித் தேரகரப் புண்ணிய மூர்த்தியே

8. வன்னியங் தளிரணி வைரமா மலையே
என்னுயிர் நினையன்றி இறையெனத் துதியா

உன்னடி தொழுதமும் உயர்வளித் தெனக்கருள்
ஒன்றியர் ஏரகர உலகொளி மூர்த்தியே

9. தண்ணொளி இளமதி தாமரைக் கரனே
எண்சுடர் நினையன்றி இறையெனத் துதியேன்
தொண்டரொ டிணைவுறும் சுகமளித் தருள்வீர்
பண்ணெழில் ஏரகரப் பனிமலை மூர்த்தியே

10. சங்கமு ழக்கமகிழ் தற்பரஞ் சோதியே
இங்கிதன் நினையன்றி இறையெனத் துதியேன்
மங்கலப் பதிகங்கள் மகிழ்ந்தளித் தருள்வீர்
தங்கழல் ஏரகரச் சந்தன மூர்த்தியே

–திருச்சிற்றம்பலம்–

## 185. தண்டந்தோட்டம்

**நடனபுரீசுவரர்** **கலிவிருத்தம்** **சிவகாமசுந்தரி**

1. ஊசியால் குத்தியேன் உதிரம்வ ழிந்தோடத் தடிந்திடினும்
நாசிவ ளியறுமுன் நமச்சிவா யம்சொல்வேன் நாவினிக்க
காசிகை லாயமும் கஞ்சியும் துதித்தறியாக் களிமூடன்
சாசியக் கழனிநல் தண்டந்தோட்டத்துறைத் தற்பரனே

2. உகிரினைக் கிழித்தென் உடலுயிர் துடிக்கநின் ஒறுப்பினிலும்
நகைமுகம் மலர்வுற நமச்சிவா யம்சொல்வேன் நாவினிக்க
செகில்வெள் ளியங்கிரி செஞ்சது ரகிரி சேவித்திலேன்
தகைசெல் கழனிநல் தண்டந்தோட் டத்துறை தற்பரனே

3. உள்ளுறச் செவியில் ஊருகய மூற்றிநீர் ஒறுத்திடினும்
நள்ளுறு மகிழவொடு நமச்சிவா யம்சொல்வேன் நாவினிக்க
வெள்ளியம் பலம்தில்லைவீழியும் ஆரூர் தொழுதறியேன்
தள்ளுகுலைவாழைத் தண்டந்தோட்டத்துறை தற்பரனே

4. ஊனமில் விழிகளில் ஒளிமழு வேற்றிநீர் ஒருத்திடினும்
நானதில் மகிழ்ந்தே நமச்சிவா யம்சொல்வேன் நாவினிக்க
ஆனைக்கா நெல்லையும் ஐயாறு குற்றாலம் அடிபணியேன்
தானத்தி ருவடியாய் தண்டந்தோட்டத்துறைத் தற்பரனே

5. உச்சியில் திருகினை ஒலியுறப் பாய்ச்சிநீர் ஒறுத்திடினும்
நச்சிநான் மகிழ்வுற நமச்சிவா யம்சொல்வேன் நாவினிக்க
கொச்சைவ ய வெண்ணை கோவலூர் அருணையும் கும்பிட்டிலை
சச்சிதா னந்தமே தண்டந்தோட்டத்துறை தற்பரனே

6. உணர்நுனி நாசியில் உசிரால் கீறிநீர் உவந்திடினும்
நணுகுறு மகிழ்வில் நமச்சிவாயம்சொல் வேன் நாவினிக்க
மணஞ்சே ரிக்கடவூர் மயிலையா வடுதுறை வணங்குகிலேன்
தணலம ரவணித்தண்டந்தோட்டத்துறை தற்பரனே

7. உதிரச் சந்ததிகள் ஒவ்வொரு மதஞ்சேர் நோய்தரினும்
நதிவிழித் துயரொடு நமச்சியா யம்சொல்லி நானழுவேன்
அதிகை ஆநிலையும் ஆலங்கா பெருந்துறை அஞ்சலியேன்
சதிரணித் திருவடித் தண்டந்தோட்டத்துறை தற்பரனே

8. உலரா நாவினில் ஒன்பத ரவினைக் கடிவிடினும்
நலிவுறும் ஒலியில் நமச்சிவா யம்சொல்வேன் நாவினிக்க
வலம்புரம் வலஞ்சுழி மறைக்கா முதுகுன்றம் வணங்குகிலேன்
தலந்தோறும் ஒளிர்மலை தண்டந்தோட்டத் துறை தற்பரனே

9. உடல்துளை களிலொவ்வோர் முளைகளை அடித்துநீர் உவந்திடினும்
நடனச பாபதி நமச்சிவா யம்சொல்வேன் நானகத்தே
வடகரைக் காவிரித் தென்கரைக் கோயிலும் வணங்குகிலேன்
தடமல ரெருக்கணி தண்டந்தோட்டத் துறைதற்பரனே

10. உயிர்த்தேளை நாபியின் உள்ளூறவைத்துநீர் ஒறுத்திடினும்
நயினார் கொடையென நமச்சிவா யம்சொல்லி நான் சிரிப்பேன்
மயிலா டுதுறை வான்மியூர் மருகலும் வணங்குகிலேன்
தயினியத் தெந்தாய் தண்டந்தோட்டத்துறை தற்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 186. குமாரமங்கலம்

**ஆபத்சகாயர்** **கலிவிருத்தம்**

1. அம்புலி செங்கதிர் ஆராதனையாடும் அபிடேகம்
வெம்புலி உரியுடை விமலப் பெருந்தை கலங்காரம்
நம்பிந மச்சிவாயஞ்சொல் வார்க்கருள் நம்பனரன்
மம்மரில் குமார மங்கலத் திறைதரும் வானமுதே

2. தெங்கின் நீர்பால் தயிர்நெய் தெளிதேன் நீராடும்
வெங்கரி உரிபுனை வேடப்ப ரம்பொருள் வெண்ணீறன்
சங்கிசை வீணையன் சக்கரம்மால்க்களி சங்காரன்
வங்கியங் குமார மங்கலத் திறைதரும் மன்கல்வியே

3. செந்தமிழ்த் திருமுறை செந்தாளத்தொடு தினமிசைத்தே
அந்தசந்தியிலும் அலர்ப்பூசை செய்ய ஆனந்தம்

சிந்தைஎல்லாமுருகி சிவாயம் சொல்லத் திருவருள்சேர்
மந்திரக் குமார மங்கலத் திறைதரும் மதிநிதியே

4. மஞ்சனநீர்மகிழ் மாணிக்கப் பரம்பொருள் மாற்றில்லான்
தஞ்சமென் றடிபணி தண்வனநாரைக்கும் தயவளிகோன்
அஞ்செழுத் தோதி அறிவுரு ஆனந்தக் கழல்தொழலே
வஞ்சமில்குமார மங்கலத் திறைதரும் மண்ணுயர்வே

5. வெண்பொடி சந்தனம் வெறிமலர் சூடிய விண்ணீசன்
எண்ணேழ் பேரண்டன் இழிகா மநாசன் ஏகபாதன்
தண்ணகம் திருமேனி தளிமலர் பூசைசெய் வார்க்கினியன்
மண்ணலக்கு மாரமங் கலத்திறைதரும் வாழ்வினிதே

6. வங்கவ வலம்புரி வளரிசை சேகண்டி மணிஇசையன்
தங்கம ணிமலர்த்தாமரை கொன்றைத் தார்சூட்டி
அங்கந் தரையுற அடிபணி வார்க்கருள் ஆனந்தன்
மங்கலக் குமார மங்கலத் திறைதரும் மாண்புகளே

7. பஞ்சந றுமணத் தீபதூபம் மகிழ் பாண்டரங்கன்
நஞ்சுறை கண்டன் நாதச்சி காமணி நடனமலை
நெஞ்சில்வைத் தேதுதி நேசநல் லார்க்கருள் நிமலீசன்
மஞ்சுறைக் குமார மங்கலத் திறைதரும் மனமகிழ்வே

8. விண்மண் அவனவள் விதிமதி அதுவெனும் சித்தாந்தன்
எண்குணத் தெந்தைஏகம்பத் திருவுரு ஏகாந்தன்
பண்ணொடு திருமுறை பாடுநர்க் கன்பருள் பரமேசன்
மண்மணிக்குமார மங்கலத்திறைதரும் வளவாழ்வே

9. துந்துபி மந்திரத் துலங்கிசைக் குள்ளுறை சொக்கேசன்
முந்தைஇன் றுநாளை மூதுயிர்க் குடலளி முக்கண்ணன்
சிந்தைநல் லோர் தினம் சிவ நாமம் சொல்லத் திருவருள்செய்
மந்தனக் குமார மங்கலத் திறைதரும் மண்ணரசே

10. பொன்னலர் மேனி பூங்கொன்றைசூடும் புகழ்மதியன்
மின்னலஞ் சடைமுடி வெளிமுக டறியா விண்ணருவன்
என்னிறை என்னிறை என்றிறைஞ்சுவர்க்கருள் எரிகரத்தன்
மன்னிய குமார மங்கலத் திறைதரும் வான்வாழ்வே

–திருச்சிற்றம்பலம்–

## 187. உடையாளூர்

கைலாசநாதர் கலிவிருத்தம்

1. நலமே அருளும் நாதாந்தச் சுடரன்
தலங்கள் யாவும் தவஞ்செய் மூர்த்தி
கல்நெல் காட்டும் கதிர்வினை வயல்சூழ்
உலகேழ் உயிர்துதி உடையா ளூரரே

2. அறத்தோ டறிவழ கன்பருள் உடலளி
மறத்தார் திரிபுரம் மாற்றிய மங்கலன்
நிறைதார் வாழைகள் நெடுவயல் சூழ்கவின்
உறவோர் வழிபடும் உடையா ளூரரே

3. அமுதப் புனலளி ஆர்கவி ஊழியன்
குமுதப் பெருநிதி குவலயத் தார்க்கருள்
கமுகப் பெருங்குலை கரைவயல் பெரியோர்
உமற்கடத் தோர்துதி உடையா ளூரரே

4. பிஞ்சகப் பெருந்தழல் பெரியோன் சீரணு
அஞ்சே லென்றடி யார்க்கருள் ஆதியன்
மஞ்சளிஞ் சிவிளை மணிநித் திலஞ்சூழ்
ஒஞ்சியர் தினந்துதி உடையா ளூரரே

5. வெங்கதிர் சூரியன் வெண்மதி துயர்தீர்
கங்குல்நல்இளம் நிழல் கடுந்தொலை வெளியன்
தெங்கிளம் வரப்பெழில் செந்நிதி மகிழூர்
உங்குணி முத்தெழில் உடையா ளூரரே

6. கயமுகன் உடலழி காரணத் திருவுரு
நயவரத் திருவருள் நாடகப் பேரிறை
பயறுமுந்தெள்விளை பணிவநல் வயல்சூழ்
உயர்திணை யோர்துதி உடையா ளூரரே

7. சித்திநல் ஊழிச்சீர் காழியில் குடமருள்
பத்தரின் மனத்துறை பாற்கடல் கொடையோன்
முத்துவி ளைவயல் முக்கனி சூழ்கரை
உத்தமா பூசைசெய் உடையா ளூரரே

8. கிரிமுக டமரிறை கேதா ரத்தழல்
வரிஅர வணிமலை வரும்யுகம் கணிப்போன்
கரசலை பொன்னம் கருந்துள சிக்கவின்
உரிமையர் பூசைசெய் உடையா ளூரரே

9. விந்தியம் சாத்பூரம் வெள்ளியங் கிரியோன்
மந்திர மூலரின் மதியோகம் தந்தருள்
நந்தியம் நித்தியம் நால்வகை மல்லிநல்
உந்திப்பூ சைக்கருள் உடையா ளூரரே

10. தழலொளித் தமனியன் தற்பரஞ் சோதியன்
கழலொளி காட்டிச் சகலர்க் கருள்தரும்
பழங்காய் பூமரம் படர்கொடி மலர்க்கவின்
உழவோர் பூசைசெய் உடையா ளூரரே

–திருச்சிற்றம்பலம்–

## 188. பண்டாரவாடை – பாபநாசம் வட்டம்

**மத்தியபுரீசுவரர்** **அறுசீர் ஆசிரியவிருத்தம்**

1. காட்டுக்குள் ஆடிய கங்காளா கருணா கரனே கருப்பொருளே
கூட்டுக்குள் ஓடும் மூச்சளித்த குருவே கொடும்மழுச் சிவக்கொழுந்தே
மூட்டுவ லிதந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

2. நாட்டுக்குள் நரிபரி செய்தோனே நால்குரவர்தமிழ் நயந்தோனே
ஓட்டுக்குள் மூளையும் உணம்வளித்த ஓரொளி இருநிறத்தோங்காரன்
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

3. ஆட்டுங்க லையுடன் ஆடுமழில் ஆனந்தக் கூத்தன் ஆதியனே
காட்டுசின் முத்திரைக் கருத்துணர்த்தும் காஞ்சன மலையே கற்பகமே
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

4. ஏட்டுக்கருள் இருக்கும் காற்றலையே எழுதிய எழுத்தின் ஒலியலையே
தோட்டுக்குள் உறையும் பொன்னொளியே தூந்திரப் பிரதேசப் பனிமலையே
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

5. கோட்டும லர்தளிர் சூடுகவின் குடையலங் காரம் பாம்புகளே
சூட்டும் நவமணிநின் படைப்பே சூலைநோய் தீர்த்தநல் சுந்தரனே
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

6. சீட்டுக்க விதந்த தீஞ்சுடரே செம்பவ ளமேனிச் சங்கரனே
மீட்டிய வீணையின் மெல்லிசையே விண்மீன் கோடிசெய் வேதியனே
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

7. சூட்டிய திருவடி தீக்கைதந்து துதிப்பருள் நல்கிய சுயம்பொலியே
சாட்டியர் திரியுரம் தகர்த்தவிழி சந்திரன் சாபந்தீர் தத்துவனே
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

8. நீட்டிய ஓலையில் வன்தொண்டரை நேசமு டன்மீட்ட நிலகண்டன்
நாட்டிய நாயகன் நான்மறையன் நற்றமிழ் பேசிய நங்களிறை
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

9. வேட்டுவ னாகிப் பார்த்தனுக்கும் வெல்பாசு பதமளித்த வெஞ்சுடரன்
நாட்டியத் தான்குடி நாதமழை ஞானப்பெ ருங்கொடை நாயகனே
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

10, வீட்டுவி திவினை வகுத்தபிரான் விண்ணினர் மண்ணினர் வெல்வேந்தே
தேட்டுத்தி ருநாளைப் போவார்க்கும் தீக்கைதந் தருகேற்ற செஞ்சோதி
மூட்டுவலி தந்த முக்கணனே முற்றும் நலம்செய்வ துன்கடனே
பாட்டுக்குப் பரிசளி பாவலனே பண்டார வாடைப் பரம்பொருளே

–திருச்சிற்றம்பலம்–

## 189. ஊத்துக்காடு

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. புனல்விரி புவியேழ் பொற்கழல் மூர்த்தி
சனகா தியர்க்கருள் சதுர்மறை ஓதிய
இனஉயிர் துதியேற் றின்னருள் புரியும்
கனகநல்ஊத்து காடுறை யோகியே

2. தழலெழில் திருவுரு தாமரைக் கழலோன்
குழல் கரத் தரிந்தருள் கொன்றையஞ் சடையோன்
நிழல்நிறை பெருவெளி நிரந்தரன் நடனன்
கழனிநல் ஊத்துக் காடுறை யோகியே

3. பதமலர் துதிப்புவி பத்தர்க் கறிவளி
புதனொடு எண்கோள் புதிரீர்ப் பாசழி
நிதம்நம சிவாயம் நினைப்பபோர்க் கருளிறை
கதமழி ஊத்துக் காடுறை யோகியே

4. விடமுறை அரவணி விடையமர் பேரனல்
குடமுறை சூலநல் குளிர்கரச் சங்கரன்
திடகரி உரித்த செஞ்சடை விஞ்சையன்
நடம்புநல்ஊத்துக் காடுறை யோகியே

5. விலைபகர் நவமணி வீதிநல் மதுரையின்
சிலைமிகு கோயிலின் திருவிளை யாடலன்
அடைகடலேழையும் அழித்தருள் புரிந்த
கலைவளர்ஊத்துக் காடுறை யோகியே

6. தந்தமா கேழலை தடிந்துகொம் பணிந்தோன்
மந்திர யாழிசை வானவர் துதித்தெழும்
இந்திர வானவர்க் கின்னருள் புரிந்த
கந்தக ஊத்துக் காடுறை யோகியே

7. பகலிர வளிக்கநல் பரிதியை வகுத்த
தகதகப் படரொளி சற்குணச் சிற்பரன்
நுகர்வளித் துயிர்களின் நுணமலம் தீர்த்த
கணிநல் ஊத்துக் காடுறை யோகியே

8. விஞ்சையர்க் கமுதளி வேணிய லங்காரன்
அஞ்சிறை காரிக்கு மருமறை அளித்த
நஞ்சணி கண்டன் நால்யுகம் வகுத்தோன்
கஞ்சனை ஊத்துக் காடுறை யோகியே

9. தடைமலக் கேவலம் தண்ணுயிர்க் கருவினை
படைப்புது மாயைசெய் பரம்பொருள் ஆதியன்
சடைமுடிச் சங்கரன் சற்குண வேதியன்
கடைமணி ஊத்துக் காடுறை யோகியே

10. முயலகன் முதுகினில் முதிர் நாட் டியஞ்செய்
நயக்கவி நல்கிநல் தருமிக் கருளனல்
வயல்வன நாரைக்கும் வானக மளித்த
கயப்பூ ஊத்துக் காடுறை யோகியே

–திருச்சிற்றம்பலம்–

## 190. மிலட்டூர்

**உண்ணாபுரீசுவர்** **கலிவிருத்தம்**

1. ஞாலச்சு ழற்சியில் நல்லுயிர் கோடிசெய்
சூலக்க ரத்தனல் சுந்தரக் கூத்தன்
பாலையை நெய்தலாய் பாலித்த சுயம்பன்
தூலமி லட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

2. தானத்தி ருக்கழல் தந்தைதாய் தந்தமுதல்
ஏனக்கு ருளைக்குள் ஏகவ டிவுடையன்

ஈனப்பிற வியறுத் தின்பஞ்செய் ஈசனை
சூனநல் மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

3. பூதக ணந்தொழும் புண்ணிய மூர்த்தி
நாதத்தி ருவடிவன் ஞாலஞ்செய் சங்கீதன்
ஏதம ழித்திம்மை இனிதருள் ஈசனை
தூதுளை மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

4. கோடைநுங் கருளளி கோமே தகமலை
காடைக்கு மருளிய கங்கா தரமூர்த்தி
பீடைப்பி ணியழிப் பிங்கலக் கழலனை
தேடயம் மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

5. நால்வரின் திருமுறை நயந்தருள் நல்கிய
காய்வெளி நிலம்நீர் தீதந்த கருப்பொருள்
நூல்சிலந் தியைச்செங் கணன்செய் அமுதனை
சூல்மலர் மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

6. காளைநல் வாகனன் கனகத்தி ரள்மேனி
வேளககீ ரைவத்தூண் விருந்தளி மாறற்கும்
தாளின் நீழலளி சங்கர மூர்த்தியை
சூளைநல் மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

7. ஏழைஇ லங்கைக்கே இரும்பிறப் பழிவுற
மேழிய நங்கையின் மென்கவின் நகைசெய்
ஆழியன் அடிதொழ அருள்செய் பரமனை
சோழிய மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

8. மாணிக்க மாமலை மரகத மாலையன்
ஆணிபொன் மேனியன் அம்பலத் தாண்டவன்
கேணிநீர் அருள்மழை கேதாரத் தீசனை
தோணிநல் மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

9. காஞ்சிதி ருத்திலை கடவூர் நாயகன்
நாஞ்சில்சு சீந்திரன் நனிகொல் லிமலையர்
தீஞ்சுவைப் பாட்டளி செம்பொன் ஈசனை
தூஞ்சிறை மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

10. மாலைம ணிக்கழல் வாழ்வியல் வினைவகு
ஞாலப்பெ ருந்தகை ஞானமா நடராசன்
ஏலப்பூ மேனியன் ஈசன்தி ருக்கழலை
தூல மிலட்டூரில் துதித்தெழு நெஞ்சமே

–திருச்சிற்றம்பலம்–

## 191. வலங்கைமான்

**அருணாச்சலேசுவரர்** **கலிவிருத்தம்**

1. மானிடர் நினைக்கும் வடிவெடுத்தருளும்
வானவ ரிறைவன் வளரொளி அருவன்
ஞானிய ருலகின் நலமருள் ஆசான்
தேனியல் வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

2. கோயிலும் வழிபடும் கூடமும் மானிடம்
நேயம தியொரு நெக்குறும் புனிதமண்
ஆயக லைகளின் ஆனந்தக் கூத்தன்
சேயணி வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

3. பேரொரு கோடியும் பேதங்கன் கோடியும்
பாருறை மானிடம் பகுக்கும்வீண் அகந்தை
நேருரைத் தாண்டிய நெடுமைம் பூதத்தன்
சீருறை வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

4. ஆற்றலே ஆண்மை அருளது பெண்மை
கூற்றினை உரைத்தோன் கொண்டதி ருவுருவம்
மாற்றஞ்செய் கற்பனை மானிடர் ஆசைகள்
சீற்றமில் வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

5. வேதமோ ரயிரம் விதவித மொழிகளில்
நாதனே படைத்தவை நாவொலிப் புதுமைகள்
ஆதிமொ ழித்தமிழ் ஆண்டவன் உரைத்தும்
சீதன வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

6. துகளணுப் பொடியில் தோன்றிய உயிருடல்
புகழழி வில்லோன் புரிதொழில் வினைவிதி
அகநடுத் தீயிருள் ஆனந்தக் கூத்தன்
திகழொளி வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

7. ஊர்வன பறப்பன ஓடிநடப்பன
போர்ப்பன சிறைமுடிபுரை மருத்தோலின
ஆர்ப்பன அகவலும் ஆரிசைக் கொடைசெய்
சீர்பெரும் வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

8. வனவிலங் காற்றலும் மானிட மதிசெயல்
புனைபொறி கருவிகள் புனிதஞ்செய் குண்டலி
மனமறி கற்பனை வளர்கலை கொடையிறை
தினந்தரும் வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

9. பிறப்பிறப் பைம்பூத பெருமைசி றுமைகள்
வெறுப்புவி ருப்புகள் விதவித உணர்வலை
பொறிப்புனல் குருதிசெய் புவிவளர் முழுமுதல்
சிறப்பளி வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

10. அஞ்செழுத் தருமறை ஆண்டபே பரண்டத்தன்
செஞ்செவி வாரணத் துரிஉடைப் பேரொளி
கிஞ்சுகச் சிதடென் கேடறுத் தருள்புரி
செஞ்செய் வலங்கைமான் திருத்தழல் தெய்வமே

-திருச்சிற்றம்பலம்-

## 192. அம்மாப் பேட்டை

**புற்றிடங்கொண்டீசுவரர் அறுசீர் ஆசிரியவிருத்தம் சௌந்தர்ய நாயகி**

1. தவமுணர் அறிவளி ஆசானே சங்கா ரமுதத் தற்பரனே
நவயுக நாயக நான்மறையே நம்பிய அடியவர்க் காரமுதே
புவனமேழ் படைப்பருள் பொன்னொளியே பொங்கா வரம்பூ மலையனே
அவப்பிணி நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

2. நற்பு தங்களின் நாயகனே நாற்றிசைக் காற்றருள் நாயகனே
கற்பூர வல்லியின் கனிச்சாறே கயிலயத் தருகசைக் கங்கைநதி
பொற்பூ வனத்தில்லை புண்ணியனே புதுமைக்கோர் புதுமைசெய் பூங்கழலே
அற்பார் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

3. விடமார் மிடறெழில் வேடவனே விண்ணவர்க் கமுதளி வேதியனே
தடமா மரைமால் தொழுதுக்கும் தற்பரஞ் சோதி விற்பனனே
நடமார் மணிக்கவின் நற்கழலே நால்யுகம் கோடிசெய் நாதமணி
அடமார் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

4. காதோர் தோடுடைக் கற்கபனே கழல்தனில் அரவணி காஞ்சனனே
வேதா கமச்சொல் வெஞ்சுடரே விண்ணவர் தொழுதொழும் வேந்தரசே
பாதமலர் நிழல் பாலித்தருள் பரமேச்சரனே பாற்கடலே
ஆதா ளைநீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

5. எல்லார் நெடுவெளி ஏகம்பன் இணையில் ஏழ்புவிப் பேரிறைவன்
நல்லார்க் கெளியன் நாயன்மார் நனவுறைந் தண்புசெய் நாடகத்தோன்
கல்லார் கற்றவர்க் கருளளக்கும் கருணைப் பெருங்கொடைக் கார்முகிலன்
அல்லல் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

6. பதஞ்சலி பிருகுபு லிப்பாணி பணிந்தெழ அருளிய பாண்டரங்கா
கதமழி கருணைமா கடலமுதே காமதே னுதொழும் கற்பகனே

நிதமொரு பொறிமதி தருமணியே நித்திலப் பொன்விழி நாயகனே
அதஞ்செய் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

7. மிஞு றார் கொன்றை எருக்கலரை மென்மணி மிடற்றிடை சூடியகோன்
முஞலார் கடறிடை மூலிகையின் முப்புசெந் தூரநல் வேதிகைசெய்
உஞறார் குண்டலி ஒலிச்சித்தோர் உஞற்றும் ஆக்கினை ஒளிவேந்தே
அஞரார் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

8, பேரிசை யாழ்கரப் பெருஞ்சுடரே பிங்கல மாமணிப் பெரியோனே
தேரிசைத் தமிழ்மறை நால்குரவர் தினந்தொழு துருகிய திருவருளே
சூரியக்குறைதீர்த் தருளியகோன் சுந்தரக் கயிலையின் சுடர்மணியே
ஆரிடர் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

9. தவமலர் சண்பக மேற்றபிரான் சந்தனச் சாந்தணிச் சாந்தமலை
நவமணி மாலையன் நடனசபை நங்களின் தெய்வம் நான்மறையோன்
புவனமே ழேழின் பொன்னொளியன் பூதக ணந்தொழும் புணலீசன்
அவலஞ்செய் நீரிழி வையகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

10. பூக்கும்ம லரெலாம் நினகழலில் பூசைசெய் ஆசைகொள் என்நெஞ்சம்
துக்கணங் குருவிக்கும் தொங்ககம்செய் தொல்பரஞ் சோதி தொணடரன்பே
காக்கும் கடவுளே கயிலையனே கலியுகங் கோடிசெய் கற்பகமே
ஆக்கம் அழிநீரிழி வகற்றும் அம்மாப் பேட்டையின் அருளோனே

–திருச்சிற்றம்பலம்–

## 193. தீபாம்பாள்புரம்

**வான்மீகுநாதர்** **கலிவிருத்தம்**

1. அதிபதி அம்பலன் ஆணவ மொடுக்கும்
விதிமதி வகுப்பனல் வில்லங்கப் பிறப்பினில்
ஓதுங் குயிர் தெளிவுற உணர்வினில் மதியளி
பதிமலர் தீபாம் பாள்புரத் தண்ணலே

2. கருவிட முறைந்தொளிர் கண்டநல் காசியன்
தெருவெழில் ஆரூர் திருவிளை யாடலன்
செருவினில் புன்னகை செய்துபு ரமெரி
பருமலர் தீபாம் பாள்புரத் தண்ணலே

3. அகிலொடு புனுகுசவ் வாதபி டேகன்
உகிர்பெரும் புவிஉரி உடுத்திய ஒளிமலை
முகில்வெளிச் சித்தரை மூலனென் றாக்கிய
பகிர்வுளத் தீபாம் பாள்பூரத் தண்ணலே

4. மழுமுனை ஒளிமிளிர் மணிக்கரத் திலகன்
சுழுமுனை ஏறுமோர் சுந்தரத் தீபிகை
கொழுமுனைப் பெண்ணாள் கொழுநனுக் கருளிய
பழுநெல் தீபாம் பாள்புரத் தண்ணலே

5. விதியலங் காரன் வேதியல் மருத்துவன்
சுழியமும் சதுரஞ்செய் தொகுபொதி மதியளி
மொழிமகள் கேள்வனின் முனிசிரம் முசித்த
பழியழி தீபாம் பாள்புரத் தண்ணலே

6. ஆல்நிழல் அமர்தழல் அண்டங்கள் கடந்தோன்
மால்நான் முகன்புவி வானோர் வழிபடும்
நூல்மதி நுவல்திறன் நுணுகுகற் பனைதரும்
பால்கசுத் தீபாம் பாள்புரத் தண்ணலே

7. ஞானநல் மேனியன் நவயுகப் புகழோன்
வானவப் பதவியர் மண்ணினர் துதித்தெழும்
ஏனலுக் கருளிய இன்னிசை ஞானியன்
பானல்நல் தீபாம் பாள்புரத் தண்ணலே

8. சம்புநல் சற்குணன் தடந்தோள் அரவணி
வெம்மைநல் மேனியன் விழிமலர் ஆதியன்
செம்மையர் தவத்தோர் திருத்தொண்டர்க் கருளளி
பம்பைநல் தீபாம் பாள்புரத் தண்ணலே

9. காலக்க திரொளி கனகத்தி ருத்தழல்
தூலமும் சூக்குமமும் சுகவுடல் பிறப்பொடும்
ஞாலநல் ஞானமும் நல்கிமண் ணுயிர்க்கருள்
பாலவன் தீபாம்பாள்புரத் தண்ணலே

10. தெளிவெளிச் செஞ்சுடர் திருவருள் மேனியன்
வளிவலம் வாழுயிர்க் கன்பருள் வானனல்
எளியோன் என்பிழை எல்லாம் பொறுத்தருள்
பளிஞ்சிநல் தீபாம் பாள்புரத் தண்ணலே

–திருச்சிற்றம்பலம்–

## 194. கீழக் கோவில்பத்து - உடையார் கோவில்

**கரவனாதீசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் தர்மவல்லி**

1. உழவுசெய் விதைமுளைப் புணவளித்த உயரிளை யான்குடியை உடனேற்ற
அழலொளி யோடினைத் தருளளித்த அம்பலப் பெருங்கொடை அனலீசன்
விழவொளித் தில்லை விண்ணவனே விரதியர் நடுவே வீற்றிருக்கும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவணா தீச்சரக் கற்பகமே

2. விழிதனைப் பதித்த வேடவனின் விண்ணுயர் பரிவினை விதந்தேற்றே
எழில்மரைத் தாள்நிழல் தந்தபிரான் ஏகம்பத்திருமேனி அலங்காரம்
பொழிலா வடுதுறைப் புண்ணியனே புகழுறு பதின்முவர் நடுவே
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவணா தீச்சரக் கற்பகமே

3. விழிமல ரருச்சனை செய்மாற்கும் வெல்புகழ் ஆழியை அளித்தபிரான்
பழியில் வேடற்கும் பரிசளித்தே பைந்தமிழ் மதுரையில் வீற்றிருந்த
அழிவில் ஆனந்தத் தாண்டவனே ஆன்மா படைசூழ நீயிருக்கும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவணா தீச்சரக் கற்பகமே

4. மழவிடை வாகன வானவனே மறையுறை மாதவ மணிமகுடன்
அழகிளம் மனைவியை அளிக்கவென்றீர் அளித்தநல் இயற்பகை சுற்றமுடன்
எழிலிறை நின்னோ டிணைந்திருக்கும் ஏழுல கதிசயக் காட்சிதரும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரக் கற்பகமே

5. வழக்குரைத் தோலையில் வன்தொண்டரின் மணமறிந் தாட்கொண்ட மன்னவனே
கிழக்குற உடுக்கோள் புகைக்கொடியும் கேடறச் சுழலும் விதியமைத்தோன்
பழமடி யார்பதினெண் சித்துக்களும் பதிவுற இடைநீ வீற்றிருக்கும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரக் கற்பகமே

6. குழவியூன் படைத்த குலமகளும் குணமலி அடியவர் தணைஏற்ற
கிழவுரு கேள்கவின் புனிதவதி கிடந்துருண் டுலவிய ஆலங்காடா
சூழல்வாள் சேரரும் தோழமைநல் சுந்தரர் நின்னரு குடனிருக்கும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரக் கற்பகமே

7. ஏழமை வந்தியின் பிட்டேற்றே இருங்கரை அடைந்த இளையோனே
வேழத்து ரியுடை வேடவனே விசயற்கும் பாசுப தமளித்தீர்
சோழகர் சம்பந்தர் தமிழிசைக்க தெகையடி யாருடன் நீயிருக்கும்
கழலொளி பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரக் கற்பகமே

8. கூழளி சேந்தரும் குடும்பமுற குளிர்கழல் நிழலளிக் கொன்றையனே
ஊழளி வேடனை நாளனாக்கி உலகிடைப் பரிவுநல் உயிர்வளர்த்தே
அழியப் பேரலை உலகழிக்கும் அன்றுநின் றாடும் அழற்கோலக்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரக் கற்பகமே

9. குழிமுயல் முதலை யாளியானை குவலயத் துடல்செய் கோமானே
சுழிவுறு நதிகடல் தொடர்புயலும் தோற்றஞ் செய்தருளிய சுந்தரமே
எழில்விடை ஊர்தி ஏகம்பா இருநிறத் தோரெளி வீற்றிருக்கும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரம் கற்பகமே

10. முழவொடு தண்ணுமை முழக்கமுற முதிர்கதிர் விண்வெளி தாண்டிநிற்க
அழகுற மாலயன் அடிபணிய அமரரும் இந்திரன் பூசைசெய்ய
பழமடி யார்புதுப் பத்தர்களும் பணிவுற பரன்நீ நடுவிருக்கும்
கழலொளிப் பேரெழில் காட்டியருள் கரவனா தீச்சரக் கற்பகமே
–திருச்சிற்றம்பலம்–

## 195. நெல்லித்தோப்பு

**பிரம்மஞானபுரீசுவரர்** **கலிவிருத்தம்**

1. இந்திர போகம் இன்னுயிர்க் கருளும்
மந்திர வீணையன் மணிப்பிறை முடியோன்
அந்தரக் கூத்தன் ஆறங்கத் துறைஇறை
சுந்தர நெல்லித் தோப்புறைச் சம்புவே

2. இளமிட பத்தமர் ஏழேழ் புவியன்
அளவிடக் கரியன் அம்பல நாயகன்
தொளைக் குழல் மாலுக்கும் சுகமளி கடவுள்
அவைநல் நெல்லித் தோப்புறைச் சம்புவே

3. அறிவருள் விளக்குநல் அறமருள் ஆனந்தன்
நெறிபிறழ் மறையோன் நீசம றுத்தருள்
பொறிவரி அரவணி பூங்கழல் தழல்மலை
துறைக்குறை நெல்லித் தோப்புறைச் சம்புவே

4. புள்ளிம ரைத்தோல் புனைதழல் மேனியன்
வெள்ளிவி டையமர் விரைமலர்க் கொன்றையன்
எள்ளிய சலந்தரன் இரும்புடல் அழித்த
துன்ப நெல்லித் தோப்புறைச் சம்புவே

5. பஞ்சினும்ம மெல்மனப் பொன்னனை யாட்கும்
விஞ்சிய வேதைசெய் விழுப்பொன் அளித்தேன்
கஞ்சம லையமர் கருங்கண்ட மூர்த்தி
துஞ்சலர் நெல்லித் தோப்புறைச் சம்புவே

6. வெகுளிவெங் களிறினை மிறளுற உரித்த
மிகுமின் னல்விழி விண்ணவர் பூசைசெய்
இகுளிம லர்சூடும் ஏகம்பத் திருவருள்
தொகுவயல் நெல்லித் தோப்புறைச் சம்புவே

7. ஞாழலெ ருக்கணி நாதத்தி ருவிசை
ஆழக்க டலுறை ஆயிரங் கோடியுயிர்
வாழும்வ கையளி வண்ணப்பூங் கழலன்
தோழமை நெல்லித் தோப்புறைச் சம்புவே

8. வளைவிலை பகர்ந்தே பகடிசெய் மழுவரன்
கிளையால் அமர்க்குயிர்க் கின்னருள் புரிந்தோன்
சுளையருள் தருமிறை சுந்தரத் தாண்டவன்
துளைக்குழல் நெல்லித் தோப்புறைச் சம்புவே

9. புணைகுடக் காசியன் புங்கலன் செஞ்சுடர்
அணைந்தோர் தறந்தோர் அகப்புறப் பூசையர்
இணைந்தோர் வினைதீர்த்தி னிதருள் ஏகம்பன்
துணைநல் நெல்லித் தோப்புறைச் சம்புவே

10. விரிசுடர் விண்ணவன் வேழத்து ரிபுனை
தரிசனக் காட்சிசெய் சற்குண வேதையன்
திரிபுர மெரிசுடர் சிறுபிறை சூடிய
துரிசறு நெல்லித் தோப்புறைச் சம்புவே

-திருச்சிற்றம்பலம்-

## 196. புலவன் நத்தம்

**பிரமஞஸனேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. பொன்னேர் குன்றன் புரிய நடுவிழி பூங்கரப் புகழ்ஞானி
தன்னேரில்லா தாரணிப் பேரிறை சங்கமம் தருமாசான்
நன்னோர் மாதர்க்கும் நன்றளி புலவன் நத்தத்தின் ஞானகுரு
மன்னோர் மணிக்கழல்வணங்கும் உயிர்க்கருள் வானவச் சோதியனே

2. அந்தமும் ஆதிசெய் அணிநடு அவனியில் அனுபவமாகி நின்றோன்
செந்தழல் ஞாயிறு செறிகோன் உடுக்களும் சீர்கோடிதருவோன்
நந்தனக்கருளிய நான்மணிப்புலவன் நத்தத்தின் ஞானகுரு
வந்தனைத் தந்தை மாயையைத் தந்தோன் வானவச் சோதியனே

3. ஒன்றொளி இருநிறன் ஒன்றாய் வேறாய் உடனாய் உலகுயிரில்
நின்றநல் சுந்தரன் நிலவணிச் சங்கரன் நீண்ட சடை முடியன்
நன்றொடுதீதளி ஞாதிருப் புலவன் நாதத்தின் ஞானகுரு
மன்றுறை நடனன் மாசழி இறைவன் வானவச் சோதியனே

4. குஞ்சித பாதன் கூடலந் தலைவன் கொடுமுடிக் காலகண்டன்
அஞ்சனன் அயனறி யாச்சுடர் அருவன் அன்பினி ஆடவல்லான்
நஞ்சனி கண்டன் நாணலப் புலவன் நத்தத்தின் ஞானகுரு
மஞ்சனி மலையன் வணங்குநர்க் கன்பன் வானவச் சோதியனே

5. இம்மன் ஏழேழ் ஏரண்ட மெய்ப்பொருள் இல்லறம் தரும்பெருமான்
செம்மண் பூமியின் செங்கருந் திங்களன் திருமாவயலுழவன்

நம்பனெம் தந்தை நான்மலர் புலவன் நத்தத்தின் ஞானகுரு
வம்பன் சலந்தரன் கயமுக னுடலழி வானவச் சோதியனே

6. பன்னார் திருமுறைபாடலன் ஆடலன் பாரோர்த் துதிஇறைவன்
விண்ணோர் மண்ணோர் விரும்பும் உருவளி மேதினிப் பேரழகன்
நன்னார்புரமெரி நாட்டியப் புலவன் நத்தத்தின்ஞானகுரு
வண்ணநல் லிசையன் வணங்குநர்க் கெளியன் வானவச் சோதியனே

7. சென்றிலை நின்றதும் சீர்தவ நெறியுறை செஞ்சொல் சிவலோகன்
ஒன்றிய நாதஞ்செய் உலகவே தத்தமிழ் உரைத்தருள் ஊழியரன்
நன்றுறைதிருமந்திரம் வளர் புலவன் நத்தத்தின் ஞானகுரு
மன்றுறை ஆடலன் மானிடம் வளர்க்கும் வானவச் சோதியனே

8. கண்டவிடம் பிறை கரிமான் புலித்தோல் கனிந்தணி சங்காரன்
அண்டப்பே ரண்டன் ஆயிரம் புவியன் ஆவெருத் திருநீறன்
நண்ணுநர் நண்பன் ஞாலநல் புலவன் நத்தத்தின் ஞானகுரு
வண்ணச் சிலம்பணி மாநிதி வழங்கிறை வானவச் சோதியனே

9. பஞ்சபூ தம்புனை பாசுப தத்திறை பாற்கட லமுதளி கோன்
அஞ்செழுத் தாகியும் ஆயிரம் மொழிமறை ஆகியஆதிசிவன்
நஞ்சழி மருந்தன் நல்மனப் புலவன் நத்தத்தின் ஞானகுரு
மஞ:சும ழையருள் வையகத் தோர்க்களி வானவச்சோதியனே

10. குன்றிம ணிமாலை கோடெருக் கக்கமும் கூவிளந் தாரணியன்
பொன்றிகழ் மேனி பூதக ணஞ்சூழ் புனிதப் பெருந்தகையன்
நன்றினி யோர்வாழ் நயச்சொல் புலவன் நத்தத்தின் ஞானகுரு
வன்றிக் கமைச்சொடு மானிடர்க் கறிவளி வானவச் சோதியனே

–திருச்சிற்றம்பலம்–

## 197. கத்திரி நத்தம்

**காளத்தீசுவரர்** **கலிவிருத்தம்**

1. ஏரணத்திருவருள் இன்னிசை வீணையன் இருங்கலைஞன்
சூரணம் மூலிகை சுகச்செந்தூரம் கற்பமளி
சீரனை மாறிய தேவேந் திரன்துயர் தீர்த்தபிரான்
காரண காரியன் கத்திரி நத்தத்தின் கனலோனே

2. சின்னப்பி றைத்திங்கள் சென்னியில் சூடிய திருவருளன்
அன்னக் குழிநிறைத் தணிமிகு வைகையை அளித்துவந்த
மின்னலர் சடையன் வேதியப ரம்பொருள் விண்ணழகன்
கன்னல்நல் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

3. புன்னகை ஆதியன் பூங்கழல் வேதியன் புரிசடையன்
தென்னவன் மதுரைக்கும் தீதுசெய் கடலினை தீய்த்தழித்தோன்
தன்னவர் உயிரெனத் தயவளித் திருவினை மாயைதந்த
கனமழைக் காரணன் கத்திரி நத்தத்தின் கன்லோனே

4. தில்லைம லரணி செண்பக மேனிச் செந்தூரன்
எல்லாம் வல்லவர் என்றொருசித்தராய் வந்தபரன்
நல்லவலர் அல்லவர் நடுநிலை நீதிகள் நல்கியருள்
கல்மழைக் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

5. தவமணி நாயகன் சந்தனச் சாந்தினன் சற்குணத்தோன்
நவமணி விலைபகர் நான்மா டக்கூடல் நற்றமிழ்செய்
புவனப்ப டைப்பளி புண்ணியமூர்த்தி பூங்கழலன்
கலசநல் காரணன் கத்திரி நத்தத் தின்கனலோனே

6. இலைமலர் சூடிய ஏகம்பச் செஞ்சுடர் ஈசானன்
சிலைக்கரி கரும்புனல் சித்துசெய் மங்கலத் திருவருளன்
உலைத்தழல் வெஞ்சின உருவிருள் அந்தகன உடலழித்த
கலைவளர் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

7. உலகின் பேரிறை உயிர்களுக் கமுதளி ஒளிஏகன்
வலமிடக் கால்மாறி வளர்நடம் புரிந்த மகிழீசன்
புலர்கதி ரவன்திங்கள் புரைதீர்த் துதவிய போதாந்தன்
கலம்புவிக் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

8. உருத்திர திரள்மணி உறுபுலித் தோலணி ஓமொலியன்
பெரும்பே தைவேடன் பெண்கொலை பழியறப் பெருமைசெய்தோன்
அரும்பொருள் திருமுறை ஆறங்கம் திருக்குறள் அளித்துவந்த
கருத்துயர் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

9. அருவிம ழைநதி ஆகாய கங்கை அளித்தவள்ளல்
திருவுருக் சிலைக்கென செம்பொன் பொன்னனை யாட்களித்த
பெரும்பெயர் கோடியன் பிங்கல மூர்த்தி பிரிவில்லோன்
கருப்பொருள் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

10. தற்பரஞ் சோதியன் சங்கர மூர்த்தி தனிமதுரை
அற்புதப் பெரும்படை அருளுரு காட்டி அன்புவந்தோன்
சொற்பதங் கடந்த சுந்தரக் கடவுள் சுகமளிக்கும்
கற்பகக் காரணன் கத்திரி நத்தத்தின் கனலோனே

–திருச்சிற்றம்பலம்–

## 198. ரெங்கநாதபுரம் – திருவையாறு வட்டம்

**திருக்கரணீசுவரர்** **கலிவிருத்தம்**

1. பன்மலர் சூடிய பவளத் திருமேனி பாம்பணிந்த
கண்ணல்நல் கருணையும் காலமும் வகுக்கும் கங்காளன்
அன்றொடு இன்றும் நாளையும் அன்பருள் நாதாந்தன்
நன்மலர் பொழில்சூழ் ரெங்கநாதபுரத் தம்மானே

2. கருகுறு கள்ளியஞ் சுடலையில் ஆடும் காபாலி
சுருதிநல் வீணையன் சுந்தரத் திருவிழிச் சுயம்பொளியன்
திருவருள் கொடைதரும் செஞ்சடை மூர்த்தி தில்லைவெளி
நிருதிநி திவயல் ரெங்கநா தபுரத் தம்மானே

3. பனிமலைக் கொலுவுறை பவளமல் லியணி பார்துதிக்கும்
இனிதளிர் திருக்கழல் ஏழேழ் புவியோன் ஈசானன்
புனிதவ தித்தாயின் புகழந் தாதியைக் கேட்டுமகிழ்
நனிநெல் வயல்சூழ் ரெங்கநா தபுரத் தம்மானே

4. வெண்பொறி நாகநல் விரிபட மகுடத் திருமுடியன்
பண்பல கோடிசெய் படர்நரம் பிசையாழ் பயில்கரத்தன்
கண்மலர் பூசைசெய் கண்ணனுக் கருளிய காலமுனி
நண்ணுநர் நலிவழி ரெங்கநா தபுரத் தம்மானே

5. புன்சிரிப் புதிர்ப்பிதழ் பூவண்ண மேனி போதாந்தன்
இன்பமி குவினை இயற்றும் மாயையை ஈந்துவந்தோன்
அன்புரை வெண்பா ஐயடி களிசைக் கருளளித்த
நன்செய் வளமளி ரெங்க நாதபுரத் தம்மானே

6. படப்பொறி நாகமும் பன்மலர்த் தாமமும் சூடியகோன்
இடம்புரி வலம்புரி பாஞ்ச சன்யத்திசைக் கிசைந்தாடும்
குடநிலச் சேரமான் குளிரிசை அந்தாதி கேட்டுவந்த
நடனசிங் காரன் ரெங்கநா தபுரத் தம்மானே

7. தீபத் திருவுரு திங்களின் பிறையணி தேவதேவன்
நாபிக்க மலத்தெழு நான்முகற் கருளிய நாதாந்தன்
கோபப்பி ரசாத நக்கீரர் கவி நயந்தேற்ற
நீபநி ழல்மலி ரெங்கநாத புரத் தம்மானே

8. மெல்லிசைச் சங்கொலி வீணையின் நாதமும் எதிரொளிக்க
தொல்லிசை நாட்டியம் சுகமருள் ஆனந்தத் தாண்டவத்தோன்

கல்லாட தேவர்க்கும் கருணைக் கழல்நிழல் கனிந்தளித்த
நல்லிசை யோர்வளர் ரெங்கநா தபுரத் தம்மானே

9. பூமணிக்கொன்றையும் பொறிவரிக் கூவிளம் புனைமேனி
காமனை எரித்தே கயஅரு வுருவளி காசியண்ணல்
சாமீபம் சாய்ச்சிய் சாரூபம் உயிர்க்களி சங்காரன்
நேமநி யமநல் ரெங்கநா தபுரத் தம்மானே

10. முரட்டுப் பெருங்கரி முழங்குற உரித்த மூவிழியன்
இரட்டைம ணிமாலை இன்கவிக் கபிலர்க்கும் இனிதளித்த
சிரட்டைச் சதடெனை சிவய மறைகூறும் சீர்ந்தோன்
நிருத்தத் திருமேனி ரெங்கநா தபுரத் தம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 199. மன்னார் சமுத்திரம்

**மீனாட்சி சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. அன்னைவ யிற்றுக்கோர் சுமையாகி அவனிக்கும் தீங்குசெய் ஆனைமதன்
சின்னமு தப்பால் செங்குருதி சேர்வுறத் தீயேன் உடல்வளர்த்தேன்
என்னையோர் தொழும்பென ஏற்றபுகழ் ஏதுசெய் துன்பெரும் கடன்தீர்ப்பேன்
வன்னியந் தார்புனை வானவனே மன்னார் சமுத்திர மன்னவனே

2. தத்தித்த வழந்தே மற்றவரை தள்ளிக்கிள் ளிக்கழத்தின்னல்செய்தே
ஒத்தகு ழந்தையர் உடல்கீறி உதைத்துமகிழ்ந்தஓ நோயேன்
அத்தகு பேயெனை அடிமைகொண்டீர் அடியேன் ஏதுசெய் தவம்தீர்ப்பேன்
மத்தம லர்புனை மணிக்கழலே மன்னார் சமுத்திர மன்னவனே

3. மூவிரு வயதில் முன்னிருப்போர் முகம்தலை மண்ணிறைத் திண்ணல்செய்தே
நாவினில் கருந்தமிழ் நடஞ்செய்ய நல்லோர் குனிவுற நாயிருந்தேன்
காவலில் ஈனனைக் அடிமைகொண்டீர் கடவுளே ஏதசெய் தமைதிசெய்வேன்
மாமறை வில்வநல் மாலையனே மன்னார் சமுத்திர மன்னவனே

4. ஐயிரு வயதில் அமருடனே அகத்துறை விலங்கினைத் துன்பறுத்தி
செய்யிடை தானிய பயிரழித்தே தெருவூர் சேராப் பேயானேன்
மெய்யில் வீணனை அடிமைகொண்டீர் விமலனே ஏதுசெய்துனைத் துதிப்பேன்
மைவிட மிடறொளி மாதவனே மன்னார் சமுத்திர மன்னவனே

5. வயதுப தினெட்டில் ஈட்டிவிழி மங்கையர் இடைமிட றிடைபாய்ச்சி
கயமைசூ துமதுக் களிப்பேறி காடுறை கழுதைப் புலியானேன்
நயமில் உயிரொனை அடிமைகொண்டீர் நம்பனே ஏதுசெய்தடி துதிப்பேன்
வயக்கரி உரியுடை மங்கலனே மன்னார் சமுத்திர மன்னவனே

6. இருபதில் ஏறிய மூர்க்ககுணம் இளந்தலை முறைக்கோ ரவமானம்
கருவறைத் தாய்மதி கழுவேறக் கள்ளுண் டாடினேன் வனக்குரங்கேன்

எருதன் எனையும் அடிமைகொண்டீர் ஏதுசெய் துன்கடன் நான்தீர்ப்பேன்
மருகொடு கொன்றை மாலையனே மன்னார் சமுத்திர மன்னவனே

7. முப்பதில் முதிராப் பெண்ணிணைய முரண்பல எரிதுயர் இல்லறமே
ஒப்புதல் கருக்கிய உடல்வேட்கை ஒதுங்கிய திமிங்கலம் சிதைவாழ்க்கை
இப்பியச் சிதடெனை அடிமைகொண்டீர் ஏதும்பு ரியாமல் உளறுகின்றேன்
மப்பழி மாவிளங் கொன்றையனே மன்னார் சமுத்திர மன்னவனே

8. நாற்பது நாலும் இழிந்தநிலை நமச்சிவா யம்சிறி தறிந்தநிலை
ஏற்பதெல்லாமே முரண்பாடு இனமுடல் ஏழ்மதி பெருஞ்சுழியம்
தோற்குமுன் சிதடெனை அமைகொண்டீர் தூயனே கிறுக்கன் துதித்தழுவேன்
மாற்கோர் ஆழியை மகிழ்ந்தளித்த மன்னார் சமுத்திர மன்னவனே

9. கண்டம ணிநீறு கண்டவன்று கழுதையென் வயதோ அறுபதிமேல்
கொண்டப வம்பிணி சாக்காடு குறுகிய நிலையில் வலைக் குரங்கே
பிண்டப்பி திரெனை அடிமைகொண்டீர் பிங்கலா நின்கழல் சரணடைந்தேன்
வண்டலர் சூடிய வயிரமணி மன்னார் சமுத்திர மன்னவனே

10. சிந்தனைக் கெட்டாத சிவபெருமான் திருவடி யாரிடைச் செந்தோழன்
கந்தை மதியெனக் கண்டுகொண்ட கற்பக ஞானக் கடலமுதன்
பந்தம்ப பரிவுற அடிமைகொண்டீர் பரம்பொரு ளேநினைச் சரணடைந்தேன்
வந்தவர்க் கருள்தரும் வானொளியே மன்னார் சமுத்திர மன்னவனே

–திருச்சிற்றம்பலம்–

## 200. அளகை – தஞ்சை வட்டம்

**தஞ்சபுரீசுவரர் கலிவிருத்தம் ஆனந்தவல்லி**

1. செங்கதிர் தண்கதிர் சிலமரை ஏந்திய
தங்கத் தளிர்மனம் தற்பரஞ் சோதியன்
பொங்கமு தந்தரும் பூசைத்தளமுறை
அங்கம ரவணி அளகையின் ஈசனே

2. செறிவரை தூக்கிய சிரமிதித் தருளிய
பொறிப்புனல் நாயகன் புவனியத் தாய்மடி
நெறிமுறை பிறழார் நிரயந் தடுத்தருள்
அறிவளி அமுதநல் அளகையின் ஈசனே

3. கலிபிணி காலனை கரும்பனைத் தழுந்தும்
பொலிபுற மறுகணம் புனிதமும் நல்குநன்
ஒலிஒளி ஆக்கினை உலகோர்க் களிக்குநல்
அலிஆண் பெண்ணோன் அளகையின் ஈசனே

4. முன்னமே பாலித்த முளைக்கரு உயிருடல்
பின்னமும் பாலிக்க பிறப்பிறப் பிணைமதி

பொன்னூர் கழல்நிழல் புதுவிதி அருள்தரும்
அன்னூர் அமுதன் அளகையின் ஈசனே

5. பிறப்பிறப் இல்லோன் பெண்கரு உறையா
சிறப்புறை தெய்வம் சிவக்கொழுந் தேர்வளன்
நிறமணம் ஒளியுரு நீர்சுவை நிரந்தரன்
அறப்புகழ் நாயகன் அளகையின் ஈசனே

6. புதுமுது இளமை பொறிப்புனல் புவிமுதல்
இதுஅது உதுவாய் இவனிவள் அவரவை
எதுமுதல் இறுதி எதற்கேன் விடையவன்
அதுமறை அழலவன் அளகையின் ஈசனே

7. துகள்போடி அணுத்திரள் சுகந்துயர் உண்டியை
புகழிகழ் அழிவெழல் புரைநிறை இறைமுதல்
திகழெண் குணத்தோன் சிதம்பர நாயகன்
அகலில் பேரொளி அளகையின் ஈசனே

8. கணையக் குழல்குருதி கால்நிறை நுரைப்பை
பிணைசிறு நீரக பிணித் துயிர்தரும்
இணைகழல் தொழுதெழ இனிஇலைப் பிறவினென்
றணையுயிர் திருக்கழல் அளகையின் ஈசனே

9. முதலிடை கடையோர் முழுச்சூழி மதியோர்
கதமிதக் குணநலர் கற்பனை சிறிதிலர்
பதமலர் தொழுதெழும் பரம்பரை அடியவர்
அதமற அருள்தரும் அளகையின் ஈசனே

10. செம்மைந லந்தரும் சீர்புகழ் வாழ்வொடு
மும்மைய றுத்துயிர் முதலிடம் சேர்தரும்
வெம்மைவி முச்சுடரை விரும்பித் தொழுதழ
அம்மைநல் நாயகன் அளகையின் ஈசனே
–திருச்சிற்றம்பலம்–

## 201. கருந்திட்டைக்குடி - கரந்தை

**வசிட்டேசுவரர்** **கலிவிருத்தம்**

1. பிடர்வரை பதமுற பெருநடம் புரிமலை
கடறுறை கரியதள் இடைபுனை எரிசுடர்
குடர்கிழி மாலுரம் குறைத்தழி குவலயன்
படர்சடைப் பரமனின்பழந்தளிர் கரந்தையே

2. அடல்புலி அதளணி அவிரொளி அனல்மலை
கடல்கரை புறமுதக் கனையரி கழுமலன்
உடலறக் கவின்மதன் உடையவன் காணருள்
கொடையளி பரமனின் குளிர்தளிக் கரந்தையே

3. மடமகள் சிலைசெய மடிநிறைப் பொன்னருள்
இடைவிடப் பாம்பணி இசைபுனை யாழ்கரன்
வடகடல் இமயம் மலையென மேலெழ
தடமளிப் பரமனின் தனித்தளிக் கரந்தையே

4. எடையுறைக் கோவணம் இணைஎடை அடியவர்
கொடையறம் உலகுணர் கொள்கைசெய் மணிச்சுடர்
சடைமுடிப் பிறைமிளிர் தழல்மலை தவமுனி
விடையமர் பரமனின் விழுத்தளிக் கரந்தையே

5. விடமயின் றமுதளி மிடறொளிச் சடையினன்
தடம்புரள் அரியயன் தழலடி தொழுதெழ
உடைமையும் பதவியும் உரிமைசெய் வேதியன்
படை மழுப் பரமனின் பதத்தளிக் கரந்தையே

6. தடமல ரெருக்கமும் சரக்கொன் றையணி
சுடலையந் திருநடம் சுழல் புரிந் ததிர்தர
குடகுணத் திசைபடர் கொடிமின் ஒளிவளர்
சடைமுடிப் பரமனின் தனிதளிக் கரந்தையே

7. அடிமுடி அரியயன் அறியாப் பேரொளி
துடியொலி உலகிடை தொழுமுயிர்க் கருள்தரும்
கடிகமழ் புகைநடு கழலொளி ஒளிர்வுறும்
படிவரைப் பரமனின் பழந்தளிக் கரந்தையே

8. தொடர்நடைக் காழியர் சுகசிவி கைபெற
படரிசைத் தாளமும் பந்தரும் அருள்தணல்
மடமரை வேடற்கும் வானகம் தந்தோன்
சுடரொளிப் பரமனின் தூந்தளிக் கரந்தையே

9. படப்பாம் பணியழல் பதமலர் மஞ்சிணை
குடச்சே ரன்கவி குளிர்தமிழ் ஏற்றவன்
அடரிசை ஆனாயர் அகமகிழ் விண்ணருள்
தடந்தோள் பரமனின் தகுதளிக் கரந்தையே

10. புடம்படர் பொனனொளி புரிசடை ஆதியன்
சுடலையம் பொடியணி சுந்தரத் திருவுரு
கடம்பவ னத்துறை கரியதள் தோடணி
இடரழிப் பரமனின் எழில்தளிக் கரந்தையே

–திருச்சிற்றம்பலம்–

## 202. கோவில் பத்து

**ஆபத்சகாயர்** **கலிவிருத்தம்**

1. சங்கொலிப் பூசையில் தாரணிக் கருள்தரும்
இங்கிதப் பூம்புனல் ஏழையர் வாழ்வொளி
தங்கத் திருமலர் தாமரை நெடுஞ்சடை
கொங்கலர் மேனியன் கோவில்பத் தாரமுதே

2. புண்ணியப் பாம்புகள் புரள்திரு மேனியன்
வெண்ணீ றணிந்தொளி வெந்தழல் ஏற்றிய
கண்ணியக் கடவுளன் கயிலயந் தளமுறை
குண்டுநீர் விடமுண்ட கோயில்பத் தாரமுதே.

3. சுத்தச்சு டலையின் தூவெண் ணீறணி
தத்துவச் சித்துரு தற்பரஞ் சோதியன்
மொத்தப் புவியேழை மூந்துறப் படைத்த
கொத்தலர் எருக்கணி கோவில்பத் தாரமுதே

4. கற்பனை தோற்றுதோர் கற்பகப் பேரொளி
அற்புத மாயைகள் அடிபணிந் தேவல்செய்
சொற்பொருள் தாண்டிய தூயதோர் பரம்பொருள்
கொற்றவெண் விடையினன் கோவில்பத் தாரமுதே

5. மூலப்பண் டாரத்தை முன்னளி பரஞ்சுடர்
ஞாலத்து யிர்படை நாலிரு குணமணி
ஓலக்க டலூழி உடற்றிய மாமலை
கோலநு தல்விழிக் கோவில்பத் தாரமுதே

6. மந்திர யாழிசை வளர்மொழி நல்கிய
அந்தரத் தாண்டவன் அமுதளி பூரணன்
இந்திர வானவர் இறைஞ்சித் துதிசெயும்
குந்தகம் அழிசுடர் கோவில்பத் தாரமுதே

7. சூரிய மீனுடைந் துருவெழு புவியிதில்
சீரிய உயிர்வரு செஞ்சடைத் திருமுதல்

பாரிடை மானிடம் பணிந்தெழும் அருவுரு
கூரிய மழுக்கரன் கோவில்பத் தாரமுதே

8. நாநிற மானிடம் நல்கிய வேதியன்
பூநிறம் நறுமணம் போதொடு தேனளி
மாநிற மலர்புனை வானொலிப் பேரிறை
கோநிறப் பொன்மிளிர் கோவில்பத் தாரமுதே

9. சத்தசத் தானந்த சற்குணப் பரம்பொருள்
சித்துக ளூறிய செய்வினை மாயைகள்
வித்துவி தைத்துப்பின் வேரறுத் தழிப்பனல்
கொத்தலர் சூடிய கோவில்பத் தாரமுதே

10. நல்வினை தீவினை நவயுகப் பல்வினை
வல்வினை வலைவிரி மாயையும் தன்வினை
எல்வினை யாக்கிய ஏகம்பத் தீசன்
கொல்வினை தீர்த்தருள் கோவில்பத் தாரமுதே

–திருச்சிற்றம்பலம்–

## 203. நல்லிச் சேரி

**சம்புநாதர்** **கலிவிருத்தம்**

1. ஒருவனே இருநிறம் முக்கண்ணன் நால்மறை ஐமுகத்தன்
செருவிழி சினவா திருவருளன் திருவிடை மருதூரன்
பரணரின் அந்தாதி பாடமகிழ் பரம்பொருள் கயிலாயன்
திருநிதி நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

2. குளமல்லி ஊமத்தம் கொன்றையணி குவலயக் கருணைநதி
உளப்பெரும் கோயிலின் உணர்வுருவன் ஒளிமலர்த் தேரெழிலன்
இளம்பெரு மானுக்கும் இனிதளித்த ஏழிசை யாழ்வளவன்
தெளிமதி நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

3. அழல்முடி அருளடி அயனரியும் அறியா ஏகம்பன
குழல்துடி யாழிசை குயிற்றுமண்ணல் கொங்கணர் குலத்திலகன்
எழுங்கவி அதிரா வடிகளுக்கும் எழிற்கழல் நிழலளித்த
செழுநிதி நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

4. வட்டமும் செவ்வகம் அறுகோணம் வளர்பிறை தானளித்தோன்
கட்டமு தளிக்கும் கருணைவள்ளல் காஞ்சியின் ஏகம்பன்
பட்டினத் தடிகள் பாடலுக்கும் பரிவளி பரஞ்சோதி
சிட்டரர் நெல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

5. வெம்மையும் செம்மையும் சேர்ந்ததழல் விண்ணிடி மின்னலொளி
அம்மையும் அப்பனும்ஆகியவன் அருவன் அருவுருவன்
நம்பியாண் டார்நம்பிக் கருளிய நான்மறை நாதாந்தன்
செம்பொருள் நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

6. புதிர்மிகு விண்மீன் கோடிசெய்த பொன்மிளிர் அருவுருவன்
எதிரெதிர் பணிபுரி இருவினையும் ஈயும் மாயைதந்தோன்
பதிமதி விதிவினை பரிவுமளி பாற்கடல் பாலமுதன்
திதிநிதி நல்லி சேரியமர் செங்கழல் பேரொளியே

7. நீர்நிலை பூவொடு நிறைவனப்பூ நித்தியம் மணிசூடும்
ஆர்கலி ஊழிசெய் ஆனந்தன் அருமிசைத் திருக்கூத்தன்
சார்நிலை உயிருடல் சமமாக்கும் சற்குணத் தாராளன்
சீர்நிலை நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

8. சந்திர சூரிய கல்காந்தம் சார்நிறப் படிகமணி
மந்திர மாயையைப் படைத்தபிரான் வானவர் பேரிறைவன்
சுந்தரர் நன்தொண்டர் தொகைபாட தொகுக்கவும் நம்பிதந்தோன்
செந்தமிழ் நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

9. விண்ணீர் மண்ணீர் வெறியலைசூழ் முந்நீர் அதிகாரன்
உண்ணீர் உவர்நீர் தரைநீர் உடல்செந் நீர்வகுத்தோன்
பண்ணீர்ப் பாணர்க்கும் மடலளித்த பதமரைத் திருவெழிலன்
தெண்ணீர் நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

10. ஆதவக் குடும்பம் ஆயிரமும் அழகுசெய் பகிரண்டன்
மாதவ மௌனநல் மணிமகுடன் வானவர் துதிப்பிறைவன்
பாதகன் என்னையும் பாடலென பரிவளித் தேற்றபிரான்
சீதன நல்லிச் சேரியமர் செங்கழல் பேரொளியே

–திருச்சிற்றம்பலம்–

## 204. புதுக்குடி வடபாதி

**திருக்காதீசுவரர்** **கலிவிருத்தம்**

1. மென்மலர்க் கொன்றையும் மிகுமடல் எருக்கனி விண்ணீசன்
தென்னவன் வெப்பினைத் தீர்த்தருள் புரிந்த செங்கழலன்
தண்மதி ஞான சம்பந்தர்க் கருளிய சற்குணத்தன்
பொன்மணி நெடுவயல் புதுக்குடி வடபாதி புங்கவனே

2. காவலங் கடவுள் கங்கண மூர்த்தி கயிலாயன்
தேவகத்தரி அயன் சேர்நிதிக் கிழவனும் துதித்து மகிழ்

நாவர சண்ணலின் நலிபிணி அகற்றிய நான்மறையன்
பூவர சங்கரை புதுக்குடி வடபாதிப் புங்கவனே

3. பாலொடும் நெய்தயிர் பலகனி இளநீர் நீராடும்
நாலோடு நானான்கு நற்கலை அறிவளி நல்லிசையோன்
ஆலால சுந்தரர்க் கருளளித்த தாண்டவன் ஆதிவள்ளல்
பூலோகங் காத்தருள் புதுக்குடி வடபாதிப் புங்கவனே

4. ஆணிப்பொன் மேனியன் ஆலகா லமுண்டஆதாரன்
தோணிநல் நகரமர் சுந்தரக் கூத்தன் துறவுகொண்ட
மாணிக்க வாசகற்கும் மலர்பதத் திக்கை வழங்கியருள்
பூணிநல் நிரைவளர் புதுக்குடிவடபாதிப் புங்கவனே

5. தவஞான சங்கரன் தத்துவச் சித்துறை சாம்புநாதன்
நவஞானம் நல்கி நலிவுயிர் மிட்கும் நந்தந்தை
சிவஞானக் கங்கை சேக்கிழார் பெருந்தகைக் கன்பளித்த
புவிஞானப் பெரியோர் புதுக்குடி வடபாதிப் புங்கவனே

6. உதிர்முகில் வான்தாண்டி உலகேழ் இயற்றிய ஓங்காரன்
கதிரொளி ஞாயிறு கலங்கிய ஞான்றே கருணைசெய்தோன்
அதிமதிச் சிவஞான யோகியை ஆவடு துறைக் கழைத்தே
புதுவுரை புனைந்தளி புதுக்குடி வடபாதிப் புங்கவனே

7. நாடகப் பெருந்தழல் நமச்சிவா யப்பேர் நாதாந்தன்
காடக வேடனை குகனர சாக்கிய கங்காளன்
வீடறம் பொருளின்பம் விளம்பிய வள்ளுவர்க் கமளித்த
பூடனை வீடெழில் புதுக்குடி வடபாதிப் புங்கவனே

8. ஓடெடுத் தாடியே உயர்முனித் தாருகை வனமமர்ந்த
கூடெடுத் தோடும் கோலச் சிப்பி முத் தளித்தவள்ளல்
ஏடெடுத் துவந்த ராசரா சசோழற் கின்னருள்செய்
போடெடுத் தோர்மகிழ் புதுக்குடி வடபாதி புங்கவனே

9. தவனிய வண்ணன் சங்கொலி மகிழ்ந்த தவமோனன்
சுவனக் கவனத்தில் சுடர்க்கழல் துதிப்போர்க்கருளினியன்
அவனிய உயிர்களின் ஆணவ மொடுக்கி அன்பளிக்கும்
புவனியத் திருமலி புதுக்குடி வடபாதி புங்கவனே

10. மதுமலர்க் கொன்றை மத்தமெ ருக்கணி வானமன்னன்
அதுலநல் சித்தியறி அருண்நந்தி தேவர்க்கும் அருளளித்தோன்
எதுவும றியாத எனக்கே டெழுதும் ஏற்றமளி
புதுப்பொறி மதியோர் புதுக்குடி வடபாதி புங்கவனே

–திருச்சிற்றம்பலம்–

## 205. வாழபிரான் கோட்டை

**சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1.ெ தரிந்தும் தெரியாத அறிவுயிர்க்கும் தேவரு லகத்தில் பதவிதந்த
கரிந்தசு டலைவெளிக் கடுநடனம் காட்டிக் கருணைசெய் கங்காளன்
புரிந்தும் புரியாத புதிர்மனத்தில் புவியுயிர்க் கிருவினை புரியவைத்த
வரிமலர் நந்தவ னமகிழும் வாழமி ரான் கோட்டை வானவனே

2. ஒரறி வீரறி வுடலெடுத்தே உடகிடைக் கோடிப் பிறப்பாகி
தேரறி ந்நான் கைந்துடனே சிறுபெரும் உடல்பெறப் பரிவளித்தோன்
காரண காரியம் புரிந்துயர கருணையில் மானிடப் பிறப்பளிக்கும்
மாரிநல் புனல்தரும் மகிழீசன் வாழமி ரான்கோட்டை வானவனே

3. நாத்திகம் பேசிநிதம் தனைநினைக்கும் நலிவுயிர்க் கிருவினை நல்குமரன்
ஆத்திரம் நேத்திரம் அறியவைத்த அவம்புணர் நீதிகள் பேசவைப்போன்
சூத்திரதாரி சுடர் கொழுந்தன் சுந்தரத் திருவருள் சுகதேவன்
வாத்தகப் பிறப்புயிர் உடல்மாற்றும் வாழமிரான் கோட்டை வானவனே

4. ஊரோர் நாட்டினர் உறவோர்கள் உரைசிறு தெய்வத் துதிச் சிறுமை
தேரா மதியினைத் திசைமாற்றி சீருற மறுபிறப் பளிக்குமண்ணல்
தீரா மயக்கில் பல்நெறியில் செல்லுயிர் நீறினை அணியவைத்தே
வாரோர் நற்பிறப் புடலளிக்கும் வாழபிரான் கோட்டை வானவனே

5. திருநீ றெல்லாம் சிவநிதியம் தெரிமதி மானிட்ப பிறப்பளித்தே
பெருகிய ஆவலில் நீறணியும் பிங்கலக் கழல்துதி தொடங்கிவைப்பார்
அருந்தமிழ் திருமுறை இசைபாடும் அடியவர் குழுவில் அறிமுகஞ் செய்
மருகொடு எருக்கணி மாதேவன் வாழமி ரான்கோட்டை வானவனே

6. முடங்கிய அறிவை முனைந்தெழுப்பி முக்கணன் திருநாமம் செப்பவைத்தே
தொடங்கினுப் பார்நமச்சி வாயமறை சொல்லித் துதிக்கும் திருப்பூசை
அடங்கிய கேவலத் தயர்வோட்டி அறிவுயி ரைச்சநல் மாக்கியருள
மடங்கலர் பகைதீர்மழையருளன் வாழமிரான் கோட்டை வானவனே

7. விண்ணிழி கோயில் மிகத் துதிக்கும் விருப்பமும் சுவாச மாக்கிநிதம்
தெண்ணீர் மனஞ்செய் திருவருளன் சிவாய நமமறை செப்பனிக்கும்
கண்ணீர் பெருக்கி கருத்துருகி கயிலயம் பெருமா எனத்துதிக்கும்
வண்ணம் பேரருள் வழங்கும் மண்ணல் வாழமிரான் கோட்டை வானவனே

8. செஞ்சுடர் காணும் தியானமதில் சிவயசி வமறை ஓதவைத்தே
அஞ்சேல் எனுங்குறிப் பபயகரம் அளித்தே உயிர்கருள் தினம் வழங்கும்

கஞ்சம ணிமகுடகங்காளன் கார்த்திகை தீபன் கனகமலை
மஞ்சன நீர்க்குள மரைவளர்க்கும் வாழமிரான் கோட்டை வானவனே

9. அறிவன்பளிக்கும் ஆதாரன் அருள்படி நிலைக்கேற்ப அருளுமண்ணல்
செறிமனந் தொண்டரின் சிறப்புணர்த்தி சிவசிவ மறைஉரை தருமிறைவன்
பொறிப்புலன்துயின்ற அணைந்தோராய் பூதலத் துயிர்கருள் பூத்தழலன்
மறிசுடர் மழுக்கரம் வடிவொளிரும் வாழபிரான் கோட்டை வானவனே

10. பூவினில் வண்ணமும் நறுமணமும் பொன்னொடு நவமணி நிலமளித்தோன்
நாவிலும் கனவொடு நனவுகளில் நனிமறை சிவமே நவில்வருளும்
தேவதே வச்சுடர் செந்தழலன் திருவருள் தருமிறை சிவலோகன்
மாவிளம் வன்னியும் ஞாழலணி வாழபிரான் கோட்டை வானவனே

–திருச்சிற்றம்பலம்–

## 206. குருங்குளம் கீழ்பாதி

**செஞ்சடையப்பர்** **கலிவிருத்தம்**

1. உந்துவி சைமிகு பந்தெனப் பாய்நெஞ்சே
சொந்தஞ் சொத்துசுகம் சுடலைக்குத் துணையிலை
பந்தம றுத்தெழ பனிவெண் ணீறணி
குந்தகம் எரிதரும் குருங்குளத் தீசனே

2. சுற்றியப ம்பரம் போல்சூழல் நெஞ்சே
கற்றன கனகமும் காலனின் தடுப்பிலை
நற்றுணை யாகிய நமச்சி வாயஞ்சொல்
குற்றஞ் தடுத்தருளும் குருங்குளச் செஞ்சடையே

3. பற்றிய சிலந்திபோல் பாயுறு நெஞ்சே
பெற்றவர் பெரியோர் சுற்றமும் துணையிலை
வெற்றிட வாழ்வுணர் விமலனைத் துதித்தெழு
குற்றுயிர்க் கருள்தரும் குருங்குளக் கொற்றவனே

4. ஒட்டிய உடும்பென உலகுறை நெஞ்சே
பட்டம்ப தவிமனை பாசங்கள் துணையிலை
அட்டமா சித்தியன் அனல்கழல் துதித்தெழு
கொட்டுயிர்க் கருள்தரும் குருங்குளத் தீசனே

5. தாவும ணிலெனத் தவிப்புறும் நெஞ்சே
ஓவுநா ளன்றுனக் குதவுநர் யாருமிலை
யாவும்நின் செயலென நம்பனைத் தொழுதழு
கூவுமுன் உதவுவார் குருங்குளத் தீசனே

6. விழுதுறு ஓந்திபோல் வெருவுரும் நெஞ்சே
தொழுங்குழு முகத்துதி தோழமை துணையிலை

மழுவரன் சுடர்க்கழல் மனமுறை வணங்கல்செய்
கொழுந்தவத் தருள் தரும் குருங்குலத் தீசனே

7. காடியில் விழுந்துழல் கவுளிய நெஞ்சே
தேடிய செங்கோல் தெருவூர் துணையில்லை
ஆடிய கழலோளி அரனடி துதித்தேழு
கூடுயிர்க் கருள் தரும் குருங்குளத் தீசனே

8. மந்தையில் ஞமலிபோல் வலந்திரி நெஞ்சே
முந்தையர் இன்றையர் முடிபுவி நிலைநினை
அந்தகற் கருளிய அரன்கழல் தொழுதழு
குந்துய ரறுக்கும் குருங்குளத் தீசனே

9. நதிக்கரை மரக்கவி நாட்டிய நெஞ்சே
நிதியர சாட்சியும் நெடுங்கேள் துணையிலை
மதிப்பிறை சூடிய மாதே வனைத்துதி
கொதியுளக் குணந்தரும் குருங்குளத் தீசனே

10. ஊசல்கு ழந்தைபோல் உளறுறு நெஞ்சே
வாசம்பு னைபுகழ் வாடகைப் பூமியில்
நேசநெ டுஞ்சுடர் நிமலனின் கழல்துதி
கோசிகன் வாழ்வருளும் குருங்குளத் தீசனே

–திருச்சிற்றம்பலம்–

## 207. ஓரத்தநாடு – வட்டம் முக்தாம்பாள்புரம்

**காசிவிசுவநாதர் அறுசீர் ஆசிரிய விருத்தம் விசாலாட்சி**

1. புருவந டுவிழி புண்ணிய மூர்த்தி பொங்கர வணிமேதை
பெருகிசை யாழ்கரன் பிடிதுடி ஓசையன் பிங்கலத் திருமேனி
ஒருமகள் கூந்தலை திருமண நாள்பெற உவந்தவர்க் கருளளியன்
உருவிடப் பாம்பணி ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

2. சடையெண் திசையுற சதுர்நட னத்தனல் சந்திரப் பிறைமுடியன்
படரொளி மழுவன் பயங்கரம் எரிக்கும் பகலிர வாட்சியொளி
கடைமகன் தானென்ற திருநாளைப் போவார் கனிவுடல் தமரேற்றோன்
உடையென அதளணி ஒரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

3. பண்ணிசை வீணையன் படர்சடை ஞானிநல் பார்முழு முதல்தெய்வம்
விண்ணிசை இடியொளி மின்மினிச் சிதலொளி விதவிதத் திருவடிவன்
நுண்ணூல் சிலந்தியை நுவலர சரக்கிய நுரைக்கடல் பேரலையன்
உண்பலி ஓடுடை ஒரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

4. அஞ்செழுத் தருமறை ஆதிரை நாயகன் அவனிப்பொன் அலங்காரன்
கொஞ்சிசைக் கேற்றதோர் கொடுகொட்டி நடனஞ்செய் கோமே தகமணியன்

வஞ்சமில் வெண்காடர் மறைவுற ஒற்றியூர் மணல்கரை மகிழ்ந்தளித்தோன்
உஞ்சையன் உருவிலி ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

5. நெருப்புறை கரமுனி நின்மலப் பேரொளி நித்திய ஞானக் கடல்
கருப்புநி ழல்கண்டன் காடுறைந் தாடெழில் கருணைசெய் மாமுகிலன்
திருவடி நினைந்திசை இயக்குமா னாயரின் செங்குழல் இசைமகிழ்நன்
உருவிலிப் பேரண்டன் ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

6. அந்திப்பொன் வான்வரை செந்தழல் ஓவியம் ஆலமர் பேரீசன்
சிந்திய வேர்வையில் செருவுரு வாகிய அந்தக னுடழித்தோன்
பந்தியி லமாந்தூண் பரிவுற ஏற்றருள் பாலித்த பரஞ்சோதி
உந்திக்க மலன்தொழும் ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

7. கங்கணச் சூரிய கதிர்மறை மதிப்பிறை காற்றலைச் சடைபுனைந்த
செங்கதிர் மாலையன் தென்திசை வேதியன் திகழ்புவிப் பேரிறைவன்
சங்கங் கொடிமலர் சாத்தம கிழிறை சந்தனக் குரவர்தொழும்
உங்கமர் இங்கமர் ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

8. காதலந் திருவிழி கற்பகச் சோலையன் காமதே னுதொழும் தீ
போதலர்க் கொன்றையும் பொன்தளிர் கிளுவையும் பொறியா விரைமலரோன்
தூதெனச் சென்றுதன் சுந்தரத் தொண்டரின் துயர்கலைந் தன்புசெய் தோன்
ஓதுதி ருமுறை ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

9. நெய்பால் தயிர்இள நீர்தேன் சந்தன நீராட்டே மகிழும்
செய்வீ மாலையும் தீபதுபப்புகை சிற்றரும் பணியனலன்
மையார் தடங்கண் மனைகரம் துணித்த மாதொண்டர் கருளளந்த
உய்வார் தொழுசீர் ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

10. செம்மான் மணிக்கரன் செந்தூரக் கடல்பின் சென்றிட மலையசைத்தோன்
பெம்மான் பெரியோன் பேரின்ப விருந்தளி பிங்கலத் திருவிழியன்
அம்மா னாகியே அருநிதி வணிகற் கருள்செய் ஆதிமுதல்
உம்பரர் தொழுதெழும் ஓரத்தநா டமர்வுறு ஒளிவளர் உத்தமனே

–திருச்சிற்றம்பலம்–

## 208. ஈச்சங்கோட்டை

**சம்புசேசுவரர்** **கலிவிருத்தம்**

1. தங்கத் திருமேனி சங்கரத் திருவருள்
மங்கல யாழிசை வானவர் பேரொளி
சங்கக்கை மாலுக்கும் சக்கரம் தந்தவன்
கொங்கலர் ஈச்சங் கோட்டையின் சம்புவே

2. செஞ்சடை மின்னலன் தேன்மலர் சூடிய
மஞ்சளம் மேனியன் மரகத்திருவருள்

அஞ்செழுத் தருளொளி அமுதப் பெருங்கடல்
குஞ்சரன் ஈச்சங் கோட்டையின் சம்புவே

3. புண்ணிய வடிவம் பொற்கழல் ஞானியன்
கண்ணிமை போல்புவி காக்குமோர் கடவுள்
வெண்ணீ றெனும்மெய் விண்நிதி தருமிறை
கொன்டல்நல் ஈச்சங்கோட்டையின்சம்புவே

4. நந்தியம் ஞாழலும் நாலர எியணி
அந்தக னுடலழி அம்பலப் பரம்பொருள்
செந்தமிழ் வளர்கலை செய்தருள் வழங்கும்
கொந்தலம் ஈச்சங் கோட்டையின் சம்புவே

5. செம்பொருள் நிரந்தரன் திருவருள் மாமலை
நம்பித்து தியுயிர் நலிவற மதிஅளி
தம்பிரான் தோழர்க்கும் தமனிய மருளிய
கொம்பலர் ஈச்சங் கோட்டையின் சம்புவே

6. வென்றிவி ழிமலர் வெள்ளெருக் கம்புனை
ஒன்றிமண் உயிர்களின் உருவுணர் வியக்கும்
அன்னிய மாமலம் அடங்குற அறிவளி
குன்றிம ணி ஈச்சங் கோட்டையின் சம்புவே

7. மன்றினி லாடும்மாதவப் பெருந்தழல்
இன்றொடு நாளையும் இன்னருள் தருமிறை
பன்றிக்கும ருளிய பாற்கடற் கதிபதி
கொன்றைநல் ஈச்சங் கோட்டையின் சம்புவே

8. தும்பைநல் கூவிளம் தொகுமலர்த் தாரணி
வெம்மைவிண் ணேகம்பன் விரிமுகில் பகிரண்டன்
செம்மணி மாமலைசிங்கத் திறலழி
கும்பநல் ஈச்சங் கோட்டையின் சம்புவே

9. முந்தைக்கும் முந்தையன் பிந்தைக்கும் பிந்தையன்
எந்தைக்கும் எந்தையன் இன்னிசைச் சந்ததன்
சிந்தனை தந்தருள் சித்தியும் வழங்கும்
கொந்தளம் ஈச்சங் கோட்டையின் சம்புவே

10. தண்ணீர்த் தணலன் தழலுறை நீரினன்
நண்ணார் திரிபுரம் நனிபொடி செய்தோன்
எண்ணீர் குணத்தோன் ஏழிசைக் கடவுள்
கொண்டு மூச்சங் கோட்டையின் சம்புவே

–திருச்சிற்றம்பலம்–

## 209. வடசேரி

**புண்ணியகோடீஸ்வரர்** **கலிவிருத்தம்**

1. ஏனப்பல் மாலையன் இமயமு கட்டொளி ஏகம்பன்
ஞானப்பொற் களஞ்சியம் ஞாலத்தின் முழுமுதல் நாதமறை
ஈனக்க யமுகன் இருளுடல் சிதைத்த ஏகமுனி
வானொளிச் சித்துறை வடசே ரியமர் வைத்தியனே

2. வீணைத டவிய மெல்விரல் காந்தப்பொன் விழி எழிலன்
தூணைப் பிளந்தவன் தொடர்வெறி தீர்த்துத்தொல் வடிவளித்த
ஆணையொன் றால்புவி ஆயிரம் செய்தவத்த னலீசன்
மாணவர்க் கறிவளி வடசே ரியமர் வைத்தியனே

3. வேழத்து ரியணி வெள்ளியங் கிரிமலை வெண்மேகன்
யாழைஇ யக்கியே நல்லிசை பரப்பிய ஞானமுகில்
கூழைய ளித்தநல் சேந்தனுக் கருளிய கோமகனார்
வாழைவ யல்மிகு வடசே ரியமர் வைத்தியனே

4. தோடலர் சண்பகம் சுகமண மல்லிகை சூடெழிலன்
ஆடகப் பொன்னொடு அவனிநல் நவமணி அளிப்பருளன்
ஓடொரு கரமுற உயர்தா ருகைவனத் துவகையொளி
வாடகை வாழ்வளி வடசே ரியமர் வைத்தியனே

5. பூநிறை மாலையன் பொங்கர வணியனல் பொன்மேனி
பாநிறைச் சம்பந்த பாலகற் கருளிய பார்வேந்தேன்
ஆநிரை பேணிய அறமூ லருக்கும் அருளளித்த
வானிறை பனிமலர் வடசே ரியமர் வைத்தியனே

6. பூரணத் திருவொளி புவியேழ் உயிர்வளர் புனலீசன்
ஆரணன் கூத்தன் ஆன்மா நிறைநிழல் அனலீசன்
காரணன் காரியன் கனகத் திருமேனி கருப்பொருளன்
வாரணப் பெருவயல் வடசேரி யமர் வைத்தியனே

7. வேணியில் பிறைமதி வெண்குரு குச்சிறை வைத்தபிரான்
ஊணளித் துயிர்புரந் துலகினைத் காத்தருள் ஓங்காரன்
தோணியில் சம்பந்தர் துணையுற கரைசேர்த்த சுடரிறைவன்
மாணிக்க நெல்மணி வடசேரியமர் வைத்தியனே

8. ஆதர வானவர் அருமறை நாயகர் அருள்மழையர்
நாதம ணிக்கழல் ஞானப்பெ ருங்கடல் நான்மறையர்
ஊதலங் காட்டிடை உயர்வான் வெளியிடை ஒளிவடிவன்
மாதரர் வணங்ககெழில் வடசே ரியமா வைத்தியனே

9. கூடலர் காஞ்சியர் குற்றாலர் நெல்லையர் கொடுமுடியின்
பாடலர் பண்ணினர் பாருறைப் பரம்பொருள் முதலீசர்
நாடலர் புரமெரி நாட்டியக் கூத்தினர் நமதமுதர்
மாடலம் பூநிறை வடசே ரியமர் வைத்தியனே

10. தோற்ற மருவமும் சுடரொளி மின்னலும் சேர்சடையன்
போற்றும டியவரும் பூசைசெய் எளியவர் புரை தீர்த்தே
ஆற்றல றிவொடு அகம்நிறை மதிநிதி அளித்துவக்கும்
மாற்றங்கள் ஏற்றருள் வடசே ரியமர் வைத்தியனே

-திருச்சிற்றம்பலம்-

## 210. தளிகை விடுதி

**திருப்பனங்காடுடையர் வஞ்சி விருத்தம் அனந்தவல்லி**

1. நெறிமுறை பிறழ்வுறு புவியோரை
செறிதுயர் சோதனை செய்தபிரான்
பறியொளித் திருக்கழல் பரம்பொருளே
வெறிமலர்த் தளிகை விடுதியனே

2. மாதவம் மாறிய கலியுகத்தில்
போதந லமடியார்க் களித்தபிரான்
நாதவ டிவொளி நமச்சிவாயம்
வேதநல் தளிகை விடுதியனே

3. ஆலயம் இடிக்கும் அரசாட்சி
காலை மலரொளியில் கவிழ்ந்தெரியும்
ஞாலத்துக் குணர்த்திய நாட்டியனே
வேலம லர்த்தளிகை விடுதியனே

4. ஈன்றவள் சிரம்பிடி ஏழைகளை
தோன்றுமோர் கேழலாய்ச் செய்தபிரான்
ஆன்றமு னிவர்தம் அகந்தையழி
வேன்வன் னித்தளிகை விடுதியனே

5. குருமனை திருடிய கோணல்மனம்
வெருகெனப் பிறந்தே வினையறுக்கும்
நெருநைநல் நீதியை நிலை நிறுத்தம்
மிருதுமத் தளிகை விடுதியனே

6. தோழமைத் துரோகம் செய்தோரை
ஊழுழல் எறும்பரி புழுசெய் தாய்
சோழன்சி பிக்கருள் செய்தகுரு
வேழநல் தளிகை விடுதியனே

7. துணைவன் குருதிமகிழ் துயர் மடந்தை
பிணைதெரு பெண்நாய்ப் பிறப்பளித்தோன்
அணைநிறை நீரருள் அளிக்குமுகிழ்
வினையொளித் தளிகை விடுதியனே

8. மனைவியின் துயருடல் மகிழ்ந்தமடம்
கனைகரப் பிறப்பளி கங்காளன்
பனைஆண் குலைதர பரிவளித்த
வினைதீர் தளிகை விடுதியனே

9. சந்ததி பசிகாண் சண்டாளம்
வந்தலை பாலையின் நரிசெய்தோன்
சுந்தரர்க் கருளிய சோதியனே
விந்தைநல் தளிகை விடுதியனே

10. அரசியல் சூதாட்ட அரம்பையரின்
சிரசுர சிவாட்கள் சுழலச்செயும்
கரசிலைப் பார்த்தனுக் கருளியசீர்
விரசமில் தளிகை விடுதியனே

–திருச்சிற்றம்பலம்–

## 211. பட்டுக்கோட்டை – வட்டம்

**சந்திரசேகரர்** **கலிவிருத்தம்**

1. பொட்டல் பாலையைநல்நெய்த லாக்கிய புங்கவனே
வட்டப் பாறை வெள்ளியங்கிரியில் மகிழ்ந்தாடும்
எட்டுக்கு ணத்தினன் ஏழிசை நாயகன் எம்பெருமான்
கொட்டும் மாமழை பட்டுக் கோட்டையின் கொற்றவனே

2. ஒட்டுக் கோவணன் ஓடொரு கரத்தன் ஒளிமழையன்
சிட்டுக் குருவிக்கும் சீருண வருள் தரும் திருமேனி
கட்டித் தயிர்ப்பதம் கடியடி சில்பத்தர் கனிந்தளித்தோன்
கொட்டும் மாமழைப் பட்டுகோட்டையின் கொற்றவனே.

3. முத்துப் பந்தரும் மோகனச் சிவிகையும் தந்தபிரான்
கத்துங் கடலிடை கடுவலை வீசிய கங்காளன்
சித்து முனிவராய் சீர்பொன் அளித்த செஞ்சுடரன்
கொத்து மலரணிப் பட்டுக் கோட்டையின் கொற்றவனே

4. முற்றாத் திங்களை முடியிடை சூடிய முக்கண்ணன்
உற்றார் பறிநிதி வணிகனுக் கம்மான் ஆகியகோன்
கற்றார் கவியிடை கனிமொழி தூவிய கங்காளன்
குற்றா லத்திறை பட்டுக் கோட்டையின் கொற்றவனே

5. தோன்றாத் துணைவன் சுடர்மழுக் கரத்தன் சுந்தரத் தீ
ஊன்றா வினைவிதி உயிரான் மாவிழுந் துழல்துயர்தீர்
ஈன்றோன் இனியோன் எந்தை பெருமான் ஏகம்பன்
கூன்சீர் பிறையணி பட்டுக் கோட்டையின் கொற்றவனே

6. விந்தைக் கறைகண்டன் வீணைஇன் நாதத்தன் விண்ணகரன்
மந்தை நரிகளைச் சந்தைப் பரியாய் மாற்றியசீர்
எந்தை பெருமான் ஏழைக் கெளியோன் எல்லீசன்
கொந்தெழில் மேனியன் பட்டுக் கோட்டையின் கொற்றவனே

7. நஞ்சினை அயின்ற நற்பெருஞ் சோதியன் நங்களிறை
பஞ்சினும் மெல்லிய பாதக் கமலத்தன் பாற்கடலன்
உஞ்சை உணவினன் உலகேழ் படைத்தோன் ஓங்காரன்
குஞ்சரத் தோலுடை பட்டுக் கோட்டையின் கொற்றவனே

8. பூரணன் பொன்னொளி பொங்கமு தப்புனல் பூந்தழலன்
நாரணன் நான்முகன் நால்வகை ஞானியர் நரர்வணங்கும்
காரண மில்லாக் கருணைசெய் கடவுள் கயிலைமலை
கூரழல் வேதியன் பட்டுக் கோட்டையின் கொற்றவனே

9. ஊழியத் தாண்டவன் உளமுணர் காட்சியன் ஓதுமொழி
ஆழிய லைகளில் ஆறெனப் பூமியை அறுத்தபிரான்
காழியக் குழந்தையின் கடும்பசி தீர்பால் அமுதளித்தோன்
கூழைமாற் கருளிய பட்டுக் கோட்டையின் கொற்றவனே

10. ஆதிய நாயகன் அந்தரக் கூத்தன் அறங்காத்த
சோதியத் தீம்புனல் சுந்தரக் கவிமணி சுயம்பொளியன்
நாதியில் லேனென் நவில்கவி கேட்ட ஞானவள்ளல்
கோதில் அமுதளிப்பட்டுக் கோட்டையின் கொற்றவனே.

–திருச்சிற்றம்பலம்–

## 212. முசிறி

**கயிலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. விசும்பினைத் தாண்டிய மிகுதனல் ஏகம்ப மேலோனே
பசுவுயிர்க் கேவலம் பார்த்தருள் பாலித்த பரம்பொருளன்
கொசுமுதல் திமிங்கிலம் கொடுகரி சமஉயிர் உடல்கொடுத்த
முசுகுந்தர் துதித்தெழு முசிறியின் பசும்பொன் முழுமுதலே

2. காற்றொடு கலந்தெரி கனிமநல் பிரணவக் கதிர்தந்த
மாற்றொன் றில்லா வானவர் பூசைசெய் முழுவரனே
கூற்றுவ னைத்தடிந் தொருமா ணிதனை காத்தபிரான்
மூற்றுவ கையருள் முசிறியின் பசும்பொன் முழுமுதலே

3. நெருப்புரு வாகிநல் நீள்விசும் புயரம் காட்டிநின்ற
கருப்பொருள் யாவிலும் கலந்துயிர் காத்தருள் காசியனே
பருப்பொரு ளுடலொடு சூக்கும உடலளி பரஞ்சோதி
முருக்கலர் சூடிய முசிறியின்பசும்பொன் முழுமுதலே

4. நீர்வடி வங்களில் நிரலுற விரவிய நிமலோனே
கார்முகில் மழையும் கடல்நதி அருவியும் உயிர்க் காத்து
பார்முதல் அண்டமும் பதியவர் புவிகளுக் குணவளிக்கும்
மூர்க்கருக் கருளிய முசிறியின் பசும்பொன் முழுமுதலே

5. நிலக்கவின் சூட்டியே நிறையுடல் படைக்கும் மாயைதோன்
வலம்வரு திங்களின் வளிஒளி துணைசெய் வானவனே
பலவினை உயிர்களின் பவந்தீர்த் தருளும் பரம்பரனே
முலாம்பழம் மிகுவயல் முசிறியின் பசும்பொன் முழுமுதலே

6. பகிரண்டத் தொலைவெளி பால்வெளி விண்மீண் பகுத்துவந்த
நகரெழில் மதுரையின் நாதத் திருவுரு ஞானமலை
சிகரப் பெருமலை வெள்ளியங்கியுறை செம்பவளன்
முகிரனுக் குமருள் முசிறியின் பசும்பொன் முழுமுதலே

7. அறுபதின் மூவர்க்கும் அழலடி நிழலளி ஆனந்தன்
செறுவன் வாட்போக்கி செங்கோணமலைத் திருவருளன்
மறுகெழில் காஞ்சியில் வருமுயிர் இருவினை மலமொடுக்கும்
முறுகிய யாழிசை முசிறியின் பசும்பொன் முழுமுதலே

8. திருமறைக் குரவோர் செறிபத்திக் கருளிய சிலோகன்
பெருநிதி வெறுத்த பட்டினத் தடிகட்கும் பரிவளித்தோன்
செருபனிவைணவ தேவியின் குகைக்கவின் செந்தழலன்
முருகிசை யோர்துதி முசிறியின் பசும்பொன் முழுமுதலே

9. குருமுறைச் சந்தானக் குரவோர்க் கேழிரு நூலளித்த
அருமறை திருக்குறள் ஆறங்க ஆயிரம் மொழிதந்தோன்
வருமுறை பிறப்பகள் வளர்த்துயிர் வன்மலம் ஒடுக்கியருள்
மொருமொருப் பில்லா முசிறியின் பசும்பொன் முழுமுதலே

10. அஞ்செழுத் தருவுரு ஆதிய நாதியன்ஆரமுதன்
நெஞ்சினில் நொடியும் நிமலனை மறவாப் பத்திமகிழ்
செஞ்சடை மூர்த்தி திருவருள் அளிப்பனல் சிவலோகன்
முஞ்சரக் குளக்கவின் முசிறியின் பசும்பொன் முழுமுதலே

–திருச்சிற்றம்பலம்–

## 213. காடந்தங்குடி

**பிரகதீச்சுவரர்** **கலிவிருத்தம்**

1. திருமால் தூபமும் சீரயன் தீபமும்
பெருமா னைத்தினம் பூசைசெய் தேமகிழ்
அருமார் வானவர் அருளுற வணங்கும்
கருமாஞ் சங்கலர் காடந்தங் குடியே

2. புவியோர் பூக்கனி பொன்னா பரணமும்
அவியோ டனுதினம் அன்பால் பூசைசெய்
தவிமா மணித்திரள் குன்றனை வணங்கிக்
கவியோர் மகிழ்தளி காடந்தங் குடியே

3. பூதக ணங்களும் புனிதநல் லுயிர்களும்
ஆதவன் சந்திரன் அணங்குகள் பூசைசெய்
வேதவிற் பனர்கள் விஞ்சையர் வணங்கும்
காதலங் கயிலயன் காடந்தங் குடியே

4. தக்கன்வேள் விசேன்று தரமழி தேவரும்
மக்களும் விரதியர் மாதவர் பூசைசெய்
பக்குவ மனம்பெற பகுத்தறி வார்தொழும்
கக்கரிக் கழனிசூழ் காடந்தங் குடியே

5. தொல்குடி அடியவர் தூயநல் தொழிலினர்
பல்மதிப் பாவையர் பனிமலர்ப் பூசைசெய்
நல்லிளம் வணிகரும் நான்மறை யோர் துதி
கல்லால் குருவமர் காடந்தங் குடியே

6. தேடாச் சகலம் தேடிய திருவருள்
கூடார் புரமெரி குவலயப் பேரனல்
கோடாக் கருணைகொள் குளிர்மனம் பூசைசெய்
காடார் கூத்தனின் காடந்தங் குடியே

7. கூனார் பிறையணி கோடிகோ டிரவி
தேனார் பாலபி டேகம் மகிழ்மலை
ஊனார் உயிரார் உலகுறை யார்வணங்கும்
கானார் கூத்தனின் காடந்தங் குடியே

8. ஏலம் திருவாய் இதழ்செம் பவளம்
கூலம் தந்துயிர் குறைகளை தாய்மையன்
ஞாலம் தொழுமிறை நாதாந்தப் பேரொளி
காலம் கடந்தோன் காடந்தங் குடியே

9. சங்குசே மக்கலம் தண்ணுமை துடிஒலி
பொங்கிசை வீணையன் பூங்கொன்றைத் தாரினன்
எங்களின் நாயகன் ஏழ்புவித் தாய்தந்தை
கங்குலெல் கடந்தவன் காடந்தங் குடியே

10. பன்னூல் மொழிமறை பகரும் பேரிறை
ஒன்னார் தாருகை ஒழித்தருள் புரிசிலை
என்னூன் உயிர்நிதி எந்தைமுன் னீசுரன்
கன்னல் கருணையன் காடந்தங் குடியே

–திருச்சிற்றம்பலம்–

## 214. குறிச்சி – பட்டுக்கோட்டை வட்டம்

**விசுவநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. கருநீல் மணிகண்டன் கங்காளன் கனவிலும் நனவிலும் கருணைதரும்
குருமுறைச் சிவஞான போதமளி குணநிறை மெண்கண்டார்க் கருளினியன்
அருவமும் உருவமும் அருவுருவாய் அகிலமெல் லாமெழும் அனலீசன்
திருமுறைப் பூசைசெய் அடியார் சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

2. காவிரிக் கங்கையின் புனிதமெல்லாம் கலியுகம் தாண்டியும் விளங்கவைப்போன்
மாவிய லூருய்ய வந்ததேவர் மகிழுந்தி யாரளி வானீசன்
பூவிரிக் சோலைஆ னைக்காவன் பூதக ணஞ்சூழ் பொற்கழலன்
சேவிரி மலர்பூசை அடியாரின் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

3. அடலே றமர்ந்தோன் ஆலமுண்ட ஆயிரம் கோடிச் சூரியத்தீ
கடவூ ருய்ய வந்ததேவர் களிற்றுப் பாடிபடக் கருணைசெய்தோன்
படநா கக்கவின் மணிமகுடன் பாசுப தந்தரும் பரஞ்சோதி
திடத்தா மரைப்பூசை அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின தேவேதேவே

4. பத்தியும் பகுத்தறி வளிக்குமண்ணல் பாற்கடல் பாலகன் பசிக்குவந்தோன்
சித்திஅ ருணந்தித் தேவருக்கும் திருமுறை நான்மறைத் திருவளித்தோன்
அத்திரிக் கருளிய அருளாசான் அம்பலக் கூத்தன் ஆரமுதன்
தித்திதேன் மலர்பூசை அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

5. வனமா மலரோடு மாவிளமும் மாமணி அக்கமும் சூடுமண்ணல்
மனவா சகங்கடந் தாரவர்க்கும் மறைஉண்மை விளக்க நூலளித்தோன்
தனம்மனை துறந்தவெண் காடருக்கும் தவத்தொடு ஒற்றியூர்ச் சித்திதந்த
தினமபி டேகஞ்செய் அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

6. தேனார் ஞாழலும் கொன்றையணி திருவருள் மேனிச் சிங்காரன்
ஞானா மிர்தநூல் நயந்தளித்தே நற்புகழ் வாகீசர்க் கருள்வேந்தன்
மானோர் கரத்தன் வையகத்தோர் மகிழ்ந்து துதிசெய் வானமுதன்
சேனா மலர்மிசை அடியார்சூழ் செந்நெல் குறிச்சின்தேவதேவே

7. துள்ளெழில் நல்விடை வாகனத்தன் சுந்தரக் கூத்தன் சுடர்மழுவன்
வள்ளுவப் பெருந்தகை மறைக்குறளில் வளர்சைவச் சித்தாந்தம் வார்த்தளித்த
வெள்ளித் திருநீ றணிமுதல்வன் வேங்கையின் உரிபுனை விமலீசன்
தெள்ளிய மலர்பூசை அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

8. முந்தையும் பிந்தையும் முழுதறிந்த முக்கண் பேரனல் முழுமுதல்வன்
சந்தத்த மிழ்ப்பாடல் திறனளித்தே தாயுமா னார்க்கருள் தந்தபிரான்
சிந்திசை இராவணன்சிரம்மிதித்த செம்பவ ளமலைத்திருவருளன்
செந்தா மரைப்பூசை அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

9. சிறியோர் பெரியோர் சிறந்தோர்க்கும் செய்வினைக் கேற்ப அருளளித்தே
அறிவிக்க அறியும் அணைத்துயிர்க்கும் அமுதத் திருவடிப் பேறளிப்போன்
நெறிமுறை இயம நியமமுடன் நித்தஞ்செய் தியானத்தில் தனை உணர்த்தும்
செறிமலர்ப் பூசைசெய் அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

10. வண்ணமும் சுவையும் வடிவழகும் வான்நிலம் உறைபொருள் அனைத்தாகி
எண்ணமும் எழுத்தும் சொல்லானோன் ஏகம்ப மூர்த்தி ஈசானன்
கண்மலர் பூசித்த கண்ணனுக்கும் கடும்எரிச் சக்கரக் கருணைசெய்தோன்
திண்மலர் பூசைசெய் அடியார்சூழ் செந்நெல் குறிச்சியின் தேவதேவே

–திருச்சிற்றம்பலம்–

## 215. திருச்சிற்றம்பலம் - பட்டுக்கோட்டை வட்டம்

**புராதனவனேசுவரர்  அறுசீர் ஆசிரிய விருத்தம்  பெரியநாயகி**

1. மலரக்க மாலை மலைந்தமலை மாணிக்கச் சுடரே மரகதமே
அலர்தொடு மணிக்கரம் அரிந்தவர்க்கும் அழல்மணிக் கழல்நிழல் அளித்தபிரான்
உலகிடை உழன்றே உயிருருகி ஓடும்வ ழியின்றி உளறுகிறேன்
திலப்பொறி எள்ளெனை ஏற்றருள்வீர் சிற்றம்பலத்துறை சிற்பரனே

2. தான்தோன் றியசுடர் தற்பரனே சங்கிசை மகிழ்குரு தமிழ்மறையே
ஊன்றிய விரலால் உரவேந்தன் ஒருபதின் சிரமிதித் தருள் பகவான்
ஈன்றோர் அளியழல் இல்லறத்தில இருதலை எறும்பென உருகுகிறேன்
தீன்தீ எரிக்கும்முன் எனை ஏற்பீர் சிற்றம்பலத் துறை சிற்பரனே

3. தோடது புனைந்த சுடர்மனியே தொல்லூழி பெருக்கிய சுயம்பொளியே
ஏடது புனலிடை எதிரேறி இன்னிசைச் சம்பந்தர்க் கருளரனே
காடதில் தவறிய மழலையென கரிமதத் தாரிடை கதறுகிறேன்
தேடாக் கூறெனைத் தேற்றீரோசிற்றம்ப லத்துறை சிற்பரனே

4. கற்றோர்க் கருள்மழைக் கங்காளா கலியுகப் பொறிமதிக் காப்பரனே
பொற்றா மரையுறத் திருக்குறளை பொதிந்தெழ அவ்வைக் கருளிறையே

பெற்றாள் உதறிய நாய்க்குருளை பிலம்வீழ்ந் ததுபோல் கதறுகிறேன்
தெற்றே புரியினும் சேடளிப்பீர் சிற்றம்ப லத்துறை சிற்பரனே

5. பித்தா பெருமா பெருந்தழலே பிரம்படி ஏற்ற பிங்கலனே
தத்தா நமரென்ற சான்றோர்க்கும் தன்திரு வடிநிழல் தந்தோனே
எத்தார் இணைமனைக் கலியுகத்தில் எரியிடை முயலென ஏங்குகிறேன்
சித்தார் நின்கழல் நிழலளிப்பீர் சிற்றம்ப லத்துறை சிற்பரனே

6. மந்தன மதிப்பிறை மலைந்தமுடி மாசில்வை டூரிய மாமலையே
இந்திரன் சந்திரன் சாபமற இணைகழல் சூட்டிய ஏகம்பனே
தந்திரச் சதிமிகு கலியுகத்தில் சகதிவீழ் பார்ப்பபென தளர்கின்றேன்
செந்திருக் கழல்நிழல் தந்தருள்வீர் சிற்றம்ப லத்துறை சிற்பரனே

7. வெள்ளொளி விடைவா கனத்திறையே வெஞ்சுடர் நிலம்வளர் வினைவடிவே
கள்ளியங் காட்டிடை காரைத்தாய்க்கும் கருணைசெய் தருளிய கற்பகமே
கொள்ளிம னம்நிறை குவலயத்தில் குகைநடு அரவுவாய்க் குயிலானேன்
தெள்ளிய கழல்நிழல் தந்தருள்வீர் சிற்றம்ப லத்துறை சிற்பரனே

8. அம்புலிப் பிறையணி ஆலங்காடா ஆனந்தத் தாண்டவத் தன்பருளே
நம்பிகா டநம்பிக் கருளொளியே நான்மறை உரைக்குரு நாயகனே
வெம்பிய மதவெறி வீணரிடை வெகுபுலி நடுமான் மெலிகின்றேன்
செம்பொளித் திருவடி காட்டியருள் சிற்றம்ப லத்துறை சிற்பரனே

9. ஓரொளி இருநிற மின்னாகி வெள்ளியங் கிரியில் ஆட்கொண்ட
தாரகை கோடிகள் தவழ்வெளியில் தனித்தனி மண்டலம் தந்தபிரான்
பாரகமானிடப் பிறப்பெடுத்தும் பரிதவித் துணை நினைந் துருகுகிறேன்
சீரடிக் காட்சிதந் தாண்டுகொள்வீர் சிற்றம்ப லத்துறை சிற்பரனே

10. மெல்லினம் மான்கர விமலோனே மேதினி ஓரிறை வெஞ்சுடரே
கொல்லிம லைமேவு குஞ்சரனே குளிர்தழல் அதிசயக் கொடையோனே
வல்வினை சூழ்ந்தெனை வாட்டு முன்னே மலரடிநிழலீந் தருள்புரிவீர்
தில்லையின் செஞ்சுடர் சிவக்கொழுந்தே சிற்றம்ப லத்துறை சிற்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 216. சின்ன ஆவுடையார்கோயில்

**ஆத்மநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. ஓடா மறைக்கரத் துத்தமனே உஞ்சைவி ருத்தியுண்டுவப்போனே
தோடார்ரஞ்சித மறைசூடும் சுகம்முழுதும் புவிக் களிப்போனே
கோடா நீதியும் பெருநிதியும் கொடுத்தருள் வள்ளல் குணசீலன்
தேடா உயிர்கும் திருவருள்செய் சின்னஆ வுடையார் கோயிலனே

2. நந்தா விளக்கே நாதாந்தா நான்மறை நால்வர்க் களித்த வள்ளல்
செந்தா மரைக்கழல் சிவலோக சிற்றுயிர் மானிடப் பிழைபொறுத்த
நொந்தார் துவன்றார் துவல்மறந்தார் நொடித்தார் துயர்தீர் நூதனனே
சிந்தா மணிக்கழல் திருவருள்செய் சின்னஆ வுடையார்க் கோயிலனே

3. அண்ணா அமுதா அருளாலா அருந்தமிழ் மாமறை அற்புதனே
எண்ணோர் குணனே இயற்கையளித் திருள்மலம் ஒடுக்கும் ஏகம்பா
உண்ணாப் பொருள்பிரித் துணவூட்டும் உலகுயிர் துதிக்கும் உத்தமனே
தெண்ணீர் நிதிமதி திருவருள்செய் சின்னஆ வுடையார் கோயிலனே

4. அத்தா ஆனந்த அருட்கடலே அனைத்தும் அடங்கிய அருள்வெளியே
முத்தா முதிர்வே மோகமழி முக்கண் சோதி முழுமுதல்வா
பித்தா எனநினை அழைத்தாலும் பெரும்பே றளிக்கும் பிஞ்சகனே
சித்தா சுயம்பே திருவருள்செய் சின்னஆ வுடையார் கோயிலனே

5. தந்தைஎம் தாயே தற்பரனே சகலமு மாகிய சற்குணனே
முடிவில் பிறப்பழி மூதறிவே முந்தை இன்றையர் முக்காலா
விண்ணவர் துதிக்கும் வேதையனே விந்தை வினைபுரி விமலோனே
செந்தீமணிக் கழல் திருவருள்செய் சின்னஆ வுடையார் கோயிலனே

6. எண்ணெழுத் எண்ணத்திற் கெட்டாத ஏகம்பச் செம்பொருளே ஈசுரனே
பண்பன்பு வளர்க்கும் பத்தருள்ளம் பதிந்தெழும் பாற்கடல் அமுதீசா
கண்ணப்பர்க் கருளிய கனகமலை காசிந திக்கரைக் கருணையனே
செண்டலர் பூசைக்கு திருவருள்செய் சின்ன ஆ வுடையார் கோயிலனே

7. பூவார் செஞ்சடைப் புகழுருவன் பொன்னார் மங்கல புதுவண்ணன்
போவார் வருவார் புரைதீர்க்கும் புதுப்புது வினையளி மாயைதந்த
தாவா மரைக்கரச் சற்குணனே தத்தவச் சித்தளி சங்காரா
சீவான் மாமகிழ் திருவருள்செய் சின்னஆ வுடையார்க் கோயிலனே

8. தேனா ரடைசெய் தேனீக்கும் செய்முறை மதியளி செஞ்சுடரே
மானார் மயிலார் வாரணமும் வடிவூன் பிரியுயிர் மெய்செய்தோன்
நானார் நீயார் எனும் ஞானம் நானறி நோரம் நின்கழல்சேர்
தீனார் அன்பொடு திருவருள்செய் சின்னஆ வுடையார்க்கோயிலனே

9. பாடாப் பண்ணிசைப் பரம்பொருளே பவளச் செங்குன்றே பாசுபதா
ஏடார் எழுத்தும் சொற்பொருளும் எல்லாம் நீயே ஏகம்பா
காடார் சுடலைக் கங்காளா கார்த்திகைச் சுடரே காலகாலா
சீடார் கழல் நிழல் திருவருள்செய் சின்னஆ வுடையார் கோயிலனே

10. நாகா பூரணா நாதாந்தா நற்றமிழ்த் திருமுறை நாயகனே
ஏகாங் கித்தழல் எண்குணனே இறைவா ஏழ்புவி ஈசுரனே
பாகாய்ச் சுவைக்கும் நின்நாமம் பகர்ந்தே மகிழும் வான்வாழ்வை
தேகான் மாபெறும் திருவருள்செய் சின்னஆ வுடையார்க் கோயிலனே.

–திருச்சிற்றம்பலம்–

## 217. அதிராம்பட்டினம்

**அபயவரதீசுவரர்** **அறுசீர்ஆசிரியவிருத்தம்** **சுந்தரநாயகி**

1. கருவிட நாகம் புரள்உருவம் கருப்பொருள் பேரண்டக் கங்காளன்
திருமா ளிகைத்தே வரவர்க்கும் சித்துக ளருளிய செம்மேனி
உருவெழில் பவழ மல்லிபுனை ஓங்கா ரத்தொளி முழுமுதல்வன்
அருவுரு அவனிய அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

2. சிறுபொறி மான்மறை ஏந்தெழிலன் திருவெறும் பூர்நின்ற செஞ்சுடரன்
மறுவில் களியளிச் சேந்தருக்கும் மனையொடு வான்புவி மகிழ்ந்தளித்த
தறுகணன் தவமுனி தழல்மலையன் சற்குண மாமதிச் சங்காரன்
அறுகொடு கொன்றை அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

3. சுடர்மழுச் சுந்தரச் சுயம்பொளியன் துகளறு வாழ்வருள் துறையூரன்
திடமதிக் கருவூர்த் தேவருக்கும் தெளிமதிச் சித்துகள் தந்தபிரான்
படர்சடை மின்னொளிப் பனிமலையன் பரம்பொருள் முழுமுதல் பாண்டரங்கன்
அடலே றேறும் அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

4. செம்பூங் கோடல் திருமுடியன் தில்லை நகருறைச் செம்பவளன்
நம்பி நல்காட நம்பிக்கருள் நல்கிய நான்மறைப் பேரிறைவன்
கொம்பொலி சங்கிசை கோமேதன் கொடியோர் மதிலழி குணவேந்தன்
அம்பலப் பேரொளி அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

5. தானே தோன்றிய தனிமூர்த்தி தற்பரஞ் சோதியின் தமிழிசையன்
கானோர் கண்டரா தித்தருக்கும் கருணை பொழிமுகில் கங்காளன்
பூனேர் திருக்கழல் பொன்மேனி புதுப்புது பொறியருள் புகழ்மதியன்
ஆனேறு மிசையமர் அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

6. சங்கீ தத்தமிழ் தாரணியில் தனித்தனி மொழிசெய் தத்துவனே
வெங்கார் வேணாட் டடிகளுக்கும் விரும்புவ ரமளி வேடுவனே
செங்காந் தள்மலர் கொக்ககிறகும் திருச்சடை புனைந்த தேவமலை
அங்கீ சன்பொன் அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

7. கண்டங் கருப்பொளி கான முகிழ் கனகத் திருச்சடை காலமூர்த்தி
கொண்ட திருவாலி யமுதருக்கும் குணமலி கொடையளிக் குற்றாலன்
திண்டேர் ஆரூர் திருமிழலை செம்பொன் சோதி தேனமுதன்
அண்டப் பெருமீன் அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

8. ஒருமான் மழுக்கரன் ஓங்காரன் உலகோர்க் காரம்ப முழுமுதல்வன்
புருடோத் தமநம்பிக் கருளளந்த புண்ணிய மூர்த்தி போளமலை
பெருமான் பிங்கலப் பெருஞ்சோதி பேரின்பக் கொடைதரும் பிஞ்சகனே
அருளார் கழலெழில் அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

9. ஓதும றையுரு உஞ்சையுண்போன் உருகித் துதிப்போர்க் கருளமுதன்
சேதிரா யருக்கும் திருவளித்த செஞ்சடை மேனியன் சிற்றம்பலன்
பாதார விந்தப் பாற்கடலன் பரம்பரை அடியார் பழம்நண்பன்
ஆதிமு முழுதல் அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

10. விழுதால் அமர்ந்த வெஞ்சுடரன் வேதிய ராதியர் தொழுமிறைவன்
பழுதொன் றில்லாப் பரம்பொருளன் பாற்கடல் விடமுண் பரஞ்சோதி
தொழுதார்க் கருள்தரும் தூயவள்ளல் தொழும்பாய் எனையும் ஏற்றபிரான்
அழுமெனைத் தேற்றிய அலங்காரன் அதிராம் பட்டினத் தன்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 218. தாமரங்கோட்டை

**கண்டீசுவரர் கலிவிருத்தம் தர்மசவர்த்தினி**

1. பரிதியில் புவியினைப் பறித்தளி பரமன்
எரிதிகழ் சுடலையில் இருங்கழல் நடனன்
கரியுரி போர்த்திய கனகத் திரள்மலை
குரிசிலின் தாமரங் கோட்டைகண்டேனே

2. ஒளிமலை வான்முகில் ஒலிகடல் புயல்மழை
தளியுறைத் தாண்டவன் தற்பரஞ் சோதியின்
களியருள் தருமிறை கானக வேடுவன்
குளிரிளந் தாமரங் கோட்டைகண் டேனே

3. இசைபல கோடிசெய் ஏகம்பச் சுடரன்
வசையழித் தடியார் மனைமதி மகிழ்தரும்
அசைகடல் ஊழிசெய் அதிர்மலை வேதியன்
குசமலி தாமரங் கோட்டைகண்டேனே

4. கயமுகன் செருக்கழி கங்கா தரமலை
நயமுணர் ஞானியன் நாளளி வள்ளல்
பயமறுத் தருள்செயும் பண்டித மூர்த்தி
குயவெழில் தாமரங் கோட்டைகண்டேனே

5. மரைமலர் அயனரி வணங்கியே வரம்பெறும்
நரைவெல் லேறமர் நாட்டிய நாயகன்
புரையறுத் தன்புசெய் புண்ணிய மூர்த்தியின்
குரைகழல் தாமரங் கோட்டைகண்டேனே

6. நிரந்தரன் நின்மலன் நெருப்புரு வானனல்
புரந்தர னுலகினர் போகரும் தொழுமிறை
கரங்குவி வார்க்கருள் கானகத் திறைவன்
குரங்ககத் தாமரங் கோட்டைகண்டேனே

7. செங்கம லக்கழல் சிங்கப்புள் வடிவினன்
அங்கசன் உருவழித் தருளிய அனல்மழை
சங்கிதழ் ஓசையன் சங்கர மூர்த்தியின்
கொங்கலர்த் தாமரங் கோட்டைகண்டேனே

8. வனமலர்ச் சந்தன மகிழம்பூ நாதன்
தனிமுதல் தழல்மலை தாரணிக் கோரிறை
சனிநவக் கோள்களின் தவமேழ் சற்குணன்
குனிப்பிறைத் தாமரங் கோட்டைகண்டேனே

9. மதிமலி ஞானியின் வானவர் பேரிறை
சதிபதி வாழ்வருள் சங்கரத் தேசிகன்
அதிபதி ஏழ்புவிக் கானந்தச் சோதியன்
குதிகலை தாமரங் கோட்டைகண்டேனே

10. மதகரி மான்மரை வரிப்புலி அதளுடை
இதமளி ஈசுரன் ஏகம்பப் பெருமலை
சிதடெனக் கருளிய சிவக்கொழுந் தீசன்
குதலைநல் தாமரங் கோட்டைகண்டேனே

–திருச்சிற்றம்பலம்–

## 219. பேட்டைவாய்த்தலை – திருச்சி வட்டம்

**மார்த்தாண்டீசுவரர்** **கலிவிருத்தம்** **பாலாம்பிகை**

1. நாடோர்புவி ஞானத்திரள் நம்பன்சுடர்க் கழலன்
ஏடோர்களும் இருமாமதி எல்லோருக்கும் இறைவன்
தேடாத் துணை நினையே தொழும் சீரார்மண மக்கள்
பீடார் பொருள் சுகமேயருள் பேட்டைவாய்தலைப் பரனே

2. அருளாரும் பொருளாளரும் அரனேஎனத் துதிக்கும்
கருணாகரன் கயிலாயனே கங்காதர மூர்த்தி
திருநீ றணிந் துனையேதொழும் சீரார்மண மக்கள்
பெருமாநின தருளேநிறை பேட்டைவாய்தலைப் பரனே

3. தானேஉதித் துலகேபடை தன்னேரிலாச் சுடரே
மானேமழுக் கரமேஉறை வானோர்தொழும் இறைவா
தேனார்மலர் தூவித்தொழும் சீரார்மண மக்கள்
பேனான்ஒளி போல்வாழ்வருள் பேட்டைவாய்தலைப் பரனே

4. வன்னீத் தளிர் வளர்கூவிளம் வாடாமலர்த் தாரோன்
பொன்னீந்தி தென்பாலுறை பெருங்கோயிலின் தலைவா
சென்னீநிலம் தோயத்தொழும் சீரார்மண மக்கள்
பின்னோர்கலை முன்னேயருள் பேட்டைவாய்தலைப் பரனே

5. துரியம்தொடாச் சித்தாந்தனே தோடார்செவி எழிலே
அரியோடயன் தொழுதேமகிழ் அனலார்மலை அரனே
திரி வேளையும் நினையே தொழும் சீரார்மண மக்கள்
பிரியம் மிகு மரபேரருள் பேட்டைவாய்தலைப் பரனே

6. உருவேகவின் அருவேதணல் உலகோரறி சுடரே
திருவேநினைத் துதித்தே மகிழ் சீரார்மண மக்கள்
அருளார் நிதி அறிவோர்செயல் அழகர்சுகம் அருள்வீர்
பிருகோடகத் தியனார்தொழும் பேட்டைவாய்தலைப் பரனே

7. அத்தா எனச் சித்தோர்தொழும் அழலார்மலை இறைவா
முத்தார்கழல் நித்தம் தொழும் முதிராமண மக்கள்
ஒத்தோர் என உலகம்புகழ் உயர்வாழ் வளித் தருள்வீர்
பித்தா எனப் பெரியோர்தொழும் பேட்டைவாய்தலைப் பரனே

8. முதிராப்பிறை முடிசூடிய முக்கண்சுடர் முதலே
சிதறா மதித்திருத்தொண்டரின் சீரார்மண மக்கள்
அதிரார் பிணி நெருங்காவுடல் அமுதார்நலம் அருளே
பிதிரார் ஒளி பொன்னார்கழல் பேட்டைவாய்தலைப் பரனே

9. ஈரேழ்புவி ஈசன்நின தேரார்கழல் பூசை
ஓரோர்தலை முறையோர்துதி மீறார்மண மக்கள்
தீராநிதி சிதையாமதி நினையேதொழும் தோன்றல்
பேரார்புகழ் நீரேயருள் பேட்டைவாய்தலைப் பரனே

10. தோன்றாத்துணை சுடர்மாமணி தூயோர் பரம் பொருளே
ஈன்றோர்குரு மூத்தோர்முனி ஏத்தும்மண மக்கள்
சான்றோருடன் தவத்தோர்மதி தளராநிதி தருவீர்
தேன்சீர்மனச் சித்தோர்தொழும் பேட்டைவாய்தலைப் பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 220. அந்தநல்லூர் - ஆலந்துறை

**வடதீர்த்தநாதர் அறுசீர்ஆசிரியவிருத்தம் பாலசுந்தரி**

1. திரிமா மதிலழித் தெய்வதமே திசையெங் கும்ஒளிர் செந்தழலே
பரிநரி நரிபரி ஆக்கியருள் பாலித்த தாய்மடிப் பரஞ்சோதி
கரிப்பெருந் தோளணிக் கங்காளா கழலிணை தொழுவார்க் காரமுதே
அரியதள் நோய்களை அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

2. கன்றினைத் தடிந்தோன் சேயுயிரைக் காலனுக் கனுப்பிய பசுக்கருளன்
கொன்றைநல் மாயைக்கூத்தோனே குவலயக் காற்றினைப் படைத்த தெய்வம்
பன்றிக்கும் பாலளி பரஞ்சுடரே பரிவொன் றேயருள் பாற்கடலே
அன்மைசெய் அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

3. தாருகை முனிவோர் அகந்தையற தவமுனி யாகிய தற்பரனே
பேருரு வாகிய பெருந்தழலே பிங்கலத் திருவடிப் பெரியோனே
காருருத் திங்களின் சாபமழி கற்பகத் திருவருள் கங்களா
ஆருறு அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

4. இருபது தோள்நெரித் திலங் கையோர்கோன் எழும்முப்பிறப்பற அருளிறையோன்
கருவறை உயிருணர் வுடலாகும் கருப்பொருள் அளித்த கருணைமலை
பிருககத் தியரொடு புலிப்பாணி பிங்கலர் பெரியோர்க் கருள்குருவே
அரிதுயர் அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

5. இதமனப் பாண பத்திரரும் இழிவற இசையுல கரங்கேற
பதமலர் தேய்வுறப் பகர்விறகாள் பாற்கடல் நஞ்சுண் பரம்பொருளே
நிதம்பொன் காசளி நீதிமழை நித்தியத் தத்துவ நெடுஞ்சடையன்
அதமளி அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

6. பனிமனக் கயிலய முனிவருக்கும் பசுமேய் மூலனின் உடலளித்த
முனிமனப் பாலகன் முறைகேட்டே முதுபாற் கடலளி முழுமுதலே
மனம்மொழி மெய்யுற வணங்குபுவி மானிடம் பிறப்பற வரந்தருவோய்
அனலுறு அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

7. மதிகதிர் வானவர் துயர்தீர மாவிடம் அருந்திய மறைக்கடலே
நிதியிழந் துருகுசேந் தனுக்கருளி நித்திய வானகம் தந்தபிரான்
பொதிகையில் மூலிகை பொன்மணியும் பொதிவுறு நதியளி புண்ணியனே
அதிதுயர் அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

8. இருட்சிறை அரசனின் துதிஏற்றே எரிமனப் பீமா சுரனையழி
பெருமான் திரிபுரச் சங்காரன் பேரருள் மூலிகைச் சித்தளித்தோன்
திருமண மகளின் கூந்தலளி திருத்தொண்டர்க் கருள் செஞ்சுடரோன்
அருவருப் பதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

9. மங்கல வீணைப்பொன் மாதேவே வன்தொண்டர் மணந்தடுத் தாண்டபிரான்
பொங்கலை ஊழியில் புவியழித்தே புதுப்புது புவியுயிர் புணரமைக்கும்
கொங்கலர் சூடிய கோமேதன் குருந்தம ரநிழல் குருவருளே
அங்கமுள் அதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

10. தஞ்சமென் றுனகழல் சார்வான தமிழ்வா சகர்க்கும் தயவளித்த
மஞ்சினும் மெல்லிய திருவடியே மரம்பொருள் புவியேழ் மாணிக்கம்
நஞ்சமென் சிறுமையை அழித்ததுபோல் நம்பன் நடனச பாபதியே
அஞ்சலென் றதள்நோய் அகற்றியருள் ஆலந்து றையமர் அம்மானே

–திருச்சிற்றம்பலம்–

## 221. திருச்செந்துறை

**சந்திரசேகரர்** **கலிவிருத்தம்** **மானேந்தியவல்லி**

1. திருமுறை இசைப்புறக் குருவருள் அருளிய
ஒரு இறை நின்கழல் உளமுரு கித்தொழும்
அருகிய மானிடர்க் கழல்கழல் நிழலருள்
துருசறு திருச்செந் துறை ஒளிர் சுடரனே

2. சுடரழல் கரமுறை சுகமருள் மூர்த்தி
அடல்புலி உரிபுனை அவணியத் திருவே
இடர்கலைந் தடியவர் இல்லறம் பேணல்செய்
தொடரொளித் திருச்செந் துறையமர் சுந்தரனே

3. சுந்தர்க் கருள்செய துணைமுறி காட்டிய
அந்தரக் கூத்தன் ஆலமர்ச் செல்வன்
குந்தக மறுத்துன் குளிர்கழல் தொழவருள்
துந்துபி திருச்செந் துறையமர் செங் குருவே

4. குருவென மாமறை குணமுனிக் குறைசெய்
அருவமே அருவுரு ஆனந்த நடனன்
செருக்குளம் அழித்துயர் சிந்தையை வளர்த்தருள்
சுரும்பிசைத் திருச்செந் துறையமர் பவளனே

5. பவளச்செந் திருமேனி பாற்கட லமுதனே
தவநிறை மூலர்க்கும் தமிழளி அருள்வளன்
நவயுக ஊழிமுன் நமச்சி வாயம்சொல
சுவடருள் திருச்செந் துறையமர் துடிகரனே

6. துடிகரச் சுயம்பொளி சுடர்மழுக் கயிலயன்
கடிகமழ் மாலையன் கற்பூரச் சோதியன்
அடிமுடி அயன்மால் அறியா பேரொளி
தொடிப்பிறை திருச்செந் துறையமர் மாணிக்கமே

7. மாணிக்கப் பெருமலை மதுரையம் பதியொளி
வாணிகன் வடிவொடு வழக்குரை வழங்கரன்
காணிப்பொன் மீனணி கதிர்சடை வேதியன்
தூணெழில் திருச்செந் துறையமர் அம்பலனே

8. அம்பலத் தாடிய ஆனந்தத் திருவுரு
வம்பலர் திரிபுரம் வாட்டிய நாயகன்
செம்பினைப் பொன்செய் திருமதி தருமிறை
தும்பைநல் திருச்செந் துறையமர் சோதியே

9. சோதியில் சம்பந்தர் தொடர்செல் அருளரன்
மேதினிக் கோரிறை விடையமர் வேதியன்
ஆதிய மூலருக் கருளளி திருமுகன்
சூதழிச் திருச்செந் துறையமர் தோன்றலே

10. தோன்றாத் துணையென துயர்கலை மாமதி
மான்றேர் மணிக்கரன் வையகப் பேரிறை
ஏன்வடி வெடுத்தோன் இரும்புலி மூர்த்தி
தேன்மலர் திருச் செந் துறையமர் செல்வனே

–திருச்சிற்றம்பலம்–

## திருச்செந்துறை

**சந்திரசேகரர்** **கலிவிருத்தம்** **மானேந்தியவல்லி**

1. மருப்பெழில் மாதங்க வாகனப்பெருந்தகை வளர்சுடரன்
கருப்பொருள்யாவிலும் கலந்துடன் வேறாய் கட்டுமண்ணல்
குருவடிமணிதவக் குணமளி தாண்டவன் கொற்றவனே
திருவடிப் பொன்மிளிர் திருச்செந்துறையமர் சேகரனே

2. அரிமாவாகனன் அந்தரன் செக்கர்வின் ஆதியண்ணல்
கரிமா அதளணி கற்பகத்திருவருள் காஞ்சியணல்
எரிகரத்தீசுரன் இணைகழல் துதிப்போர் இன்னருளன்
திரிபுடைத் தாளத்தன் திருச்செந்துறையமர் சேகரனே

3. காவலந்தலைவன் கருணையன் காலங்கள் கடந்தபிரான்
நாவலந்தீவினில் நாலேழ் ஆயிரம் நற்கோயில்
மேவியசுடரன் விண்ணவர் நாயகன் வேதமுறை
தேவலஞ் செய்பிறை திருச்செந்துறையமர் சேகரனே

4. காளைநல் வாகனன் கங்கணக்கரத்தன் களங்கமிலி
பாளைவெண் முறுவல் பங்கயத் திருவாய்பரஞ்சோதி
தாளைவ ணங்கவர் தாழ்மலமொடுக்கும் சங்காரன்
தேளையில் இயங்கொலி திருச்செந்துறையமர் சேகரனே

5. கோடைப் பெருமணலில் குளிர்நீர்அருவிசெய் குற்றாலன்
ஆடையோர் கோவணன் ஆறங்கம் உயிர்க்கருள்ஆகாயன்

மேடைச்சுடலையில் மின்னொளி நடனஞ்செய் மேலைமேலோன்
சேடைக்கழனிசூழ் திருச்செந்துறையமர் சேகரனே

6. ஆவணக் காப்பகன் ஆயிரம்கோடி யுகம்செய்தோன்
கோவணன் கைலையன் குற்றாலத்தொளி கோமேதன்
பூவணப் பொன்னனையார்க்கும் பொன்னளி போதந்தன்
தேவனக் கோயிலன் திருச்செந்துறையமர் சேகரனே

7. எச்சனு யர்தக்கன் இனமால் உடலழிஏகாந்தன்
உச்சநீதிபதி ஊர்த்துவன் உஞ்சையன் உலகொளியன்
அச்சமெல் லாமறுத்தன்பருள் நல்கும் அறிவுருவன்
செஞ்சைநீ ராடும் திருச்செந்துறையமர் சேகரனே

8. நாலேழ் பகிரண்டன் ஞாலத்துயிருறை ஞானமவன்
மூலாதாரத்தில் மூண்டெழு குண்டலி முனைப்பனலன்
மாலோடயனரி உருத்திரர்க் கருளிய மாதேவன்
சேலார் வயல்சூழ் திருச்செந்துறையமர் சேகரனே

9. வளியாய் வாருசொல் வாக்காய் நிலத்திடை வளர்மொழிகள்
விளியாய் பெயருரி வினைசொல் தொடர்மொழி விழுப்பொருளும்
அளித்தோன் அவனியை ஆருயிர் நுகர்வுற அருளிய கோன்
தெளிவாய்த்திகழ்திரு திருச்செந்துறையமர் சேகரனே

10. விழியோர் மூன்றுடை விண்ணவர் மிருபரிவன்
தொழிலோர் ஐந்துடை தூயவன்மாயவன் சும்பொளியன்
அழிவேதெரியா ஆனந்தத் தலைவன் அறவடிவன்
செழியரும் புவிதுதி திருச்செந்துறையமர் சேகரனே

–திருச்சிற்றம்பலம்–

## 222. அல்லூர்

**பஞ்சவரனேசுவரர்** **கலிவிருத்தம்** **தர்மசம்வர்த்தினி**

1. எக்காளத் திசையன் இயல்வேந் தண்ணல்
தக்கனின் சலமுடல் தவறற அழித்தோன்
சக்கரப் படையோன் சஞ்சலந் தீர்த்த
செக்கர்விண் மேனிசெஞ்சுடரல் லூரரே

2. காசினி உயிர்களின் கடுமல மடக்கிய
யாசக ராய்முனிவர் நலிமனம் எரித்தோன்

பாசப்ப டைஅயன் பாவமுகம் அறுத்த
தேசுறை மேனிசெஞ் சுடரல் லூரரே

3. பச்சைம ரகதம் பனிமலர் சூடிய
கச்சிஏ கம்பன் காளத்தி நாதன்
வச்சிரப் படையோற்கும் மாசாபந் தீர்த்த
செச்சைநல் மேனிசெஞ்சுடரல் லூரரே

4. ஏகப்ப ரம்பொருள் இன்னிசை ஒலியன்
போகமும் புண்ணியப் புத்தியும் தருமிறை
யோகச் சித்தர்கட்கும் நுதல்நடம் காட்டிய
சீகார மேனிசெஞ் சுடரல் லூரரே

5. உவப்புல கின்பங்கள் உயிர்க்களித் துவக்கும்
நவப்புது நாயகன் நால்கோடி யுகஞ்செய்
தவப்படை முனிவர்க்கும் தாண்ட வகாட்சியளி
சிவப்பனல் மேனிசெஞ் சுடரல் லூரரே

6. தகரத்தி ருவடி சாத்திர ஞானியன்
உகரத் தலைஇசை ஓமுறைப் பேரொளி
நுகர்ப்படைத் தேவர்க்கும் நுதல்வழி காட்டிய
சிகப்பழல் மேனிசெஞ் சுடரல் லூரரே

7. பற்பல யுகங்களில் பரிதவி உயிர்களை
நற்பதங் காட்டவே நனியுடல் அளித்தோன்
சொற்படைக் கலைமகள் துயரறுத் தருளிய
சிற்பர மேனிசெஞ் சுடரல் லூரரே

8. கருமுகில் இடியுறை கடுந்தணல் மின்னலன்
வருமுன் காவா மனிதரின் துயர்தீர்
பெருநிதிக் கிழவோற்கும் பேரருள் வழங்கிய
தருநிதி மேனிசெஞ் சுடரல் லூரரே

9. கைமரைக் காசியன் கயிலயங் கடவுள்
மைமனம் மாற்றியே வளருயிர்க் கன்பருள்
ஐமலர் படையாற்கும் அருவடி வளித்த
துய்ம்பொன் மேனிசெஞ் சுடரல் லூரரே

10. வாழையும் தாழையும் வளர்பொன்னி நதியன்
தோழர்க்கு திருத்தொண்டத் தொகை அளிபெருமான்
ஏழைமைப் படையேன் எனக்குமன் பருளிய
சேழிட மேனிசெஞ் சுடரல் லூரரே

–திருச்சிற்றம்பலம்–

## 223. கம்பரசம்பேட்டை

கைலாசநாதர் | அறுசீர் ஆசிரிய விருத்தம் | தர்மாம்பாள்

1. ஞானமா வடிவம் நற்றமிழ் திருமுறை நாதத் திருவெளியன்
தானம ளித்துயிர் தவறினைப் பொறுத்தருள் சந்தன நறுமனத்தன்
கானலங் காவிரி கம்பர சம்பேட்டை கற்பக கதிரனலன்
ஏனலுக் கருளிய ஏகம்ப மூர்த்தியை இறைஞ்சுவ தென்பணியே

2. செம்பொன் மேனியன் திருவருள் ஆதியன்திசைகளைக் கடந்ததவெளி
நம்புமு யிர்கட்கு நற்றவம் நல்கும் நாழேழ் புவிவிளக்கம்
கம்புள் காவிரி கம்பர சம்பேட்டை கற்பகக் கதிரனலன்
தம்பலப் பூச்சிக்கும் தயவருள் இறைவன் தாள் தொழல்என்பணியே

3. நிரந்தர நடனன் நின்மலப் பேரொளி நிலப்புள் குரலிசையன்
சிரந்திகழ் இளம்பிறை செங்கரத்தொருமறை சீர்கவின்மலர்க்கரத்தன்
கரந்தையங் காவிரி கம்பரசம்பேட்டை கற்பகக் கதிரனலன்
வரந்தரும் வானிறை மழுக்கரத் தொளியனை வழிபடல் என்பணியே

4. ஒப்பிடும் ஆற்றலும் உவமைசெய் பொருளில் உவப்பொளிப்பேருவன்
செப்புரை ஒலிஇசை சிற்றுயிர் பேருடல் செய்குரல் காற்றலையன்
கப்புறை ஆலமர் கம்பரசம்பேட்டை கற்பக் கதிரனலன்
எப்பொழுது ம்நெஞ்சில் இருந்தொளிர் ஈசனை இறைஞ்சுதல் என்பணியே

5. சிற்பங்கள் ஓவியம் சிந்தைசெய் வடிவமும் திருவென மானிடத்தின்
தற்குறிப் புருவத்தை தான்பொறுத்ததிலும் தமரொளிக் காட்சிதரும்
கற்றளி மிகுகவின் கம்பரசம்பேட்டை கற்பகக் கதிரனலன்
சொற்பதம் கடந்தசுந்தரக் கூத்தனை துதிப்பது என்பணியே

6. சுடலைம ணக்கவின் தோன்றாத் துணைவன் தொகுவிதி தருமருளன்
மடலெருக் குருத்திரம் வன்னியும் சூடிய மகரந்தத் தேனமுதன்
கடம்பவனத்தெழில் கம்பரசம்பேட்டை கற்பகத் ததிரனலன்
திடரொளிப் பிழம்பன்செம்மறை இறைவனைத்தினந் தொழல் என்பணியே

7. பரிவருள் நிறைநிலை பசுபதி மறைமலை பாசுப தத்தலையன்
அரிஅயன் அறியா அறிவுரு வாகிய ஆனந்தத் திருநடனன்
கரிமலம் ஒடுக்கும் கம்பர சம்பேட்டை கற்பகக் கதிரனலன்
வரிமலர்த் திருவடி மகிழ்வளி இறைவனை வணங்குதல் என்பணியே

8. ஒளிஇருள் குளிரனல் ஒடுக்கமும் நெடுக்கமும் உயர்வொடு தாழ்வாருளன்
தனிக்கவின் கருவறை தவழ்முகில் கோபுரம் தமர்நல் பரஞ்சோதி
களிமனத் தடியவர் கம்பர சம்பேட்டை கற்பகக் கதிரனலன்
தெளிமதிப் பளிங்கழில் திருவருள் இறைவனை தினந் தொழல் என் பணியே

9. அந்தரக் கூடுறை அழிமலக் கேவலத் தசைவளித் தருளறிவன்
மந்திர மணிமொழி வாசகர்க் கருளிய வானவர் மகிழிறைவன்
கந்தலர் சூடிய கம்பர சம்பேட்டை கற்பகக் கதிரனலன்
இந்திர போகமும் இனிதளி இறைவனை இறைஞ்சுதல் என் பணியே

10. தேடிஉயிர்களின் சிந்தையில் ஒளிர்ந்தே திருவருள் தருஞ்சடையன்
ஆடியும் பாடியும் அதிர்வுறக் குறிக்கும் அடியவர் அறிவானோன்
காடிளங் காவிரி கம்பர சம்பேட்டை கற்பகக் கதிரனலன்
நாடிந ரம்புறை நல்லுணர்விறைவனை நனிதொழல் என்பணியே.

–திருச்சிற்றம்பலம்–

## 224. குமார வயலூர்

**ஆதிநாதர்** **எழுசீர் ஆசிரியவிருத்தம்** **ஆதிநாயகி**

1. இடவலம் பூமியும் வலமிடம் கதிரும் இயங்குறு சூத்திரம் இயற்றியெம்மான்
நடப்பன பறப்பன நனிநீர் நீந்துயிர் நயவுடல் நகர்வினை யாவுமளி
படக்கவின் பாம்பொடு பவளமல் லிகைமுல்லை படிகம ணிமாலை பனிமார்பன்
மடக்கொடை மானிடம் வணங்குறு பிரிவளி வயலூர் மேவிய மாமணியே

2. மணிமிட றெழில் நிழல் மரகத தோடணி மாணிக்கமூர்த்தி வானீசன்
கணிமதி ககனத் துடுக்கோள் கடல்வளி காலஞ்செய் தருளிகணக் களித்தோன்
பிணிச்சிர மறுத்துயர் பிரமனுக் கருளிய பிங்கல மேனிநல் போராளியே
வணிகத் திசைவளி வழங்கி உயிர்வளர் வயலூர் மேவிய வானவனே

3. வானவர் கோடியும் மனிதர்பல் கோடியும் வாழ்வுறத் திரிபுரம் எரித்தபிரான்
தானவர் ஞானியர் தகைமதி சித்துகள் தாய்சேய் பழமடி யார்துதிக்கும்
ஏனநல் தாயென இளமுயிர் காப்பருள் ஏந்திய தீச்சுடர் ஏகம்பன்
மானநல் மங்கையர்க் கரசிக்கும் மகிழ்வளி வயலூர் மேவிய மரகதமே

4. மரதக் கூவிளம் வன்னிசெஞ் சடைசூழ் வளர்பே ரண்டம் தாண்டுசுடர்
பரகதி நாரைக்கும் பாலித்த ருளிய பரம்பொரு ளீசன் பாற்கடலன்
தரளம்பொன் நவமணி தாரகை அரம்பையர் தந்தப்பர் நடுங்குசோ தனைசெய்தே
வரமருள் கழல்தினம் வணங்குறப் பரிவளி வயலூர் மேவிய மாதங்கமே

5. மாதங்கத் துரிஉடை வரிசரக் கொன்றையும் வானக் கோடிமின் திருமுகத்தோன்
ஏதங்க லைந்துயிர் இன்பநல் வாழ்வருள் ஏழிசை நாயகன் இருசுடரோன்
பூதக ணங்களும் பொன்னடி யார்களும் பூசைசெய் தகமகிழ் புனிதமலை
வாதபித் தங்கபம் வதக்கியே உடல் செய் வயலூர் மேவிய மங்கலனே

6. மங்கல வீணையன் வானவர் பேரிறை மந்திர மூலருக் கருளளந்த
சங்கிசை விரும்பெழில் தற்பரஞ் சோதியன் தாமரை யனுக்கருள் சற்குருவன்

அங்கணன் ஆவடு துறையமர் வைத்தியன் ஆனந்தத் திருநடம் ஆடுலகன்
வங்கந வலோகம் மானிடர்க் கருளிய வயலூர் மேவிய வான்முகடே

7. வான்முக டேறிய தாருகை வனமதி மழுவொளிக் கரக்கவின் வலம்புரியன்
மான்சிலை ஏந்திய மாணிக்க மாமலை வயிரம ணிச்சுடர் வான்விழியன்
தோன்றிய உயிர்களில் சுயம்பபொளிச் சிவசிவ சொல்வோர் பிறப்பழி சுந்தரத்தீ
வான்முதிர் முகில்நீர் வார்த்துயர் வளர்க்கும் வயலூர் மேவிய வானொலியே

8.வானொலி மழையொலி வருபுனால் நீரொலி மாமுகில் மோதொலி வளர்விலங்கின்
கானொலி கடலொலி கல்சரி மலையொலி காடெரிந் தடரொலி களிவண்டின்
தேனொலி திசைதிசை திகிலொலி யாவைக்கும் திருவளித் தின்புறும் செயலொலியே
மானொலி செய்வனம் வளமுற மாரிசெய் வயலூர் மேவிய மழுக்கரனே

9. கரமலர்த் தாமரை கற்பகத் தருவொடு காமதே னுநவ நிதியருளும்
சிரமறுத் தேஅயன் சீரழி வுத்தடை செம்பொன் மேனிநல் தெய்வமலை
புரமெரித் தருளித்தன் பூதக ணப்பதவி புரையற அருளிய பூகம்பன்
மரமலர் செடிகொடி மணப்புல் மூலிசெய் வயலூர் மேவிய மதிமுகனே

10.முகட்டெழில் கயிலயன் மோனமு னிமுகன் முத்துப்பந் தரளி முழுமுதல்வன்
பகட்டொடு காமமும் பாய்மும் மலமற பத்தருக் கருள்தரும் பனிமலையன்
திகட்டமு தக்கடல் திரள்விட மயின்று திகழேழ் புவிக்காப் பருள்முனிவன்
மகட்கூந் தலளி மானடி யார்க்கருள் வயலூர் மேவிய வானரசே

–திருச்சிற்றம்பலம்–

## குமாரவயலூர்

**ஆதிநாதர்** **கலிவிருத்தம்** **ஆதிநாயகி**

1. உருவெட்டிப் புமிசெய் உத்தமப் பேரொளி உம்பரனே
நடுவெட்டி பூமிக்குள் நால்தழல் குழம்பளி நம்பகே
கடுவெளி அகப்பேய் காகடி சுண்டரும் கழல் பணிந்த
கொடுகாட்டித் தாண்டவன் குமாரவ யலூரின் குருசிவனே

2. நற்றவ ஞானமும் ஞாலப்பொதுமதி நல்குமண்ணல்
அற்றவர் அறிவோர் அறிவிலி யாவர்க்கம் அன்பருளன்
உற்றமத் தனைக்களி உணவுசெய் உத்தமர்க் கருளியகோன்
கொற்றவன் குணத்தன் குமாரவ வயலூரின் குருசிவனே

3. ஒத்ததோர் உவமையும் ஒப்புரு வில்லா ஓரிறைவன்
அத்தனெம் ஆதியன் ஆகாய கங்கையன் அறிவுருவன்
சித்ததாந்தத் தட்டகத் தேவரும் துதித்தவன் திரிசூலன்
கொத்தலர் கொன்றையன் குமாரவ யலூரின் குருசிவனே

4. தூங்கிசைக் கழலோன் தொண்டர்தம் தொண்டராய் துலங்குமணல்
ஓங்கிசைக் காழியர் உளமுருக கித்துதித் துவந்தபிரான்
மாங்கனிப் புனித விதியார்க்கும் அன்பளி வானீசன்
கோங்கலர் சூடிய குமாரவ யலூரின் குருசிவனே

5. தங்கத் திருவடி சற்குண நாயகன் தாழ்சடையன்
அங்கசன் உடலளித் தருவுரு வளித்த ஆதிவிண்ணல்
கொங்கணர் பதார்த்த குணசிந்தாமணி யார்துதித்த
குங்குமத் திலகன் குமாரவ யலூரின் குருசிவனே

6. மருமரை தும்பை வன்னிநல் கூவிள மாலையான்
பொருள்புலன் பொறியளி புங்கன் சங்கரத் திருமூர்த்தி
அருநந்தித் தேவர்க்கும் சிவஞான சித்தியார் அளித்தபிரான்
குருந்த நிழலமர் குமாரவ யலூரின் குருசிவனே

7. கூடல்ம றுகிடை கோமேதரு; விலை கூறிநின்ற
ஆடல் மணிக்கழல் ஆயிரம் கோடிமின் னல் ஒளியன்
ஓடளி திருநீல கண்டத்தேவருக்கும் உய்வளித்த
கோடல்நல் மாலையன் குமாரவ யலூரின் குருசிவனே

8. பொக்கனன் புங்கவன் புலியதன் இடையணி பொன்னுருவன்
தக்கன் தன் வேள்வியை தகர்த்தருள் புரிந்த சங்காரன்
உக்கிய திருநாளை போவாரை ஒளியுரு உவந்தளித்த
கொக்கரை வீணையன் குமாரவ யலூரின் குருசிவனே

9. உதிஞா யிறுநிறத் துத்தமன் உயிர்த்தமர் ஓமொளியன்
பதிபசு பாசம் பவம்பே றுணத்தும் பாற்கடலன்
அதிபத்தர் தவமேற் றாகாயம் நல்கிய ஆனந்தன்
கொதிகுணம் மாற்றும் குமாரவ யலூரின் குருசிவனே

10. அஞ்செழுத்ததிபதி ஆக்ஞையில் ஒளிரும் அனலுருவன்
மஞ்சுறை வாட்போக்கி மத்தியன் தொடக்கன் வான்நிறைத்தோன்
தஞ்சம றைஞான சம்பந்தர்க் கன்பளி சங்கரன்
குஞ்சரத் துரிபுனை குமார வயலூரின் குருசிவனே

–திருச்சிற்றம்பலம்–

## 225. துடையூர் – லால்குடி வட்டம்

**கடம்பவனேசுவரர் கலிவிருத்தம் வீரமங்களேசுவரி**

1. ஞானத் திருச்சுடர் நான்மறை அருள்முகில்
ஏனக் குருளையை ஏற்றமைச் சாக்கிய
கூனப் பிறையணி குவலயன் கழல் தொழ
சூனறுத் தருளும் துடையூர் சுயம்பொளியே

2. ஒளியோ வியமலை ஓங்கார நாயகன்
வளிதீ வெளிநிலம் வழிபுனல் செய்யீசன்
எளியோர்க் கெளியவன் இமயப் பெருங்கடல்
துளிதொழ வருளும் துடையூர் சுந்தரமே

3. சுந்தர வீணையன் துறக்கப்பெ ருந்தகை
அந்தரத் திருகூத் தாடுமோர் பேரொளி
செந்திரைக் கடலமு தத்திறை யைத்தொழ
துந்நெறி தீர்க்கும் துடையூர் தூஞ்சுடரே

4. சுடலைப்பொ டிபூசு சுந்தர கூத்தொளி
கடலைத்த டிந்ததோர் கற்பகத் தேன்மலை
விடலைப் பருவத்தர் விரும்பித் துதித்தழ
தொடர்துய றறுக்கும் துடையூர் சுகவனமே

5. சுகமொரு கோடிசெய் சுயம்பொளிச் சுடர்மலை
அகந்தையை அழித்தயன் அழிபுகழ் தடுத்த
பகடமர்ப் பரம்பொருள் பார்த்தனுக் கருளிய
துகடிலாச் சோதியன் துடையூர் நாயகமே

6. நாயக னாகியே நலிவுயிர் காக்கும்
தாயகத் திருமடி சற்குரு மாமேதை
மாயப்பெ ருஞ்சோதி வளர்கலை தருமிறை
தூயக்க ழலொளி துடையூர்ச் செங்கதிரே

7. செங்கதிர் மேனியன் சிறுபிறைத் திருமுடி
அங்கசன் உடலழித் தன்புசெய் ஆனந்தன்
மங்கலக் கழல்தொழ வானக வாழ்வருள்
சுங்கனுக் கருளிய துடையூர்ப் பூரணனே

8. பூரண ஞானியன் பூம்பொழில் வேதியன்
காரணப் பொருளுக்கும் காரணப் பொருளன்
நாரண னுக்கருள் நல்கிய மாமலை
சூரண மருந்தளி துடையூர் தோன்றலே

9. தோன்றிய உடல்களில் தோய்வுறும் உயிர்கள்
வான்நோய் புகழ்வள மாயையில் ஆழ்ந்தெழ
ஈன்றருள் ஈசுரன் எல்லோர்க்கும் இறைவன்
தேன்றிகழ் சோலையன் துடையூர் சுடர்க்கொழுந்தே

10. கொழுந்தோர் வன்னிநல் கூவிள மாலையன்
தொழுந்சீ ரடியார் துயில்துணை நாயகன்
விழுந்துழல் வினையழி விமலோன் விண்ணிறை
சுழுந்தொளி பகிரண்டன் துடையூர் மாணிக்கமே
–திருச்சிற்றம்பலம்–

## 226. லால்குடி - திருத்தவத்துறை

**சப்தரிசீசுவரர் அறுசீர்ஆசிரிய விருத்தம் பெருந்திருப்பிராட்டியார்**

1. பிருகொடும் எழுரிசி பெருகுநல் தவமுற பிங்கலக் கழல்தொழுதே
அருகொளி ஆக்கினை அமரிசை காட்சிசெய் அற்புதத் திருக்கோயில்
திருமால் செய்தவம் சிவச்சுட ரேற்றே திகழ்சக் கரமளித் தோன்
வருநாள் விதிசெய் மணிமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

2. திருமகள் பைரவி செந்திரு முருகனும் திருவடி துதித்தெழுந்தே
முருகிளம் கடுமுடல் முயலகன் முதுகுறை மூர்த்தியின் திருக்கோயில்
கருவிட நாகங்கள் கதமறுத் தாடல்செய் கற்பகத் திருமேணி
வருநல் தீவினை வகுமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

3. பால்வெண் நீறணி பாற்கடல் நாயகன் பரம்பொரு ளாதியனை
நூல்புனை சிலந்தி நுவல்செங் கணனாய் நுதலுறத் தொழுங்கோயில்
கால்நிலம் தீவெளி கசிநீர் செய்தே கருப்பொருள் காத்தபிரான்
மால்மூ வரின்பிணி வகுமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

4. கோடிய இளம்பிறை சூடிய நெளிசடை கொன்றையந் திருமேனி
ஆடிய பாதத்தன் அருள்விழி நோக்குற அறவோர் தொழுங்கோயில்
பாடிய சம்பந்தர் பாடலுக் காயிரம் பசும்பொன் தந்தவள்ளல்
வாடிய காரிக்கும் மாமறை ஓதியோன் மகிழூர் தவத்துறையே

5. இந்திர வானவர் இன்னிசை ஞானியர் ஏழ்புவி யோர்தொழுசீர்
சிந்தைமா தீவினைச் சிறியோர் நடுங்குறச் செந்நிறம் ஒளிர்கோயில்
வந்தனை வாசகர் வாகீசர்க் கருளிய மழுவொளி மாதவேன்
மந்திர வீணையன் வளர்சுடர் மிடறன் மகிழூர் தவத்துறையே

6. விரைமா மலர்க்கழல் விடநாகம் புனைவெண் பொடித் திருமேனி
கரைமீ றியகடல் கழல்பணிந் தோடல்செய் கதிரொளி யன்கோயில்
திரைகடல் அதிபத்தர் தினந்தொழும் செஞ்சுடர் சீரமு தக்கொடையோன்
மரைவே டற்கருள் மணிமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

7. ஞானப் பராசரன் நல்லிசை நாரதன் நலிந்தோர்க் கருளிறைவன்
ஏனக்கோ டெருக்கொடு இளந்தளிர் வன்னியம் இலங்குறு மரன்கோயில்
கானப்பெ ருந்தகை யாழ்பானர்க் கருளிய கங்கணத் திருமூர்த்தி
வானக்கு ருமுனி மணிமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

8. சந்தனக் குரவர் சப்தரி சிகளும் தண்மலர் பூசைசெய்யும்
சிந்தாப் பேரின்பத் திருவருள் தருமிறை செஞ்சடை யோன்கோயில்
நந்தா விளக்குற நான்முகன் அயனும் நாளும் தொழுமிறைவன்
வந்தார்க் கருள்மழை மணிமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

9. ஒன்றே குலமினம் ஒன்றே தெய்வமும் உலகொளிச் சிவச்சுடரே
என்றோர் இருப்போர் இனிவரு வோர்தொழும் ஏகம்பத் திருக்கோயில்
கன்றழி மகனைக் கொன்றோனுக் கருளிய கருணா மதிமுதல்வன்
வன்தொண்டர் துதிமகிழ் மணிமிட றொளியோன் மகிழூர் தவத்துறையே

10. மான்றோல் இடையணி மாணிக்க மாமலை வைரமழுக் கரத்தோன்
தோன்றாத் துணைவன் சுந்தரக் கூத்தன் துறைசை யமர்சுடரன்
ஈன்றோன் ஈசன் எளியோர்க் கெளியோன் இன்னல ழிஇறைவன்
வான்றோய் வளர்தழல் மணிமிட றொளியன் மகிழூர் தவத்துறையே

–திருச்சிற்றம்பலம்–

## லால்குடி - திருத்தவத்துறை

**சப்தசீசுவரர்** **கலிவிருத்தம்** **பெருந்திருப் பிராட்டியார்**

1. பொங்கர வங்கள் புரள்திரு மேனிப் புவிவசந்தன்
திங்களும் ஞாயிறும் திருவெழு மிருடியர் துதிப்பிறைவன்
இங்கித மறியா என்னையும் ஆண்மைக் இறைஞ்சுகிறேன்
சங்கரத் திருவருள் தவத்துறை லால்குடி தற்பரனே

2. நீலம ணிகண்ட நித்திலங் மென்னகை நெடுஞ்சடையன்
ஞாலப் பெருமுனி யாவரும் பூசைசெய் ஞானவள்ளல்
ஏலாய் வாவென் றென்றையும் அண்டமை இறைஞ்சுகிறேன்
சாலத் திருவருவருள் தவத்துறை லால்குடித் தற்பரனே

3. இருபால் அலிஇலி ஏழேழ்  பகிரண்டத் தேகம்பன்
அருவாய் உருவாய் அருவுரு வாகிய ஆதியண்ணல்
எருவிதைச் சிதடன் என்னையும் ஆண்டமைக் கிறைஞ்சுகிறேன்
சருவரி மதின்மதி தவத்துறை லால்குடித் தற்பரனே

4. கந்தம ணிக்கரன் கங்கண மூர்த்தி காலகலன்
சந்தத்த மிழ் ஞான சம்பந்தர்க் கருகளிறை சற்குருவன்

இந்தன மதியேன் என்னையும் ஆண்டமைக் இறைஞ்சுகிறேன்
தந்திரத் தமிழ்மறை தவத்துறை லால்குடித் தற்பரனே

5. மயங்காத் திருவிழி வானவர் நாயன் வளர்சோதி
அயனரி பைரவி அறம்பொருள் திருமகள் துதிப்பிறைவன்
இயல்மதி இல்லா என்னையும் ஆண்டமைக் கிறைஞ்சுகிறேன்
தயவுருத் திருவருள் தவத்துறை லால்குடித் தற்பரனே

6. வெண்மைநல் விடைமிசை விண்ணிலு லாவரும் விமலிறைவன்
கண்ணொடு மூன்றுடை கதிரொளி நாயகன் கதிவிதியன்
திண்ணிய மதியிலி என்னையும் ஆண்டமைக் இறைஞ்சுகிறனே்
தண்ணிய திருவருள் தவத்துறை லால்குடித் தற்பரனே

7. உண்மைவிண் கடவுள் உருத்திரன் அயசனரிக் குயர்பதவி
பண்ணிய தவத்திரு பாங்குறை அளிக்கும் பாம்பணியே
எண்ணம்நன் றில்லா என்னையும் ஆண்டமைக் இறைஞ்சுறேன்
சண்பகத் திருவடிதவத்துறை லால்குடி தற்பரனே

8. இண்டை அணிமுடி ஈசுரர் சோதி ஏகாந்தன்
செண்டை சிலம்பிசை செஞ்சதங் கைக்கழல் திகம்பரனே
என்மையன் ஏழையன் என்னையும் ஆண்டமைக் கிறைஞ்சுகிறேன்
சண்டிக் கருளிய தவத்துறை லால்குடி தற்பரனே

9. தொல்லொளித் தழலன் தொடர்ந்துயிர் காக்கும் சுயம்பொளியன்
இல்பொருள் வாரா இருப்பதும் அழியா எனும் மறையோன்
எல்மலை விணையேன் என்னையும் ஆண்டமைக் இறைஞ்சுகிறேன்
சல்வரி இசைமலி தவத்துறை லால்குடித் தற்பரனே

10. செந்தழல் மேனியன் திருவாதிரையன் தில்லை வள்ளல்
அந்தகன் திரிபுரர் ஆனைந ரசிம்மம் அழித்தோனே
இந்தளஞ் சருகன் என்னையும் ஆண்டமைக் கிறைஞ்சுகிறேன்
சந்திரன் பூசைசெய் தவத்துறை லால்குடித் தற்பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 227. ஊற்றத்தூர்

**சுந்தரவனேசுவரர் கலிவிருத்தம் அகிலாண்டேசுவரி**

1. அஞ்செழுத் தருமறை அம்பல மூர்த்தி ஆதிசிவன்
பஞ்சமு கமேள பதிவிசைச் சங்கரன் பசுபதியன்
தஞ்சமென் றணுகிய தசரத மைந்தனுக் கருள் செய்த
உஞ்சவி ருத்தியன் ஊற்றத்தூர் மழுமறை ஒளிக்கரனே

2. தும்பையும் கோடலும் துளவமும்  கூவிளம் தோடெழிலன்
அம்பைவி டுமுன்னர் அகந்தைம திலழித் தமைதிதந்த
வெம்மைவி ழிநுதல் விண்ணவர் தலைவன் விரிசடையன்
உம்மைஇம் மைதரும் ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

3. கச்சைநல் பாம்பணி கந்தம ணிக்கழல் கனகசபை
இச்சைகள் ஊட்டி இருள்மலம் ஒடுக்கும் ஈசானன்
அச்சுதற் காழியும் அருச்சுனர்க் கோர்பாசு பதந்தந்த
உச்சிம லையமர்ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

4. தருக்கமும் சாத்திரம் சைவசித்தாந்தமும் தந்தணல்
கருத்திருமாலயன் கள்மலர் பூசைசெய் கங்காளன்
செருத்துணை யார்க்கும் சிவலோ கந்தந்த திருவருளன்
உருத்திர மூர்த்தி ஊற்றுத்தூர் மழுமரை ஒளிக்கரனே

5. பூங்கழல் நாயகன் பொன்னார் மேனியன் போதமளி
தூங்காத் திருவிழிசுந்தரக் கூத்தன் தோன்றாத்துணை
நாங்கூழ் நாரைக்கும் நல்லிளம் காரிக்கும் நலமளித்த
ஓங்கிய கயிலையன் ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

6. கொக்கிற குநொச்சி கொன்றையும் தாரணி குங்கிலியன்
திக்குகள் யாவிலும் செறிவுற நிறைந்தொளிர் திருவிளக்கன்
முக்கிய பதவிகள் மூவருக் களித்த முக்கண்ணன்
உக்கிர வினைதீர் ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

7. சாயா நீதியன் சந்திர சூரியச் சடையணியன்
சேயாய் உயிர்களை திருவருள் புரிந்தருள் செய்தழலன்
மாயா மாயையில் வான்பகி ரண்டமும் படைத்தபிரான்
ஓயாத் திருநடன் ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

8. கவின்மணிச் சங்கரன் கார்த்திகைத் திங்களின் தீக்கைதரும்
நவயுக நாயகன் நல்லறி வளிக்கும் நான்மறையன்
சிவயந மவென சிந்தையில் பூசைசெய் வாரறிவன்
உவமைஇல் லாத்தணல் ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

9. அப்போடைம் பூதம் அறுசுவை எழுநிறத் தெண்குணத்தன்
கப்பிய மலமற கடுந்துயில் உயிர்களை சகலஞ்செய்தே
முப்பதும் ஆறுறை தத்துவம் நல்கிய முழுமுதல்வன்
ஒப்புர வளிக்கும் ஊற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

10. வள்ளலங் கடவுள் வானவப் பேரொளி மகிழ்வளிக்கும்
தெள்ளிய மதிதரும் சித்திர வீணையன் சிலோகன்
கள்ளவி னைமலம் கட்டறுத் துயிர்க்கருள் கங்காளன்
உள்ள நல் கோயிலன் உற்றத்தூர் மழுமரை ஒளிக்கரனே

–திருச்சிற்றம்பலம்–

## ஊற்றத்தூர்

**சுந்தரேசுவரர்** **கலிவிருத்தம்** **அகிலாண்டேசுவரி**

1. அனல்தரும் புனல்தரும் அருமைநல் உடல்தரும்
கனமலர்த் தேன்தரும் கற்பகக் குலந்தரும்
தனந்தரும் தவந்தரும் தரணியில் புகழ்தரும்
தினந்தொழ ஊற்றத்தூர் சிவமணித் தெய்வமே

2. குணந்தரும் குவிநிதிக் கொடையொடு கவின்தரும்
இணைதரும் எழில்தரும் இதந்தரும் நலந்தரும்
உணவொடு பசிதரும் உணர்வுக்க ருணைதரும்
மணமலர் ஊற்றத்தூர் மரைக்கரத் தெய்வமே

3. விழிதரும் மொழிதரும் விண்ணுறைச் சுகந்தரும்
கழிதரும் கடல்மணிக் களஞ்சியப் பொருள்தரும்
கிழி தரும் கலை தரும் கேட்டவை தான் தரும்
வழிபட ஊற்றத்தூர் வளர்சுடத் தெய்வமே.

4. மதிதரும் மனைதரும் வளர்சந் ததிதரும்
பதிதரும் பனிமலை பார்த்தலின் அருள்தரும்
கதிதரும் கருணையின் கனகநல் குவை தரும்
துதித் தெழ ஊற்றத்தூர் சுடர்மணித் தெய்வமே

5. வாள்தரும் வளந்தரும் மாணிக்கத் தேர்தரும்
ஆள்தரும் அரசொடு அன்புமக் களும் தரும்
நாள்தரும் நவமறி ஞானமெய் கல்விதரும்
தாள்தொழ ஊற்றத்தூர் சங்கரத் தெய்வமே

6. பால்தரும் கால்நடை பல்கிப்பெ ருகத்தரும்
சூல்தரும் பிரசவக் சுகமிகு சிசுதரும்
ஆல்தரும் ஆயிரம் அருந்திரு வனந்தரும்
சேல்குதி ஊற்றத்தூர் திகழ்மழுத் தெய்வமே

7. கனிதரும் உலகுயர் காய்கறி மூலிகை
பனிதரும் முப்புசெய் பாதர சந்தரும்

புனிதநல் போகமும் புகழ்வளர் பதிதரும்
நனிதொழ ஊற்றத்தூர் நான்மறைத் தெய்வமே

8. நடைதரும் தளர்விலா நரம்புத சைதரும்
உடைதரும் ஒழுக்கமும் உயர்வுறு புவிதரும்
குடை தரும் குறைவிலா குலமகள் துணைதரும்
விடைதொழும் ஊற்றத்தூர் விண்ணவர் தெய்வமே

9. சிகைதரும் குலமணிச் சீர்கொழு நனும்தரும்
தகைதரும் தவமுறத் தனிமலைக் குகைதரும்
பகையிலாப் புகழ்தரும் பண்புளக் கோன்தரும்
மிகையருள் ஊற்றத்தூர் விண்ணொளித் தெய்வமே

10. வலந்தரும் மகிழ்தரும் வானவர் புவிதரும்
நலந்தரும் நமச்சி வாயஞ்சொல் நயந்தரும்
கலந்துயிர் மகிழ்வுற கழல்நிழல் அருள்தரும்
தலமுயர் ஊற்றத்தூர் சற்குணத் தெய்வமே

–திருச்சிற்றம்பலம்–

## 228. ஓமந்தூர் – திருச்சி வட்டம்

**பெரியசாமி** **கலிவிருத்தம்** **காமாட்சியம்மன்**

1. எண்கோள் வலம் வரும் எரிதீச் சூரியன்
விண்ணோர் அதிசயம் விளைவெழல் பூமியும்
பண்ணார் இசைவளி படருயிர் வளர்வளி
உண்ணீர் வயல்சூழ் ஓமந் தூரரே

2. பாங்கார் விண்ணகப் பால்வெளிச் சுடரனல்
தூங்காத் திருவிழி தூங்கும ணிக்கழல்
தேங்காத் திருவருள் செய்துயிர் வளர்க்கும்
ஓங்கல் மலர்சூழ் ஓமந் தூரரே

3. மின்னலம் மழைமுகில் மிளிரிரு நிறத்திடி
தென்வடக் கீழ்மேல் திசைவளி சுழல் வெளி
கன்னலும் முக்கனி செந்நெலும் விளைநிலம்
உன்னதப் பத்தர்சூழ் ஓமந் தூரரே

4. விசும்புறை புகைக்கொடி வெகுவெகு தொலைநிழல்
அசுவதி பரணி கிருத்திகை ரோகிணி
நசிவுறு புவிஉயிர் நற்றாள் பணிந்தெழ
உசிதநல் வாழ்வளி ஓமந் தூரரே

5. அருவுருப் பெருந்தழல் ஆனந்த மாதவன்
திருவா திரைஒளி சித்துநின் நுதல் சுடர்
மிருக சீரிடமும் புனர்பூசம் பூசமும்
ஓருநிறைக் கோயில் ஓமந் தூரரே

6. அகப்புறத் தணல்படர் அருவுரு மேனி
சுகமுழு துமளி தொடர்மா யைதந்தோன்
மகம்பூர மாயில்யம் அத்தஉத் திரமும்
உகயுகத் தொண்டர்சூழ் ஓமந் தூரரே

7. பத்தரின் நெஞ்சுறை பல்கோடி சிந்தனை
முத்தரின் முழுச்செயல் மூவிரு தானத்தின்
சித்திரை சுவாதி அனுடவி சாகத்
துத்தமர் சித்தர்சூழ் ஓமந் தூரரே

8. வேட்கைவி காரம் விலகிய விண்ணனல்
கோட்டைமு சுகுந்தர் குறையாப் பூசைகொள்
கேட்டையும் மூலமும் கிளருத்தி ராடமும்
ஊட்டியுண் பத்தர்சூழ் ஓமந் தூரரே

9. விதையின் கருமுனை விளங்குயிர்க் கருளிறை
இதயப்பு னர்குருதி இயக்கிய ஆதியன்
சதயம் பூராடம் திருவோண மவிட்டம்
உதயம னிதர்சூழ் ஓமந் தூரரே

10. பத்தரும் சித்தரும் பரவிம கிழிறை
சித்தியும் சத்தியும் சீருயிர்க் கருளும்
உத்திர பூரட் டாதியும் ரேவதி
ஒத்தகு ணத்தர் சூழ் ஓமந் தூரரே

–திருச்சிற்றம்பலம்–

## 229. ஸ்ரீ ராமசமுத்திரம் – முசிறி வட்டம்

**வாலீசுவரர்** **வஞ்சிவிருத்தம்** **சௌந்தரநாயகி**

1. மந்திர மாமணி மங்கலமே
இந்திர போக மளிமுகிலே
எந்திர பூமியில் எனக்கென்பணி
சந்தன ராமச முத்திரரே

2. மண்ணியல் வளர்திரு மரகதமே
தண்ணியல் தற்பரஞ் சோதியனே
புண்ணிய பூமியில் எனக்கென்பணி
சண்பக ராமச முத்திரரே

3. மஞ்சள்ம ணிக்கொன்றை வைரமலை
கஞ்சன்சி ரமறு கங்காளா
கெஞ்சுமென் பணிமண்ணில் ஏதுரைப்பீர்
சஞ்சய ராமச முத்திரரே

4. பட்டொளிப் பிறைமுடிப் பரிறைவன்
கட்டிய வினைமிதி காரியனே
கொட்டடி விலங்கென் பணிஏதோ
சட்டஞ்செய் ராமச முத்திரரே

5. அக்கினித் திரள்மலை ஆண்டவனே
செக்கர்விண் மேனித் திருவடிவே
பக்குவ மில்லெனக் கென்பணி யோ
சக்கர ராமச முத்திரரே

6. பச்சைமாற் காழியை பரிந்தளித்த
கச்சைய ரவணிக் காலகாலா
இச்சைநல் பூமியில் எனக்கென்பணி
சச்சித ராமச முத்திரரே

7. சுங்கம ணிமுடிச் சுகந்தமலை
பொங்கழல் ஆக்கினை புரிவள்ளல்
இங்கிதப் பூமியில் எனக்கென்பணி
சங்கலர் ராமச முத்திரரே

8. சுத்தநல் சத்துமெய்ச் சுயம்பொளியே
வித்தக விமலா விண்ணமுதே
மத்தகன் என்பணி வரைவெதுவோ
தத்துவ ராமச முத்திரரே

9. பத்திசெய் அடியவர் பாற்கடலே
சித்திசி காமணி சிதம்பரனே
முத்திக்கிப் பூமியில் எனக்கென்பணி
சத்துவ ராமச முத்திரரே

10. நெற்றிவெண் ணீறணி நெடுந்தழலே
பற்றிய பற்றழி பரம்பொருளே
ஒற்றிநின் கழலுற எனக்கென்பணி
சற்குண ராமச முத்திரரே

–திருச்சிற்றம்பலம்–

## 230. தொட்டியம் - முசிறி வட்டம்

**அனலீசுவரர்** **கலிவிருத்தம்** **திரிபுரசுந்தரி**

1. மருந்துறை மூலிகை மண்வினை உணவளி
பெருந்துறை ஈசனே பிஞ்சகப் பெரியனே
அருந்தவம் அறியேன் அனலடி தந்தருள்
விருந்துறை தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

2. சுருதித் தமிழிசை சுந்தரர்க் கருளிய
பெருந்திரள் கரியுரி பிறையுறை பெம்மான்
ஒரு சொல் அறியேன் ஒளிர்கழல் நிழலருள்
விரும்பலர் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

3. கருநிழல் மிடறெழில் கற்பகச் சோதிநல்
வருதிரள் மாமணி மறுவறு பொன்மலை
அருகிய மதியெனக் கருள்நிழல் தந்தருள்
விருகநல் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

4. பருகுநன் நீர்வளி பசியற கனிதரும்
திருவா வடுதுறை செஞ்சுடர் வைத்தியன்
குருநெறி அறியேன் குளிர்கழல் நிழலருள்
விருதம்நல் தொட்டியம் மேவிய மெய்பொருளே

5. புருவமில் நுதல்விழி பொன்னொளி அருவுரு
கருவரை அணுமுதல் கலந்தொளிர் அனலூயிர்
ஒரு பொரு ளறியேன் ஒளிர்கழல் நிழலருள்
மிருஞ்சிநல் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

6. செருமதக் கரியுரி செந்தலை அரவணி
பருவுடல் அளித்துயிர் பவமதி ஞானியன்
இருபதில் ஏற்றனை அறுபதில் அருளளி
விருத்தியூர்த் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

7. ஒருமின்னல் ஈரொளிக் காட்சிதந் திரவில்
பெருங்குகை வெள்ளியங் கிரியுறைந் தெனக்கும்
திருவொளித் தீக்கையும் காவியும் அருளிய
விருந்துநல் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

8. அருந்தமிழ் நான்மறை ஆடலும் நெறியருள்
கிருபைமா சதுரகிரியதில் இறங்கொளி
தருதரி சனனே தாத்வீகந் தருமிறை
விருந்தினர் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

9. உருவோ டருவுரு ஒளியனல் அருவே
குருவருள் தருநெறி திருவருள் பயன்விளை
கருவிக ரணமுற கடுவினை தீர்த்தருள்
விரும்பலர் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே

10. ஒருங்கேழ்புவி உயிர் ஒலிதுடிப் படைப்பருள்
பருவுரு பசுபாசப் பவமழி செங்கதிர்
துரும்பினேன் எனக்குநின் தூங்கழல் நிழலருள்
விரும்புநல் தொட்டியம் மேவிய மெய்ப்பொருளே
–திருச்சிற்றம்பலம்–

## 231. திருப்பட்டூர் – திருச்சி வட்டம்

**பிரம்மபுரீசுவரர் எழுசீர் ஆசிரிய விருத்தம் பிரம்மநாயகி**

1. திருமா லோடயன் சிரந்தாழ்ந் துதுதி செம்பொன் மேனிநல் ஈசானன்
மருகோ ராயிரம் மானிடம் பேசும் வளர்மொழி துதிசெய் சங்கீதன்
உருவோர் உலகோர் உத்தமச் சான்றோர் ஓம்நமச் சிவாய எனத்துதிக்க
அருளே தந்திருள் அகற்றும் சோதியன் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

2. பதஞ்சலி புலிப்பாணி பிருகும் பணிந்தெழும் பரம்பொருள் மாமலர் பனிமேனி
இதமிது பெருந்தவம் எனமுய லகன்மகிழ் ஏழிசை நாயகன் தற்புருடம்
மதநெறியார்முனி வானிடை உலவுநர் வளரே கம்பனென்றடிபணிய
அதமழித்தருளளி ஆனந்த் தாண்டவ அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

3. திங்களும் திருமகள் தேவேந் திரன்தொழும் திருவடித் தாமரைப் பேரழகன்
பங்குனி மூன்றுநாள் பரிதிதான் பூசைசெய் படர்சுடர் மீறிய ஆகோரம்
மங்கல மங்கையர் மாமதி ஆடவர் வையகத் தோரிறை எனத்துதிக்க
அங்கதம் மரிவுற ஆனந்தம் தந்தருள் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

4. சேரர்தம் கோவின் ஆதியு லாகொணர் செந்திரு வையனார் தொழுதுநிற்க
மாரன் உடலழி மாதவச் செந்திரு மறையுறை மாணிக்க வாமதேவம்
ஊரனும் மாறனும் ஒழுக்கநல் கொங்கரும் உயர்மதித் தொண்டையர் துதித்துவக்க
ஆரலர் பகையறுத் தருளூறும் உயிர்வளர் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

5. சமயநற் குரவோர் தற்பரங் கழலிணை தாழ்பணிந் தேகிய தர்மநிலம்
இமயப்பெ ருங்கடலை எழுவரை யாக்கிய இன்னருள் சத்தியோ சோதமுகம்
நமனைத் தடுத்திடும் நற்குண மானிடர் ஞானமா மாதரும் துதிதுவக்கும்
அமைதி நிறைத்தருள் ஆன்மீ கம்வளர் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

6. பஞ்சமா பாதக பழவினை தீர்த்தருள் பரமனின் கழலொளி படர்கோயில்
நஞ்சமுண் டமுதளி நான்மறை வேதியன் நாட்டிய ஞானி நாதமழை

விஞ்சையர் விரதியர் விரைமலர் மூலிகை விற்பனர் வழிபட விமலோனும்
அஞ்சவத் தையழித் அயர்வறும் அருள்தரும் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

7. துறைசைப் பனந்தாள் செங்கோல் தருமை தூயநல் லாதீனம் துதித் துவக்கும்
கறைமணி கணடன் கற்பூர நாயகன் கனகத் திரள்மலைக் கங்காளன்
மறைமணி வாசகர் வையகம் போற்ற மலரடித் தீக்கைசெய் மாகேசன்
அறைநடுச் சுடரென அருளொளி தருமிறை அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

8. செம்மைசெய் விழிமலர் மிதம்படத் திரிபுரம் வெறும்பொடி யாக்கிய வெஞ்சமரன்
தம்மையே தாமறி சத்துவம் உயிருற சகலரின் மலமழிச் சங்காரன்
இம்மையே தன்கழல் இறைஞ்சிப் பதமுற இயற்கைம திசெய்யும் ஏகம்பன்
அம்மையப் பன்இறை அருள்மொழி ஞானியன் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

9. மூன்றுபஞ் சாக்கரம் முத்திசித் திதரும் முக்குணம் மாற்றும்முழு முதல்வன்
தோன்றுதோன் றாத்துணை தொடர்சுத்த மாயை துரியம் தொடராச் சுடர்மேனி
ஈன்றா ளினும்தயை ஈந்தருள் நேசஞ்செய் இயம்பலைக் கடந்தோன் ஈசானன்
ஆன்றமை மதியொளி அருள்சுகம் நயந்தருள் அன்பமு தப்பட்டூர் ஆண்டவனே

10. செந்தழல் திருக்கரம் சீர்தமிழ் யாழிசை செஞ்சடை மேனியன் திருநீறன்
முந்தைய றுமதம் பிந்தைய றுமதம் மும்மல மயக்கறா தழித்திடினும்
பந்தபா சமறும் பசுபதி கழலுற பக்குவத் தான்மா பதிவுறவே
அந்தக்க ரணமளித் தானந்தம் காணச்செய் அன்ப முதப்பட்டூர் ஆண்டவனே

–திருச்சிற்றம்பலம்–

## திருப்பாட்டூர்

**பிரம்புரீசுவரர்** **கலிவிருத்தம்** **பிரமபுகுசுவாி**

1, பஞ்சவி னையற படிக்கா சளித்த பாற்கடலன்
சஞ்சித வினையால் தத்தளித் துருகுயிர் அனைவரையும்
அஞ்சற்க என்றருள் அம்பல வாணன் ஆரமுதன்
செஞ்சடை மகுடன் திருப்பட் டூரமர் தேவதேவே

2. கோலவி ழிநுதல் குளிர்தழல் நாயகன் குன்றவில்லி
ஆலமர்ச் செல்வன் அஞ்செழுத் தீசன் ஆனேறன்
தூலநல் சூக்குமச் சுடருரு தருமிறை சுயம்பொளியன்
சேலணி வாவியன் திருப்பட் டூரமர் தேவதேவே

3. நாகம ணிக்கழல் நாயகன் நம்பன் நான்மறையன்
ஆகமப் பொருளன் அருந்தமிழ்த் திருமுறை ஆனந்தன்
தேகமும் யோகமும் திருநிறைப் பூமியும் தந்ததுவும்
சேகரத் திருவருள் திருப்பட் டூரமர் தேவதேவே

4. பிங்கலப் பேரொளி பிரமபுரீச்சரப் பெரியோனே
மங்கல வாழ்வளி மண்ணொடு வானவர் வணங்கிறையே
சிங்கவன் களிறொடு திருமால் இடபநல் வாகனனே
செங்கழல் திருவருள் திருப்பட் டூரமர் தேவதேவே

5. ஓர்மெய்க் கடவுள் ஒளிப்பகிரண்டன் ஓங்காரன்
ஊர்வீண் பழிவேடன் உண்மையை உணர்த்தி உயர்வளித்த
சீர்புகழ் அருவன் சிந்தைநல் கோயிலன் சிவலோகன்
தேர்க்கவின் நாயகன் திருப்பட் டூரமர் தேவதேவே

6. புரிசடை நடனன் பூரணன் காரணன் புகழுங்கன்
பரிவளி ஆதாரன் பாற்கடல் அறிவன் பனிமலையன்
அரிவாட்டாயர்க்கும் அன்பா காயம் அளித்தபிரான்
சிரிப்பெழில் நாயகன் திருப்பட் டூரமர் தேவதேவே

7. தும்பைநல் தாமரை தொடர்சரக் கொன்றையும் ஞாழலணி
அம்மையும் அப்பனும் அண்ணன் நல் நண்பனும் அறிவாசான்
உடம்பரர் விரதியர் ஒளியுருத்தொண்டரும் உவந்துதுதி
செம்பொன் நாயகன் திருப்பட் டூரமர் தேவதேவே

8. ஒப்பனை இன்றிஏழ் உயிருல காண்டுவின் ஊர்வலஞ்செய்
இப்பொழுதப்பால் எப்பவும் இருந்தொளிர் ஏகாந்தன்
தெப்பத்தி ருத்தேரை சேவிக்கும் யாவர்க்கும் திருவளிக்கும்
செப்புதற் கரியன் திருப்பட் டூரமர் தேவதேவே

9. தானி சைந்துடனாய் சார்பின்றி வேறாய் சார்ந்தொன்றாய்
மானிடம் விலங்குபுள் மற்றவை யாவிலும் இருந்தியங்கும்
ஆனிளம் வாகனன் அம்பலக் கூத்திசை ஆலமரன்
தேனிசை யாழ்கரன் திருப்பட் டூரமர் தேவதேவே

10. அருவாய் திருவாய் அறிவளிக் குருவாய் அவனியுயிர்க்
கருவாய் உணர்வாய் காட்சிசெய் அம்பலன் கனகசபை
பருவம் காலம் பகலிர வளிக்கும் பரஞ்சோதி
திருவருள் மேனியன் திருபட் டூரமர் தேவதேவே

–திருச்சிற்றம்பலம்–

## 232. திருப்பட்டூர் – வடதளி

**கைலாச நாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. புண்ணிய தீர்த்தம் புலருமுன் ஆடிநல் புதுமலர் பூசை செய்தே
கண்ணீ ரரும்புற காதலஞ்சிவனே கழல்மரை துதித் துவந்தேன்
மண்ணில் வேறொரு மதிசுகம் வேண்டேன் மலரடி சேர்த்தருளே
வண்ணகப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

2. தொடையலும் சரத்தொடு சுந்தரச் கொன்றையும் சூட்டித் துதிசெய்தே
கடைவிழி நீருற காதலஞ் சிவனே கழல்மரை துதித் துவந்தேன்
தடைமலி பிறவியில் தனிச்சுக வேண்டேன் தழலடி நிழல்போதும்
மடைவயல் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

3. நறும்புகை அகிலொடு நனிமணி சாற்றி நயமுற வலஞ்செய்தே
கறுவிழி நனைவுற காதலஞ் சிவனே கழல்மரை துதித்துவந்தேன்
மறுபிறப் புரினும் நின்கழல் தொழும்பணி மட்டுமே தந்தருளே
வறுபுகைப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

4. தென்னம்பால் தயிரமு தினிப்பொடு படைத்தே செம்மலர் தூவிநின்றே
கன்னங்கண் ணீருற காதலஞ் சிவனே கழல்மரை துதித்துவந்தேன்
இன்பமொன் றெனக்கெனில் இணையடி நான்தொடும் இணையில் சுகமருளே
மன்புகழ் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

5. அஞ்சமு தக்கனி ஆவின்பா லடிசிலும் ஐயநின் முன்படைத்தே
கஞ்சக்கண் நீருற காதலஞ் சிவனே கழல்மரை துதித்துவந்தேன்
எஞ்சிய பிறவிகள் ஈசநின் கழல் தொழும் இன்பமே ஈந்தருள்க
மஞ்சலர்ப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

6. தேனவர் மல்லிகை செண்பகம் நெருஞ்சியும் திரளுறத் தூவிநின்றே
கானலம் விழியுறக் காதலஞ் சிவனே கழல்மரை துதித்துவந்தேன்
ஊனப்பி றப்பிலென் சிரமேல் நின்னடி ஊன்றும் சுகமருளே
மானலப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துணையரனே

7. பொறிவரி நிறமலர் புலிநகக் கொன்றையும் புதுஎருக் கலர்தூவி
கறைவிழி நீருற காதலஞ் சிவனே கழல்மரை துதித்துவந்தேன்
நிறைசுகம் உளதெனின் நினகழல் அருகுறை நிரந்தரச் சுகமருளே
மறைமதிப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

8. செக்கர ளிஅக்கம் சிறுபுலி நகக்கொன்றை செறிமலர்த் திரள்தூவி
பக்கநீர் விழியுற பரம்பொருள் சிவனே பதமரை துதித்துவந்தேன்
இக்கணம் முதல்யான் சூக்கும உடலொடு பக்கநிற்க அருளே
வக்கனைப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

9. வெண்மலர் மாலைகள் வன்னியந் தளிரொடு வெட்சியும் தூவிநின்றே
பண்ணிய பவமற பரம்பொருள் சிவனே பதமலர் துதித்துவந்தேன்
அண்டப்பே ரண்டம் ஆக்கியதிருவடி அருகுற இடமருளே
வண்டலர்ப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

10. துகளறு மனத்தொடு தூமலர் கழலுற தூவித்து தித்தெழுந்த
சகலரும் பிரளயர் தவமுறை விஞ்ஞானர் தற்பரக் கருணையுற
சுகமருள் சுக்கும சுந்தரக் கூத்தனே துணையடி நிழலருளே
மகநலப் பட்டூரின் வடதளி அமர்ந்த வையகத் துரையரனே

–திருச்சிற்றம்பலம்–

## 233. கானக்கிளியநல்லூர்

**சர்வலோகநாதர்　　அறுசீர் ஆசிய விருத்தம்　　ஆனந்தவல்லி**

1. பொன்னொளித் திருவுரு பூமென்மைச் செங்கரம் பூதல நாயகனே
அன்பணிக் கண்ணப்பர்க் கருளொளி மாணிக்கம் அடியவ ராரமுதே
ஒன்மலர்க் கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கிலும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

2. தென்றலின் மென்மையன் தீஞ்சுடர் மேனியன் தில்லையின் வான்வெளியே
தன்மனை வியைஅளி தற்பரன் தொண்டர்க்கும் தாளரு கிடமளித்த
உன்னியர் கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்தபோல்
என்னைநீ மறக்கிலும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

3. தென்புலத் தாரொடு சித்தரும் வானவர் தினந்தொழும் பேரிறையே
தன்மகன் ஊன்சமைத் தளித்தநல் தொண்டர்க்கும் தன்திரு வடியளித்தீர்
ஒன்றுநர் கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

4. இன்பக் கொடைதரும் இன்னொளித் திருக்கரத் தேகம்பத் திருவருளே
வன்தொண்டர் கண்கெட வைத்துப் பின் காஞ்சியில் மலர்க்கண் தந்தபிரான்
உன்மணி கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்துபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

5. பன்னீர் மலர்தொடு வதுபோல் தொடும்விழி பரம்பொருள் பெருநிதியே
அன்பெழில் காரைத்தாய்க் கருள்வடி வளித்த அடியவர்க் காரமுதே
உன்மணிக் கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

6. சின்னஞ் சிறுதேன் சிட்டின் சிறகென திகமுறும் மெல்விரல்கள்
நன்மகள் கூந்தலை நல்கிய தொண்டர்க்கும் நற்பே றளித்தபிரான்
ஒன்றிய கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

7. மின்னலோர் கோடியும் மிளிர்சடை கவின்மணி வெண்பிறை அணி அரனே
முன்மதிச் சம்பந்தர் முத்துச் சிவிகைபெற முக்கனிக் கவிமகிழ்ந்தோய்

ஒன்றுநர் கினியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

8. பன்மணி தரளம் பவளப்பொன் மேனி பாற்கட லமுதிறையே
சின்னச்சி லந்தியை செங்கணா னாக்கிய திருத்தொண்டர் தேனமுதே
உன்னளிக் கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

9. குன்றிம ணிச்சரம் கூவிளம் கூடிய குவலயப் பேரிறையே
பன்றிக்கு மருளளி பசுபதி பாசத்தை பாங்குற நடத்துபிரான்
ஒன்றிய கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

10. நன்றியல் ஊனமும் ஞானந டனமுற நவயுகக் காப்பருளே
கன்றினை மாய்த்த மகனுயிர் கொண்டோன் கடமைக் கருளொளியே
ஒன்றிய கிளியநல் லூருறை இந்திரன் உனதடி பணிந்ததுபோல்
என்னைநீ மறக்கினும் நின்னைநான் துதிப்பேன் எந்தந்தை ஈசுரனே

–திருச்சிற்றம்பலம்–

## 234. புள்ளம்பாடி – லால்குடி

**சிதம்பரேசுவரர்** **வஞ்சிவிருத்தம்**

1. பெரிதினும் பெரிய பேரொளியே
தெரிவிலா எனையும் செம்மைசெய்தீர்
முரிவிலாத் துணையே துதித்தெழுவேன்
பரிவுறைப் புள்ளம் பாடியரே.

2. அணுவினும் அணுவில் ஆழ்ந்தவனே
கணுவிலாப் புழுவெனக் கருளளந்தீர்
நுணுகுநொ டியற நினைத்துதிப்பேன்
பணிநலப் புள்ளம் பாடியரே

3. குளிரினும் குளிரே குவலயனே
தெளிவிலோன் எனக்கருள் செய்துவந்தீர்
ஒளிகளில் நினைக்கண் டேதுதிப்பேன்
பளிங்கெழில் புள்ளம் பாடியரே

4. அழகினுக் கழகே ஆரமுதே
புழுவெனக் கருளிய புண்ணியனே
பொழுதெலாம் நினைத்துதித் தின்புறுவேன்
பழமருள் புள்ளம் பாடியரே

5. எரியினுக் கெரியே ஈசுரனே
துரிசெனைச் சூக்கும் மாக்கிய கோ
செருபசித் துயிலிலும் நினைத் துதிப்பேன்
பரிசிலர் புள்ளம் பாடியரே

6. கொதியினும் கொதிநீர் எரிமலையே
விதி வினை தீர்த்தெனை ஆண்டவனே
அதியுணர் வொழிவற நினைத்துதிப்பேன்
பதிமதிப் புள்ளம் பாடியரே

7. கடிதினும் கடிமலைக் கற்பகமே
அடிமையென் அகம்புகுந் தொளிர்நிறைவே
முடிநொடி முனகலில் நினைத்துதிப்பேன்
படிபதி புள்ளம் பாடியரே

8. கருவினில் கருவாய்க் கலந்த முதல்
திருவடித் தீக்கைக்கென் சிரம் சேர்த்தீர்
ஒருநொடி நினைமறந் துயிர்வாழேன்
பருவுருப் புள்ளம் பாடியரே

9. ஆதிய னாதியே ஆண்டவனே
தீதிலா நயனநல் தீக்கைகதந்தீர்
சோதியே நினையன்றி ஏதுதெய்வம்
பாதிரிப் புள்ளம் பாடியரே

10. கருணையின் கருணையே கடவுளெந்தாய்
தெருளுரு தீண்டிநல் தீக்கை தந்தீர்
குருதியின் குதிப்பென நினைத்துதிப்பேன்
பரிவொளிப் புள்ளம் பாடியரே

–திருச்சிற்றம்பலம்–

## 235. வெங்கடாசலபுரம்

**ஏகாம்பரீசுவரர் கலிவிருத்தம் காமாட்சியம்மன்**

1. புவனப் பெருந்தகை பூவார் தேன்கழல்
சுவனநல் காட்சியும் சுந்தர நனவருள்
நவநூல் ஐம்பத்தைந்துநந் தீசர்களி
தலமருள் வெங்கடா சலபுரத் தீசனே

2. இனிதுயிர்க் கருளும் ஏகம்பத் தோன்றல்
நனிதுயில் உயிரினில் நல்லுணர் வளிப்பனல்
வனிதையர் தினந்துதி மங்கலப் பரம்பொருள்
தனிநிதி வெங்கடா சலபுரத் தீசனே

3. பற்பல ரும்துதி பற்பல நெறிஉரு
கற்பனை மனிதர்செய் கலையுரு கோடிகள்
பொற்பதன் அவைபொறுத் தருள்செய் புனிதன்
சற்குணன் வெங்கடா சலபுரத் தீசனே

4. உந்தியி லமர்ந்தே உயிருடல் நுதலுறை
வெந்தனல் பேரொளி விளக்கிருள் வெளிச்சுடர்
அந்தகற் கருளிய ஆனந்தப் பெருவெள்ளம்
சந்தன வெங்கடா சலபுரத் தீசனே

5. பொங்கு மலைப்புனல் பூந்தவி சளிப்பனல்
அங்கச னுடலழி அறிவொளிப் பேரருள்
செங்கதிர் ஞாயிறு திங்களின் குறைதீர்
சங்கரன் வெங்கடா சலபுரத் தீசனே

6. புத்தம் புதுமையன் புரியாப் பழமையன்
முத்துபந் தரளி முக்கண் வேதியன்
பத்திநெ றிவளர் பகுத்தறி வன்பளி
தத்துவன் வெங்கடா சலபுரத் தீசனே

7. கண்டம ரகதன் கயிலயத் தென்றலன்
பண்டொரு வேடனை குகனர சாக்கிய
தொண்டர்தம் மனத்துறை சுடரொளி ஆதியன்
தண்டலை வெங்கடா சலபுரத் தீசனே

8. எந்திர யாழிசை இருசுடர் மாமலை
செந்தழல் ஓவியன் திருமுறைப் பண்ணிசை
வந்திரு முத்திரை மருள் நீக் கியர்கருள்
தந்தைஎம் வெங்கடா சலபுரத் தீசனே

9. உபநிதி அருளளி உபகற்ப மணிநுதல்
கபடக் கயமுகன் கரியுடல் அழித்த
சபலப் புரந்தரன் சாபம கல்வளி
தபதியர் வெங்கடா சலபுரத் தீசனே

10. இன்னிசை வீணையன் ஏழ்கடல் பரம்பொருள்
மின்மினிக்கொளியருள் வெஞ்சுடர் நாயகன்
என்னைத்தன் தொழும்பாய் ஏற்றஎம் பெருமான்
தன்மைநல் வெங்கடா சலபுரத் தீசனே

–திருச்சிற்றம்பலம்–

## 236. ஆலம்பாக்கம்

**கைலாசநாதர்** **வஞ்சிவிருத்தம்** **அருந்ததியம்மன்**

1. அரவினை மேனியில் ஆடவிட்டே
கரமொடு தீச்சுடர் காட்டிநின்றீர்
சிரம்பணிந் துலகோர் செய்வதென்னே
பரமணி ஆலம் பாக்கக்தரே

2. பிச்சையோ டேந்திப்பெண் பின்சென்றே
இச்சையைத் தூண்டுமோர் எழில்கொண்டீர்
கச்சைத ளர்ந்தனர் தாருகையோர்
பச்சைநெல் ஆலம் பாக்கத்தரே

3. பொறிப்புலித் தோலுடை போர்த்துநின்றே
மறிகரம் பிடித்தீர் வேடனைப்போல்
அறிவிலர் ஒதுங்கலைக் காண்கிலிரோ
பறியொளி ஆலம் பாக்கத்தரே

4. கொக்கிற கணிதெருக் கூத்தனைப்போல்
செக்கர்விண் மேனியில் நீறணிந்தீர்
மக்களின் மயக்கத்தை மறந்தீரோ
பக்கம லையாலாம் பாக்கத்தரே

5. இலைதழை மார்புறு மாலையென்றே
தலையொரு பிறையும் சூடிநின்றீர்
விலைமதி நவமணி கிடைத்திலையோ
பலபுவி ஆலம் பாக்கத்தரே

6. புதுப்புது வாகனம் படைத்துவந்தும்
மெதுநடை விடைதனை மேவிநின்றீர்
விதுப்புறு மானிடம் மதித்திடுமோ
பதுமைநல் ஆலம் பாக்கத்தரே

7. ஊன நடனமென் றாடிநின்றே
ஈனச்ச கலர்க்கும் ஏற்பளித்தீர்
தான தயவுக்சோர் அளவிலையோ
பானநல் ஆலம் பாக்கத்தரே

8. காலக் கணிப்பெலாம் கடந்துநின்றே
கோலம் இளமையே கொண்டேழுந் தீர்
தூலஐந் தெழுத்தில் தோன்றுவதேன்
பாலநல் ஆலம் பாக்கத்தரே

9. மொக்கெருக் கேகொன்றை விளஞ்சூடி
எக்களத் தொலிக்கும் ஆடுகின்றீர்
சுக்குமப் பஞ்சாக் கரத்தமர்ந்த
பக்குவ ஆலம் பாக்கத்தரே

10. தேனிள நீர்பால் நீராடி
ஏனப் பல்மாலை அரவணிந்தே
ஞானக் கூத்தாடும் கேனய மேன்
பானக்க ஆலம் பாக்கத்தரே

–திருச்சிற்றம்பலம்–

## 237. டி.கல்லிக்குடி

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. எல்லாவுயிர் உறையும் நிழல் ஏகச்சுடர் வெளியன்
நல்லார்குணம் அல்லார் மனம் நல்கும்பதி மாயை
வல்லார் மலம் தீரத்தரும் வானோர்முழு முதல்வன்
சொல்லார் நிறை கல்லிக்குடி தோடார் செவிப்பரனே

2. தானேபுவித் தயாய்வரும் தாய்மை அமுதளிப்பார்
கோனாகியும் குடியாகியும் குற்றே வலும் செய்வார்
ஊனே உயிர்உறையும் உணர் ஒளியாகியே இயங்கும்
வானோர் துதி கல்லிக்குடி மழுவார் கரப்பரனே

3. குன்றத்திரு வருளோர் கவின் கோயில்மணி கண்டன்
பொன்னார்நினை புரிந்தோர் புவி ஏழேழிலும் யாரே
நன்னார்புரம் எரித்தே அருள் புரியும் மணித்திலகன்
இன்பந் தரும் கல்லிக்குடி செறிவார் மழுப்பரனே

4. சொந்தம்புணர் செந்தீக்கரன் தோன்றாத் துணை இறைவன்
சந்தத் தமிழ் சம்பந்தர்க்கும் முத்துப்பந்தர் தந்தோன்
சிந்தைக் கினி தேவாரமும் திருவாசக மளித்த
செந்தாமரை கல்லிக்குடி செறிவார் மழுப் பரனே

5. மாலோடயன் காணாத்திரு வடியும் முடி உடையோன்
நூலோடுறை சிலந்திக் கருள் நுண்மாமதி விண்ணோன்
நாலேழ் புவி நனிமாமதி நல்லோர்துதி கடவுள்
பாலானிரை கல்லிக் குடி பதிமேவிய பரனே

6. உருவேதுதி உலகோருளத் தொளியாய்மிளிர் தழலன்
திருமாளிகைத் தேவர்க் கருள் செம்பொன்சுடர் ஆதி

குருவாயுயிர் கொடுமாமலம் குறைக்கும் வினை தருவோன்
கருமா உரி கல்லிக்குடி கருணைகடல் பரனே

7. பூந்தாரணி பொன் மேனியன் புவியேழ் பகிரண்டன்
சேந்தற்கருள் செய்தே கழல் நிழலுந்தரும் சுடரன்
ஏந்துந் தழல் வருமூழியை எடுத்தோதுயோர் குறிப்பன்
தீந்தேன் கழல் கல்லிக்குடி திருவார்விழிப் பரனே

8. சூரைச்சுட லைக்காடதில் தொடர் நாட்டியம் செய்யும்
தேரைக்கயி றில்லாவலம் செய்யும் பரி வளித்தோன்
நாரைக் கருள் ஞானக்கடல் நலிந்தோர்துதி கடவுள்
ஆரைவயல் கல்லிக்குடி அருளே தரும் பரனே

9. தொன்னூற்றறு தத்துவமும் தொழிலோ டுயிர்க் களித்தே
நன்னூற்கலை நயந்தேவினை நாளும் குறைத் தருள்வோன்
என்போடியை அன்பால்விளை வெல்லாம் தரும் இறைவன்
தென்னீர்க் குளக் கல்லிக்குடி சீரார்பதிப் பரனே

10. அடையார் புரம் எரித்தேபுவி அருளேயளிக் கடவுள்
விடைமீதமர் குளிரார்சுடர் விதிமா மதி தருவோன்
கடைநாய்என திறைஞ்சல் மகிழ் கனிவார்கழற் கனலோன்
மடைநீர்க் கவின் கல்லிக்குடி மழுவார்கரப் பரனே

–திருச்சிற்றம்பலம்–

## 238. வேலனூர்

**கைலாசநாதர்** **கலிவிருத்தம்**

1. பெருந்தகை மாலுக்கும் பிரமற்கும் குறைதீர் பேரருளன்
அருந்ததி அன்னோர் அறமுறை துணைக்கும் அன்பளித்த
திருமலர் அருளுரு செம்பொருள் வேலனூர் செங்கழலீர்
குருசிவ பூசைக்கும் குறையா நிதியளித் துவந்தீரே

2. வெண்ணீறணிகவின் விரைமலர் அருவுரு வேதமலை
கண்மலர் பூசைசெய் கண்ணனுக் காழியை கனிந்தளித்தோன்
புண்ணியர் நல்லோர் புகழோர் வேலனூர் செங்கழலீர்
தண்ணீர் தவிபசி தீர்ததுத வநிதி வளர்த்தவரே

3. பக்குவ மறுந்தப வத்தக்கன் வேள்வியின் பழிமுடித்த
சொக்கன் துய்தழல் சுந்தரக் கூத்தன் சுகதேவன்
செக்கர்விண் மேனியன் திருவருள் வேலனூர் செங்கழலீர்
அக்கம ணியளிப் போர்க்கெழி லறிவளி த்துவந்தவரே

4. இண்டெலி தூண்டிய எரிதிரிக் கிரும்முடி அரசளித்த
தண்டமிழ் தருமிக்கும் தமனியக் கிழியளி சங்காரன்
செண்டலர் சூடிய திருவருள் வேலனூர் செங்கழலீர்
தொண்டர்தம் பாதம் துதிப்போர் மதிநிதி வளர்த்தவரே

5. ஏறதன் மீதமர் இளம்பிறை சூடிய ஏகம்பன்
மாறாப் பூசைசெய் மாணியைச் சண்டிசெய் வானமுதன்
தேறலர் பொழில் சூழ் சீர்வயல் வேலனூர் செங்கழலீர்
நீறமு தக்கொடை நேசரின் துயர்பிணி தீர்த்தவரே

6. நாகமெல் மகுடன் நாதநல் மெல்லிசை நலமருளும்
போகப்பு ரந்தரன் புரைதீர்த் தருளிய பொன்மேனி
ஏகம ருவுரு எழில் வயல் வேலனூர் செங்கழலீர்
தேகத் துணிக்கொடை செய்சந் ததிக்குற வானவரே

7. பருவுடல் நுண்ணுடல் பவத்துயிர் நவமுறப் பரிவளித்த
கருவுட லுயிரில் கடுமலத் திடைமதி கலந்தளித்தோன்
தருமமும் நிறைமனச் சகலரின் வேலனூர் செங்கழலீர்
திருமுறை நூல்க்கொடை செய்பரம் பரைவான் சேர்த்தவரே

8. செல்லுயி ருடலறச் சூக்குமத் துடலளி திருவருளன்
வெல்கதிர் பாசுப தம்பார்த்த தனுக்கருள் விண்ணவர்கோ
பல்கலை வளர்த்துயர் பண்பருள் வேலனூர் செங்கழலீர்
கல்விக் கொ டையோர் கற்பகமெனமனத் தமர்நதவரே

9. உள்ளமு முநிதிக் கிழவோற் கருளிய உத்தமத்தீ
வெள்ளப் பெருங்கடல் விரைந்தழி ஊழிசெய் விரும்பெழிலன்
துள்ளல் ஆநிரை நெல்மலை வேலனூர் செங்கழலீர்
களமலர் பூசைசெய் கடும்பத்தர் கரம்பிடித் தருள்பவரே

10. ஞானக் கவினுரு நமச்சி யப்பெயர் நாதாந்தன்
நானிலம் ஏழ்புவி ஞாதிருக் கருளளி நான்மறையன்
தேனிளம் பூவனம் செழிவயல் வேலனூர்க் செங்கழலீர்
கேனச் சிதடனென் கேடுறு பிறப்பறுத் தருள்வீரே

–திருச்சிற்றம்பலம்–

## 239. பூவாளூர்

திருமூலநாதர் | தரவுகொச்சிகக் கலிப்பா | குங்குமாம்பிகை

1. கரும்புவில் வேந்தழித்து கவின்மனையாள் காணுறவே
திருவருள் புரிந்தவள்ளல் திருவாளூர்த் தேரழகன்

அரும்போ டக்கஞ்சூடி ஆடலுடன் பாடல்செய்யும்
பெரும்புகழ் பூவாளூர் புண்ணியனைக் கண்டேனே

2. சப்தரிசி யாரின்தவம் தற்பரமக் கழல்பணிய
ஒப்பரிய வரமளித்து ஓதுமறைத் தீக்கைசெய்தோன்
செப்பரிய பஞ்சபூதம் செய்துமணித் தமிழிசைக்க
தெப்பமலர் பூவாளூர்த் தெய்வமதைக் கண்டேனே

3. கற்பனைக்குள் அடங்காத காற்றுமழை தீவெளியன்
சொற்பதத்தை வடித்தளிக்க தூயகவி யாக வந்த
அற்புதத்தின் அற்புதமாம் ஆடல்செயும் மந்திரமாம்
நற்கருணைப் பூவாளூர் நாயகனைக் கண்டேனே.

4. எட்டழகு நற்குணமும் ஏழமுதப் புவிபடைத்து
வெட்டவெளி அந்தரத்தில் வீணையிசை ஏந்துமொளி
கட்டழகுப் பொன்மலையன் காலங்கடந் தாடுகவின்
பெட்டகப்பொன் பூவாளூர்ப் பெம்மானைக் கண்டடேனே

5. கோடிவகை யோனிகளில் கோடிகோடி உயிர்வளர்க்கும்
ஆடிய தோர் பாதமதில் அகங்காரம் அழிப்பமுதன்
நாடுவர்க்கு நற்றவமும் நல்லுடம்பு போகந்தரும்
சூடுகொன்றை பூவாளூர்ச் சுந்தரனைக் கண்டேனே

6. ஏடெழுதிப் புவிக்களித்த ஏகம்பத் திருமூர்த்தி
ஆடகப்பொன் பெண்ணாற்கும் அளித்துவந்த மாயைவள்ளல்
காடகத்தே நின்றாடும் ககனத்தீ பேரொளியன்
நாடகச்சீர் பூவாளூர் நாயகனைக் கண்டேனே

7. ஓதுமதி விதிபுனைந்து ஒங்கார ஒளியமார்ந்து
ஏதுமறி யாதவர்க்கு ஈசானம் காட்டிநின்ற
சூதுமதி புரமெரித்துத் துயரமிலா புவிபடைத்தோன்
போதுமதிப் பூவாளூர்ப் புங்கவனைக் கண்டேனே

8. ஆதியோ டந்தமிலா அநாதியப் பேராற்றல்
சோதிவ டிவாகி தோன்றுதுயர் தீர்த்தருளும்
நீதிமதி நேசமணி நெருங்கிவந்தே அருளளக்கும்
வேதியன் பூவாளூர் விமலோனைக் கணடடேனே

9. அட்டாங்க யோகசித்தி ஆதாரப் பேரொளியன்
எட்டாத ஞானமலை ஏகம்பப் பெருவெளியன்

ஒட்டாத உயிர்களுக்கும் ஒளிஊன நடனஞ்செயும்
தட்டானைப் பூவாளூர் தற்பரனைக் கண்டேனே

10. பூவலந் தீவுகளில் புதுப்புதுநோய் தீர்த்தருளி
காவலந் தெய்வமென கலியுகத்தோர் போற்றிசெய
பாவலன் பாண்டியனாய் பழமதுரை தோன்றிநின்ற
நாவலன் பூவளூர் நாயகனைக் கண்டேனே

–திருச்சிற்றம்பலம்–

## பூவாளூர்

**திருமூலநாதர்** **கலிவிருத்தம்** **குங்குமாம்பிகை**

1. கீசன்வெண் திங்களின் கேடழித்தருளிய கேதாரன்
நேசத்திருவுரு நிறைகுணன் அகரன் நிமலீசன்
பாசக் கட்டறுத்தே பாருயிர்க் கன்புசெய்பரமேசன்
பூசனை செய்துயிர் போற்றும் பூவாளூர் புண்ணியனே

2. கீசரி சூடிய கிண்கிணிச் சதங்கை கேடிலியன்
தாசரி போலுரு தாங்கிய பாம்புறழ் பரஞ்சோதி
கேசரி நரனுடல் கிழித்தருள் புரிந்த கேளமரன்
போசகம் தந்துயிர் புரைதீர் பூவாளூர் புண்ணியனே

3. கீதவம் கூவிளம் கிளுவையும் சூடிய கிரிமுகடன்
நாதம ணிக்கழல் ஞானநல் வடிவன் நான்மறையன்
காதலம் பத்தரின் கடிமலக் கணக்கழி கங்காளன்
பூதக ணஞ்சூழ் புரைதீர் பூவாளூர் புண்ணியனே

4. கீர்த்திநல் வாசகன் கிரிவலத்திடைஒளிர் கிஞ்சுகத்தன்
ஆர்த்தமா யானையை அலறுறக் கிழித்த ஆரமுதன்
தீர்த்தநல் யாத்திரை செய்சிவ பத்தரின் சிந்தையுறை
பூர்த்திநல் பூரணன் புரைதீர் பூவாளூர் புண்ணியனே

5. கேழலின் கோடக்கம் கிளுவையும் ஆமைவன் ஓடோடும்
வேழவன் தோலணி விண்ணுல காட்சியன் விமலீசன்
காழியர் கோனுக்கும் கைத்தாள மளி கனிமருந்தன்
பூழியர் பூமியர் புரைதீர் புவாளூர் புண்ணியனே

6. கிண்ணா ரத்திசை கிங்கரத்தமரும் கீதநாதன்
திண்ணிய குணத்தன் திருமூலநாத செம்பொன்னன்
கண்ணிய கலிக்கம்பர் பூசித்து வந்த கயிலையண்ணல்
புண்டரி கக்கழல் பூங்கவன் பூவாளூர் புண்ணியனே

7. கிம்புரிக் கரியமர் கேடழி நாயகன் கிரிவாசன்
அம்பலக் கூத்தன் ஆதிய நாதியன் அருட்கடவுள்
பிம்பங்கள் யாவிலும் பேரணு வலையாய் பிதிரனலன்
பொம்மல மருத்துவன் புங்கவன் பூவாளூர் புண்ணியனே

8. கிரிசன் ஐம்பூதன் கிரகமுடுசெய்த கேதாரன்
நரிபரி செய்தே நல்லவா தவூரர்க் கன்பளித்த
பரிவுரு வாகிய பரம்பரஞ் சோதிப் பாற்கடலன்
புரிசடைச் சங்கரன்போதஞ் செய் பூவாளூர் புண்ணியனே

9. கிரகண இருளொளி கீழ்மேல் திசை எட்டளித்தபிரான்
மரகத வீணையன் மலமற உயிர்க்கறி வளித்தழல்
பரகதி அருளும் பசுபதி பாசமும் பரிந்துணர்த்தும்
புரமெரித் தன்மையர் புரைதீர் புவாளூர் புண்ணியனே

10. கிளிச் சிறை மேனியன் கிண்ணரர் இசைமகிழ் கிண்கிணியன்
களியுன வுண்டுநல் காவிரிச் சேர்ந்தர்க்கும் கருணைசெய்த
தளிக்குளத் தஞ்சையன் சக்கர மீந்தநல் சங்காரன்
புளிச்சனு மாகிமண்புரைதீர் பூவாளூர் புண்ணியனே

–திருச்சிற்றம்பலம்–

## 240. திருமங்கலம் - மேன்மழநாடு

**சாமவேதீசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்** **லோகநாயகி**

1. முந்தையர் மூவர்க்கும் மூத்தோனே முக்கண் மோகன முழுமுதலே
சிந்திசைச் சிலம்பணி திருமகளும் சேவித்து மகிழுந்த செஞ்சுடரே
கந்தையணி சேந்தர்க் கருளளித்தே கவிப்பல் லாண்டிசை கேட்டபிரான்
செந்தளிர்க் கிளுவை நொச்சியணி திருமங்லச் சாம வேதியனே

2. பறிநிறப் பரமன் பரஞ்சோதி படிநிலை உயிர்க்கருள் பாசுபதன்
எறிந்ததன் தாய்ப்பாவம் எரிந்தவிய ஏர்படைப் பரசு ராமருக்கும்
நெறிமுறை வழுவா நிலைப்பேறும் நிலம்புகழ் வாழ்வும் அளித்தபிரான்
செறிமலர்க் கொண்றையும் எருக்கணிந்த திருமங்லச் சாம வேதியனே

3. மாசிமகப் பூசை வானமுதன் மங்கலத் தோடணி மாதேவன்
காசிநல் காஞ்சிக் குற்றாலன் கமலாலயப்புனல் கடலமுதன்
வாசித்த வேய்ங்குழல் ஆணயர் மகிழிசை கேட்டுவான் வாழ்வளித்த
தேசிகப் பரம்பொருள் சிவலோகன் திருமங்கலச் சாம வேதியனே

4. சலமிலி சங்கரன் சமநீதி சார்ந்துயிர்க் கன்பளிக்குளத்தன்
நிலவொடு ஞாயிறும் நித்தியமும் நெடும்பூ மத்தமும் நிறைதாரன்

திலகவ தித்தாய் சிரம்பணிந்தே திருவடிக் காட்சிகாண் சிறப்பளித்த
சிலம்பிசைத் திருவருள் சிவலோகன் திருமங்கலச் சாம வேதியனே

5. கட்டிய தோலுடை கனகமலை கார்த்திகைச் சோமன் காமநாசன்
வெட்டிய பழிக்கொரு பதவிதந்த விண்ணவச் சேகரன் விமலீசன்
பட்டினத் தார்பத்தி ரகிரிக்கும் பழிப்பில் பேறளி பாற்கடலன்
சிட்டன் சிவலோகன் தேனமுதன் திருமங்கலச் சாம வேதியனே

6. இஞ்சிகளெரித்த ஈசானன் ஏகம்ப மாய் நின்ற ஏழிசையன்
குஞ்சரத் தோலுடை குங்கிலியன் கோணமும் முறுறு கொண்டகுணன்
உஞ்சவிருத்தியன் உலகொளியன் உருபொருள் யாவினும் உறைந்தருளும்
செஞ்சதங் கைக்கழல் தேகமிலி திருமங்கலச் சாம வேதியனே

7. காணியாட் சிஏழேழ் பேரண்டன் கற்பக மூர்த்தி கனிவுருவன்
தோனிபுரத்திளத் பாலகற்றும் தூயஞானப்பால் சுவையளித்த
வேணியலங்கார விண்ணீசன் வெங்கதிர் திங்களும் மிளிர்தங்கன்
கேணியரிந்திரமர் தினந்துதிக்கும் திருமங்கலச் சாம வேதியனே

8. கருண கரநீதி கயிலாயன் கரியுரி போர்த்திய காமநாசன்
அருணா சலனே ஆரூரா ஐயா றானைக் காவரனே
செருமா தாருகை வனத்தோரை திருத்திய திருவா திரைவலனே
திருவடி யார்துதி சிவலோகதிருமங்கலச் சாம வேதியனே

9. சகலர் பிரளயர் பிஞ்ஞானருடன் தனியாய் சார்த்துள் நின்றுணர்த்தி
அகமணி ஞானமும் தவமளித்தே ஆதிம ல்தினை ஒடுக்குமனல்
புகலிடம் தானெனப் புரியவைத்தே புரையிர் பிறப்பற புகலளிக்கும்
திகழ்மணி சங்கரத் தியாகேசன் திருமங்கலச் சாம வேதியனே

10. ஞானமா ஞாயிறு நாயகனே நடனசிங் கார நமசிதனே
தானமாய் யாவையும் தந்தருளும் தமர்மதிச் சற்குணத் தற்பரனே
ஏனமோ மானைநல்சிலந்தியுடன் இருஞ்சிரை நாரைக்கும் இனிததளித்த
தேனருள் திருவடிச் சிவலோகா திருமங்கலச் சாம வேதியனே

–திருச்சிற்றம்பலம்–

## திருமங்கலம் – மேன்மழநாடு

**சாமவேதீசுவரர்** **கலிவிருத்தம்** **யோகநாயகி**

1. திரைக்கவின் குளமலர் திகழ்திரு மேனியத்திருவோனே
மரைமகள் நிதம்தொழ மகிழ்வர மருளிய மரகதனே
தரையினர் துதித்ததும் தயவளித் தருள்வீர் தாயாக
விரைமலர்ப் பொழில்சூழ் வெல்திரு மங்கல விமலோனே

2. சிறு துளிர் அருகொடு செருபுலிக் கொன்றையும் சிலசூடி
அறுமணல் குடநீர் அன்னையைக் கொன்றோன் பவந்தீர்த்தீர்
நறுமலர் நம்பனே ஞாலமே துயரற அருள்புரிவீர்
மறுவிலா மணிநகர் வளர்திரு மங்கல மன்னவனே

3. மன்னவர் மன்னனே மாசற்ற சோதி வடிவழகே
தென்னவர் பெருந்துறை சிவபெரு மானே செஞ்சுடரே
இன்னலைத் தீர்த்தின்பம் எங்கும் நிறைத்தருள் எம்மானே
பொன்னொளி வளநகர் புகழ்திரு மங்கலப் புண்ணியனே

4. புண்ணிய பாவமும் புரையிலாச் சுடரே பொன்மலையே
தண்ணிய தாய்மடித் தனித்தவத் தமுதே தமிழிசையே
பண்ணிய பவமற பாருறை உயிர்க்கருள பாலித்தருள்
கண்ணிய வளநகர் கவித்திரு மங்கலக் காரணனே

5. காரண காரிய கருப்பொரு ளீசனே கங்காளா
ஆரணம் தமிழ்மறை ஆயிரம் மொழிகளும் அளித்தவனே
பூரணத் திறையே பொய்மைகள் மாற்றிப் புவிக்கருள்வீர்
தோரணச் சிறுநகர் தொல்திரு மங்கலத் தூயவனே

6. தூயவெள் ளெருக்கொடு துவளமும் மல்லிகை சூடிய கோ
ஆயமா னாயரின் அமுதிசைக் கருளிய ஆசானே
நேயமே அருகுற நிலமெலாம் துயர்படல் அறுத்தருளே
சேயெலாம் சிவசிவ எனுந்திரு மங்கலச் செங்கதிரே

7. செங்கதிர் திங்களும் செருபனி தென்றலும் சிரம்பணிந்தே
எங்கனும் செல்லுமோர் இயக்கஞ்செய் ஈசனே எம்பெருமான்
தங்களின் திருவடி தயவுறப் பணிந்தோம் சற்குருவே
மங்கல வளநகர் மணித்திரு மங்கல மாணிக்கமே

8. மாணிக்கம் பகர்ந்த மதுரையின் திருவே வானகனே
காணிக்கை யாகவென் கடிமனம் ஏற்றபொன் காவலனே
வேணியில் மீன்புனை விண்ணவர் பெருந்தகை வேடவனே
வாணிகச் சிறுநகர் வளர்திரு மங்கல மந்திரனே

9. மந்திரம் மூலிகை மானிடம் வாழ்நெறி தந்தபிரான்
அந்தக்க ரணத்தில் பந்தபா சமற அருள்நிறைக்கும்
சொந்தம திக்குரு சூக்குமத் துடலுறத் துறக்கந்தரும்
கந்தம லர்நகர் கனித்திரு மங்கலக் கயிலயனே

10. கயிலை உறைசுடர் கற்பகக் கடவுள் கனகமலை
வெயிலைத் தடுத்தொரு புயலைக் கொடுத்துமழை புவிகாக்கும்
துயிலைக் கொடுத்துழல் துன்பந் தடுத்தருள் வைத்தியனே
மயிலசை சிறுநகர் மணித்திரு மங்கல வானவனே

–திருச்சிற்றம்பலம்–

## 241. கண்ணனூர்

**ஏகம்பரர் தரவுகொச்சககலிப்பா கருணாகரம்மை**

1. மாணிக்கத் திருக்கோலம் மாறாத பெருங்கருணை
கோணலம் பிறைமுடித்த கோமேதப் பேரொளியன்
கணிக்கை யாகவுள்ளம் கனிந்துருகும் பத்தருக்கே
சேணியர் கண்ணனூரின் தேவதேவன் மதிதருமே

2. மரகதப் பெருமலையன் மலர்க்கழலன் வானுருவன்
கரமொரு மானுறையும் காமனெரி திருவிழியன்
துரகப தாதிப்படை துறந்துவரும் பத்தருக்கே
சிரந்தையன் கண்ணனூரின் தேவதேவன் தரும்வானே

3. நீலம ணிமிடறன் நெருப்பெல்லாம் தானான
கோலமா மணிவிழியன் குடமூக்கின் நதிக்கரையன்
காலைமா லைப்பூசை கனிந்துசெய்யும் பத்தருக்கே
சீலநல் கண்ணனூரின் தேவன்தரும் கழல்நிழலே

4. வைரவெண் விடையமரும் வையத்தார் பேரிறைவன்
நெய்யாத யானையதள் புலித்தோலும் போர்த்தியகோன்
பொய்யாக பெருமைஎனப் பூசைசெய்யும் மானிடர்க்கும்
செய்யமலர் கண்ணனூரின் தேவன் தரும் வினைக்குறைப்பே

5. வானவை டூரியமாய் வலஞ்செல்லும் கதிரவனின்
ஈனக்கு றைதீர்த்த ஏகம்பப் பெருவெளியன்
ஞானத்தால் தாள்பணியும் நல்லடியார் மனமுறைந்தே
தேனலர் கண்ணனூரின் தேவதேவன் மதிதருமே

6. பவளப் பெருமலையன் பாதமலர்த் தாமரையன்
புவனத்தை புதுப்பிக்கும் புகமூழி செய்யிறைவன்
கவனச் சிதைவின்றி கருத்தூன்றிப் பூசைசெய்வார்
சிவமணிக் கண்ணனூரின் தேவன்நெஞ்சில் ஒளிர்வாரே

7. புட்பரா கநகத்தன் புரிசடையன் பிறைமுடியன்
நட்புறை வன்தொண்டர் நலிவகற்றி விழிதந்தோன்

பட்டொளித் திருக்கழலை பனி மலரால் அருச்சிப்பார்
சிட்டரென கண்ணனூரின் தேவனியல் நிதிதருமே

8. கோமே தகச்சுடரன் கொன்றைஎருக் கணிந்தொளிரும்
நாமமோ நமச்சிவாயம் நான்மறையோன் பேரழகன்
பூமணத் திருநாமம் போற்றியுரைத் தேதுதிப்பார்
நேமநிதிக் கண்ணனூரில் தேவன்கோயில் ஆவாரே

9. முத்துவெண் ணீறணிந்த முழுமுதல்வன் கலைமதியன்
சித்தஞ்சி தைந்தறியா சீலரறி பேரொளியன்
நித்தம்நொ டிமறவா நிமலனிசைப் பேருரைப்பார்
தெத்திலாக் கண்ணனூரில் தேவபூசைத் திருமலரே

10. நவமணிப் பேரொளியன் நால்கோடிப் பகிரண்டன்
தவமணித் திருத்தழலன் தாரணியோர் பேரறிவன்
பவமனச் சிதடைன்னை பாட்டிசைக்கும் வரமளித்தே
சிவமணிக் கண்ணனூரில் தேவதேவன் அருள்தருமே
–திருச்சிற்றம்பலம்–

## 242. கண்ணனூர்

**பூசேசுவரர்** **கலிவிருத்தம்** **ஓம்காளியம்மன்**

1. பட்டியும் கோவும் பணிந்ததோர் கோயில்
கட்டிகங் கர்கொங்கர் கள்மலர் பூசித்த
நட்டஞ்செய் நாயகன் நல்லருள் நல்கிய
வட்டிகை வான்புகழ் மாகண்ண னூரனே

2. அந்தமும் ஆதியில் அற்புதத் தாண்டவன்
குந்தளர் பல்லவர் கொய்சலர் பூசித்த
மந்தம தியற வையகப் பிணியழி
வந்தனைச் செந்திரு வளர்கண்ண னூரனே

3. புன்னகை மந்திரன் போகந்த ருமரன்
மன்னன் விக்கிர மாதித்தன் பூசித்த
பொன்னொளி நாயகன் புண்ணியம் அருள்மழை
வன்னியந் தாரினன் வளர்கண்ண னூரனே

4. கொல்புலித் தோலுடை கேயிலந் திருவெழில்
அல்லல்கொண் டோர் தொழ அருளளி ஞானியன்
கல்லால் அமரொளிக் கற்பூரத் தெரிமலை
வல்லார் தொழுமிறை வளர்கண்ண னூரனே

5. அஞ்செழுத் தாதியன் அமரர்கோ அமுதன்
நெஞ்சுறை மாமறை நித்தியச் சோதியன்
தஞ்சம ளித்தருள் தாரணி வளந்தரும்
வஞ்சமில் லார்தொழும் வளர்கண்ண னூரனே

6. கள்ளிமு துகாட்டின்கணஞ்சூழ் நாட்டியன்
வெள்ளிவி டையேறும் விண்ணொளி நாயகன்
உள்ளியு லகுய்ய ஊனந டம்செய்யும்
வள்ளியன் புவிதொழும் வளர்கண்ண னூரனே

7. ப த்திகொள் சகலர் பதம்பணிந் துய்வுற
சித்திசெய் யோகமும் சிவநெறி காட்டியே
முத்தியும் வழங்கும் மூவிழி முனிவன்
மத்திம ணிப்பூரன் வளர்கண்ண னூரனே

8. அக்கநல் மாலையன் ஆரூர் நடந்தோன்
சொக்கலிங் கமாகி தோலினைஅசைத்தோன்
கொக்கிற கும்சூடும் கொல்லிம லைஏகன்
மக்களென் பார்தொழும் வளர்கண்ண னூரனே

9. குஞ்சியோர் இளம்பிறை கோவணத் தொல்லுடை
நஞ்சமுண் நாயகன் நல்சுத்த மாயை
அஞ்செழுத் தாண்டவர் அரும்பெரும் சோதி
வஞ்சமி லார்தொழும் வளர்கண்ண னூரனே

10. மூன்றுத மிழ்க்கவி முச்சங்க முதல்குரு
தோன்றிய மலமற துலங்குயிர் வானுற
ஊன்றிய பதமலர் ஊனந டனம் செயும்
மான்றிகழ் மழுக்கரன் வளர்கண்ண னூரனே
–திருச்சிற்றம்பலம்–

## 243. வேங்கன்குடி

**அக்னீசுவரர்** **கலிவிருத்தம்**

1. ஓங்கல்மறை உருவார்மணி உயர்வான்ஒளி அருளும்
தீங்கார்சலந் தரனின்கரு உடலேஅழி தனலன்
பூங்காமனத் தொண்டர்செயும் பூசைமகிழ்ந் துறையும்
தேங்கும்புகழ் வேங்கனகுடி திருவக்கனீச் சரனே

2. ஆர்த்தார்கரி அமராருடல் அழித்தேஉரித் ததனை
போர்த்தோன்புவி ஏழேழ்பதி பூவார்கழல்ப் பெரியோன்
தீர்த்தாசைகள் திருத்தாளுற செய்பூசையில் ஒளிரும்
சேர்த்தேபுகழ் வேங்கன்குடி திருவக்கினீச் சரனே

3. ஒரோருயிர் வேறாகிய உறுமாவினைக் கருளும்
சீராரரு வுருவாய்எழும் திரளார்சடை முடியன்
ஊரோர்புவி உடையோர்களின் உரைமாமறை இசையோன்
தேரார்புகழ் வேங்கன்குடி திருவக்கினீச் சரனே

4. பண்ணோ டிசைப் பாடல்புனை பாரோர்பசு பதியன்
எண்ணோர்குணத் தேந்தல்புவி எம்மான்நுதல் விழியன்
வெண்ணீறணி தொண்டர்செயும் பூசைமகிழ் துறையூர்
தெண்ணீர்யெல் வேங்கன்குடி திருவக்கினீச் சரனே

5. பத்தார்வெளிச் சதிதோன்செயும் பரிபாலனம் கோடி
வித்தோர் உயிர் விளைவார்மலம் விலக்கும்மதி தருமோன்
அத்தாஎனும் புத்தேளிரும் அன்பார்துதிக் கருளும்
சித்தோர்மிகு வேங்கன்குடி திருக்கினீச் சரனே

6. எட்டாம்நல யோகம்பயில் இனிதானவன் தவமே
நட்டார்நுதல் நடுவேபெரும் நவமாமரை அமரும்
கட்டாரம் தளிக்கும் தழல் கருணாகரச் சுடரன்
சிடடார்பொழில் வேங்கன்குடி திருக்கினீச் சரனே

7. கருவோடுறை அழியாமலம் கலந்தே உயிர் இயங்கும்
செருவாரிரு வினையோடினை செயலேதரும் மாயை
வருமோர்பிறப் பிறப்பேஅற வான்வாழ்வருள் இறைவன்
திருவாயர் வேங்கன்குடி திருக்கினீச் சரனே

8. ஆறேசுவை ஏழே இசை எட்டேகுணத் தலைவன்
நீறேகவின் நிலவே அணி நிறைமாமலர் அழகன்
தேறாப் பிறப் பறுத்தேநலம் சேர்க்கும்பரம் பொருளன்
சேறார்கதிர் வேங்கன்குடி திருவக்கினீச் சரனே

9. தொன்னூற்றறு தத்துவத்தில் தொலைக்கேவலம் தீர்த்தே
பன்னூற்றுடல் கொடுத்தேஉயிர் பவமேகுறைத் துலகில்
நன்னூல்மதி நலமும் நிதி நல்கும்பரன் உறையும்
சென்னெல் வயல் வேங்கன்குடி திருவக்கினீச் சரனே

10. சான்றோருரை ஈன்றோருரை தானேகலந் தருளும்
தோன்றாத்துணை தோளோர்விட நாகம்புனை சுடரன்
வான்றோய்மதி மனிதர்க்களி மழுவார்கரன் உறையும்
தேன்தோடலர் வேங்கன்குடி திருவக்கினீச் சரனே

–திருச்சிற்றம்பலம்–

## 244. மண்ணச்ச நல்லூர்

**பூமிநாதர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. இளைஞனும் முதியவன் இருளொளி நிலம்புனல் எல்லா மானதெய்வம்
தனையைறுத் துயிந்றத் தவங்கல்வி தந்ததற்பரஞ் சேதியண்ணல்
விளையா ஆண்பனை மிகுகுலை தரும் தமிழ் இன்னருள் தந்தபிரான்
வளைபிறை சூடிய மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

2. கடல்மிசை நடந்த கனகத்திருவுரு கயிலையின் திருவருளன்
தொடக்கமும் ஒடுக்கமும் துணையொடு பசைசெய் சுந்தர மாதேவன்
மடமகள் கூந்தலை வழங்கிய மானக்கஞ் சாரர்க்கு வானளித்த
வடக்குவான் கயிலையன் மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

3. தக்கனின் வேள்வியை சலந்தரன் உடலழி சங்கரத் திருமூர்த்தி
முக்கடல் சூழ்கவின நாவலந் தீவினில் முதிராத் தமிழளித்தோன்
நெக்குறத் துதித்த நீலநக் கர்கருள் நித்தியப் பெருங்கடவுள்
மக்கள் மனத்துறை மண்ணச்சநல்லூர் மரைக்கர மன்னவனே

4. வச்சிரப் படையோன் மறுக்களைத் தீர்த்தருள் வழங்கிய வானமுதன்
இச்சையும் போகமும் இல்லறம் துறவறம் ஈந்திரு வினைதீர்த்தோன்
கச்சரவணியன் காரைக்காலம்மைக்கும் காட்சிதந்தருள் தழலன்
மச்சநல் வலையன் மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

5. இங்கித மாலயன் இன்னழமுடிகண்டில்லா தயரவைத்த
அங்கசன் உடலழி ஆனந்தன் ஆலால சுந்தரன் அருட்கொடையளி
சிங்கலஞ் சிலந்தியை செங்கட்சோழரசாய் செய்தநல் சிலப்பொழிலன்
மங்கலச் சங்கிசை மண்ணச் சநல்லூர் மரைக்கர மன்னவனே

6. செஞ்சொல் திருமுறை சிலமொழி பாமறை திருக்குறள் தந்தபிரான்
அஞ்சன வண்ணனின் நரகரி உடலழி அமுதச்சொல் பேராசான்
நெஞ்சக பூசலார் நிறைமனக் கோயில் நிறைகுடமுழுக் கேற்ற
மஞ்சனத் தேன் மிளிர் மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

7. எட்டோ டடிமேல் ஏழேழ் பகிரண்டத் திருளொளி ஏகம்பன்
நட்டார் ஞானியர் ஞாலப்பத் தரும்துதி நடனசி காமணியன்
ஒட்டார் புரமெரி ஊர்த்ததுவத் தாண்டவன் ஒளிமழை தருமீசன்
வட்டார் பிறைமுடி மண்ணச்ச நல்லூர் மரைக்க மன்னவனே

8. கண்ணின் மணியொளிக் கற்பக மூர்த்தி கரியதள் புனைஈசன்
எண்ணமெல்லாம் நிறைந்த்திறைஞ்சும் பத்தர்சூழ் தப்பெரியோன்

திண்ணனார்க் கருளிறை செஞ்சுடராதியன்திகம்பரன் திருவருளன்
வண்ணநல் கோயிலன் மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

9. குருவாய் பெரியோர் கூறுரைக் சான்றாய் குகைமனத்துள்நின்றும்
அருவாய் அறிவாய் அருளும் அருவுரு அந்தரத் திருநடனன்
பெருமிழ லையர்க்கு பிரியாப் பேறளி பிஞ்சகச் செம்பொருள்
மருவார் புரமெரி மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

10. பத்தரி டையொரு பத்தரு மாகி பந்தியில் அமர்ந்த வள்ளல்
சித்தரி டையொடு சித்தரு மாகி சிந்தைநல் கோயிலிறை
அத்திரிக் கருளிய ஆனந்த மூர்த்தி ஆலங்கட் டி மழையோன்
மத்திய நீதியன் மண்ணச்ச நல்லூர் மரைக்கர மன்னவனே

–திருச்சிற்றம்பலம்–

## 245. திருநெற்குன்றம்

**நெற்குன்றநாதீசுவரர் கலிவிருத்தம் குந்தளாம்பிகை**

1. காலங்க டத்தியே கருணையைக் குறைத்தீர்
ஞாலப்பொய் புரியா நானின்றன் அடிமை
ஆலமுண்டமுதளி அமரர்நல் ஏறே
கோலத் திருநெற் குன்றம் கொண்டவரே

2. ஏறும் மும்மலம் ஏற்றியே நிறைத்தீர்
மாறும் மதியில் மனிதன்நின் அடிமை
ஆறார் தத்துவம் அடுக்கி மலந்தீர்
கூறூர் திருநெற் குன்றம் கொண்டவரே

3. பாசம் ஆழ்த்திட பனிவாழ் வளித்தீர்
நேசம் கூடிய நானின்ற னடிமை
நாசச் சிரமற நான்முகற் கருளிய
கூசாத் திருநெற் குன்றம் கொண்டவரே

4. பாடையைக் காட்டி பயவாழ் வளித்தீர்
பீடையில் பிதற்றும் நானின்ற னடிமை
காடைகௌ தாரிக்கும் கருணைசெய் முத லே
கோடலர் திருநெற் குன்றம் கொண்டவரே

5. சோதனை கோடியில் சோகமே தந்தீர்
நாதனே நலமில் நானின்ற னடிமை
பாதகச் சண்டிக்கும் பரிவளி பரனே
கோதமில் திருநெற் குன்றம் கொண்டவரே

6. கேடறு கல்வியில் கெடுநிதி அளித்தீர்
நாடறி யாப்புழு நானின்ற னடிமை
ஓடாத் தேரினை ஓடற் கருளிய
கோடலர் திருநெற் குன்றம் கொண்டவரே

7. ஓரிரு மும்மல உயிர்வினை தீர்த்தீர்
காரிருள் துயரினன் நானின்ற னடிமை
நாரைக்கு மருளிய நான்மறைத் திருவே
கூரைநல் திருநெற் குன்றம் கொண்டவரே

8. உடுக்கை ஒலியதில் உயிருடல் இணைத்தீர்
நடுக்க மனத்தினன் நானின்ற னடிமை
துடுப்பிலோ டங்கரை சோதய வளித்த
கொடுக்கலர் திருநெற் குன்றம் கொண்டவரே

9. ஆதிஅ நாதியும் அறிவார் திருவே
நாதியொன் றில்லா நானின்ற னடிமை
தீதில் இராவணன் மால்பெறற் குதவிய
கோதறு திருநெற் குன்றம் கொண்டவரே

10. வந்துறை மாயையில் வாழுயிர்க் கருளினை
நந்துளன் நலமில் நானின்ற னடிமை
செந்தழல் மூழ்கிய நந்தனுக் கருளிய
குந்துரு திருநெற் குன்றங் கொண்டவரே

–திருச்சிற்றம்பலம்–

## 246. நெருஞ்சாலக்குடி

**. அம்பலவாணேசுவரர் கலிவிருத்தம் வாலாம்பிகை**

1. மலர்மணி உருத்திரம் வன்னிகூ விளமணி
சலமறத் தினம்பரன் தளிவயம் துதியொடு
நலமளி நமச்சி வாயமறை நாயகன்
நிலமளி நெருஞ்சா லக்குடியின் நிமலனே

2. பன்மணி மரகத பவளமல் லியணி
இன்னமு தீசன் ஏகம்பப் பெருமலை
நன்புறை சிவாய நமமறை நவில்வதும்
நின்னருள் நெருஞ்சா லக்குடியின் நிமலனே

3. மறைநூல் திருமுறை மண்பல மொழிசெயும்
குறையா மதிக்கவின் குங்குமத் திலகன்

இறைவா சிவாய சிவமெனும் துதிக்கருள்
நிறைகவின் நெருஞ்சா லக்குடியின் நிமலனே

4. புவனியப் பெருவளம் பொன்னோடு நவமணி
தவமதிச் சித்துகள் தாரணை ஆக்கினை
சிவசிவ எனத்தினம் தியானிக்க கதியருள்
நிவந்தநல் நெருஞ்சா லக்குடி நிமலனே

5. திகழ்மணிக் குன்றன் செங்கதிர் மேனியன்
அகமுற அரகர அருமறை ஓதுவர்
இகபர வாழவின்பம் இருநிதி மதியருள்
நிகம்மிகு நெருஞ்சா லக்குடி நிமலனே

6. கார்த்திகை தீபநல் கருணா கரத்தழல்
பார்த்தவர் நிலமுற பணிந்தெழும் பிறவியில்
மூர்த்தியின் திருநாமம் மொழிந்து துதிக்கவருள்
நீர்ப்பூ நெருஞ்சா லக்குடி நிமலனே

7. தாயிலும் கருணைசெய் தற்பரஞ் சோதியன்
கோயில்வ லம்வந்து கோபுரம் துதிதொண்டர்
வாயில்கொ டிமரம் முன்பணி வார்க்கருள்
நேயநல் நெருஞ்சா லக்குடி நிமலனே

8. மாசிலா மணியே வரம்பிலா அறிவே
தேசிகத் திருவே தேடுவார்க் கமுதே
பூசித்து மகிழ்ந்தேன் போதனென் பார்க்கருள்
நேசநல் நெருஞ்சா லக்குடி நிமலனே

9. கேதார நாதன் கிம்புரு டர்துதி
ஆதார மாறிலும் அமர்ந்தொளிர் ஆதியன்
காதலால் திருநாமம் களித்துரைப் பார்க்கருள்
நேதா நெருஞ்சா லக்குடி நிமலனே

10. போதாந்த மேனி புரிசடை ஈசனே
பாதார விந்தம் பணியும டியேற்கும்
கேதாரம் கைலாயம் கிரிஎலாம் காட்டியருள்
நீதனே நெருஞ்சா லக்குடி நிமலனே

–திருச்சிற்றம்பலம்–

## 247. பிசச்சாண்டார் கோயில்

**பிச்சாண்டார்** | **எழுசீர் ஆசிரியவிருத்தம்** | **வடிவுடைநாயகி**

1. ஏடெழு துமெங்கள் ஏகம்பப் பெருந்தகை ஈரிரு வர்க்கறம் ஈந்தபிரான்
காடெழுந் தாடிய கற்பகச் சோதியன் ககனத் திருவடிக் கங்காளன்
ஓடெழில் காட்டிய ஊர்த்துவத் தாண்டவன் ஓங்காரத்தொலி ஆரமுதன்
கோடலர் பிச்சாண்டார் கோயில் அநாதியை கும்பிட் டுயர்வீர் உலகீரே

2. உலகோ ரேழையும் ஓமிசைத் துடியில் உயிர்கோ டிசெயும் நாதமழை
நலமார் மூவிழி நாட்டியப் புருவங்கள் ஞாயிறு ஆயிரம் தான் படைக்கும்
மலமோர் மூன்றையும் மாற்றி உயிர்கள் வானுறத் தேர்வுசெய் மாதேவன்
குலமணிப் பிச்சாண்டார் கோயில் அநாதியை கும்பிட் டுயர்வீர் அறிவோரே

3. அறிவாய் உணர்வாய் ஆகமம் நான்மறை அனைத்து மாகிய அழகீசன்
பொறிவாய்ப் பூவுயிர் பூதமோர் ஐந்துசெய் பொன்னார் தோடனிப் பூங்கழலன்
தறித்தா ரூசிய சஞ்சலப் பிறப்பழி சங்கிசை நாதச் சந்தோசன்
குறிஞ்சில் பிச்சாண்டார் கோயில் அநாதியை கும்பிடு வார்திரு அடியாரே

4. அடியோ முடியோ அறிதுயில் அண்ணலும் அயனும் அறியாப் பேரொளியன்
வடிவோ அடியார் மனம்புனை உருவுற மாற்றஞ்செய் நொடிக்கேழ் கோடிகளே
கடிமா திரிபுரம் கண்மலர் சிறிதே காணுற பிடிபொடி செய்தகனல்
கொடிவீப் பிச்சாண்டார் கோயில் அநாதியை கும்பிடு வாரவர் வானவரே

5. வானவில் எழுதிய வண்ணங்கள் மாயை மங்கைபொன் பூமியின் ஆசைகளே
ஊனந டனத்தில் சகலமும்  சேர்த்து உயிருணர் வாழ்த்தி வினையழிக்கும்
ஞானந டனத்தில் நால்யுக மலமற நம்பன் திருவடி பிறப்பறுக்கும்
கூனலில் பிச்சாண்டார் கோயில் அநாதியை கும்பிட வாழ்வே மங்கலமே

6. மங்கலப் பூம்புனல் வையகம் வான்தீ வளியலை நாதத்தில் வடித்தபிரான்
சங்கலர் சூடிய தற்பரஞ் சோதியன் தாரகைப் பூவணித் தடஞ்சடையன்
எங்களின் நாயகன் இதயச்செங் குருதியில் இழைந்துயி ரூட்டும் ஏகம்பன்
கொங்கலர்ப் பிச்சாண்டார் கோயி லநாதியை கும்பிடு  வோர்சிவ யோகிகளே

7. யோகியர் போகியர் நுவல்பதின் முனியோர் யூகம தியினர் தொழுதசுடர்
யாகம ழித்ததில் நணுகிய அமரரை நலிமூங் கில்கழி ஆக்கியகோன்
நாகம் புனைந்தெழில் நாட்டிய மாடியே நலிவுயிர் வினைதீர் ஐந்தொழிலன்
கோகிலப் பிச்சாண்டார் கோயிலநாதியை கும்பிடு வார்க்கினிப் பிறப்பிலையே

8. பிறப்பிலி இறப்பிலி பின்முன் உறவிலி பேரொளிப் பிழம்பே பிஞ்சகனே
மறப்பிலி மானிடர் வளர்குணத் துயிரில் வளியொளிக் குண்டலி மந்திரத்தன்

சிறப்புறு  கிரியையும் சீர்பெறு போகமும் செய்திடத் தவமுனி யாக்கியருள்
குறடுறை பிச்சாண்டார் கோயி லநாதியை கும்பிடும்மானிடம் குவி கணமே

9. கணமொரு பொறிமதி கற்பிக்கு மாசான் கலியுகத் திறுதியின் சங்காரன்
துணங்கைநன் நாளொளிர் சுந்தரத் தூந்தீ சுரும்பலர் சூடிய துடிஇசையன்
வணங்குமன் னுயிர்கள் வானக வாழ்வுறும் வரமளித் தருளும் மாயைமதி
குணமலர்ப் பிச்சாண்டார் கோயி லநாதியை கும்பிடும் உயிர்கள் குவிமலரே

10. குவிமலர்க் கொன்றையும் கூவிளம் வன்னியும் கொழுங்கோட் டெருக்கம் சூடுமலை
கவிமல ரொடுதமிழ் கழகத்தில் ஏறிய கணமணி மதுரைக் கங்காளன்
புவிமலர்த் திருத்தொண்டர் பூதக ணங்களும் போற்றுந் தமிழிசை மகிழ்மறையோன்
கொவின்மரப் பிச்சாண்டார் கோயில் அநாதியை கும்பிடு வார்வான் சிவகணமே
–திருச்சிற்றம்பலம்–

## பிச்சாண்டர்கோயில்

**பிச்சாண்டர்  அறுசீர் ஆசிரிய விருத்தம்  வடிவுடைநாயகி**

1. ஓதைப்பெருங்கடல் ஊழிசெய்யும் ஒமொலி ஊர்த்துவத் தாண்டவனே
சீதைத கேள்வனும் சீலமுற சீர்வரம் அளித்த சிலோகன்
மேதைப் பேருருவ பொன்மையனாய் விண்மண்உயிர்க்கருள் வேதியனே
பேதைஎன் பிழைகளை பொருத்தாண்ட பிச்சாண்டர் கோயில் பிஞ்சகனே

2. பாதமெல் லாம் பரிவன்பருளன் பங்கயற் கருளிய பாற்கடல்
வேதப் பழம்பொருள் விண்ணீசன் விஞ்சையன் சந்தனன் மேலுலகன்
பூதகணமெல்லாம் பூசைசெய்யும் புங்கவன் சங்கரன் போகமிலி
பேதமனம் மாற்றி எனையாண்ட பிச்சாண்டார் கோயில் பிஞ்சகனே

3. கனிதவல்லாம் செயும் காலகாலன் ககன்மலர்க்கர காஞ்சியனே
அணிகளெல் லாம் நின் அருட்படைப்பே ஆயினும் அரவெணி அற்புதனே
தணித்தபின் பகிரண்டம் தான் படைக்கும் சங்கரப் பரம்பொருள் சாம்பசிவன்
பிணிகளை அகற்றி எனையாண்ட பிச்சாண்டார் கோயில் பிஞ்சகனே

4. கண்பங்க ருவிடக் கவினிறைவன் கருவில் பிறவாக் கடவுளண்ணல்
அண்டங்களாயிரம் அமைத்தபிரான் அஞ்சேலென்றுயிர்கருள்முகிலன்
பண்டா ரக்கொடைப் பரம்பொருளன் பகுத்தறிவளிக்கும் பாசுபதன்
பிண்டமுதல்கண் டெனையாண்ட பிச்சாண்டார்கோயில் பிஞ்சகனே

5. சித்தமெல் லாம் மொத்த சித்தாந்தன் செய்வினை தீர்க்கும் சிவலோகன்
புத்தம் புது வேதம் யாவுமளி புன்னகை மந்திரம் புண்ணியனே
பத்தியில் உயிர்களைப் பண்படுத்தி பரிவுற வானகம் தருமிறையே
பித்தனென் செயல்பொறுத் தெனையாண்ட பிச்சாண்டார்கோயில் பிஞ்சகனே

6. தந்திய தீர்வலைச் சங்கீதன்தத்துவ வித்தளி தற்பரனே
பந்தியில் அமர்ந்து பத்தரிடை பத்தரும் ஆகிய பரம்பொருளே
உந்திக்க மாத்தன் சிரம் பிரித்த உலகொளி நாயகன் உன்னதனே
பிந்தைப் பிறப்பறுத் தெனையாண்ட பிச்சாண்டார் கோயில் பிஞ்சகனே

7. இரக்கநல் பேருரு ஈசானன் இறைவழி பாடடளி ஏகம்பன்
விறற்கிடை மான்மறை ஏந்தியகோன் விண்ணவர் பூசைசெய் விஞ்சையனே
நரகிடை அடியவர் நலியாமல் நன்னெறி வகுத்த ஞானகுரு
பிரக்கியம் ஈந்தெனை ஆண்டுகொண்ட பிச்சாண்டார் கோயில பிஞ்சகனே

8. அரியோ டயன் அன்பருடன் அறுபதின்மூவரும் பணிந்திருக்க
பரிவோடுயிர்களை பாலிக்கும் பாற்கடலாதியன் பரமேசா
சரியோ தவறோ என்றறியா தனியேன் பிழைபூசை தானேற்றே
பிரியா தென்மனக் கோயில் கொண்ட பிச்சசாண்டார் கோயில் பிஞ்சகனே

9. நிறைவாய் நிறைந்த நெடுஞ்சுடரன் நிலம்வெளி பூதங்கள் ஐந்தளித்த
கறையோன் கவின்கண்டக்கங்காளன் காலங்கள் கடந்த கணலிறைவன்
குறையார் உயிரினக் குணந்தேற்றி குவலயம் வான்வாழ்வளிப் போனே
பிறழ் மனப்பிழைபொறுத் தெனையாண்ட பிச்சசாண்டார் கோயில் பிஞ்சகனே

10. மழை முகில் கருணை மாகேசன் வானகம் மண்ணரும் வணங்குமண்ணல்
குழைத்தோடணிந்த கொன்றையனே கோதறுத்தன்பிள குன்றவில்லி
ஏழைநல் மாணிக்கும் இணைதுணைறை இயல்திருத்தியளி ஏகனனே
பிழையுயிர் எனக்கும் பேறளித்த பிச்சாண்டர் கோயில் பிஞ்சகனே

–திருச்சிற்றம்பலம்–

## 248. சவ்வந்திநாதபுரம்

**மயூரநாதர் கலிவிருத்தம் மங்களாம்பிகை**

1. தன்னிக ரில்லா தற்பரஞ் சோதிய தழல்மணியே
மின்னலஞ் சடையனை விண்ணவர் பேரிறை விமலோனே
மென்னுடல் பருவுடல் இழிவுறு மாற்றியருள்
பொன்மலி சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

2. இருவாட் சிநொச்சி எழில்மறை செவ்வந்தி மாலையணி
புருவந டுவிழி புண்ணியமூர்த்தி புதுப்பழையோன்
கருவினில் வளருயிர் கவினுறை மகள்மக னாக்கியருள்
பொருள்மலி சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

3. எழில்விரல் காந்தளும் எருக்கமும் வன்னியும் மிளிர்மேனி
பழிபவ வேடனின் பவமறுத் தருளிய பரம்பரனே

விழியிடை வருங்குரு வெளிஉன் செவிப்பிணி மாற்றியருள்
பொழிலெழில் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

4. மதிப்பிறை சூடிய வான்தொலை பால்வெளி மரகதனே
துதித்தோர் நாரைக்ம் துறக்கம ளித்தநல் சுடர்மணியே
பிதிருறு வயிறொடு பெருந்தசை கால்களும் மாற்றிருள்
பொதிநிதிச் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

5. தழல்கரச் சம்பு சற்குண வேதியத் தரளமலை
விழாவெழில் தில்லையின் விண்வெளி வடிவெழில் வெஞ்சுடரன்
மழலையின் வளைகால் மாறுகண் கரப்பிணி மாற்றியருள்
பொழிமுகில் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

6. செங்கதிர்தழல்கரன் சிறுபிறை சூடிய திருவருளன்
பங்கயக் கழலன் பாற்கடல்அதிபதி பரஞ்சோதி
திங்களென் குழந்தையின் சிறுவாய் நாசிப்பிணி தீர்ப்பீர்
புங்கநல் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

7. தேசிகத் திருவுரு திருவருள் அருவுருச் செந்தழலன்
காசிகை லாலயத்தன் காஞ்சியன் கொடுமுடி செங்குன்றன்
நாசிந டுப்பரு நடுச்செவி ஈரல்குலை நலமருள்வீர்
பூசிதச் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

8. கருந்திரள் அரவணிகனகத் திருக்கவின் ககனமலை
வருந்திய தருமிக்கும் வாழ்கவி பொன்னளி மாதேவன்
அருந்திய கருப்பைநீர் அழற்சிசெய் வாந்தியும் அகற்றியருள்
பொருண்மொழிச் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

9. பதமரை வன்னியும் பவளமல்லியணி பாவெழிலன்
விதையுறு இருவினை வேருறை மாமலம் விலக்குமண்ணல்
சிதைசெவ் வாப்பும் செறிநீ லப்பிணி தீர்த்தருள்வீர்
புதுநெல் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

10. தன்ஒளி தண்ணுரு தழல்மலை திருவருள் சங்கீதன்
வன்தொண்டர்க் கருளிய வானவர் பேரிறை மகிழீசன்
முன்பின் கழலையும் முனைஉச்சி உடல்பிணி தீர்த்தருள்வீர்
பொன்நிதிச் சவ்வந்திநாத புரத்தின் புவனியனே

–திருச்சிற்றம்பலம்–

## 249. கூகூர்

குகனேசுவரர் | கலிவிருத்தம் | கல்யாண சுந்தரி

1. அருவனல் பெருமழை தருமுகில் அருவுரு
திருநமச் சிவாய செப்புவர்க் கருளும்
குருக்கத்தி மலர்வனக் கூகூர்மேவிய
விருப்பருள் தருமிறை வெஞ்சுடர் விமலனே

2. தண்ணீர் தழல்நிலம் தவழ்வளி ஆகாயன்
வெண்ணீ றணிந்தே விடியலில் துதிபத்தர்
கொண்டோர் பெரியோர் கூகூர் மேவிய
விண்ணுல களிக்கும் வெஞ்சுடர் விமலனே

3. சிந்தும் பனிமலர் செருந்திகொண் றையணி
மந்திரம் மனனம் மலர்பூ சைக்கருள்
குந்தனும் பணிந்தெழும் கூகூர் மேவிய
விந்தைவி ழியான் வெஞ்சுடர் விமலனே

4. தனந்தவம் கல்வியும் சற்குணந் தருமனல்
கனவுந னவுற கழல் நினைப் பார்க்கருள்
குளிகதிர் விளைவயல் கூகூர் மேவிய
வினைவிதி கணிப்பரன் வெஞ்சுடர் விமலனே

5. சிறகனி அருள்விழி சிறுமறைச் சென்னியன்
புறமகப் பூசைகள் புரிகுணத் தோர்க்கருள்
குறமறம் அறக்கவி கூகூர் மேவிய
விறல்கரி உரிபுனை வெஞ்சுடர் விமலனே

6. படிக்கா சருளளி பனிமலைப் பேரிறை
அடியா ரைப்பணிந் தன்புறு வோர்க்கருள்
கொடிமலர் கோயில் கூகூர் மேவிய
விடியல்நல் வினையளி வெஞ்சுடர் விமலனே

7. நறுமலர் கோடியும் நாகமும் அணிந்தோன்
அறுபதின் மூவர்பூந் தாள்துதிப் போர்க்கருள்
குறள்நெறி வாழ்வோர் கூகூர் மேவிய
மிறலருள் வினைவிதி வெஞ்சுடர் விமலனே

8. செடிகொடி மரம்வழி திரும்புயிர்க் குடலளி
அடியவர்க் கமுதளி அன்பர்கட் கருளும்
கொடைமகிழ் பொயோர் கூகூர் மேவிய
விடையமர் விணணவன் வெஞ்சுடர் விமலனே

9. இருபதின் எழுவரின் இருங்கவி மகிழ்பரன்
திருமுறை இசைப்போர் செருவினை தீர்த்தருள்
குருமுறை நெறிவளர் கூகூர் மேவிய
மிருதுளம் மேனிநல் வெஞ்சுடர் விமலனே

10. சிகையலங் காரன் திரிசடை தொலைவெளி
வகைவகைப் பாடியாடி வழிபடு வோர்க்கருள்
குகைமுனி யோர்துதி கூகூர் மேவிய
மிகுகவின் விண்ணவன் வெஞ்சுடர் விமலனே

–திருச்சிற்றம்பலம்–

## 250. ஈங்கோய்மலை – ஊர்க்கோயில் முசிறி

**சோமசுந்தரேசுவரர்** **கலிவிருத்தம்**

1. நூழைத் தவமுனி நுணுகுவிஞ் ஞானர்துதி
தாழையைத் தடிந்த தற்பரந் தழல்மலை
கூழையுண் டடியவர் குறைதீர் பரமன்
வாழைநல் ஈங்கோய் மலையடி ஊரனே

2. வெள்ளிய நீறணி வெறிப்புலி அதளுடை
கொள்ளியங் காளியை குனிவுறச் செய்தோன்
நள்ளிருள் உணவளி நலமாறற் கருள்சுடர்
வள்ளிநல் ஈங்கோய் மலையடி ஊரனே

3. நந்தியம் கூவிளம் நாள்மலர் சூடொளி
உந்தலை ஏழ்கடல் ஓட்டுவேல் தந்தோன்
அந்தியற் கருளிய அம்பலன் அவனியன்
வந்தநீர் ஈங்கோய் மலையடி ஊரனே

4. வெந்தவெண் நீறணி வேதியன் விமலோன்
மந்தக்க ரிதடிந்து வகிர்ந்துரி போர்த்தோன்
இந்திரர்க் கருளிய ஏகம்பன் இனியன்
மந்திர ஈங்கோய் மலையடி ஊரனே

5. நெருஞ்சி எருக்கமும் நீள்கொன்றை மாலையன்
அருஞ்சிரக் கயமுகன் அலறவே அழித்தோன்
கருஞ்சிர வேடனை நளமன்ன னாக்கிய
மருந்தினன் ஈங்கோய் மலையடி ஊரனே

6. கொல்புலி அதளணி கோமே தகமலை
தொல்புகழ் திரிபுரம் துகளுற விழித்தோன்

மெல்சிறை நாரைக்கும் விண்ணகம் அருளிறை
மல்குநீர் ஈங்கோய் மலையடி ஊரனே

7. கொத்தலர்ச் சங்கமும் குவிமல் லிகையணி
பத்துச்சி ரனைநெறி பரம்பொருள் ஆதியன்
வித்தகக் காழியர்க்கு விழுப்பொருள் அளிவள்ளல்
மத்தொலி ஈங்கோய் மலையடி ஊரனே

8. நஞ்சுநா கம்மரை நற்கர மேந்துரு
வஞ்சகச் சலந்தரன் வடிவுயி ரழிசுடர்
கொஞ்செழில் காரைத்தாய் கொள்வடி வளித்தோன்
மஞ்சுறை ஈங்கோய் மலையடி ஊரனே

9. சீரக்க மணியணி செஞ்சடை திரள்மலை
கூரக்கை தூடணன் கொடுமுடல் தடிந்தோன்
கோரக்கர்க் கருளிய குருவருள் கடவுளன்
வார்வயல் ஈங்கோய் மலையடி ஊரனே

10. எரிமழுத் திருக்கரன் எந்தைஎம் பெருந்தகை
கரிமனத் தாருகை கடிவனம் அழிப்பனல்
நரிபரி யாக்கியே அடியவர்க் கருள்மலை
வரிநீர் ஈங்கோய் மலையடி ஊரனே
–திருச்சிற்றம்பலம்–

## 251. முசிறி வட்டம்

**சந்திரமௌளீசுவரர்** **கலிவிருத்தம்** **கற்பூரவல்லி**

1. பத்தியு ளமுறை பண்பர்க்குச் சந்ததி
நித்தம் மகிழ்நிதி நிம்மதி வளந்தரும்
சித்திரைத் தரிசனம் தேரமர்ந் தேதரும்
முத்தொளிர் காவிரி முசிறியின் முதல்வனே

2. கைமலர் தூவியே கழலனல் வணங்கும்
பொய்யில் மாந்தர்க்கு புதுப்பத விதரும்
வைகாசித் தீர்த்தம் வழங்கிஉ யிர்காக்கும்
மொய்கயல் காவிரி முசிறியின் முதல்வனே

3. தேனலர் கொன்றையும் சீர்வன்னி சூட்டியே
கூனப்பிறைச் சடையனைக் கும்பிட வான்தரும
ஆனிப்பொன் பவுர்ணமி அம்பலக் காட்சிசெய்
மோனநல் காவிரி முசிறியின் முதல்வனே

4. பாடியே திருமறை பரவும் அடியவர்க்கு
கோடிஅ ணிகலன் குறைவறத் தருமிறை

ஆடியா வணிநல் அபிடேகக் காட்சிதரும்
மூடுநீர்க் காவிரி முசிறியின் முதல்வனே

5. திரள்தோள் அரவணி செஞ்சுடர் மேனியன்
பரல்மணிக் கழல்தொழ பவமறுத் தருள்தரும்
புரட்டாசிப் பவுர்ணமி புரிநடக் காட்சிதரும்
முரட்டரல் காவிரி முசிறியின் முதல்வனே

6. நெய்பதம் பால்தயிர் நீர்தே னபிடேகம்
செய்பத்தர் சந்ததி சீர்மிகு வாழ்வளி
ஐப்பசிப் பவுர்ணமி அன்னபி சேகங்கொள்
மொய்பரல் காவிரி முசிறியின் முதல்வனே

7. பார்த்திபற் கருளிய பரம்பொரு ளீசநின்
ஆர்த்தடங் கழல்தொழ அமரர்தம் வாழ்வருள்
கார்த்திகை பரணிமார் கழிநாள் காட்சியளி
மூர்த்தநல் காவிரி முசிறியின் முதல்வனே

8. மைத்தடந் திருவிழி மாணிக்க மாமலை
கைத்தடங் காட்டியே கலிவினை தீர்ப்பிறை
தைத்திங்கள் தரிசனம் தரும்சுடர் அதிசயன்
முய்மலர்க் காவிரி முசிறியின் முதல்வனே

9. வாசிகை யோடெருக்கம் வன்னியும் சூடும்
தேசிகன் திருக்கழல் தினந்தொழ வினையறும்
மாசிமக நடன மகிழடிக் காட்சிதரும்
மூசைசெய் காவிரி முசிறியின் முதல்வனே

10. தங்கம ணிமேனி தற்பரஞ் சோதியை
நங்குலம் செழிப்புற நாளும்து திசெய்ய
பங்குனிக் காட்சியும் பரம்பரைத் தீக்கைதரும்
முங்குநீர்க் காவிரி முசிறியின் முதல்வனே

–திருச்சிற்றம்பலம்–

## 252. காருகுடி

**கைலாசநாதர்** **வஞ்சிவிருத்தம்** **கருணாகரவல்லி**

1. போதலர் சூடிய பூந்தென்றல்
பாதம லர்காட்டும் பரம்பொருளன்
நாதவ டிவான ஞானமலை
ஆதிநல்கா ருகுடி ஆலன்பனே

2. காட்டரங் கேறுமோர் களிநடனன்
பாட்டரங் கக்கவி பாரறிவன்
ஏட்டைஎ ழுதிய ஏகம்பன்
ஆட்டகக் காருகுடி ஆலன்பனே

3. போர்த்திய கரியுரிப் பொன்னம்பலன்
கார்த்திகைத் தீபத்தின் கனல் கண்டம்
தீர்த்தவா ரிதிரு ஐயாறன்
ஆர்த்தருள் காருகுடி ஆலன்பனே

4. கோதாள் திரிபுரம் கொண்டழித்த
நாதைநல் வேதியன் தற்பரமன்
போத மளித்துயிர் புரைமாற்றும்
ஆதவக் காருகுடி ஆலன்பனே

5. வேழமு ரித்தபெரும் வேதமலை
யாழிசை செந்தமிழ் நான்மறையோன்
தோழவன் தொண்டர்க்கே தூதுசென்ற
ஆழநீர் காருகுடி ஆலன்பனே

6. கோலக்கா ரிக்கருள் குன்றுடையோன்
ஞாலத்த ருவள்ளல் ஞானச்சுடர்
காலக்க ணிப்புசெய் கங்காளன்
ஆலநல் காருகுடி ஆலன்பனே

7. ஏனக்கு ருளைக்கருள் ஈசானன்
மோனத்த வமுறை முக்கண்ணன்
தேனலர்ச் செண்பகத் திருமேனி
ஆனஞ்சு காருகுடி ஆலன்பனே

8. சித்திசிந் தைசெயும் செந்தூரன்
பத்திக்குள் அடங்கிய பாற்கடலன்
முத்திக்கு முகவரி தருமிறைவன்
அத்திநல் காருகுடி ஆலன்பனே

9. பழவினை புதுவினை பகிர்ந்தளித்தே
உழல்வினை தீர்வுற உடல்செய்யும்
சுழல்வினை தீர்க்கும் தூயதழல்
அழலொளிக் காருகுடி ஆலன்பனே

10. மும்மலம் தீவினை முடித்தருள
செம்மனம் உணர்மதி செய்சுடரன்
தம்மலம் தீர்த்தொளிக் கழல் சேர்க்கும்
அம்மலர்க் காருகுடி ஆலன்பனே

–திருச்சிற்றம்பலம்–

## 253. காட்டுப்புத்தூர்

**மீனாட்சிசுந்தரரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. தென்திசைச் செம்பொன் திருமுகமே திருத்தொண்டர்க் கருளும் தேனமுதே
பன்மலர் சூடிய பனிமலையே பசுபதி பாசப் பரஞ்சுடரே
வன்முகில் வளந்தரும் வானகனே மரகதப் பேரொளி வார்கழலே
உன்பதப் புவிவளம் உயர்த்தியருள் ஒளிரொளி காட்டுப் புத்தூரரனே

2. நந்திச னாதனர் நால்முனிக்கும் நான்மறை ஓதிய நவமணியே
தந்தடந் துடியில் தரணிசெய்தே தாத்விகம் அறுபதும் தந்தபிரான்
செந்திருப் பதமலர் திகழீசா செழிவளம் மதிநலச் சிறப்பளித்தே
உந்தன் பதப்புவி காத்தருளே ஒளிரொளிக் காட்டுப்புத் தூரரனே

3. தழல்மலைச் சற்குணத் தத்துவமே தமிழ்மொழி ஓதிய சங்கரனே
பழமலம் புதுவினைப் பவமறுத்தே பதமுன்அடியரைப் பரமாக்கி
அழகுற நின்பதக் கீழமரும் அற்புதத் திருவரம் அளித்தருளே
உழல்புவி வஞ்சகம் ஒழித்தருள்வீர் ஒளிரொளிக் காட்டுப்புத் தூரரனே

4. வண்டமர் கொன்றைஎ ருக்கணிந்த வரை நீர் வானனல் காற்றுருவே
பண்டமர் நீதிக்கு பதமளித்த பக்குவம் சூக்குமம் படைத்தபிரான்
தொண்டரைப் போல்நினைத் துதியாரை தூயநல் லுலகிடைச் சிவமாக்கி
ஒன்சுடர் கழலரு கேற்றருளே ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

5. வந்தவ ரிருவரும் உருமாறி வான்நிலம் தேடிமெய் வறண்டனரே
தந்துவ ருயிருடல் தம்பொருளை தழல்நிழல் திருத்தொண்ட ராயினரே
பந்தம றுத்துயிர் படியேறப் பனிக்கழல் நிழல்தரும் பரஞ்சோதி
உந்தலை நதிமழை ஊற்றருள்வீர் ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

6. அன்றொரு ஊழியில் நிலம்பிளந்தே அறுகண்டம் செய்த அருள்மணியே
தன்னைம றந்தனல் தாள் சேர்ந்தார் தவமலர் சூடிய சற்குணரே
பொன்றியர் புதுப்புது வலையூரும் போகநெ றிமதி அரவெனினும்
ஒன்றிய நின்னருள் புரிந்தருள்வீர் ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

7. கொல்லிம லைநதிக் கரையோரம் கோயில்கொண் டெழுந்த கோமணியே
மல்லிகை முல் லைநல் கூவிளமும் மார்புற அரவணி மாணிக்கம்

பல்லுயிர் பசிப்பிணி தீர்த்துலகில் பஞ்சமில் லாஉயர் நிலையளிப்பீர்
ஒல்லைநி னைமறந் தார்க்குமருள் ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

8. வெயில்மழுக் கரமுறை வேதியனே விண்ணவர் மண்ணவர் தொழுமிறையே
பயிலிசை சம்பந்தர் மதிமேரு பன்மொழி மறையருள் பாற்கடலே
மயிலையில் மனவிலங் கெனைத்தேடி மலர்வனத் துறைசையில் ஆட்கொண்டீர்
உயிர்நிறை உலகம் காத்தருள்வீர் ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

9. இருசுடர் சடைமுடிப் பேரருளே இமயக்க டல்மலை ஆக்கியகோ
பெருமலை வெள்ளியங் கிரிமழையில் பிழிந்தெடுத் தெனக்கும் காவி தந்த
குருமுறை நெறியருள் குளிர்மணியே கோகழித் தீக்கைக் கோமணியே
உருகுள மானிடம் காத்தருள்வீர் ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

10. சிறுமான் கரமுறை திருவடிவே திரிபுரம் எரிவிழிப் புன்னகையே
மறுகார் ஆரூர் மண்ணளந்தே வன்தொண்டர்க் கருளிய வானன்பே
அறுமூ வயதில் எனைப்பிடித்தே அறுபதில் அன்பருள் ஈந்தபிரான்
ஒறுக்கா துயிர்களைக் காத்தருள்வீர் ஒளிரொளி காட்டுப்புத் தூரரனே

–திருச்சிற்றம்பலம்–

## 254. ஆமூர்

**ரவீசுவரர்** **கலிவிருத்தம்** **ஆனந்தவல்லி**

1. ஓரோர் நொடியும் ஓரோர் பவஞ்செய்
கூரார் சதிமதிக் குணமில் உயிரேன்
பேரார் வினைகெடப் பிங்கலக் கழல்தொழ
மாரார் ஆமூர் வந்தேன் வானருளே

2. நாழிகை தோறுரை நால்கோ டிப்பொய்யில்
தோழியர் தோழரும் துவண்டே மாண்டனர்
ஊழிய வினையற ஒளிமணிக் கழல்தொழ
வாழியல் ஆமூர் வந்தேன் வானருளே

3. பகலோ நிதிப்பறி இரவோ மாதணை
நகலோர் நாயென நலிவுறும் உயிரேன்
இகலார் வினையற ஏகம்பக கழல்தொழ
வகுளார் ஆமூர் வந்தேன் வானருளே

4. நாளொரு போலி நாடகம் நடித்தே
தோளகச் சொந்தமும் துயர்விளை ஊழ்வினை
தாளெரி வினையற தற்பரக் கழல்தொழ
வாளொளி ஆமூர் வந்தேன் வானருளே

5. கிழமையோர் மனக்கொலை கிரிவலம் போலிசெய்
திழிவுறப் பத்தியில் ஏய்ப்புற வாழ்வுயிர்
ஆழிவுடல் வினையற அருட்கழல் தொழுதழ
வழியுணர்ந் தாமூர் வந்தேன் வானருளே

6. பரத்தமைச் செயலினை பாதகப் பழியுடல்
இரத்தமே நீர்மலம் ஏற்றிய பொதிக்குடம்
உரத்திழி வினையற ஒளிக்கழல் தொழுதழ
வரத்தொளிர் ஆமூர் வந்தேன் வானருளே

7. நீதியச் சான்றோர் நெருப்பிடை அணிலாய்
சூதினில் அழிவுறச் சுகமெனச் சிரிப்புயிர்
ஆதிய மும்மலம் அறுத்தருள் கழல்தொழ
மாதிரு ஆமூர் வந்தேன் வானருளே

8. திங்களில் செய்தெழும் தீமைகள் ஒருங்குற
நங்களின் உயிர்குடை நலிவினில் துடித்தே
தங்கநல் திருவடி தாழ்ந்தெம் வினையற
மங்கல ஆமூர் வந்தேன் வானருளே

9. ஆண்டுசெய் தீவினை அழலெரி மலையாய்
ஈண்டெம துயிரும் எரியுறு துயரினில்
வேண்டுமே விடிவென வெஞ்சுடர்க் கழல் தொழ
பாண்டுறை ஆமூரில் பணிந்தேன் வானருளே

10. இப்பிறப் பிருவினை எரிமலைக்குவியல்
ஒப்புயர் தீயாய் உடலுயிர் எரிக்குமுன்
தப்பவோர் வழியென தமரொளிக் கழலினை
துப்பெழில் ஆமூரில் துதித்தேன் வானருளே

–திருச்சிற்றம்பலம்–

## 255. குணசீலம்

**தாருகாநாதர் வஞ்சிவிருத்தம் சோமாசியம்மை**

1. வெளிரொளி அயன்மால் கண்டறியா
ஒளிரொளி ஆலமர் உத்தமனே
எளியேனை ஏற்றதில் நினக்குநட்டம்
குளிர்வயல் குணசீலக் கொற்றவனே

2. அமரரும் அரம்பையர் அறிந்தறியா
தமரனே தற்பரஞ் சோதியனே
உமதடி நிழலெனக் கின்னமுதம்
குமலியக் குணசீலக் கொற்றவனே

3. மூவரும் மூத்தோரும் முனைந்தறியா
தேவர்தம் தேவே திருமணியே
ஏவலென் றேற்றதில் எனக்குயர்வே
கோவளர் குணசீலக் கொற்றவனே

4. ஓரொளி இருநிறத் தீசுரனே
தேரொளிர் ஆரூர் சிதம்பரனே
நீரெனை ஏற்றதில் நெகிழ்ந்தழுவேன்
கூரெழில் குணசீலக் கொற்றவனே

5. இந்திரர் மந்திரர் முயன்றறியா
சந்திரப் பிறையணி தற்பரனே
மந்திர னைஏற்ற வான்புகழே
கொந்துறைக் குணசீலக் கொற்றவனே

6. நாகமும் மரைமமு நாயகனே
போகமும் புண்ணியம் நின்னருளே
ஏகன்நின் அருளதில் இழைந்தழுவேன்
கோகனக் குணசீலக் கொற்றவனே

7. சங்கொலி மங்கலச் சற்குணனே
எங்களின் தங்கமே ஈசுரனே
செங்குழல் காட்சிஎன் தவப்பயனே
குங்குமக் குணசீலக் கொற்றவனே

8. துயிலெழு பிறவிசெய் துயிரழிக்கும்
வெயில்மமு ஏந்திய வேதியனே
பயிருகம் என்பயன் ஏதுமுண்டோ
குயில்பயில் குணசீலக் கொற்றவனே

9. ஓரிரு மும்மல உயிரேந்தி
காரிருள் நீக்கிய கதிர்மணியே
யாரிவண் அறிவார் நின்நோக்கம்
கூரியர் குணசீலக் கொற்றவனே

10. ஏந்திய கரத்தீ ஏகம்பன்
சாந்திநின் பாதம் தருஞ்சுடரே
தூந்திரு வடிநிழல் காட்சிதந்தீர்
கூந்தளிர் குணசீலக் கொற்றவனே

–திருச்சிற்றம்பலம்–

## 256. மணவாசி

**மாத்யபுரீசுவரர் கலிவிருத்தம் சோமலாம்பிகை**

1. தரையே வானமும் தவழிளம் காற்றும்
புரையறு தீநீர் புனிதம் படைப்பருள்
மரையே மணம்தேன் வளமலை மாணிக்கம்
விரைநீர் வருகா விரிமண வாசியனே

2. உரையார் நான்மறை உலகொளி உடுக்கோள்
சிரையார் காரிக்கும் நாரைக்கும் அருளிய
வரையார் கயிலையின் வான்புவி வளர்கதிர்
விரைநீர் வருகா விரிமணவாசியனே

3. அரையோர் கோவணம் ஆலமர் நாயகன்
வரைவார் வளிமுகில் வரைகலை ஓவியன்
திரைஏழ் கடலழி திருவேல் தருகரம்
விரைநீர் வருகா விரிமணவாசியனே

4. சுரையார் ஆனாயர் தொடரிசை மகிழ்ந்தோன்
கரையாக் ககனவாழ் வருள் கவியோகி
நுரைவாய் திரளுற நுவல்பதின் சிரம்மிதி
விரைநீர் வருகா விரிமணவாசியனே

5. கரமார் கங்கணன் காளத்தி காஞ்சியன்
உரமார் கயமுகன் உடலழி வேதியன்
தரமார் மாலையில் தாழ்த்திப் பிறப்பழி
விரைநீர் வருகா விரிமணவாசியனே

6. சுரமார் திருத்தொண்டர் சுரந்தீர் வைத்தியன்
நரமோ பவமற நல்லுடல் நல்கொளி
இரவோ சுடலையில் இணைப்புயிர் நாட்டியன்
விரைநீர் வருகா விரிமணவாசியனே

7. அரவார் மேனியன் அழல்நிழல் அதிசயம்
கரவாக் களஞ்சியன் காதலங் கயிலயன்
நரம்பார் யாழிசை நால்புவி மொழியருள்
விரைநீர் வருகா விரிமணவாசியனே

8. சரமா மணியொடு தரளந் திரள்தார்
நிரம்பா பிறையணி நிரந்தரச் சுடர்மலை
புரையார் வேள்வியை பொடித்தமின் பேரலை
விரைநீர் வருகா விரிமணவாசியனே

9. சுருளார் நெடுஞ்சடை சுரும்பார் மலரணி
அருளார் குஞ்சிதத் தழலடிப் பூமலை
உருகார் உடலுயிர் உணர்வாய் இயங்கொலி
விரைநீர் வருகா விரிமணவாசியனே

10. நரையார் விடையமர் ஞானப் பிழம்பொளி
திரையார் மும்மலம் தீர்த்துயிர் காத்தருள்
நுரையார் பாற்கடல் நூதனத் தநாதி
விரைநீர் வருகா விரிமணவாசியனே

–திருச்சிற்றம்பலம்–

## 257. கிருஷ்ணராயபுரம்

**திருக்கண்மாலீசுவரர்** **கலிவிருத்தம்** **மதுக்கரவேணி**

1. அயனரி தினம்தொழும் அருள்பொழி தவமலை
நயமணித் தமிழ்சம் பந்தருக் கருளியோன்
வயல்மலி மாலீச் சரந்தொழு துய்வீர்
புயல்மழை நிறைகுறை கொடிதறுத் தினிதுறவே

2. தடம்புரள் வேள்வியைத் தடிந்ததோர் மூவிழி
சுடலையம் பொடியணி சுந்தரர் தோழனை
குடமரை மாலீச் சரத்தினில் துதிப்பீர்
படரிடி மின்னல் பாடறுத் தினிதுறவே

3. குளநிறை மலரணி குளிர்ப்பிறை சூடியை
வளநா வரசரின் மனமுயிர்த் தலைவனை
தளவநல் மாலிச் சரந்தொழு துய்வீர்
இளமணல் நதித்துயர் இருக்கா தினிதுறவே

4. ஊர்ப்புறச் சுடலையில் ஊர்த்துவ மாடும்
தேர்மணி வாசகர் திருப்பெருந் துறையனை
தார்புனை மாலீச் சரந்தனில் துதிப்பீர்
நீர்நிலை வறட்சி நெகிழ்துயர் இனிதுறவே

5. இணர்மலர் கொன்றையும் எருக்கறு கம்புனை
துணைத்திரு மந்திரம் செய்மூலர் குருவினை
மணமலி மாலீ சிரந்தனில் துதிப்பீர்
உணவுடை பசித்துயர் உருக்கா தினிதுறவே

6. பதிபசு பாசமும் பரிவளி ஈசுரன்
திதியுணர் மாளிகைத் தேவர்தம் தேவரை
ததிமதி மாலீச் சரந்தனில் துதிப்பீர்
சதிமதி புரிதுயர் சாரா தினிதுறவே

7. கருணையங் கடவுள் கலியுகப் பாற்கடல்
தருணைநல் காரைத் தாயவள் தலைவனை
சருகிலை மாலீச் சரந்தனில் துதிப்பீர்
நெருப்பொடு அனல்துயர் நெருங்கா தினிதுறவே

8. புரமெரி ஞானிய புவியிறை மாமணி
பரமதி மெய்கண்ட பாலகன் தலைவனை
சரமலர் மாலீச் சரந்தனில் துதிப்பீர்
அரசியல் அனல்துயர் அணுகா தினிதுறவே

9. அணிமலர் ஆவடு துறையமர் ஆண்டவன்
இணையிலா அடியவர் இயற்பகைக் கீசனை
தணிமலர் மாலீச் சரந்தனில் துதிப்பீர்
பிணிமூப் பிணைநோய் பிணிக்கா தினிதுறவே

10. செயிர்புலித் தோலணி சுந்தரத் திருச்சுடர்
அயில்வேல் கண்ட ராதித்தார் தலைவனை
தயிர்மலி மாலீச் சரந்தனில் துதிப்பீர்
உயிர்பிரி பயம்வலி உருக்கா தினிதுறவே
-திருச்சிற்றம்பலம்-

## 258. மகாதானபுரம்

**விசுவநாதர்** **கொச்சகக்கலிப்பா**

1. சென்னி கருநாகம் சிறுபிறையும் சூடியகோ
கன்னி இளந்தாருகை கானகத்து மாமணியை
பொன்னிம காதான புரத்துறையும் எம்மீசன்
நன்னார் புரமெரித்த நலந்துதித்தே உய்வீரே

2. மொட்டார் சிறுகொன்றை முழுமாயைச் செண்பகத்தன்
எட்டார்க்கும் இனியவரம் ஈந்துமகிழ் ஏகம்பன்
பொட்டார் மகா தான புரத்துறையும் பெருமானை
நாட்டார் வளமதுரை நடனந்துதித் துய்வீரே

3. முத்தார் பவளமணி முழுவயிரத் தாரொளியன்
சித்தோர் பதினெண்மர் சீரொளியூர் வரம்அருளும்
புத்தேள் மகாதான புரத்துறையும் எம்மானை
அத்தாளன் றுளமுருகி அடிபணிந்தே உய்வீரே

4. எட்டாத கயிலைமலை ஏறிமெலி நாவரசர்
குட்டைநீர் ஐயாற்றில் குளிர் கைலை காட்சிதந்த
பொட்டெழில் மகாதான புரத்துறையும் எந்தைகவின்
நட்டஞ்செய் மணிக்கழலை நனிபணிந்தே உய்வீரே

5. கோவாகி வானகத்தே கோடியுடல் தான்படைக்கும்
தேவாதி தேவனவர் திருச்சிற்றம் பலக்கடவுள்
பூவாதி மகாதான புரத்துறையும் பெருந்தகையின்
ஏவாமல் ஏவுங்கழல் இறைஞ்சியுயிர் உய்வீரே

6. செந்நாகம் புரள்மேனி திரிபுரத்தை எரித்தவிழி
வந்தாரை வாழவைக்கும் வளர்தமிழர் தொழுமிறைவன்
புந்தியோர் மகாதான புரத்துறையும் பூஞ்சுடரை
சிந்தையுறச் சிவாயநம செப்பியுயிர் உய்வீரே

7. வெள்ளே றமர்ந்துவந்தே விண்ணகத்தில் பவனிவரும்
கள்ளமார் தாருகையை கரும்பொடியாய் எரித்தபிரான்
புள்ளூரும் மகாதா புரத்துறையும் அருமருந்தே
உள்ளாற நமச்சிவாயம் உரைத்துலகில் உய்வீரே

8. கல்லாலின் மறையோதி காட்டகத்தே நடனஞ்செயும்
வில்லாளி பார்த்தனுக்கும் வெற்றிக்கணை தந்தபிரான்
புல்குநர் மகாதான புரத்துறையும் அனலீசன்
நல்லாக நம்பனையே நனிதுதித் துய்வீரே

9. ஓங்கார ஓசைமறை உலகேழும் படைப்பருளி
தூங்காத திருவிழியில் துயர்வினைகள் தீர்த்தருளும்
பூங்காநல் மகாதான புரத்துறையும் போதகனின்
ஆங்கார மழிகழலை அடிபணிந்தே உய்வீரே

10. சங்கீதத் திருமேனி தாரணிக்கோர் பேரிறைவன்
அங்கோநல் அஞ்செழுத்தன்ஆரமுதப் பாற்கடலன்
பொங்காளும் மகாதான புரத்துறையும் தவக்கோலன்
செங்கோணத் திருச்சுடரை தொழுதுலகில் உய்வீரே

-திருச்சிற்றம்பலம்-

## 259. இராசேந்திரம்

**மத்யார்சுனேசுவரர்** **கலிவிருத்தம்** **தேவநாயகி**

1. மீனோர்வெளி வெந்தீமலை விரையார்மலர் சூடும்
வானோர் மதி மறையோர்க்குழு மகிழ்வார்தொழும் இறைவன்
ஏனோரெலாம் இறைநாமமே ஏத்தாப்பிறப் பளிக்கும்
தேனார்பொழில் இராசேந்திரத் திருமாமணிச் சுடரே

2. நரைமாவிடை ஏறும்கனல் நாதாந்தநல் லருளன்
மரைமான்கரன் பிறைசூடியை மனம்போல் தினம் தொழவே

புரை தீர்ந்துயிர் பொன்னார்நகர் புகுநா ளுடன் தருமே
திரையார்குள ராசேந்திரத் திருமாமணிச் சுடரே

3. நவமாமணி நவில்கூடலன் நலமார்சிவ லோகன்
தவமார்வனத் திடையேகவின் தவத்தோர் மனைநெருங்கி
அவமேஅறுத் தன்பார்மதி அளித்தே மகிழ் நம்பன்
திவயாழிசை ராசேந்திரத் திருமா மணிச்சுடரே

4. கலையோர் பிறை கருநாகமும் கரத்தோர்துடி உடையோன்
அலையார் கடல் ஆறோடொன்றை அழிவேல் கொடை வள்ளல்
மிலையார்சிலை வேடன்தனை நளனாக்கிய விண்ணோன்
சிலையார்தளி ராசேந்திரத் திருமாமணிச் சுடரே

5. மண்ணோருடல் விண்ணோருயிர் வடிக்கும்மதிக் கலைஞன்
வெண்ணீறணி விழியார் நுதல் விமலோன்பழம் பதியோன்
தண்ணீர்ப்பந்தல் வைத்தேதொண்டர் தாகம்தவிர் தலைவன்
தெண்ணீர்க்குள ராசேந்திரத் திருமாமணிச் சுடரே

6. சிந்தாமணி சந்தந்தமிழ் செந்தீமலைச் சிகரம்
தந்தோருடல் சகலோர்வினை தணிக்கும்மருந் தளிப்போன்
எந்தாயென எல்லா உயிர் இறைஞ்சும்குரு வடிவம்
செந்தார்வயல் ராசேந்திரத் திருமாமணிச் சுடரே

7. கல்லானையை கழையுண்டசைக்காட்சிதந்த கனகன்
தொல்லாணவம் தொலைத்தே உயிர் துறக்கம்புகச் செய்யும்
நல்லோர்தொழும் நடுநாயகன் நன்னீர்முகில் மழையோன்
செல்லாத் துணை ராசேந்திரத் திருமாமணிச் சுடரே

8. வேழத்ததள் விண்ணோர்தொழ மேநாள்புனை வேந்தன்
கேழல் தனை அமைச்சாக்கிய கேதாரத்தின் ஞானி
ஏழேழ்புவி இளையோர்துதி ஈசானியத் தெந்தை
சோழர்துணை ராசேந்திரத் தூமாமணிச் சுடரே

9. திருவாதிரை பெருமீனொளி சிந்தாமணித் திலகன்
கருணாநதி மலைமேலுறை கரைக்கோயிலே கம்பன்
குருவாயுயிர் திரோதானத்தில் கூடிப்பவம் தீர்க்கும்
செருநீர் வயல் ராசேந்திர திருமாமணிச் சுடரே

10. ஊற்றானவன் ஒளியானவன் உயிரோடுணர் வாகி
காற்றானவன் கலையானவன் கரும்பார்சுவை இனிநீர்
கூற்றானவன் குளிரானவன் கோவில் ஒளித் தீபன்
சேற்றேர்வயல் ராசேந்திரத் திருமா மணிச்சுடரே

–திருச்சிற்றம்பலம்–

## 260. நங்கவரம்

**சுந்தரரேசுவரர் அறுசீர் ஆசிரிய விருத்தம் கோமளாம்பிகை**

1. அச்சுதற் கருளிய ஆனந்தன் அறங்கம் திருமுறை அறிவமுதா
இச்சைக ளைஎரித் தன்பருளும் ஏகம்பத் திருவருள் ஈசானன்
பிச்சைகொள் பெருந்தீ பேரருளன் பிரியாக் கருணைப் பிங்கலனே
நச்சர வணிந்த நாயகனே நங்க வரத்தமர் நாடகனே

2. எட்டுக் குணத்தில் ஏழ்புவியை இயக்கி உயிர்வளர் இன்னருளன்
அட்டமா சித்திகள் அளித்துவக்கும் ஆனந்ததாண்டவ பூரத்தரனே
பிட்டுண்டு தான்மண் சுமந்ததுபோல் பிறம்படி உயிர்களுக் களித்தவள்ளல்
நட்டவர் நான்மறை நாயகனே நங்கவ ரத்தமர் நாடகனே

3. முக்கன் முழுமுதலமூதறிவன் மோகனப் புன்னகை முத்தழகன்
கொக்கிற கோடுகூவிளமும் கொன்றையணிந்த கொடையமுதன்
பக்குவத்தான்மா பவமறுத்த பதமலர் நிழலளி பரம்பொருளன்
நக்கர மயின்ற பிள்ளைதந்த நங்கவ ரத்தமர் நாடகனே

4. உடுக்கொலி யாலுயிர்க்கும் குடலளித்தே உதர முதிரமும் உணர்வளித்தே
அடுக்காதாரம் ஆறுடனே அறிவொடு பத்தியில் அகமாழ்த்தி
வடவறு நுதல்நடு வளர்சுடரில் மலர்க்கழல் கூத்திசை காட்டுமன்னல்
நடுநிலை மாறா நாயகனே நங்கவ ரத்தமார் நாடகனே

5. அணுவினும் அணுவாம் அதன்கருவாய் அண்டக்களடங்கிய பேரண்டன்
நுணுகிய அறுசுவை நூல்புனையும் நூதன இசைக்கடல் ஏழ்சுரமாய்
தணுப்பே தணுலேதாண்டவனின் சற்குணம் யாவையும் உயிர்க்கருளி
நணுகிய யாவர்க்கும் நலமளிக்கும் நங்கவ ரத்தமர் நாடகனே

6. பொதிபவ ளமலர் மலைஎழின் புரிசடை பிறையணி பூங்குன்றன்
சதிபதி உறவுறசந்தோசம் தாரணிக் கருள்தரும் சங்கான்
விதிவினை புனைமதி வேதமகான் விண்ணவர் பூசைசெய் வெந்தழலன்
நிதிபதி தினந்துதி நாயகனே நங்கவ ரத்தமர் நாடகனே

7. எந்திரம் பொறிமதி கருவிஇயல் இரும்பிணி தீர்மருந்தளிக்கு மண்ணல்
உந்திம ரையமர் உருப்பிரமன் உறுபுனை சிமறுத் துவந்தோனே

வந்தனை பூசைசெய் பழமடியார் வாரிசும் வான்பெரும் வரமருளும்
நந்தவ னக்கோயில் நாயகனே நங்கவ ரத்தமர் நாடகனே

8. ஒப்பனை புவிக்களி ஒளிச்சுயம்பன் உயர்மதிச்சித்தறி அறியுருவன்
உப்பொடு ரசம்புணர் செந்தூரம் உமரிகற்பமளி ஒருமருந்தன்
அப்பனல் நிலம்வளி ஆகாயம் அனைத்திலும் உடல்செய் ஆனந்தன்
நப்பின்னை கேள்வனுக் காழிதந்த நங்கவ ரத்தமர் நாடகனே

9. செம்பொன்மேனியன் திருவருளன் திருவாதிரைக்ஒளி சேதுலிங்கம்
கொம்பெழில் விடையமர் கோமேத தன்குங்கும திலகன் குளிர்சடையன்
மும்மலம் சஞ்சிதம் முழுதழித்தே முனிவறு வரமருள் முதிர்தவத்தன்
நம்பித் துதிப் போர்க்கருளளிக்கும் நங்கவ ரத்தமர் நாடகனே

10. மறலியைத் தடிந்த மாதேவன் மங்கலக் குங்கும வானீசன்
அறம்பொருள் இன்பம் வீடுரைக்கும் அற்புதத் திருக்குறள் மறைமளித்தோன்
விறன்மிண்டார்க் கருளிய மின்னிசையன் வீணை திருக்கரன் மேலுலாகன்
நறவினி வரமருள் நாயகனே நங்கவ ரத்தமர் நாடகனே

–திருச்சிற்றம்பலம்–

## 261. சேங்கல்

**மீனாட்சி சுந்தரேசுவரர்** **அறுசீர் ஆசிரிய விருத்தம்**

1. நாமகள் தவம்மகிழ் நடனசிகாமணி ஞானத்திருவடிவன்
பூமகள் தீவினைப் புரைமொழிச் சிரமற பொன்னருள் புரிந்தபிரான்
சோமனின் குறைதீர் சுந்தக் கூத்தன் சோமேச் சரலிங்கம்
தேமா துளைநல் திருவருள் கொடையளி சேங்கலின் இறையோனே

2. கண்மலர் பூசைசெய் கார்வண்ணனுக்கருள் கார்த்திகைப் பெருந்தீபன்
வெண்ணீறணிநுதல் வெல்மழு ஏந்திய வேங்கைநல் தோலுடையன்
மணனுயிர் வாழ்வில் வருபிரி வகற்றும் மல்லிகார் சுனலிங்கம்
திண்ணனார்க் கருளிச் சிவலோ கந்தந்த சேங்களின் இறையோனே

3. கனகத்திரள் மலைக யிலையங் கூத்தன் கடுவெளிப் பெருந்தழலன்
அனைத்துயிரியங்கும் ஆற்றலளிக்கும் ஆனந்த பெருங்கொடையளன்
மனமலர் பத்தரின் மகிழ்பூ சைக்கருள் மணிமா காளலிங்கம்
தினமொரு கல்லளி சாக்கியர்க் கருளிய சேங்கலின் இறையோனே

4. மறையொடு காலமும் வதியுரு பூதமும் மறித்ததோர் நடையதனை
திறக்கவும் மூடவும் திருமறை பாடிய திருத்தொண்டர்க் கருளளித்தோன்
இறப்பொடு பிறப்பற இருந்தவத் தோர்க் கருள் இசைஓங் காரலிங்கம்
சிறகெழில் நாரைக்கும் சிலலோகந்தந்த சேங்கனின் இறையோனே

5. பூரணன் புண்ணியன் பூதலக் கடவுள் பொன்னார் திருவெளியன்
தோரணத் திருவை யஸறமர்ந் தருள்தரும் சுடர்மணித் திருக்கழலன்
நாரணன் நான்முகன் நாற்றவர் துதியருள் நலக்கே தாரலிங்கம்
சேரசுந் தரர்மகிழ் திருக்கை லைதந்த சேங்கலின் இறையோனே

6. கருவறை முதலரன் திருநா மமுரை காழியச் சம்பந்தர்கக்கும்
இருகைக் கெழிலுறு இசைபபோன் தாளமளி ஏகம்பச் செந்தழலன்
பெரும்பிழை ஒடுக்கியே பேரருள் புரியும் பீமசங் காரலிங்கம்
திருமுறைகண்ட ராசரா சர்க்கருள் சேங்கலின் இறையோனே

7. அரையொரு கோவணம் அரவூர் மேனியன் அருந்தழல் அலங்காரன்
மறைக்கரன் இறகணி மாணிக்க மாலையன் மங்களப் பேரொளியன்
விரைதிரை ஊழியும் மீளுமோர் உலகஞ் செய்விசுவேச்ச ரலிங்கம்
திரைகட லோடிய அதிபத்தர்க் கருளிய சேங்கலின் இறையோனே

8. நித்தியம் நந்தியம் நீலக் குறிஞ்சியும் நீளு மத்தமணிந்த
துத்திரு துவளை சுகமளி மூலிகைச்சஞ்சாரம் சும்மை சங்கமளித்தோன்
சித்தரும் தவமுனிசிந்தனை யோர்க்கருள் திரியம் பகலிங்கம்
தித்திக் காயிரம் செம்பொற் கிழியழி சேங்கலின் இறையோனே

9. கொல்லிவெள் ளியங்கிரி குற்றா லச்சது ரகிரி கைலாயம்
சில்லிளம் மஞ்சுறை சீர்வைண வதேவி திருக்கோயில்மர்ந்த
வல்வினை மும்மலம் வளர்சஞ் சிதமழி வைத்தியநாதலிங்கம்
தில்லையில் சேந்தற்கும் திருவருள் புரிந்த சேங்கலின் இறையோனே

10. நெற்றிச்சுடர்விழி நிலம்வெளி கோளமீன் நெடும்வய தருளன்பன்
பற்றிய பற்றற பரமனின்திருவடி பணிவரம் உயிர்க் களித்தோன்
நற்றவ முனிவோர் நலிமன மகற்றிய நாகேச் சரலிங்கம்
தெற்குத் திசை எட்டும் திருவருள் உயிர்களி சேக்கலின் இறையோனே

–திருச்சிற்றம்பலம்–